# சுமேரியத் தமிழர்கள்

100 ஆவது படைப்பு

ம. சோ. விக்டர்




**யாத்திசைப் பதிப்பகம்**

50, அண்ணா நகர்

அரியலூர் – 621 713

அலைபேசி: 98432 73914

சுமேரியத் தமிழர்கள்

Dr. Ma.So. Victor, M.A., Ph.D.,



முதற்பதிப்பு : 2017

பக்கம் : 298 + 158 = 456

படிகள் : 1200

பதிப்பு :

**யாத்திசைப் பதிப்பகம்**

50, அண்ணா நகர்

அரியலூர் - 621 713

அலைபேசி: 98432 73914

கணினித் தட்டச்சு: ராஜ் கம்ப்யூட்டர்ஸ், அரியலூர்

வடிவமைப்பு :

**எஸ். தனசேகர்**

**விலை : 400. 00**

அச்சிட்டோர்:

**ஸ்ரீராகவேந்திரா லேசர் பிரிண்டர்ஸ்**

15, தானப்ப தெரு, திருவல்லிக்கேணி,

சென்னை - 600 005.

தொலைபேசி : 044-42664695, 90031 81586

## நினைவேந்தல்



காலத்தால் காலத்துக்கு முன் அழைத்துச் செல்லப்பட்ட

எனது ஆருயிர் நண்பர்

தெய்வ முரசு இதழின் பதிப்பாசிரியர்,

பாலசுந்தரம் சீனிவாஸ் – சங்கராந்தி சீனிவாஸ்

இணையின் நினைவாக

தமிழ்த்திரு. இராசபாளையம் ம. இராமமூர்த்தி
அவர்களுக்கு நன்றி

# பொருளடக்கம்

## பகுதி II

# ஆசிரியர் உரை

உலக வரலாற்றில் பல்வேறு மொழிகள் பேசிய இனங்கள் கண்டறியப்பட்டுள்ளன. அக்கால உலகம் என்பது, கி.மு-2000 ஆண்டுகளில், கிரேக்கம் முதல் இந்தியாவின் பஞ்சாப் வரைதான் என்று வரலாற்றுக் குறிப்புகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அக்கால இலக்கியங்கள் பல அறியப்பட்ட போதிலும், அவற்றைப் படித்தறிய முயன்றது பெரும் சிக்கல்களைத் தோற்றுவித்தன. கி.மு.2000 ஆண்டுகளில் பேசப்பட்ட மொழிகள், களிமண் தட்டுகளிலும், பாப்பிரஸ் தாள்களிலும், மேலை நாடுகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அப்பதிவுகளைக் கொண்ட மொழிகள், காலப் போக்கில் மறைந்து போனதால், பின் வந்தவர்களால் அப்பதிவுகளைப் படிக்க இயலவில்லை. அப்பதிவுகளில் உள்ளவற்றைப் படிப்பதற்கு, பல்வேறு பழைய மொழிகளின் எழுத்துகளையெல்லாம் ஒப்பிட்டுப் பார்த்தே அறிந்து கொள்ள முடிந்தது. பலர் அம்முயற்சிகளில் ஈடுபட்டனர். ஒவ்வொருவரும் தத்தம் பார்வையில் அம்மொழிகளைப் படித்தனர். உண்மையில், அப்பதிவுகளில் எழுதப்பட்டுள்ளவைகளை, நூற்றுக்கு நூறு சரியாக வெளிக் கொணர இயலவில்லை. இருப்பினும் கடந்த 19 மற்றும் 20 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்திருந்த வரலாற்றறிஞர்கள், அம்மொழிகளின் பதிவுகளை படித்து விளக்கங்களை அளித்துள்ளனர்.

கி.பி.1850 ஆண்டுகளில், மெசபத்தோமியாவிலுள்ள ஊர் நகரம் அகழ்வாய்வு செய்யப்பட்டது. நூற்றுக் கணக்கான களிமண் தட்டுகள், அகழ்வாய்வுகளில் கண்டெடுக்கப்பட்டன. அவை, ஏறக்குறைய 4000 ஆண்டுக்கால இடைவெளிகளில் எழுதப்பட்டவை. தொடக்க காலத்தில் அறியப்பட்ட எழுத்து முறை, இறுதிக் கால எழுத்து முறைக்கு முற்றிலும் மாறுபட்டிருந்தது. ஒவ்வொரு ஆயிரம் ஆண்டுகளிலும் அவ்வெழுத்துகளின் வடிவங்கள் மாறிக் கொண்டே வந்துள்ளன. குறிப்பாக, சுமேரியர்களால் எழுதப்பட்ட முதல் பதிவுகள், கி.மு.6000 ஆண்டுகளில் எழுதப்பட்டிருக்கலாம் என்று கருதப்பட்டன. கி.மு.2000 ஆண்டுகளில் எழுதப்பட்ட சுமேரிய எழுத்துகள் முற்றிலும் மாறுபட்டிருந்தன. அதனால், ஒவ்வோர் ஆயிரம்

ஆண்டுகளிலும், குறிப்பிட்ட எழுத்துகள் எவ்வாறு மாற்றம் பெற்றன என்பதை அறிய வேண்டியதாயிற்று. அவற்றை ஒவ்வொரு வளர்ச்சிக் காலத்திலும் கண்டறிந்து, கி.மு.6000 ஆண்டுக்கால எழுத்துகளையும், கி.மு.2000 ஆண்டுக்கால எழுத்துக்களையும் தொடர்புபடுத்திப் படிக்க வேண்டியதாயிற்று. கடுமையான அம்முயற்சியில் சில ஆய்வாளர்கள் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு ஓரளவு வெற்றியும் பெற்றனர்.

சிக்கலான எழுத்து முறைகளை, ஓரளவு கண்டறிந்த ஆய்வாளர்களால், அம்மொழிகள் பேசிய மக்களின் வரலாற்றை அறிய இயலவில்லை. அது பற்றிய தெளிவான குறிப்புகளும் அப்பதிவுகளில் காணப்படவில்லை. கி.பி.1850 ஆண்டுகளில் மெசபத்தோமியாவில் பல இடங்கள் அகழ்வாய்வு களுக்குட்படுத்தப்பட்டன. தொடர்ந்து 100 ஆண்டுகள் வரையிலும் அகழ்வாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இப்போதும் பல இடங்களில் அகழ்வாய்வுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

முதலில் தொடங்கப்பட்ட அகழ்வாய்வுகள், ஆய்வாளர்களின் உழைப்புக்கேற்ற முடிவுகளைத் தந்ததால், ஊக்க முற்ற ஆய்வாளர்கள், மேலும் பல நாடுகளில் அகழ்வாய்வுகளை மேற்கொண்டனர். மெசபத்தோமி யாவைத் தொடர்ந்து எகிப்திலும், இலெபனான், பாலத்தீனம், கிரேக்கம், உரோமை போன்ற நாடுகளிலும் அகழ்வாய்வுப்பணிகள் மேற்கொள்ளப் பட்டன. மெசபத்தோமியாவிலும், எகிப்திலும் கண்டறியப்பட்ட முடிவுகள், அவ்விரண்டு நாடுகளும், சமகாலத்தில், தத்தம் முயற்சிகளில், நகரியநாகரிகக் கூறுகளை வளர்த்திருந்தன என்று கண்டறியப்பட்டது. கி.பி.6000 ஆண்டுகளில், உலகின் முதல் நகரிய நாகரிகத்தை அறிமுகம் செய்தவர்கள், சுமேரியர்களே என ஆய்வாளர்களால் அறிவிக்கப்பட்டது. மெசபத்தோமியாவின் தெற்குப் பகுதியான பாபிலோனில் தான் முதல் நகரிய நாகரிகம் தோற்றுவிக்கப்பட்டது என்பதை உறுதி செய்தனர். உலகின் முதல் எழுத்து முறையை உருவாக்கி யவர்களும் சுமேரியர்களே என்று முடிவு செய்தனர்.

மெசபத்தோமியாவின் மேலும் சில பகுதிகளில், பல்வேறு மொழிகளில், களிமண் தட்டுகள் கண்டெடுக்கப்பட்டன. அவற்றின் எழுத்து முறைகள் மாறுபட்டிருந்தாலும், சுமேரிய எழுத்து முறையைத் தழுவியே காணப்பட்டன. ஆய்வாளர்கள், அப்பதிவுகளைத் தொடர்புபடுத்திப் படிக்க முயன்றனர். சுமேரியர்களுக்குப்பின், பாபிலோனியர் எழுச்சி பெற்றனர். அவர்கள் காலத்திலேயே (கி.மு.2000), அசீரியர்களும், ஈழத்தவரும் (எலாம்),

கல்தேயத்தாரும் (சால்தியா), உகாரியரும், போணிசியரும், எபிரேயரும், அராபியரும், எகிப்தியரும், கிரேக்கரும் தத்தம் மொழிகளில், இலக்கியங் களைப் பதிவு செய்துள்ளனர். பாபிலோனியர் தமக்கென உருவாக்கிய எழுத்து முறை, அக்காடிய முறை என்று சொல்லப்படுகிறது. அக்காடிய எழுத்து முறை, பெரும்பாலும் சுமேரிய எழுத்து முறையைத் தழுவியே காணப்பட்டது. மேலே குறிப்பிடப்பட்டுள்ள மொழிகளின் பதிவுகளிலும், சுமேரிய எழுத்து முறையின் தாக்கங்கள் அறியப்பட்டுள்ளன. சுமேரிய எழுத்து முறையைப் படிக்க முயன்ற ஆய்வாளர்களுக்கு, மற்ற மொழிகளின் எழுத்து முறைகளைப் படிப்பது எளிதாக அமைந்தது. எகிப்திய, அராபிய எழுத்துமுறைகள் சற்றுமாறுபாடாகத் தோன்றினாலும், அவையும் ஒரு வகையில், சுமேரிய எழுத்து முறையைத் தழுவியே இருந்தன எனலாம்.

கி.மு.4000 – 2000 ஆண்டுகளில், நடுத்தரைக் கடலுக்குக் கிழக்கில் இருந்த நாடுகள் பற்றிய குறிப்புகள் கிடைத்துள்ளன. துருக்கி, சிறிய ஆசியா, ஈராக், இலெபனான், சிரியா, ஜோர்டான், இசுராயெல், பாலத்தீனம், எகிப்து, அரேபியா என்ற தற்கால நாடுகளில், அவை அறியப்படுகின்றன. அக்காலத்தில் இந்நாடுகள், வேறு பெயர்களால் அழைக்கப்பட்டன. தற்கால அரசியல் எல்லைகளும் அக்காலத்தில் மாறுபட்டிருந்தன. குறிப்பாக, அனதோலியர் (தென்துருக்கி), இத்தியர் (தென்துருக்கி), குடியர், அமோரியர் (ஈராக்), அறமியர் (சிரியா), போணிசியர், உகாரியர் (இலெபனான்), எபிரேயர் (இசுராயெல்), பிலித்தியர் (பாலத்தீனம்), அராபியர், ஈழத்தவர் (வடமேற்கு ஈரான்), கல்தேயத்தார் (மேற்கு ஈரான்), மோவாபியர் (கிழக்கு சினைப் பாலைவனம், மிடியர் (சினைப் பகுதி), எத்தியோப்பியர் (மேற்கு அரேபியா) எகிப்தியர், கிரேக்கர் போன்ற இனங்கள் குறிப்பிடத்தக்கவை.

மேற்கண்ட இனத்தார் பேசிய மொழிகளும், எழுத்து முறைகளும் கூட மாறுபட்டவை. இவ்வினத்தார் அனைவரும் அப்பகுதியின் மக்கள் என்று அழைக்கப்பட்டாலும் அந்தப் பாகுபாடுகளும் கூட மறு ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டியவையே. சுமேரியர் அப்பகுதியைச் சாராதவர்கள் என்று தெளிவு படுத்தப்பட்டுள்ளது. அசீரியர் அப்பகுதியைச் சார்ந்தவர்களே என்று சிலர் கருதினாலும், அவர்களும் வெளி நாட்டவரே என்ற கருத்தும் உண்டு. எபிரேயர் (யூதர்) இனத்தாரும் அப்பகுதி மக்களே என்று சொல்லப்பட்டாலும், அவர்களும் வெளி நாட்டவரே என்பதற்கானச் சான்றுகள் உள்ளன. மேற்கண்ட இன மக்கள் அப்பகுதியின் தொன்மக் குடியினரே என்று சொல்லப் பட்டாலும், அவர்களுடைய முன்னோர்கள் பற்றியும், அவர்களுடைய

தாயகம் பற்றியும் அறியப்படவில்லை. இதுவரை அவர்களைப் பற்றிய செய்திகள், ஊகங்களின் அடிப்படையிலேயே சொல்லப்பட்டுள்ளன.

மேற்கண்ட இனமக்களைப் பற்றிய ஆய்வுகள் பல வெளியிடப்பட்டுள்ளன. அந்த ஆய்வுகளில், பாரசீகர்கள் பற்றிய குறிப்புகள், பிற்காலத்தையே தொட்டு நிற்கின்றன. இந்தியாவைப்பற்றி, குறிப்பாக பஞ்சாப் பகுதியைப் பற்றிய குறிப்புகள், விவிலிய நூலில் காணப்படுகின்றன. அவையும் பிற்காலக் குறிப்புகளாகவே (கி.மு.500) உள்ளன. தென்னிந்தியாவைப் பற்றியோ, தமிழகத்தைப் பற்றியோ, தெளிவான விளக்கங்களும் குறிப்புகளும் காணப்படவில்லை. மேற்கண்ட இனங்களின் மொழிகளைப் படித்தவர்கள், அப்பதிவுகளைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கவும் கூடும். பல சொற்கள், ஆய்வாளர்கள் கண்டறிந்தவைகளாகவே சொல்லப்பட்டுள்ளன. உண்மையில் அச்சொற்கள் சரியாகப் படிக்கப்பட்டனவா, அதன் ஒலிப்புகளும் முறையாக உள்ளனவா என்பது ஐயத்துக்குரியதாகவே உள்ளது. எடுத்துக்காட்டாக, தமிழ் என்ற சொல், தமுழ் என்று படிக்கப்பட்டுள்ளது. ஈழம் என்ற சொல், எலாம் (Elam) என்றும், அறம் என்ற சொல், அறாம் என்றும் படிக்கப்பட்டுள்ளன.

கிரேக்கர்கள் இந்தியாவுக்கு வருகை தந்த பின்னரே (கி.மு.330), இந்திய வரலாறு ஓரளவு தெளிவடைகிறது. இருப்பினும், அது கிரேக்கர்களின் பார்வையில் எழுதப்பட்டுள்ளது. அலெக்சாந்தர், போரஸ் என்ற மன்னனைப் போரில் வென்றதாகச் சொல்லப்படும் செய்திகள் கூட நம்பகத் தன்மையற்றவை. அலெக்சாந்தரால் போரசை வெல்ல இயலாததால்தான், அலெக்சாந்தர் தன் படையெடுப்பை நிறுத்திக் கொண்டு நாடு திரும்பினான் என்ற கருத்தும் உள்ளது. அவ்வாறு வெற்றி பெற்றிருந்தால், கங்கைச் சமவெளிவரை சென்றிருக்கக் கூடும். இந்தியாவுக்கு வந்த கிரேக்கர்கள், பஞ்சாபை ஆளவில்லை. மாறாக, வடமேற்குப் பகுதிகளில் (ஆப்கானிஸ்தான்) கிரேக்கர்கள் ஆண்டனர் என்பதால், இந்தியா அவர்களின் கைகளுக்குக் கிட்டவில்லை. தங்கள் தோல்வியைத் தவிர்த்துக் கொள்ள, மௌரியர்களுடன் சமரசம் செய்து கொண்டனர்.

மேலே சொல்லப்பட்ட இனங்களின் வரலாறுகள் அறியப்படாவிட்டாலும், அப்பகுதிகள் அனைத்தும், கி.பி.1850 க்குப்பின் அகழ்வாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. அந்த அகழ்வாய்வுகளின் முடிவுகள், மெசபத்தோமியாவே, உலகிற்கு நகரிய நாகரிகத்தை அறிமுகம் செய்த நாடு என்று

பதிவு செய்யப்பட்டது. அப்போது, சிந்துவெளிபற்றிய அகழ்வாய்வுகள் எவையும் மேற்கொள்ளப்படவில்லை. 1924 ஆம் ஆண்டிற்குப் பிறகு சிந்து வெளியில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகள், அதுவரை சொல்லப்பட்டு வந்த வரலாற்றைப் புரட்டிப் போட்டன. மெசபத்தோமியாவிற்கும் முந்திய நாகரிகம், சிந்து வெளியில் அறியப்பட்டிருந்தது என்ற உண்மை வெளிவரத் தொடங்கியது. ஐரோப்பியர்களால் எழுதப்பட்ட பழைய உலக வரலாறு, மாற்றங்களுக்குள்ளானது. ஆனாலும் தாங்கள் எழுதிய வரலாற்றை மாற்றம் செய்வதை விரும்பாத ஐரோப்பியர்கள், தங்களுடைய முடிவு களையே சரியானவை எனக்கூறி, சிந்துவெளி வரலாற்றை, மெசபத்தோமிய வரலாற்றுக்குப் பிற்காலத்தில் தள்ளினர். மேலும், மெசபத்தோமியர்களில் ஒரு பகுதியினரே, சிந்து வெளியில் குடியேறி, புதிய நாகரிகத்தைத் தோற்றுவித்தனர் என்றும் பதிவு செய்தனர்.

ஐரோப்பியர்கள் எழுதியுள்ள கடந்த கால வரலாறு, நிகழ்வுகளின் அடிப்படைகளில் எழுதப்படவில்லை. இனம், நிறம், பகுதி ஆகியவைகளைக் கருத்தில் கொண்டு எழுதப்பட்டன. எனவே, அப்பதிவுகள் அனைத்தும் இன்று மறு ஆய்வுகளுக்குட்படுத்தப்பட்டுள்ளன. கிரேக்க மற்றும் உரோமானியத் தொன்மக் கதைகளில், பாண்டியர்களின் பெயர்கள் பதிவாகியுள்ளன. பாண்டியர்களின் இரண்டு மீன்கள் மற்றும் செங்கோல் என்ற அரச முத்திரையை, உரோமப் பேரரசர்கள் பயன்படுத்தியுள்ளனர். கிரேக்க நாட்டில் பள்ளர் என்ற இனம் அறியப்பட்டுள்ளது. நடுத்தரைக் கடல் நாடுகள் எங்கும் தமிழர் நாகரிகத்தின் எச்சங்கள், பலவாறு வெளிப்பட்டுள்ளன. அவற்றை யெல்லாம் ஆய்வு செய்ய வேண்டிய நிலைமைகள் தோன்றியுள்ளன.

சுமேரியத் தமிழர்கள் என்ற இந்நூல், மேலே சொல்லப்பட்ட நாடுகளில் வாழ்ந்திருந்த மக்களைப் பற்றியும், அவர்கள் பேசிய மொழிகளைப் பற்றியும், வரலாற்றில் அவை மறைக்கப்பட்டது பற்றியும் ஆய்வு செய்து, உண்மைச் செய்திகளை வெளிக் கொணரும் நோக்கில் எழுதப்பட்டுள்ளது. இவை பற்றி ஏற்கனவே நமது பல நூல்களில் ஆங்காங்கே குறிப்பிடப் பட்டிருந்தாலும், தொடர்ச்சியான வரலாற்று நிகழ்வுகளை இந்நூலில் தந்துள்ளோம். மறைக்கப்பட்ட அல்லது மறுக்கப்பட்ட தமிழரின் தொன்மை யான வரலாற்றை, இந்நூல் மீட்டெடுக்க முயன்றுள்ளது.

**ம.சோ.விக்டர்**

# முன்னுரை

பல்வேறு இலக்கியங்களாலும், தொன்மக்கதைகளாலும், களிமண் தட்டுப் பதிவுகளாலும், தொல்லியல் சான்றுகளாலும் கிடைக்கப்பெற்றுள்ள உலக வரலாறு என்பது, வெள்ளக் காலத்துக்குப் பிறகு அறியப்பட்டவையே. சமய இலக்கியங்களும் தொன்மக் கதைகளும் கூறியுள்ள வெள்ள நிகழ்வு என்பது, ஐம்பது ஆண்டுகளுக்கு முன்புவரை, கதையாகவும் கற்பனை யாகவுமே அறியப்பட்டிருந்தது. தற்கால நிலவியல், புவியியல், ஆழ்கடல் ஆய்வாளர்கள், கி.மு.18000-12000 ஆண்டுகளில், உலகின் பெரும்பகுதி களை வெள்ளம் சூழ்ந்து மூழ்கடித்தது உண்மையே என அறிவித்துள்ளனர். பனிக்காலம், வெள்ளக்காலத்துக்கு முன் சில ஆயிரம் ஆண்டுகள் நீடித்தது என்றும் பனிக்காலமுடிவில், பனி உருகலின் காரணமாக, கடல்நீர் உயர்ந்து, தாழ்வான நிலப்பகுதிகளை மூழ்கடித்ததும் உண்மையான நிகழ்வே என்றும் அறிவித்துள்ளனர். வெள்ளக் காலத்துக்கு முன்பு உலகம் எவ்வாறு இருந்தது என்பது பற்றி, ஒரு சில இலக்கியங்கள் கூறினாலும், அவற்றை உறுப்படுத்துவதற்கானச் சான்றுகள் கிடைக்கவில்லை. வெள்ளக் காலத்துக்கு முன்பிருந்த உலகை ஓரளவுக்குப் புரிந்து கொள்ளவே, அவை உதவின. வெள்ளம் உலக வரலாற்றை இரண்டாகப் பிரித்தது எனலாம். வெள்ளக் காலத்துக்கு முன்பிருந்த உலகின் வரைபடம், வெள்ளக் காலத்துக்குப் பிறகு மாறிப் போயிற்று. பல நிலப்பகுதிகள் கடலில் மூழ்கிப் போயின. சில கடல் பகுதிகள் விரிவடைந்தன. புதிய ஆறுகளும் ஏரிகளும் தோன்றின. வெள்ளக் காலத்துக்கு முன்பு ஓடிய ஆறுகள் பற்றிய சான்றுகள் இல்லை.

எனவே, உலக வரலாற்றை, பழைய வரலாறு, புதிய வரலாறு எனப் பிரிப்பதற்கு வெள்ளக் கால நிகழ்வு மையப் புள்ளியாக அமைந்தது. புதிய உலக வரலாறும் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. வரலாற்றுக்கு முற்பட்ட காலம், வரலாற்றுக் காலம் என்றவாறு இரு பகுதிகளாகப் பிரிந்தன. வரலாற்றுக் காலம், கி.மு.2000 ஆண்டுகளில் தொடங்குவதாக, சில ஆய்வாளர்கள் கூறினர். அந்த வரையறை நாட்டுக்கு நாடு வேறுபட்ட தாகவும் இருந்தது. இந்தியாவைப் பொருத்தவரை, கி.மு.700 ஆண்டு களுக்குப் பிறகே (நந்தர்கள் காலம்) வரலாறு தென்படுகிறது. அதற்கு முந்திய

வரலாறு தொகுக்கப்படவில்லை. இந்திய வரலாறு, கி.மு.10000 ஆண்டுகளிலேயே தொடங்கிவிட்டது என்றாலும், இந்தியர்களுக்கு, குறிப்பாகத் தமிழர்களுக்கு, வரலாறுகளைப் பதிவு செய்யும் சிந்தனை யில்லாமற் போய்விட்டது.

மெசபத்தோமியாவிலும், ஐரோப்பாவிலும், ஆப்பிரிக்காவிலும் கி.மு.10000 ஆண்டுகளில் மக்கள் வாழ்ந்திருந்தனர். அவர்கள் வேட்டை யாடி உண்ணும் மக்களாகவே அறியப்பட்டுள்ளனர். தமிழ்நாட்டில், உலகின் எந்நாடுகளிலும் அக்காலத்தில் அறியப்படாத வேளாண்மையும் தொழிலும் அறியப்பட்டிருந்தன. தாமிரவருணி, வையை ஆற்று வேளாண் நாகரிகமே, இந்தியாவிற்கும் உலகிற்கும் முதன்மையானதாகக் கருதப்படுகின்றது. ஓர் இனத்தின் வரலாறு, அவ்வினம் பதிவு செய்துள்ள இலக்கியங்களால் அறியப்படும். காலம் காலமாகப் பின்பற்றப்படும் வழக்காறுகளும், வழிபாட்டு முறைகளும் கூட, அவ்வினத்தின் தொன்மையை அறிவிக்கும். அவ்வினம் விட்டுச் சென்ற வாழ்க்கை முறையின் எச்சங்கள், அகழ்வாய்வுகள் மூலம் வெளிப்படும். மரபு சார்ந்த பழமொழிகள், தொன்மக்கதைகள், நாட்டுப்புறப் பாடல்களும், ஓரினத்தின் வரலாற்று வாயில்களாகக் கருதப்படும். அனைத்துக்கும் மேலாக, எழுத்து வடிவில் பதிவு செய்யப்பட்ட இலக்கி யங்கள், நல்ல சான்றுகளாக ஏற்றுக் கொள்ளப்படும். இவையெல்லாம் தொகுக்கப்பட்டு, ஒன்றோடொன்று தொடர்புபடுத்தப்படும் போது, ஒப்பீட்டு முறையில், வரலாறுகளை வெளிக் கொண்டு வர இயலும். மேற்கண்ட துறைகளில் சொல்லப்பட்ட அல்லது அறியப்பட்டவைகளை, சான்றுகளாக கடந்த காலத்தில் ஆய்வாளர்களால் ஏற்கப்படவில்லை. புதிய ஆய்வு முறைகள், அவற்றையெல்லாம் கருத்தில் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகின்றன. மேற்கண்ட முறைகளைப் பின்பற்றி, ஆப்பிரிக்க வரலாறு, யுனெஸ்கோ நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

பல்வகையான சான்றுகள் இருப்பினும், மொழியும் அம்மொழி சார்ந்த இலக்கியமும் முதன்மைச் சான்றுகளாக அறியப்படும். அவ்விலக்கியங்கள் தரும் செய்திகளுக்கு மேலே சொல்லப்பட்ட பிற சான்றுகள் துணை நிற்கும் போது, அவ்விலக்கியச் செய்திகள் உறுதிபடுத்தப்படும். தமிழ் மொழியில், தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும், தமிழரின் வரலாற்றை அறிய உதவும் சான்றுகளாக உள்ளன. ஆரியரின் வரலாற்றை அறிய, வேதங் களும் புராணங்களும் துணை நிற்கின்றன. சமஸ்கிருத மொழிக்கூறுகள், அம்மொழியின் காலத்தை அளவிட உதவுகின்றன. அவை போன்றே, மேலைநாடுகளில் அறியப்படும் இலக்கியங்களையும் சான்றுகளாகக்

கருதலாம். எழுத்து முறைகளால் பதிவு செய்யப்பட்ட இலக்கியங்கள் தாம், வரலாற்றை அறிவிக்கும் ஊடகங்களாக உள்ளன. கி.மு.10000 ஆண்டு களிலேயே, தமிழுக்கு எழுத்து முறை இருந்ததாகச் சொல்லப்பட்டாலும், அவற்றைப் பதிவு செய்யத் தமிழர்கள் கையாண்ட முறை, குறிப்பாக ஓலைகளில் எழுதும் முறை, இயற்கை விதிகளுக்கு ஏற்புடையதாக இல்லை.

பனை ஓலைகளை விடுத்து புதிய முறையில் எழுத தமிழர்கள் அறிந்திருக்கவில்லை. பல்வேறு துறைகளில் அறிவியல் புதுமைகளைப் புகுத்திய தமிழர்கள், எழுதியவற்றைப் பாதுகாக்க புதிய உத்திகளைக் கடைப் பிடிக்கவில்லை.

பனை ஓலைகள், 200 ஆண்டுகளுக்கு மேல் நிலைத்திருப்பதில்லை. காற்றினாலும், பூச்சிகளாலும், புழுக்களாலும் அவை அழிந்து போகக் கூடியவை. எழுதப்பட்ட ஓலைச் சுவடிகள், 200 ஆண்டுகளுக்குள், படியெடுக்கப்பட்டால், அச்செய்திகள் புதுப்பிக்கப்படும். படி எடுக்கப்படாமல் அழிந்து போன இலக்கியங்கள் தமிழ் மொழியில் ஏராளமாக இருந்தன. இன்று நமக்குக் கிடைத்துள்ள இலக்கியங்கள், புலவர்களால் சிறப்பானவை யாகக் கருதப்பட்டு, அவற்றைச் சொல்லிக் கொடுத்த ஆசிரியர்களின் முயற்சியால் படிகளாக எடுக்கப்பட்டவை. ஓர் ஆசிரியரிடம் தமிழைக் கற்க சேரும் மாணவர்களுக்கு முதலில், அவ்வாசிரியரிடம் உள்ள இலக்கியங் களைப் படிகளாக எடுக்கும் பணிகளே தரப்பட்டன. படியெடுக்கப்பட்ட ஓலைகள், பானைகளிலும், குடுவைகளிலும், பச்சிலைகள், மூலிகைகள் இடப்பட்டு பாதுகாப்பாக வைக்கப்பட்ட போதிலும், நெடுங்காலம் அவை தாக்குப் பிடிக்க இயலாமல் மட்கிப் போயின.

இக்குறைபாடுகளை உணர்ந்த சிந்து வெளி மக்கள், தங்கள் குறிப்புகளை, களிமண் தட்டுகளில் பதிவு செய்தனர். செப்புத் தகடுகளில் பொறித்து வைத்தனர். ஆனாலும் தமிழ் நாட்டில் அறியப்பட்ட இலக்கி யங்கள் போல், சிந்து வெளியில் எந்த இலக்கியமும் கிடைக்கவில்லை. தமிழ் இலக்கியங்களும், கி.மு.2000 ஆண்டுக் கால அளவிற்குப் பிறகே எழுதப்பட்டன. தொல்காப்பியம் எந்த ஆண்டில் எழுதப்பட்டதெனத் தெரியவில்லை. இருப்பினும், அந்நூலுக்கு முற்பட்ட காலங்களில் எழுதப்பட்ட செய்திகளின் தொகுப்பாகவே தொல்காப்பியம் கருதப்படுவதால், கி.மு.5000 அல்லது அதற்கு முற்பட்ட காலங்களில் தமிழ்மொழி எவ்வாறு சிறப்புற்றிருந்தது என்பதை அறிய முடிகிறது. சங்க இலக்கியங்கள்,

கி.மு.1000 ஆண்டுகளில், முன்பின்னாக எழுதப்பட்டிருக்க வேண்டும். சங்க இலக்கியங்கள் எழுதப்பட்ட காலங்களில், மேலை நாடுகளிலும் பல இலக்கியங்கள் அறியப்பட்டிருந்தன.

சமஸ்கிருதம் என்ற மொழி, கி.மு.500 ஆண்டுகளுக்குப் பிறகே ஓரளவுக்கு வளர்ச்சியைத் தொட்டது. சமஸ்கிருத மொழியை வளர்த்ததில் பெரும் பங்கு, ஆரியர்களைவிட, சமண புத்த சமயத்தாருக்கு உண்டு. கிறித்துப் பிறப்பாண்டுகளில், சமஸ்கிருத இலக்கியங்கள் எவையும் எழுத்து வடிவில் இல்லை. கி.பி.500 ஆண்டுகளுக்குள் ஏராளமான சமஸ்கிருத இலக்கியங்கள் பதிவு செய்யப்பட்டன. ஒரு கால அளவில், ஆரிய இலக்கியங்களை விட, புத்த சமய இலக்கியங்கள், சமஸ்கிருத மொழியில் மிகுந்திருந்தன. அம்மொழியை, தென்னிந்தியாவிலும், இலங்கையிலும், சீனா, தாய்லாந்து, கம்போடியா, கொரியா, ஜப்பான், இந்தோனேசியா போன்ற நாடுகளில் அறிமுகம் செய்தவர்களும் புத்த சமயத்தினரே. பாழி மொழியினின்றும் சமஸ்கிருதத்துக்கு மாற்றம் செய்யப்பட்ட புத்த சமய நூல்கள், முப்பதுக்கும் மேற்பட்ட நாடுகளுக்கு எடுத்துச் சொல்லப்பட்டன. நாளந்தா, தட்சசீலப் பல்கலைக் கழகங்கள், சமஸ்கிருத இலக்கியங்களைப் பல்வேறு காலங்களில் படியெடுத்துப் புதுப்பித்துக் கொடுத்தன. அதனால், தமிழைக் காட்டிலும் சமஸ்கிருத இலக்கியங்கள் பாதுகாப்பைப் பெற்றன. தமிழ்நாட்டில், தமிழர்கள் சமஸ்கிருத மொழியைக் கற்கு முன்னரே, கிழக்கு நாடுகளில் வாழ்ந்திருந்த புத்த சமயத்தைச் சார்ந்த தமிழர்கள், சமஸ்கிருதத்தைச் கற்றிருந்தனர். கி.பி.ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு, காஞ்சிபுரத்தில் சமஸ்கிருதம் முறையாகக் கற்றுத் தரப்பட்டது.

மேலை நாடுகளில், சுமேரியர்களே முதன் முதலில் எழுத்து முறையை அறிமுகம் செய்தவர்கள் என்று கருதப்படுகின்றது. சுமேரியர்கள், கி.மு.4000 ஆண்டுகளில் மெசப்பத்தோமியாவில் குடியேறினர் என்று பொதுவாகக் கருதப்பட்டாலும், தற்கால ஆய்வாளர்கள், அவர்கள், கி.மு.7000 ஆண்டுகளுக்கு முன்பே குடியேறியிருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். சுமேரியர்கள் குடியேறிய காலத்தில், மெசபத்தோமியாவில் வாழ்ந்திருந்தவர்களை, செமிட்டிக் மக்கள் என்று ஆய்வாளர்கள் கூறுகின் றனர். அந்த செமிட்டிக் மக்கள் பற்றிய செய்திகள், விவிலியம் மற்றும் குர்ஆன் போன்ற சமய நூல்களில் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன. செமிட்டிக் மக்களே எழுத்துமுறையை அறிந்திருக்க வேண்டும் என்ற கருத்தும் உண்டு. மெசபத்தோமியாவில் அகழ்வாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட களிமண்

தட்டுகளில், ஒரே வடிவிலான எழுத்து முறைகள் அறியப்படவில்லை. பல்வேறு எழுத்து முறைகள் உள்ளன. ஆனால் அவற்றையெல்லாம் சுமேரியர்களின் எழுத்து முறையென்றே ஆய்வாளர்கள் முடிவு செய்து விட்டனர். சுமேரியருக்கு முன்பு அறியப்படும் செமிட்டிக் மக்களின் எழுத்து முறையாகக் கூட அவை இருக்கலாம். ஆனால் அதனை நிறுவ இயலாத ஆய்வாளர்கள், அனைத்துமே சுமேரியருடையவை என முடிவு செய்து விட்டனர். அவைகளில் சில செமிட்டிக் மக்களுடையதாகவும் இருக்கலாம் என்பதை, செமிட்டிக் மக்கள் என்ற தலைப்பில் காண்க.

கி.மு.5000 ஆண்டுகளில் இந்தியா முழுவதும் தமிழே பேசப்பட்டு வந்தது. வட இந்தியாவில், தமிழினின்றும் புதிய மொழிகள் எவையும் கிளைத்திருக்கவில்லை. சிந்து வெளி நாகரிக அழிவுக்குப் பின்னரே, தமிழ் பல்வேறு மொழிகளாகக் கிளைத்தது. கி.மு.2000 ஆண்டுகளில், தமிழ் உள்ளிட்ட சில தமிழ்த் திரிபு மொழிகளும் அறியப்பட்டிருந்தன. புத்தருக்குக் கூட, தமிழ்மொழி கற்றுத் தரப்பட்டதாக சில குறிப்புகள் கூறுகின்றன. மெசபத்தோமியா என்பது, பத்துக்கும் மேற்பட்ட நாடுகளைக் கொண்டி ருந்தது. வளமான பிறை நிலவு நாடுகள் (Fertile Crescent Countries) என்று அவற்றைக் கூறுவர். அவற்றின் மொத்தப் பரப்பளவு, தென்னிந்தி யாவின் பரப்பளவு கூட இல்லை. ஆனாலும் அக்குறுகிய நாட்டில், பத்துக்கும் மேற்பட்ட மொழிகள் பேசப்பட்டன, எழுதப்பட்டன. தமிழ்நாட்டின் இன்றைய நிலவரப்படி, ஓரிரு மாவட்டங்களே, தனித்தனி நாடுகளாக இருந்தன. தனித்தனி மொழிகளும் பேசப்பட்டன. அம்மொழிகளுக்குள் தொடர்புகள் இருந்ததாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அம்மொழிகள் அனைத்தும் ஒரு மூலமொழியின்றும் (Proto-language) கிளைத்தவையே என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அம்மூலமொழி எதுவென்று அவர்களால் கண்டறியப்படவில்லை. சிலர் முயன்றும் அம்முயற்சியில் தோல்வியடைந் தனர். எனவே, மொழிகளின் மூலம் என்று தெரியாமலேயே, அம்மொழிகள் பற்றிய வரலாறுகளை எழுதினர். தாய் யாரென்று தெரியாமல், பிள்ளையின் வரலாற்றை எவ்வாறு எழுத இயலும் ? அவ்வாறு எழுதப்பட்ட மொழி வரலாறும் எந்த அளவுக்கு உண்மையாக இருக்கும்? அந்த மூல மொழியை அவர்கள் கண்டுபிடித்திருந்தால், மேலை நாடுகளில் பேசப்பட்ட அம்மொழிகளின் வரலாறும், அம்மொழிகளைப் பேசிய மக்களின் வரலாறும் வெளிப்பட்டிருக்கும். அதனால், முழுமை பெறாத, ஊகங்களின் அடிப்படை யிலான வரலாறு, ஐரோப்பியர்களால் எழுதப்பட்டிருக்கிறது. தற்காலத்திலும்

கூட அம்மூல மொழிபற்றி ஆய்வு செய்ய எவரும் முன்வரவில்லை. ஒரு சிலருக்கு அம்மூல மொழிபற்றிய உண்மைகள் தெரிந்திருந்தாலும், அதனைப் பதிவு செய்ய அவர்கள் விரும்பவில்லை. அவ்வாறு பதிவு செய்யப் பட்டால், இதுவரை சொல்லப்பட்ட வரலாறு பொய்யாகிப் போகும் என்பதை அவர்கள் அறிந்திருக்கக் கூடும்.

அவ்வாறு அனைவராலும் கண்டுபிடிக்க இயலவில்லை என்று கூறப்பட்ட மூல மொழியை நோக்கி நமது ஆய்வுகளைத் தொடர்வதே, இந்நூலின் நோக்கமாகும். மொழிகளைப் பற்றிய ஆய்வுகள், கடந்த 300 ஆண்டுகளில் தான் விரிவாக மேற்கொள்ளப்பட்டன. கி.பி.1500 ஆண்டுகளுக்கு முன்பு, கிழக்கு நாடுகளுக்கு வழி தெரியாமல் இருந்த ஐரோப்பியர்கள், வாஸ்கோடகாமாவின் முயற்சியால் கண்டறிந்த பிறகு, கிழக்கே சப்பான் வரை சென்றனர். அங்கெல்லாம் மக்கள் வாழ்ந்திருந்தனர். உலகம் என்பதே, கிரீஸ் முதல் இந்தியா வரையிலுள்ள நாடுகள்தாம் என்று எண்ணியிருந்த ஐரோப்பியர்களுக்கு, உலகம் மிகமிக விரிந்தது என்ற உண்மை வெளிப்பட்டது. வரலாற்றுக் குறிப்புகளின்படி, கடல் வழியாக ஐரோப்பாவிலிருந்து வந்த முதல் மனிதராக வாஸ்கோடகாமா கருதப்படு கிறார். அவருக்கு முன்பு பெரிப்புளூஸ், மார்க்கோ போலோ ஆகியோர் தமிழகம் வந்துள்ளனர்.

தொழிற் புரட்சிக்குப் பின்னர், இங்கிலாந்தில் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களுக்கான சந்தைகளைத் தேடி உலகெங்கும் சுற்றிய ஆங்கி லேயர்கள், ஒவ்வொரு நாட்டு மக்களையும், அவர்களது மொழிகளையும் கண்டு கேட்டனர். அதன் பின்னரே, மொழிகள் பற்றிய ஆய்வுகளை மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. அவர்கள் முற்காலத்தில் அறிந்திருந்த பழைய உலகத்தின் நாட்டு மொழிகளை முதலில் ஆய்வு செய்ய முற்பட்டனர். தொடர்ந்து பல ஐரோப்பியர்கள் அம்முயற்சி களில் இறங்கினர். குறிப்பாக ஆங்கிலேயரும் செர்மானியரும் இந்திய மொழிகள் பற்றிய ஆய்வுகளை மேற்கொண்டனர். அம்முயற்சிகளிலும், அறைகுறையாகவே தங்கள் ஆய்வுகளை வெளிப்படுத்தினர். கால்டுவெல் என்ற ஐரோப்பியர், தமிழ்மொழி பற்றி முதன்முதலில் ஆய்வு செய்தார். திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற நூலை வெளியிட்டார். தமிழ்மொழி பற்றிய புரிதல், கால்டுவெல்லுக்கு முழுமையானதாக இல்லை. சமஸ்கிருதத்தின் உதவியின்றி, தமிழால் தனித்து இயங்க முடியாது என்றும் தெரிவித்தார். பாவாணர் கூறியது போல், கால்டுவெல், சாண் ஏறி முழம் சறுக்கியவர் என்பது உண்மையே.

முன்மொழி என்ற கண்டுபிடிப்பை, முதலில் ஐரோப்பியர்களே கூறினர். தங்களுக்குத் தெரியாத அல்லது தெரிவிக்க விரும்பாத மொழியை, முன்மொழி என்றனர். செமிட்டிக் என்ற மொழியின் மூலம் எதுவெனத் தெரியவில்லை எனக் கூறி, அதனை முன் மொழி என்றனர். இதே நிலையைத் கருத்தில் கொண்டு, திராவிடம் என்ற மொழிக்கு அல்லது மொழிகளுக்கு மூலம், முன் திராவிடம் (Proto - Dravidian) என்று சிலர் கூறி வருகின்றனர். செமிட்டிக்கு முன்பு, முன் செமிட்டிக் (Proto - Semitic) என்ற அவர்கள் கூறவில்லை. திராவிடத்துக்கு முன்பு, முன் திராவிடம் என்றனர். திராவிடம் என்பது ஒரு மொழி போலவும், பல மொழிகளை அழைக்கும் ஒரு சொல்போலவும் மாறி மாறிக் கூறிக் குழப்புகின்றனர். திராவிடம் என்பது ஒரு மொழியானால், அதுவே முன் திராவிடமானது எப்படி என்பது தெரிய வில்லை. முன் தமிழ், முன் சமஸ்கிருதம் என்றவாறு எவரும் சொல்வ தில்லை. முன் திராவிடம் என்று கூறுவது, தங்களை ஆய்வாளர்களாகக் கருதிக் கொண்டு, திராவிடம் பற்றி அறிய விரும்புகிறவர்களை ஏமாற்றும் எத்து வேலை. திராவிடம் என்ற மொழியே இல்லை எனும் போது, முன் திராவிடம் எங்கிருந்து வந்தது. இவையெல்லாம், கால்டு வெல்லுக்குப் பின் வந்த, திராவிடக் கொள்கையை நிலை நிறுத்த, தமிழர் அல்லாத, தமிழ்ப் பகைவர்கள் செய்யும் வஞ்சக வேலைகளாகும். திராவிடம் என்ற கருத்தியலே, போலியானதும், ஆய்வு வரம்புக்குள் வராததுமான மோசடியானதாகும்.

மொழியைக் கொண்டு வரலாற்றைக் கண்டு பிடிக்கும் ஆய்வுத் தன்மை நேர்மையானது, உண்மையானது, அறிவியல் சார்ந்தது. மொழியைக் கொண்டு, தங்கள் நிலைபாட்டை உறுதி செய்து கொள்வதும், அரசியலாக்குவதும், கருத்தியல் எனக் கூறுவதும், போலியானது. திராவிடம் இந்த குழப்ப இலக்கணத்துக்குட்பட்டதே. வரலாற்றை மீட்டெடுக்க மொழி யைப் பயன்படுத்துவது நேர்மையானது. வரலாற்றைக் குழப்பவும் சிலர் பயன்படுத்துவது, தீய எண்ணங்களைக் கொண்டது. தமிழ், திராவிட மொழிக் குடும்பத்தில் ஒன்று எனக் கூறும் போது, திராவிடம் என்ற மொழியின் கிளை மொழியாகத் தமிழ் கருதப்படும். தமிழ், தனி மொழி, முதன் மொழி என்ற கூற்று, திராவிடம் என்ற (இல்லாத) கருத்தியலில் அடிபட்டுப் போகும். மற்றவர்கள், சிந்தனைத் தெளிவில்லாதவர்கள் என எண்ணிக் கொண்டு, மொழிகளைப் பற்றி அறியாத சிலர் முன் வைக்கும் திராவிடம், கற்பனை யானது சூது நிறைந்தது என்பதை அறியலாம்.

எந்த ஒரு மொழி பேசும் ஆய்வாளரும், தன் தாய்மொழியில் புலமையும், தாய்மொழியின் இலக்கண இலக்கிய ஆழங்களையும் முற்றாத அறிந்த பின்னரே, பிற மொழிகள் பற்றி ஆய்வுகள் மேற்கொள்ளத் தகுதியானவராவார். தமிழில் அறியப்படும் வேர்ச் சொற்கள், மூலச் சொற்கள், விரிவடைந்த சொற்கள், கூட்டுச் சொற்கள் அறிந்தவரே மொழிகள் பற்றிய ஆய்வுகளை மேற்கொள்ள முடியும். எது தமிழ்ச் சொல், எது பிற மொழிச் சொல் என அறியாதவர்களே, திராவிடம் என்ற இல்லாத கருத்தியலை, இருப்பதாகக் காட்டுகின்றனர். வரலாற்றுக்கு அடிப்படை, மொழியே என்பதை, சுமேரியத் தமிழர்கள் என்ற நூல் விளக்க முயன்றுள்ளது.

# 1. மொழிப் பாகுபாடுகள்

கி.பி.1500 ஆண்டுகளுக்குப் பிறகு உலகம் சுற்றத் தொடங்கிய ஐரோப்பியர்களுக்கு, பல்வேறு நாடுகளில் பேசப்பட்ட மொழிகள், அவர்களது கவனத்தை ஈர்த்தன. உலகில் பேசப்படும் பல மொழிச் சொற்கள், தங்கள் மொழிகளில் இருப்பதை உணர்ந்தனர். அதற்கான காரணம் அவர்களுக்குப் புரியவில்லை. தொலைவில் உள்ள இந்தியாவில் பேசப்படும் மொழிகளின் சொற்கள், தங்களுடைய ஐரோப்பிய மொழிகளிலும் காணப்படுவதைக் கண்டு வியப்படைந்தனர். ஒரு காலத்தில் தங்கள் முன்னோர்கள் உலகம் முழுவதும் பரவி வாழ்ந்ததின் விளைவாகவே, தங்கள் மொழிகளின் சொற்கள் உலகம் முழுவதும் பரவின என்று கூற, ஐரோப்பியரின் கடந்த கால வரலாறு இடம் தரவில்லை. பல மொழிச் சொற்கள், தங்கள் மொழிகளில் காணப்படுவது, தற்செயலானதா அல்லது வரலாற்றுப் பின்னணிகள் கொண்டதா என்பதை அவர்களால் அறிய இயலவில்லை. அதற்கு விடை காணும் வகையில் பலர், மொழி ஆய்வுகளில் ஈடுபடலாயினர்.

கி.பி.1781 ஆம் ஆண்டில், ஸ்குளோசர் என்பவரும், ஈக்கார்ன் என்பவரும் (Schlozer and Eichhorn) இணைந்து ஒரு மொழிக் கொள்கையை வெளியிட்டனர். அம்மொழிக் கொள்கை, மேற்காசிய நாடுகளில் பேசப்பட்ட மொழிகளை உள்ளடக்கியது. ஏனெனில், மேற்காசிய நாடுகளான மெசபத் தோமியாவில் தான் முதன்முதல், மொழிகளுக்கான வரிவடிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டது. குறிப்பாக, சுமேரியம், அக்காடியம், ஈழம், எபிரேயம் போன்ற மொழிகள், அக்காலத்தில் சிறப்புற்றிருந்தன. குறிப்பாக, எபிரேய மொழியில் எழுதப்பட்டிருந்த விவிலியம், அவர்களது கவனத்தை ஈர்த்தது. கிறித்துவர்களான ஐரோப்பி யர்கள், தங்கள் மொழிக்கொள்கையை வெளியிடுவதற்கான சான்றுகளை விவிலியத்திலிருந்தே எடுத்துக் கொண்டனர். மற்ற, சுமேரிய அசீரிய, பாபிலோனிய மொழிகள் பற்றிய ஆய்வுகள், அவர்கள் காலத்தில் மேற் கொள்ளப்படவில்லை. ஐரோப்பியர்களான அவ்விருவரும், தங்கள் மொழி களில் காணப்படும் சொற்களில் பல, எபிரேய மொழியில் காணப்படுவதை

உணர்ந்திருந்தனர். எபிரேயம்-கிரேக்கம்- இலத்தீன் - ஆங்கிலம் உள்ளிட்ட ஐரோப்பிய மொழிகளுக்கிடையே காணப்பட்ட தொடர்புகளை அறிந்திருந் தனர். ஐரோப்பியர்களுக்கு அறிமுகமான நூலாக, விவிலியம் இருந்தது.

*"உலகம் முழுவதும் ஒரே மொழியே பேசப்பட்டு, அம்மொழியின் சொற்களே பயன்படுத்தப்பட்டு வந்தன" - ஆதியாகமம், 11 : 1* [1].

வரலாற்றுக்காலத்துக்கு முற்பட்ட காலங்களில் பதிவு செய்யப்பட்ட எந்த மொழி இலக்கியங்களிலும், மொழியைப் பற்றிய கருத்தும் செய்தியும் எவற்றிலும் காணப்படாத நிலையில், விவிலியத்தின் பழைய ஏற்பாடு மட்டுமே, மொழியைப் பற்றி பேசுவது குறிப்பிடத்தக்கது. மேற்கண்ட செய்தியின் மூலம், உலகில் ஒரு மொழியே பேசப்பட்டது என்ற கருத்து உறுதிப்படுத்தப்படுகிறது. உலகம் என்பது எந்தெந்த நாடுகளை உள்ளடக்கியது என்ற செய்தி, அவ்வரிகளில் இல்லை. அந்த ஒரு மொழியின் சொற்களையே பயன்படுத்தி வந்தனர் என்ற கூற்று, அம்மொழி அப்போது திரிபு படவில்லை, சொற்களும் திரிந்திருக்கவில்லை என்பதைச் சுட்டுவதாக உள்ளது. அம்மொழியைப் பேசிய மக்கள் யாவர், அவர்கள் எந்த நாட்டினர் என்பது பற்றிய விளக்கம் அடுத்த வரியில் காணப்படுகிறது.

*"மக்கள் தொடர்ந்து கிழக்குத் திசையிலிருந்து புலம் பெயர்ந்து வந்து கொண்டிருந்தனர். சினார் என்ற சமவெளிப்பகுதியில் வந்து குடியேறி, அங்கேயே தங்கத் தொடங்கினர்". - ஆதியாகமம், 11 : 22* [2]

சினார் (Shinar) என்பது, தைகிரீஸ் ஆற்றைக் குறித்த எபிரேய மொழிச் சொல்லாகும். அதற்கு சிறிய ஆறு என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. சின்னாறு என்பதே சினார் என்று எபிரேய மொழியில் திரிந்துள்ளது. யூப்ரடீஸ் ஆற்றை, பேராறு என்று விவிலியம் குறிப்பிடுகிறது. (சொல் விளக்கம் தொடர்புடைய பகுதியில் காண்க). தைகிரீஸ் ஆற்றுக்குக் கிழக்குத் திசையிலிருந்து மக்கள் கூட்டமாக வந்து குடியேறி, அச்சம வெளிப்பகுதியில் தங்கி விட்டனர் என்ற செய்தி அறியப்படுகிறது. கிழக்குத் திசை என்ற சொல், இதே அதிகாரத்தில் ஐந்து முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. விவிலியம் குறிப்பிடும் கிழக்குத் திசை என்பது, சிந்துச் சமவெளியைக் குறிப்பதே என்பதை, தொடர்புள்ள பகுதியில் விளக்கப்படும்.

இந்த இடத்தில், ஒரு தொன்மக்கதை சொல்லப்பட்டுள்ளது. சினார் சமவெளியில் வாழ்ந்திருந்த மக்கள், பல்கிப் பெருகி, மேலும் அங்கு

வாழ்வதற்கு இயலாது என்ற நிலையில், தங்களுக்குள் பேசி முடிவெடுத்து, அங்கிருந்த மூன்று மரபுகளும், தெற்கிலும் வடக்கிலும் இரு மரபுகள் செல்வதென்றும், மூத்தமரபு அங்கேயே தங்கிவிடுவது என்றும் முடிவெடுத்தனர். அவர்கள் பிரிந்து செல்லும் முன்பாக, தாங்கள் வாழ்ந்திருந்த காலங்களை நினைவு கூறும் வகையில், விண்ணைத் தொடும் கோபுரம் ஒன்றைக் கட்டி முடிப்பது எனத் தீர்மானித்தனர் (எட்டிமனேக்கி – Etymaneki என்று அக்கோபுரம் சொல்லப்படுகிறது. எட்டும் + வானம் + ஏகி என்ற தமிழ்ச் சொற்கள், அச்சொல்லில் காணப்படுவதை நோக்குக.) சுட்ட செங்கல்லாலும், சாந்துப் பொருளாலும், அக்கோபுரம் கட்டப்பட்டது. பாபிலோனிய மொழியில், சிகுரத் (Ziggurat) என்று அது அழைக்கப்படுகிறது. (சிகரம் அது என்ற தமிழ்ச் சொல்லின் திரிபு.) கடந்த நூற்றாண்டில், அதன் அடிக்கட்டுமானத்தை, அகழ்வாய்வுகளில் கண்டுபிடித்துள்ளனர். அடிக்கட்டுமானத்தைக் கொண்டு, அதன் உயரம் 300 அடிகளுக்கும் மேல் இருக்கும் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

கோபுரம் கட்டப்படுவதை அறிந்த கடவுள், அம்மக்கள் ஓரினமாக இருப்பதாலும் ஒரே மொழியைப் பேசுவதாலும், தம்முடைய அனுமதியின்றி, கோபுரம் கட்ட எண்ணினர் எனக் கருதினார். மண்ணிற்கு இறங்கி வந்த கடவுள், அந்த மூன்று மரபினரும் ஒரே மொழியைப் பேசி வந்த நிலையில், அம்மொழியை மூன்று மொழிகளாக்கினார். அதனால், ஒரு மரபினர் பேசியது மற்ற மரபினருக்குப் புரியாமல் போனது. கோபுரம் கட்டுவது பாதியில் நின்று போனது. மக்கள் தாங்கள் ஏற்கனவே முடிவு செய்தபடி, தெற்கிலும் வடக்கிலும் பிரிந்து செல்ல, முதல் மரபினர் அங்கேயே தங்கி விட்டனர்.

இந்தக் கதை, கோபுரம் கட்டப்பட்டது பாதியில் நின்று போனதற்கான காரணத்தைக் கடவுள் மேல் ஏற்றிச் சொல்லப்பட்டுள்ளது. இக்கதையில், ஒரு கருத்து வெளிப்பட்டுள்ளதை நோக்க வேண்டும். ஒரு மொழியாக இருந்தது, மேலும் இரண்டு மொழிகளாகக் கிளைத்த செய்தியைத் தருகிறது. இதன் மூலம் ஒரு மொழி அல்லது மூல மொழி அல்லது முதன் மொழி, கிளைத்த செய்தியை அக்கதை கூறுகிறது. இக்கதை ஒருண்மையை வெளிப்படுத்துகிறது. உலகில் தொடக்கத்தில் ஒரு மொழியே பேசப்பட்டது. அதுவே முதல் மொழியும், மூல மொழியுமாகும். அந்த முதல் மொழி காலப்போக்கில் கிளைத்தது. இதுவே மொழிகள் கிளைத்தற்கான அடிப்படை அறிவியல் காரணமுமாகும். அதனையே விவிலியமும் விளக்குகிறது.

*"(கடவுளாகிய) நாம் மண்ணுலகிற்குச் சென்று, அவர்களுடைய மொழியைக் கிளைக்கச் செய்வோம். அதனால் ஒருவர் பேசுவது மற்ற வருக்குப் புரியாமல் போகும்" – ஆதியாகமம், 11.7[3].*

மேற்கண்ட கதையை, மொழிகள் பற்றிய ஆய்வுக்குரிய மூலமாக ஆய்வாளர்கள் எடுத்துக் கொண்டனர்.[4] மொழிகள் கிளைத்ததற்கு ஒரு கதை சொல்லப்பட்டுள்ளதாகக் கருதினர். கதையின் உண்மைத் தன்மை எவ்வாறு இருப்பினும், மொழியொன்று பலவாறாகக் கிளைத்த செய்தி விளக்கப் பட்டுள்ளதைக் காணலாம். இந்த நிகழ்வு, கி.மு.10000 ஆண்டுகளில் நிகழ்ந்திருக்க வாய்ப்புகள் உண்டு. சில ஆய்வாளர்கள், கி.மு.8000 – 7000 ஆண்டுகள் என்றும் கூறுகின்றனர்.

ஸ்குளோசரும் ஈக்கார்னும் மேற்கண்ட நிகழ்வையே, தங்கள் ஆய்வுகளுக்கு அடிப்படையாகக் கொண்டனர். தொடர்ந்து வந்த பல்லாயிரம் ஆண்டுகளில், கிளைத்த மொழிகள், மேலும் பல மொழிகளாகக் கிளைத்தன. கி.மு.1000 ஆண்டுகளில் இருந்த அம்மொழிகள் பற்றிய தகவல்களைத் திரட்டிய ஆய்வாளர்கள், அம்மொழிகளை, மூன்று தொகுதிகளாகப் பிரித்தனர்.

1. செம் என்பவன் மரபினர் பேசிய செமிட்டிக் மொழி மற்றும் அதன் கிளை மொழிகள். (Semitic family)

2. காம் என்பவன் மரபினர் பேசிய காமெட்டிக் மொழி மற்றும் அதன் கிளை மொழிகள் (Hametic family)

3. யாவன் என்பவன் மரபினர் பேசிய மொழிக்குடும்பத்துக்கு, இந்திய – ஐரோப்பிய மொழிக்குடும்பம் என்று பெயரிட்டனர்.

மேற்கண்ட மொழிகள் பற்றிய பாகுபாடுகள், கி.பி.1781 இல் வெளியிடப்பட்டன. மேற்கண்ட மொழிக் குடும்பங்களின் படி, கி.மு.2000 ஆண்டுகளில் அக்காலத்தில் நடுத்தரைக் கடலைச் சுற்றியிருந்த நாடு களாவன : ஆப்பிரிக்காவின் வடக்குக் கடற்கரை அல்லது எகிப்தின் மேற்குப் பகுதிகளான லிபியா, நூபியா ; அரேபியத் தீவக் குறையைச் சார்ந்த பாலத்தீனம், சிரியா ; மெசபத்தோமியா, ஈரானிய மேட்டுநிலம், ஆசியா மைனர், கருங்கடல் பகுதிகள் கிரேக்கப் பகுதிகள், அரிதாக அரியப்பட்ட தென் இத்தாலி மற்றும் ஸ்பெயின், சார்டினியா, போனீசியர்களின் வடக்கு ஆப்பிரிக்கக் கடற்கரை பண்டக சாலை நாடுகள், தூணிசியா போன்றவை. கிழக்கே பாரசீகம், இந்தியாவின் பஞ்சாப் பகுதி ஆகியவைகளே உலகம்

என்று அறியப்பட்டது[5]. அப்பகுதிகளில் பேசப்பட்ட மொழிகளையே, மூன்று பிரிவுகளாகத் தொகுத்தனர்.

**1. செமிட்டிக் மொழி :**

வடகிழக்கு செமிட்டிக் மொழிகளாக, பாபிலோனிய (அக்காடிய மொழி) மொழியும், அசீரிய மொழியும் சொல்லப்பட்டுள்ளன.

வடமேற்கு செமிட்டிக் மொழிகளாக, மெசபத்தோமியாவின் மேல்பகுதியில் பேசப்பட்ட சிரியாக், கிழக்குப் பகுதியில் பேசப்பட்ட போணீசியம், நடுப்பகுதில் பேசப்பட்ட அறமாயிக், தென்பகுதியில் பேசப்பட்ட எபிரேயம் மற்றும் கனானியம் ஆகியவை அடங்கும்.

தென்பகுதி செமிட்டிக் மொழிகளாக, அரபிக், எத்தியோப்பிய மொழிகள் சொல்லப்பட்டுள்ளன. (எத்தியோப்பியா என்பது, அக்காலத்தில் அரேபியாவின் மேற்குப் பகுதியைக் குறித்தது.)

**2. ஆமெட்டிக் அல்லது காமெட்டிக் மொழி :**

எகிப்து, தூனிசியா, சினைத் தீவக் குறை, லிபியா, நூபியா, சகாரப் பகுதிகளில் பேசப்பட்ட மொழிகள்.

**3. இந்திய - ஐரோப்பிய மொழி :**

மேலை நாடுகளில் பேசப்பட்ட மொழிகளில், இந்திய என்ற பெயர் இணைக்கப்பட்டுள்ளது, சமஸ்கிருத மொழியைக் கருத்தில் கொண்டே, அவ்வாறான பெயர் சூட்டப்பட்டது. ஆசியா மைனர், அனதோலிய மொழிகள், கிட்டைட், ஆர்மீனியா, கிரீஸ், சைப்ரஸ், கருங்கடல் பகுதிகளில் பேசப்பட்ட மொழிகள்.

செமிட்டிக் மக்கள், வாற்கோதுமை நிறத்துடனும் (Wheatish Complexion), நேரான மூக்குடனும், கன்னங் கறேல் என்ற கறுமை நிறத்தலை முடி மற்றும் தாடியுடனும் இருந்தனர். இந்தக் குறிப்புகள், எகிப்திய வரைபடங் களில் காணப்படுகின்றன. அரேபிய மற்றும் எகிப்தியர்களும் ஏறக்குறைய அதே நிறத்தில் இருந்தனர். இந்திய - ஐரோப்பிய இனத்தார், உயரமான தோற்றமும், நீண்ட மூக்கும், பழுப்பு கலந்த தலைமுடியும், வெள்ளை நிறமும் கொண்டிருந்தனர். அம்மக்களில் அனதோலிய மற்றும் ஆசியா மைனர் பகுதி மக்கள், கலப்பினத்தவராக இருந்தனர். இந்தியாவுக்கு வந்த ஆரியர்கள், அனதோலியப் பகுதிகளைச் சார்ந்தவர்களே.

மேற்கண்ட பகுப்பு முறையே, மொழியியல் வரலாற்றில் முதல் பகுப்பு முறையாகும். மாக்ஸ் முல்லர், இந்திய – ஐரோப்பிய இனத்துடன் மஸ்கோலியர்களையும் இணைத்தார். திராவிட மொழிகள், மெசபத்தோமிய – துரானிய – மஸ்கோலிய கலப்பில் தோன்றியவை என்றும் கூறினார். இந்தப் பாகுபாடுகள் எதன் அடிப்படையில் உருவாக்கப்பட்டன என்பதை எவரும் விளக்கவில்லை. உண்மையில், மேலே சொல்லப்பட்ட மூன்று மொழிக் குடும்பங்களுக்கு இடையே, பெருமளவு ஒற்றுமைகள் கண்டறியப்பட் டுள்ளன. இந்திய மொழிகளில், சமற்கிருதம் மட்டுமே, மேலை நாட்டவரால் ஆய்வு செய்யப்பட்டு, அது ஐரோப்பிய மொழிகளோடு தொடர்புடையது என்று அறிவிக்கப்பட்டது. மேற்கண்டவாறு செய்யப்பட்ட மொழி ஆய்வுகளை, இந்தியர்கள் எவரும் ஈடுபட்டுச் செய்யவில்லை.

கி.பி.1810 ஆம் ஆண்டில், சென்னையில் மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்த (ஏறக்குறைய தமிழ்நாடு முழுவதும் ஒரு மாவட்டமாகவே இருந்தது) பிரான்சிஸ் ஒயிட் எல்லிஸ் என்ற ஆங்கிலேயர், தமிழ் மொழியோடு தென்னக மொழிகளையும், சமற்கிருதத்தையும் கற்றறிந்தவர். அவரே முதன் முதலில், தமிழ் மொழிக்கும் எபிரேய, கிரேக்க, இலத்தீன் மொழிகளுக்கிடையே உறவுகள் இருப்பதைக் கண்டறிந்து வெளிப்படுத்தினார். அடுத்து 1850 களில் வாழ்ந்திருந்த கால்டுவெல், திராவிட மொழிகள் பற்றிய ஒப்பிலக் கணத்தை அளித்தார். 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் பிறந்த யாழ்ப்பாணத்து நல்லூர் ஞானப் பிரகாச அடிகளார், தமிழுக்கும் ஐரோப்பிய மொழிகளுக்கும் இடையே உள்ள உறவுகளை, வேர்ச் சொற்களின் ஆய்வுகள் மூலம் வெளிப்படுத்தினார். இவரே தமிழ் வேர்ச் சொற்களின் தந்தை என்றும் போற்றப்படுகிறார். ஞானப்பிரகாச அடிகளாரின் முறை களைப் பின்பற்றி, தேவ நேயப் பாவாணர், தனது வேர்ச் சொல் ஆய்வுகளை மேற்கொண்டார். தமிழ், திராவிட மொழிகளுக்குத் தாயாகவும், சமற்கிருத மொழிக்கு மூலமாகவும் உள்ளதென அறிவித்தார்.

மேலை நாடுகளிலும், கடந்த நூற்றாண்டில் தமிழ் நாட்டிலும் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளில், மொழிகள் மட்டுமே ஆய்வு செய்யப் பட்டன. அம்மொழிகள் பேசிய இனங்களின் வரலாறுகள் ஆய்வு செய்யப்பட வில்லை. சுமேரியத் தமிழர்கள் என்ற நூலில் முதன் முறையாக, உலக நாடுகளில் அறியப்பட்ட பல்வேறு மொழிகள் பேசிய இனங்களின் வரலாறுகள் ஆய்வுகளுக்குட்படுத்தப்பட்டுள்ளன. ஸ்குளோசர் மற்றும் ஈக்கார் ஆகிய இருவரும் கூறிய முதன் மொழி அல்லது மூலமொழி (Proto language)

எதுவென்பதை அறியும் முயற்சியில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இதுவரை உலக அளவிலும், தமிழ்நாட்டிலும் அணுகப்படாத வரலாற்றுக் கண் ணோட்டத்தில் இந்நூல் அணுகப்பட்டுள்ளது. முற்றிலும் புதிய முயற்சியாக அணுகப்பட்டுள்ள இந்நூல், தமிழ்க் கண்ணோட்டத்தில், இந்திய மற்றும் மேலை மொழிகளை ஆய்வு செய்ய முற்பட்டுள்ளது. தமிழ் மொழிக்குப் புதிய பரிமாணத்தை இந்நூல் தர முயன்றுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. One language : The whole world spoke the same language using the same words, - Genesis, 11 : 1.
2. Migration : While men were migrating from the east, they came upon a valley in the land of shinar and settled there - Genesis, 11 : 2.
3. God's plan : "Let us go down and there confuse their language, so that one will not understood what another says". Genesis, 11 : 7.
4. Tower story : This story based on traditions about the Temple towers or Ziggurat of Babylonia, is used by the Sacred writer primarily to illustrate the diversity of languages among the various peoples inhabiting the earth.
   - The New American Bible, Foot notes No. 11 : 1-10, 8.13.
5. Pre-Historic world : The table describes world and its people as known to the writer, this world is the lands adjacent to the writer, this world is the lands adjacent to the Eastern Mediterranean. Beginning with the North coast of Africa, west of Egypt, and moving counter clock-wise the area includes North Africa (modern Lybia), Egypt and Nubia, the Arabian peninsula, Palestine, Syria, Mesopotamia and the Iranian plateau, Asia Minor and possibly North coast of the black sea, the Aegean archipelago, and contimental Greece, very possibly southern Italy and Sardinia, possibly Spain and Phoenician colonies in North Africa in Tunisia.
   - Dictionary of the Bible, P.865.

## 2. தமிழரின் குடியேற்றங்கள்

உலக வரலாற்றுக் காலத்தை இரண்டாகப் பிரித்த வெள்ளக் காலம், ஏறக்குறைய 6000 ஆண்டுகள் நீடித்ததாக, ஆய்வாளர்கள் கருதுகின்றனர். வடதென்முனைகளிலும், அதனையொட்டிய கடற்பகுதிகளிலும் உறைந்து போயிருந்த பனிக்கட்டிகள் உருகத் தொடங்கிய காலமே, வெள்ளக் காலம் எனப்படுகின்றது. அப்பனி உருகல் நிகழ்வு வட முனையை விட, தென் முனைப் பகுதிகளில் தான் விரைவாக நடைபெற்றது என்பர். எனவே, நிலநடுக்கோட்டுப் பகுதிகளும், அதற்குத் தெற்கேயிருந்த நிலப்பகுதிகளும் பெருமளவில் கடலில் மூழ்கின. வடபகுதிகளான, வடக்கு ஆப்பிரிக்கா, எகிப்து, ஐரோப்பா போன்ற பகுதிகளில் வெள்ளத்தால் பெரும் பாதிப்புகள் நிகழவில்லையென ஆய்வாளர்கள் கருதுகின்றனர். குறிப்பாக, மெசபத் தோமியாவில் வெள்ளம் தோன்றியதற்கான அறிகுறிகள் காணப்படவில்லை யென ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஆப்பிரிக்காவின் தென்பகுதிகள் வெள்ளத்தால் சூழப்பட்ட நிலையில், அங்கு பெரும்பாலான பகுதிகள் கடலில் மூழ்கிப் போயின. ஆப்பிரிக்காவின் பெரும் பள்ளங்கள், ஏரிகளாக மாறிப்போயின. விக்டோரியா என்ற ஏரி அக்காலத்தில்தான் நிரம்பி வழிந்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். நைல் என்ற புதிய ஆறு, தன் போக்கில், விக்டோரியா ஏரியின் நீரைப் பெற்று, வடக்குத் திசை நோக்கி ஓடத் தொடங்கியது. மடகாஸ்கர் என்ற புதிய தீவு ஆப்பிரிக்கத் கண்டத் தினின்றும் பிரிந்து, இடையே கடல் நீர்வழித் தோன்றியது. அரபிக்கடல் தனது பரப்பளவை மேலும் விரித்துக் கொண்டது. செஷல்ஸ் தீவுகள், மொரீஷியஸ், இலக்கத்தீவுகள் மாலத்தீவு போன்ற புதிய தீவுகள் தோன்றின.

தென் பகுதியான இந்தியப் பெருங்கடலும், தனது எல்லையை பெருமளவில் விரிவாக்கிக் கொண்டது. தற்காலக் குமரி முனையிலிருந்து 700 காதம் வரையில் விரிந்து பரவியிருந்த குமரிக் கண்டம் முற்றிலுமாக கடலில் மூழ்கிப் போனது. குமரிக் கண்டம் இந்தியப் பகுதிகளை தனது வட எல்லையாகக் கொண்டிருந்தது. தற்கால இந்தியா, மேட்டுப் பகுதியாக இருந்ததால், வெள்ளத்தினின்றும் தப்பியது. ஆனாலும் தென்னிந்தியப்

பகுதிகளின் கடற்கரையோரங்கள் பெருமளவு கடலில் மூழ்கின. இலங்கை என்ற புதிய நாடு, தனிமைப்படுத்தப்பட்டுத் தீவாக மாறியது. வங்கக் கடல் தனது எல்லையை விரிவுபடுத்திக் கொண்டது. குமரிக் கண்டத்தின் கிழக்குப் பகுதிகளாக, அல்லது அதன் வடதென்கிழக்குப் பகுதிகளாக இருந்தவை, தனித்தனி நிலப்பகுதிகளாயின. உயரமான பகுதிகளாக இருந்த அந்தமான் நிக்கோபார் பகுதிகள், தீவுகளாயின. சுமத்திரா நிலப்பகுதியினின்றும் துண்டிக்கப்பட்டது. இந்தோனேசியத் தீவுகளும், அதற்குத் தெற்கே ஆஸ்திரேலியா வரையிலான நிலப்பகுதிகளில் பல, தீவுகளாயின. ஆஸ்தி ரேலியாவின் பரப்பும் சுருங்கியது. நியூசிலாந்து, ஆஸ்திரேலியாவினின்றும் பிரிந்து தனித் தீவானது. இந்தியப் பெருங் கடலில், இந்தியாவுக்குத் தெற்கே அறியப்படும். கார்சிகா தீவு வரை, நிலப்பகுதி நீண்டிருக்க வேண்டும் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். 2002 ஆண்டில் பூம்புகாருக்குக் கிழக்கே வங்கக் கடலில் கண்டுபிடிக்கப்பட்ட பெரு நகரம் ஒன்று அவ்வெள்ளக் காலத்தில்தான் கடலில் மூழ்கியது என கண்டறியப்பட்டுள்ளது. அக்கடல் அகழ்வாய்வை நடத்திய இங்கிலாந்தின் கிரஹாம் ஹாங்காக் என்பவர், அந்நகரம், கி.மு.11500 ஆண்டுகளில் கடலில் மூழ்கியது என, கார்பன் தேதி ஆய்வுகளின் அடிப்படையில் கூறுகிறார். அப்பெரு வெள்ளத்தில் பெருமளவில் அழிந்துபோன நிலப்பகுதி, தமிழர்களின் தாயகமான குமரிக் கண்டமே என்பது தெரிய வருகின்றது. கடந்த காலங்களில் குமரிக் கண்டக் கொள்கையைத் தமது வாழ்நாள் இலட்சியமாகக் கொண்டிருந்தவர் தேவ நேயப் பாவாணர் ஆவார். குமரிக்கண்டம் பற்றிய தமது ஆய்வுக் கட்டுரையை, டாக்டர் பட்டத்துக்காக அவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் அளித்தார். சான்றுகள் இல்லாத, டாக்டர் பட்டத்துக்குத் தகுதியற்ற ஆய்வுக் கட்டுரை என்று பல்கலைக் கழகம் மறுத்தது.

இன்று குமரிக் கண்டக் கொள்கை, ஆழ்கடல் ஆய்வியல், நிலவியல், புவியியல், இலக்கியங்கள், சமயத் தொன்மக் கதைகள், உலக மொழி ஆய்வுகள் போன்ற பல்வேறு துறைகள் தரும் தகவல்களால் புத்துயிர் பெற் றுள்ளது. புதிய மொழிக்கொள்கையை நிறுவுவதற்கு குமரிக்கண்ட அழிவு நிகழ்வே, அடிப்படையாகவும் உள்ளது. ஐரோப்பியர்கள், இலெமூரியா என்ற நிலப்பகுதி கடலில் மூழ்கியதாக ஒரு கொள்கையை வெளியிட்டனர். அது குமரிக் கண்டக் கொள்கையே என்று தமிழறிஞர்களும் மகிழ்ச்சியடைந்தனர். குமரிக் கண்டத்துக்கான மறு பெயர் இலெமூரியா என்றும் நம்பினர். பல்வேறு தமிழறிஞர்கள் இதுபற்றிய குறிப்புகளையும் எழுதியுள்ளனர். உண்மையில்

குமரிக் கண்டக் கொள்கை வேறு, இலெமூரியக் கண்டக் கொள்கை வேறு என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இலெமூர் (Lemur) என்ற குரக்கினம் பெருமளவில் அறியப்பட்டதால், அப்பெயர் சூட்டப்பட்டது. அக்குரக்கினம் மிகவும் அரிதாகவே தற்போது மட காஸ்கர் காடுகளில் காணப்படுகின்றது. இலெமூரியக் கொள்கை, ஆரியச் சார்புடையது. இந்தியாவின் தொன்மக் குடிகள் ஆரியர்களே என்ற கொள்கையைக் கொண்டது. கறுப்பர்களும், வெள்ளைக்காரர்களும் தனித்தனியான மரபுகளில் தோன்றியவர்கள் என்ற நிறவெறிக் கொள்கையைக் கொண்டது. கறுப்பர்களுக்கு (தமிழர்களும் அதில் அடங்குவர்) முன்பே, வெள்ளையர்கள் நாகரிகத்தில் சிறந்து விளங்கினர் என்றும், உலகில் கறுப்பர்கள் இரண்டாம் நிலைக் குடிகள் என்ற கொள் கையைக் கொண்டது. தமிழர்களால், இலெமூரியக் கொள்கையை ஏற்க இயலாது.

முன் தலைப்பில் சொல்லப்பட்ட மொழிக் கொள்கை, விவிலியக் கதையின் அடிப்படையில் சொல்லப்பட்டது. அக்கதை, உண்மையில் நடந்ததா அல்லது வெள்ளக் கதையை விளக்கச் சொல்லப்பட்டதா என்பது வேறு தலைப்பில் ஆய்வுப்பட வேண்டியதாகும். அக்கதையில் தமிழர்களும், குமரிக் கண்டமும் தொடர்புபடுத்தப்பட்டிருப்பதை, இதுவரை எவரும் கண்டறியவில்லை. நாகன் (Nahan) என்பவன், கடவுளுக்கு அஞ்சி, நல்லொழுக்க முள்ளவனாக வாழ்ந்து வந்தான். கடவுளின் பார்வையில், உலகம் தீய ஒழுக்கங்களின் கூடாரமாகக் காட்சியளித்தது. தம்மால் படைக்கப்பட்ட மக்கள், தமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாமல் வாழ்ந்து வருவதைக் கண்ட கடவுள், அவர்களை வெள்ளத்தால் அழிக்க நினைத்தார். நாகன் என்ற நல்லவனை அழைத்து, தம் திட்டத்தைக் கூறினார். நாகனின் குடும்பத்தினரைக் காப்போம் என உறுதியளித்து, மரக்கலம் ஒன்றைக் கட்டிக் கொள்ளுமாறு பணித்தார். உலகின் அனைத்து உயிரினங்களில் ஒவ்வோர் இணையை அம்மரக்கலத்தில் ஏற்றிக் கொள்ளுமாறு ஆணையிட்டார். நாற்பது நாட்கள் பகலும் இரவுமாக மழை கொட்டியது. உலகில் தீயவர்கள் அனைவரும் அழிந்து போயினர். நல்லவரான நாகன் காப்பாற்றப்பட்டார். இது தான் விவிலியம் கூறும் நாகன் பற்றியக் கதையாகும்.

நாகன் என்ற சொல்லையே, விவிலியத்தின் எபிரேய மொழி மூலம் குறிப்பிடுகிறது. நாகன் என்ற சொல்லை ஆய்வு செய்த விவிலிய ஆய்வாளர்கள் (ஐரோப்பியர்கள் தான்), நாகன் என்ற சொல்லுக்கான பொருள் தெரியவில்லை என்றும், அது எம்மொழிச் சொல் எனத்

தெரியவில்லை என்றும் குறிப்பிட்டுள்ளனர். நாகன் என்ற சொல்லை, கிரேக்க மொழியில் நோவா (Noah) என்று குறிப்பிட்டுள்ளனர். விவிலியத்தின் அனைத்து மொழி பெயர்ப்பு நூல்களும், கிரேக்க மூலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டதால், நோவா என்ற சொல், பரவலாக அறியப்பட்டது. எபிரேய மொழி மூலத்தில் நோவா என்ற பெயர் காணப்படவில்லை. மாறாக, நாகன் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

நாகன் என்பது தமிழ்ச் சொல்லே என்பதை விளக்கத் தேவையில்லை. நாகன், நாகர் போன்ற சொற்கள் தமிழ் இலக்கியங்களில் காணப்படு கின்றன. நா என்ற வேர்ச் சொல்லுக்கு, நீண்ட, நெடிய என்பதே பொரு ளாகும். நா என்பது, நீண்டிருந்தது என்ற பொருளில் ஆற்றையும் குறித்தது. நீளமான உறுப்பானதால், நாக்கு – நா என்றே சொல்லப்பட்டது.

| | | |
|---|---|---|
| நா – நாக்கு | : | "அமிழ்து பொதி செந்நா"[6] |
| நா-மணியின் நாக்கு | : | "சிறுநா ஓண்மணி"[7] |
| நா-நாகமரம் | : | "போகிய நாகப்போக்கு அருங்கவலை"[8] |
| நா-நாகம் | : | "திருமணி உமிழ்ந்த நாகம் காந்தள்"[9] |
| நா-நாகர் கோன் | : | "நாகரும் நாகர் கோனும்"[10] |
| நா-நாகர் நகர் | : | "பூமுடி நாகர் நகர்"[11] |
| நா-நாகர் – நகர் | : | "நெடுநகர் வரைப்பின்"[12] |

நகர் என்பது பழந்தமிழ்ச் சொல்லாகும். நகர்தல் – நகர்ந்து ஓடுதல் என்ற பொருளில் ஆற்றையும் குறித்தது. சங்க காலத்தில் அச்சொல் வழக்கிழந்து போனாலும், நகர் என்ற சொல் ஆற்றைக் குறித்ததே என்பதை, அதன் வளர் சொற்கள் உறுதிப்படுத்துகின்றன. அக்காலத்தில், ஆற்றங்கரை களிலேயே, குடியிருப்புகள் தோன்றின. நகர் என்ற சொல் ஆற்றைக் குறித்தது போலவே, ஆற்றங்கரை ஊர்களையும் குறித்தது. நகர் – நகரம் : ஆற்றங்கரையில் அமைந்த ஊர்.

*"நகரம் காவல் நனி சிறந்ததுவென்"*[13]

நகர் என்ற ஆற்றைக் குறித்து எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ளது. அரபு மொழியும் நகர் என்றே கூறுகிறது. தமிழில் பேராறு, சிற்றாறு, ஓடை, வடிகால், வாய்க்கால் என்றவாறு ஆறுகளின் அகலம் நீளம் தொலைவு குறித்து, சொற்கள் வேறுபடும். எபிரேய மொழியில் ஓடு (Hoddu), யோர்

(Yor), நகர், வடி (Wadi) போன்ற சொற்கள் உள்ளன.[14] ஒடு என்ற சொல், தமிழ்ச் சொல்லாயினும், தமிழில் அவ்வாறான வழக்கு மறைந்து போயிற்று. யாறு என்ற சொல்லே, யோர் எனத் திரிந்துள்ளது. இவ்வரிசைப்படி யே, நகர் என்பது, யாறு – வடி ஆகியவற்றுக்கு இடைப்பட்ட நீளமுள்ள ஆறாகும். நகர் என்ற ஆறு, நகர் (ஊர்) என்றும் சொல்லப்பட்டது போல், எபிரேய மொழியில் நகர் – நகோர் (Nahor) எனத் திரிந்து ஊரையும் குறித்தது[15]. ஊர்ப்பெயர்கள் மக்களின் பெயர்களாக தமிழ் நாட்டில் அறியப்படுவது போல (சிதம்பரம், விருத்தாசலம்) நகர் என்ற சொல், எபிரேய மொழியில், மாந்தனின் பெயராகவும் சொல்லப்பட்டுள்ளது. நாகம் என்ற தமிழ்ச் சொல், பாம்பைக் குறித்தது போல், எபிரேய மொழி நாகாஸ் என்று குறிப்பிடுகிறது[16].

நாகன் என்ற பெயர், நகரத்தில் வாழ்ந்திருந்தவனைக் குறித்த தமிழ்ச் சொல்லாகும்.

நாகத்தை வழிபட்டவன் என்ற விளக்கமும் உண்டு.

நகர் – நாகர் : நகரத்தில் வாழ்ந்தவர்.

நாகர் – நாகர் + இகம் : நாகர்களின் அறிவு சார்ந்த வாழ்க்கை, நாகரிகம்.

நாகரிகம் என்பது தமிழ்ச் சொல்லே. நகர் என்ற சொல்லின் நீட்சி.

*"நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்"*[17]

நாகன் என்பது, ஆண்பால் ஒருமை ; நாகர் – பன்மை.

விவிலியம் குறிப்பிடும் நாகன் என்பவன் தமிழனே என்பதை அவன் பெயரே சான்றளிக்கும். நாகன் என்ற பெயர், நோவா என்று சொல்லப் பட்டுள்ளதால், நாகன் என்ற சொல்லின் திரிபாகக் கருத இயலாது. எனவே, நாகனுடைய தொழில், செயல் ஆகியவற்றைக் கருதி, கிரேக்கர்கள், நோவா என்ற பெயரைச் சூட்டியுள்ளனர். கிரேக்க மொழியில், நோவா என்பதற்கு மரக்கலம் என்பதே பொருளாகும். மீண்டும் தமிழின் மூலத்துக்கே அச்சொல் வருகின்றது.

நா – நாவாய் : திறந்த நாயின் வாயை முன்பக்கத்தில் கொண்டுள்ள மரக்கலம்.

நாவாய் : வாய் என்பது வழி. நா – நீண்ட ; நீண்ட கடல் வழிச் செல்லும் கப்பல்.

நாவாய் : மரக்கலம். "பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை"[18]

நா – நாவி : நீண்ட, நெடிய.

நாவி : கொப்பூழ். தாய்க்கும் குழந்தைக்கும் இடையே உள்ள உறவுக் கொடி.

*"கமழ் பூங் குங்குமம் நாவிக் குழம்பு"*[19]

நாவி : மலையாள மொழியில் மரக்கலத்துக்கு ஒரு பெயர்.

நாவி – நாவிதன் : நீண்ட மழிக்கும் கத்தியைப் பெற்றிருப்பவன்.

*"மயிர்த் தொழில் நன்தலை நாவிதன்"*[20]

நோவா என்ற கிரேக்கச் சொல், நாவிஸ் (Navis) என்ற கிரேக்கச் சொல்லின் நீட்சியாகும்.[21] நாவிஸ் என்ற சொல், நாவி என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். நேவி (Navy) என்ற ஆங்கிலச் சொல்லுக்கான மூலம் தமிழில் உள்ளது. நேவி என்ற சொல் ஆங்கிலத்தில் பல சொற்களை உருவாக்கியுள்ளது.[22]

எனவே, நாகன் என்பது தமிழ்ச் சொல்லாகவும், நோவா என்பது தமிழ்த் திரிபுச் சொல்லாகவும் அறியப்படும். தமிழில் பல்வேறு வகையான மரக்கலங்களைக் குறிக்க, 300க்கும் மேற்பட்ட சொற்கள் உள்ளன. உலக மொழிகளில் எங்கும் இந்த எண்ணிக்கையில் சொற்களைக் காண இயலாது.

நாகன் எனப்படும் நோவா, தமிழனே என்பதற்கு முதற்சான்றாக அவன் பெயர் உள்ளது.[24]

அடுத்து, குர் ஆனில் சொல்லப்பட்டுள்ள செய்திகளை, அல் – பெய் சாவி என்ற ஆய்வாளர் விளக்குகிறார். "நோவா, இரண்டு ஆண்டுகள் அந்த மரக்கலம் கட்டுவதில் செலவழித்தார். இழைப்பதற்கும், கட்டுவதற்கும் ஏற்ற இந்திய மரத்தில் (பலாமரம்) அம்மரக்கலத்தைக் கட்டினார்".[25] மற்றொரு குறிப்பு, நோவா இலங்கையைச் சார்ந்தவர் என்று கூறுகிறது. (வெள்ளக் காலத்துக்கு முன்பு, இலங்கை தமிழ்நாட்டுடன் இணைந்திருந்தது. வெள்ளக் காலத்தில் தான் தமிழகத்தினின்றும் பிரிந்து தீவானது என்பது ஆய்வாளர்களின் கருத்து.)

விவிலியம் தரும் செய்தியில், நோவா தன் மரக்கலத்தை கோபர் (Gopher) என்ற மரத்தினால் கட்டியதாகச் சொல்லப்பட்டுள்ளது[26]. அதன் பொருள் என்ன, அது எத்தகைய மரம் என்பது பற்றி ஆய்வாளர்கள் குழப்பமடைந்துள்ளனர். அவ்வாறான மரம் எதுவும் எங்கும் அறியப்படவில்லை என்றும் கூறுகின்றனர். அந்நிகழ்வை எழுதிய விவிலிய ஆசிரியருக்கும் அது என்ன மரம் என்று தெரிந்திருக்கவில்லை. காபர் அல்லது கோபர் என்ற எபிரேயச் சொல், காப்பெரு என்ற தமிழ்ச் சொல்லின்

திரிபே. காட்டிலுள்ள பெரிய மரம், காப்பெரு (மரம்) என்பதே, காபர் எனத் திரிந்துள்ளது. இசுலாமிய விளக்கங்கள், விவிலிய விளக்கத்தை விடத் தெளிவாக உள்ளன பலாமரம் என்பது, நிலநடுக்கோட்டுப் பகுதிகளில் வளரும் மரமாகும். தமிழகத்தில் இப்போதும் அம்மரத்துக்குத் தனி விலையுண்டு. செய்திகளில் நாகன், நோவா ஆகிய பெயர்களும், பலாமரமும் அவனைத் தமிழகத்தோடு தொடர்புபடுத்தும் நிலையில், விவிலிய ஆய்வாளர்கள், அவன் மெசபத்தோமியாவைச் சார்ந்தவன் என்று கூறுகின்றனர். அதற்கானச் சான்றுகள் எவற்றையும் அவர்கள் தரவில்லை. விவிலிய நிகழ்வுகள் எதுவாயினும் அது மெசபத்தோமியாவில் நடந்ததாகவே பதிவு செய்துள்ளனர். அவர்கள் கூற்றில் அவர்களுக்கே நம்பிக்கை இல்லாததால் விளக்கங்களையும் தவிர்த்துள்ளனர்.

நாகனின் மரக்கலம் எங்கு நிலை கொண்டது என்பதிலும் குழப்பங்கள் உள்ளன. விவிலிய ஆய்வாளர்கள், அவ்விடமும் மெசபத்தோமியாவுக்கு அருகிலேயே உள்ளதெனக் கூறுகின்றனர். கடவுள் உருவாக்கிய இடன் தோட்டம் (Eden garden), ஆதாம் ஏவாள் வாழ்ந்திருந்தது (அவர்கள் இலங்கையிலிருந்ததாக இசுலாமிய மரபுகள் கூறுகின்றன) நோவா பிறந்தது, மரக்கலம் ஒதுங்கியது என அனைத்துமே மெசபத்தோமியப் பகுதிகளாகவே, விவிலிய ஆய்வாளர்கள் காட்டுகின்றனர். நோவாவின் கட்டுமரம், ஊராற்று (Urartu) என்ற இடத்தில் இறங்கி நிலை கொண்டதாக, பாபிலோனியக் குறிப்புகள் கூறுகின்றன. அசீரியக் குறிப்புகளும், ஊராற்று என்ற இடத்தையே குறிப்பிடுகின்றன. ஊராற்று என்ற இடம், மெசபத்தோமியாவிற்கு வடக்கேயுள்ள வண் (Van) என்ற ஏரிக்கு அருகில், அர்மீனியாவில் இருந்தது என்று விவிலிய ஆய்வாளர்கள் கூறுகின்றனர். (வண் என்பது, வளைவு என்ற பொருளில் ஏரி, குளம் ஆகிய நீர் நிலைகளைக் குறிக்கும் பழந்தமிழ்ச் சொல்லாகும். வண்ணில் துணி வெளுப்பவன் வண்ணான் எனப்பட்டான்). ஊராற்று என்ற சொல், எபிரேய மொழியில், அராரத் (Ararat) என்று சொல்லப்பட்டுள்ளது. அச்சொல்லுக்கான பொருள் தெரியவில்லை என்றும், அது எம்மொழிச் சொல் என்பதும் புரியவில்லை என்று கூறும் விவிலிய ஆய்வாளர்கள், அந்த இடத்தை மட்டும் குறிப்பிடுவது முரண்பாடாக உள்ளது"[27].

ஊராற்று என்ற சொல், தமிழ்க் கண்ணோட்டத்தில் முன்பின்னாக உள்ளது. தமிழர்கள், ஆற்றின் பெயரை முதற் சொல்லாகவும், ஆறு என்ற

சொல்லை அடுத்தச் சொல்லாகவும் பயன்படுத்துவது மரபு. (காவிரி ஆறு, வையை ஆறு.) மேலை நாடுகளில் ஆறு என்ற சொல்லை முதலிலும், பெயரைப் பின்னும் பயன்படுத்துவர். (எ.கா. யாறுதான் - யோர்தான்) அவ்வாறே, தமிழ் மரபுக்கு ஏற்ப, ஊர் சொல் முதலிலும், ஆறு என்ற சொல் பின்னரும் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஊர் + ஆறு என்பதே, ஊராற்று என்று சொல்லப்பட்டுள்ளது. ஆற்றூர் என்பதே, அவ்வாறு முன்பின்னாகச் சொல்லப்பட்டுள்ளது. வண் ஏரிக்கு அருகில், விவிலிய ஆய்வாளர்களின் கூற்றுப்படி ஆறு எதுவும் இல்லை. எனவே ஆற்றூர் என்ற சொல்லுக்குப் பொருளில்லை. தமிழ்க் கண்ணோட்டத்தில் நோக்குகையில்,

1. நாகன் தென் தமிழகத்தில் வாழ்ந்திருந்தான் ;
2. தமிழ் நாட்டுப் பலா மரத்தில் மரக்கலத்தைக் கட்டினான் ;
3. நாகன் நோவா ஆகிய பெயர்கள் தமிழ்ச் சொற்களாக உள்ளன.
4. தென் தமிழகத்திலிருந்து அரபிக்கடல் வழியே அம்மரக்கலம் சென்றிருக்க வேண்டும்.
5. ஆற்றூர் என்பது, சிந்து ஆற்றைக் குறித்த இடமாக இருந்திருக்க வேண்டும்.
6. சிந்து ஆற்றின் கரையில் அம்மரக் கலம் ஒதுங்கியிருக்க வேண்டும். வெள்ளக் காலத்துக்குப் பிறகு, தமிழர்கள் சிந்துவெளியில் குடியேறினர் என்ற செய்தியை ஒப்புநோக்குக. அந்நிகழ்வோடு நோவாவின் புலப் பெயர்ச்சியைத் தொடர்புபடுத்தலாம்.
7. சிந்து வெளி நாகரிகத் தொடக்கம், கி.மு.10000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று உறுதி செய்யப்பட்டுள்ளது.
8. வெள்ளக் காலம் முடிவுற்றது, கி.மு. 12000 - 10000 என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.
9. நோவா புலம் பெயர்ந்ததும் அக்கால அளவே எனக் கருத இடமுண்டு.
10. நோவா, அங்கேயே தங்கி வேளாண் தொழில் செய்து, இறந்து போனதாக விவிலியம் குறிப்பிடுகின்றது.
11. ஆய்வாளர்களின் கருத்துப்படி, முதல் வெள்ளப் பெருக்கு சிந்து ஆற்றில் தோன்றி, கி.மு.9500 ஆண்டுகளில், மொகஞ்சதாரோ நகரை அழித்ததாக உறுதி செய்துள்ளனர்.

12. மீண்டும் வெள்ளத்தால் அச்சமுற்ற நோவாவின் மரபினர் மேற்கு நோக்கிச் சென்றனர்.

13. இதனை உறுதிப்படுத்தும் வகையில், நோவாவின் மக்கள் (மரபினர்) கிழக்குத் திசையினின்றும், சின்னாற்றங்கரையில் குடியேறியதாக விவிலியம் உறுதிப்படுத்துகிறது. ஊராற்று என்று ஆய்வாளர்கள் குறிப்பிடும் இடம், சின்னாற்றங்கரைக்கு வடக்கில் உள்ளது என்பதை நோக்க வேண்டும்.

14. நோவாவின் மரபினர் சின்னாற்றங்கரையில் (தைகிரீஸ்) குடியேறிய போது அனைவரும் ஒரு மொழியையே பேசினர். அதுவே, முதன் மொழி என்று ஆய்வாளர்களால் சொல்லப்படுகின்றது.

15. நாகனும், நாகன் மரபினரும் தமிழர்களே என்பதால், அந்த முதன்மொழி தமிழே என்பதை உறுதி செய்யலாம்.
(இதனை உறுதி செய்ய மேலும் பல சான்றுகள் இந்நூலில் தரப்பட்டுள்ளன.)

இப்போது நாம் மீண்டும் சென்ற தலைப்பில் விளக்கப்பட்ட மொழிப்பாகுபாடுகள் பற்றிய செய்திகளுக்குத் திரும்புவோம். அம்மொழிக் கொள்கையை விளக்குவதற்கே, மேற்கண்ட விளக்கங்கள் தரப்பட்டன.

நாகன் என்ற நோவாவிற்கு மூன்று மக்கள் இருந்ததாக விவிலியம் கூறுகிறது. அவர்களை, செம் (Shem), காம் (Ham), யாப் பெத்து (Yaapeth) என்றவாறு குறிப்பிட்டுள்ளது. இம்மூன்று பெயர்களுக்கும், விவிலியத்தில் விளக்கமும் பொருளும் தரப்படவில்லை. செம் - செம்மை என்றவாறும், காம் - காமன் என்றவாறும், யாபெத் - யாப்பத்து என்றவாறும், தமிழ்த் திரிபுச் சொற்களாக இருக்கலாம். இவர்களில் செம் என்பவன் மரபினர் மெசபத்தோமியாவில் தங்கி விட்டனர். அவன் மரபினர் பேசிய மொழியே செமிட்டிக் எனப்படுகிறது. காமின் மரபினர் எகிப்து மற்றும் ஆப்பிரிக்காவில் குடிபெயர்ந்தனர். அம்மொழிகள் காமெட்டிக் எனப்பட்டது. யாபெத்துவின் மகன் யாவன் என்பவரின் கிரேக்க மரபு பேசிய மொழி, இந்திய - ஐரோப்பியம் எனப்பட்டது. இம்மூன்று மொழிக் குடும்பப் பெயர்களும், ஸ்குளோசர் மற்றும் ஈக்கார்ன் என்ற ஆய்வாளர்களால், 18 ஆம் நூற்றாண்டில் வைக்கப்பட்டன. இம்மூன்று மொழிக் குடும்பத்தின் முதன் மொழி, எதுவெனத் தெரியவில்லை என்று கூறினர். மேலே, நோவாவின் பின்னணி பற்றிய விளக்கம் தரப்பட்ட நிலையில், அம்மூன்று மொழிக் குடும்பங்களின் முதல் மொழி தமிழே என்று

கூறலாம். காரணம், அம்மூன்று மொழிக்குடும்பங்களினின்றும் கிளைத்த மொழிகளின் களிமண் தட்டுகள் மற்றும் யாப்பிரஸ் தாள்களின் குறிப்புகளில் ஏராளமான தமிழ்ச் சொற்களும், தமிழ்த் திரிபுச் சொற்களும் காணப்படுவதை நமது பல்வேறு நூல்களில் எடுத்துக் காட்டியுள்ளோம்.

செமிட்டிக் மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த பாபிலோனியம் (அக்காடியம்), அசீரியம், எபிரேயம் உள்ளிட்ட பல மொழிகளின் குறிப்புகள் அகழ்வாய்வு களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. எபிரேய மொழியின் முழுமையான இலக்கியம், விவிலிய நூலாகக் கிடைத்துள்ளது. செமிட்டிக் மொழிக் குடும்பத்தில், எபிரேயம் தவிர்த்த மற்ற மொழிகள் அனைத்தும் வழக்கிழந்து போயுள்ளன. எபிரேய மொழியும் கடந்த ஈராயிரம் ஆண்டுகளாக மறக்கப்பட்டு, இன்று இசராயெல் அரசால், மீண்டும் புத்துயிர் பெற்றுள்ளது. தமிழ் – எபிரேய மொழி பற்றிய விரிவான ஆய்வுகளுக்கு, எபிரேய மொழியின் மூல விவிலிய நூல் பயன்படுவதாக உள்ளது. இவையன்றி, வெளிநாட்டவராகக் கருதப்படும் சுமேரியர்கள் படைத்த இலக்கியங்களும் ஆய்வுப் பொருளாக உள்ளன.

காமெட்டிக் மொழிக் குடும்பத்தின் மொழிகள் அழிந்தும், திரிபுபட்டும் புதுப்புது மொழிகளான போதிலும், அக்கால ஆப்பிரிக்க மொழிகளில் சில இப்போதும் பேச்சு வழக்கில் உள்ளன. யுனெஸ்கோ வெளியிட்ட ஆப்பிரிக்க வரலாறு என்ற நூலில், எகிப்திய மற்றும் ஆப்பிரிக்க மக்கள், மெசபத்தோமி யாவினின்றும் குடிபெயர்ந்த மக்களாகவே கருதப்படுகின்றனர். பண்டு (Pantu), பெர்பெர் (Berber) போன்ற பழைய ஆப்பிரிக்க மொழிகளின் கிளை மொழிகளாக, இன்றைய ஆப்பிரிக்க மொழிகள் உள்ளன. எகிப்திய மற்றும் ஆப்பிரிக்க மொழிகளின் மூலம், திராவிட மொழிகளில் உள்ளனவென்று, யுனெஸ்கோவின் ஆப்பிரிக்க வரலாற்று நூல் கூறுகிறது.

கிரேக்க நாடு, கி.மு. 1000 ஆண்டுகளில் பல்வேறு நகர அரசுகளைக் கொண்டிருந்தது. இலக்கண மற்ற கொச்சை மொழிகள் பேசப்பட்டுவந்தன. கி.மு.500 ஆண்டுகளுக்குப் பிறகு, கிரேக்க நாட்டில் தோன்றிய அரசியல் மற்றும் சிந்தனையாளர்களின் மறுமலர்ச்சிக் காலத்தில், கிரேக்க மொழி புதுப்பிக்கப்பட்டது. புகழ்பெற்ற கிரேக்கச் சிந்தனையாளர்களில் பலர், தங்கள் இளமைக் காலத்தில், பாபிலோனில் வாழ்ந்திருந்தனர். அவர்களுடைய முயற்சியில், கிரேக்க இலக்கியங்களும் படைக்கப்பட்டன. அவற்றில், செமிட்டிக் மற்றும் எபிரேய மொழித் தாக்கங்கள் மிகுந்திருந்தன. கி.மு.1500

ஆண்டுகளில், போணிசியர்கள் கண்டுபிடித்த புதிய எழுத்து வடிவங்களை, காட்மஸ் (Cadmus) என்ற போணிசிய வணிகர், கிரேக்க நாட்டில் அறிமுகம் செய்ததாக, எரடோட்டஸ் என்ற வரலாற்று ஆய்வாளர் கூறுகிறார்[28]. அவரே, வரலாற்று அறிஞர்களின் தந்தை என்றும் போற்றப்படுகிறார். அலெக்சாந்தர் காலத்தில் தோன்றிய அரசியல் எழுச்சியால், கிரேக்கர்கள் பல நாடுகளை வென்றனர். இந்தியாவுக்கும் வந்தனர். அந்தந்த நாடுகளின் கலைச் சொற்களில் பலவற்றைத் தங்கள் மொழியில் இணைத்துக் கொண்டனர். இந்தியாவில் சமஸ்கிருத மொழிக்குப் புத்துயிர் அளித்தனர். கூடவே, சமஸ்கிருத மொழிகளுக்கிடையே வலிமையான உறவை உருவாக்கினர். அந்தக் காரணம் பற்றியே, பிற்கால மொழியியல் ஆய்வாளர்கள், ஐரோப்பிய மற்றும் சமஸ்கிருதத்தை இணைத்து, இந்திய - ஐரோப்பிய மொழிக்குடும்பம் என அறிவித்தனர்.

செமிட்டிக் மொழிக் குடும்பத்துடன் தொடர்புடைய யாவன் (நோவாவின் பெயரன்) என்பவன் மரபில், முதன் மொழியினின்று கிளைத்த கிரேக்க மொழிக்குடும்பம், பிற்காலத்தில் எகிப்திய - பாபிலோனிய இந்திய மொழி களோடும் தம் உறவை மேம்படுத்திக் கொண்டதால், தமிழ் மொழியின் பல்வேறு சொற்கள், கிரேக்க மொழியில் பரவலாக அறியக்கிடக்கின்றன. கிரேக்கர்களின் அரசியல் எழுச்சி, அவர்தம் மொழியை, செம்மொழித் தகுதிக்கு உயர்த்தியது. கிரேக்க மொழியைக் கற்பதும் பேசுவதும் அறிஞர்களின் தகுதிகளாகக் கருதப்பட்டன. கிரேக்க மொழியின் மறுபதிப்பாக உரோமானிய மொழியைக் கூறலாம். பிற்காலத்தில், அது லத்தீன் மொழியாக உருவெடுத்தது. கிறித்துவம் அம்மொழியை வளர்த்தது. இலத்தீன் மொழியைப் பின்பற்றி, ஆங்கிலம் உள்ளிட்ட ஐரோப்பிய மொழிகள் வளர்ந்தன. சிந்து வெளி எழுத்துகளைப் பின்பற்றி இந்தியாவில் உருவாக்கப் பட்ட பிராமி எழுத்துமுறையைத் தழுவியே, போணீசியர்கள் புதிய எழுத்து முறையை மேற்கில் உருவாக்கினார்கள். அப்புதிய எழுத்து முறையை, எபிரேயம் கிரேக்கம் உள்ளிட்ட பல மொழிகள் ஏற்றுக் கொண்டன. அவ்வாறு, தமிழ் மொழியும், தமிழர்கள் உருவாக்கிய எழுத்து முறையும் இன்று பல்வேறு வரிவடிவங்களுக்கு மூலமாக அமைந்தன.

**மொழிமரம்**

**முதன் மொழி (Proto - language)**



| **செமிட்டிக்** | **காமெட்டிக்** | **இந்திய - ஐரோப்பியம்** |
|---|---|---|
| பாபிலோனியம் | எகிப்தியம் | கிரேக்கம் |
| (அக்காடியம்) | எத்தியோப்பியம் | அனதோலியம் |
| அசீரியம் | குஷ் | கிட்டைட் |
| அறமாயிக் | கனான் | சிரியம் |
| போணிசியம் | தூனிஷியம் | இலத்தீன் |
| எபிரேயம் | சகாரா | ஆங்கிலம் உள்ளிட்ட |
| அரபு | பண்ட் | ஐரோப்பிய மொழிகள் |
| ஈழம் | பெர்பெர் | |

**குறிப்பு :** மேலே சொல்லப்பட்ட பட்டியல், ஸ்குளோசர் மற்றும் ஈக்கார்ன் ஆகியவர்களால் கி.பி.1781 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இம்மொழிகள் அனைத்தும் நடுத்தரைக் கடலைச் சுற்றியுள்ள நாடுகளில் பேசப்பட்டவை. இவற்றில் சில மொழிகள் அப்பட்டியலில் இணைக்கக் கூடாதவை என்ற கருத்தும் உண்டு. ஈழம் (Elam) என்ற மொழியை செமிட்டிக் குடும்பத்துடன் இணைப்பதைச் சிலர் ஏற்கவில்லை. இவையன்றி, வேறு பல மொழிகளும் அப்பகுதிகளில் பேசப்பட்டன. கி.பி. ஆறாம் நூற்றாண்டில் அராபிய இசுலாமியர்களின் அரசியல் எழுச்சியால், அரபு மொழி, பல நாடுகளின் மொழிகளைத் துடைத் தெறிந்து விட்டது. எபிரேயம், கிரேக்கம் உள்ளிட்ட ஐரோப்பிய மொழிகளைத் தவிர்த்த மற்ற மொழிகள், அரபு மொழியுடன் இணைந்தன. பலமொழிகளின் கலப்பினால், புது அரபு மொழி உருவா யிற்று. ஆனாலும் திருக்குர் ஆன் பழைய அரபு மொழியிலேயே உள்ளது. இந்திய – ஐரோப்பிய மொழிகளின் தாயாக கிரேக்க மொழி கருதப்படுகின்றது. அம்மொழிக் குடும்பத்தின் மூத்த அக்கையாக சமஸ்கிருதத்தையும், இளைய தங்கையாக ஆங்கிலத்தையும் கருதுகின்றனர். உண்மையில், சமஸ்கிருத மொழியின் தோற்றம், தமிழ் மூலத்தில் தோன்றியதே என்பதை உறுதிப்படுத்த இயலும். கிரேக்கர்களின் வருகையால், புதுப்பொலிவு பெற்றதால், அது

செம்மைப்படுத்தப்பட்ட மொழி (Refined language) என்று பெயர்மாற்றம் பெற்றது. ஸ்குளோசர் மற்றும் ஈக்கார்ன் குறிப்பிட்ட முதன்மொழி தமிழே என்பதால், மேற்கண்ட பட்டியலில் காணப்படும் அனைத்து மொழிகளிலும் தமிழின் சொற்கள், நேரிடையாகவும் திரிபுச் சொற்களாகவும் உள்ளன வென்பதை ஆய்வுகள் மெய்ப்பிக்கின்றன.

## அடிக்குறிப்புகள்

6. குறுந்தொகை, 14 : 1.
7. மேலதே, 336 : 3
8. நற்றிணை, 82 : 6.
9. அகநானூறு, 73 : 12.
10. வில்லி பாரதம், 11 : 204.
11. பரிபாடல், திரட்டு, 1 : 59
12. புறநானூறு, 68 : 17.
13. சிலப்பதிகாரம், 4 : 84
14. Yor : Dictionary of the Bible, P. 453.
15. Nahor : Grand father of Abraham - Genesis, 11 : 22.
16. Nagas : Serpent - D.O.B, P-602.
17. திருக்குறள் : 58 : 10
18. நற்றிணை : 293 : 6.
19. சிலப்பதிகாரம், 13 : 116
20. பெருங்கதை, 62 : 178
21. Nova or Noah : From Navis (Greek) - Navis (Latin) - Concise oxford Dictionary, P.954.
22. Navy, Navicular, Navigable, Navigate, Navigation, Navigator, and so on.
    Navigator : The word navigate derives from Navis for ship, which gave rise to Navy and also to the Nave, long, a central part of a church, whose shape was likened to that of a ship.
23. எபிரேய மொழியில் தமிழின் வேர்ச் சொற்கள், ம.சோ.விக்டர்.
24. Nahan : Meaning uncertain.
    - The Jerome Biblical commentary, P.15.
25. The commentator, al - Baizawi says that Noah was two years in building the ark which was framed of INDIAN PLANE TREE - Concise Islamic Encyclopedia, P.530.

26. Gopher tree : Genesis, 5 : 29.

27. Urartu : Ararat in Hebrew. Meaning and origin are uncertain. The region in which Noah settled after the deluge. (Genesis, 8 : 4). It is identical with Urartu mentioned often in the Assyrian records of the 9th and 7th centuries B.C. and also mentioned in the Babylonian records. - D.O.B., P.51.

28. Cadmus : The newly invented alphabet by the Phoenicians, was introduced into Greece by the Phoenician trader Cadmus - Heredotus.
- Lebanon, The Lonely Planet Publications, P.13.

# 3. மெசபத்தோமியர்

மெசபத்தோமியா என்பது கிரேக்கச் சொல்லாகும். இன்றைய வடமேற்கு ஈரான், ஈராக், சிரியா, வடகிழக்கு அரேபியா, துருக்கியின் தென்பகுதி ஆகிய நாடுகள் அடங்கிய பகுதியே, அன்று மெசபத் தோமியா என்றழைக்கப்பட்டது. அக்காலத்திலேயே, பல நாடுகளும் அரசுகளும் மெசபத்தோமியாவில் இருந்தன. தென் மெசபத்தோமியா, சுமேரியர்கள் ஆட்சியிலும், பின்னர் பாபிலோனியர் ஆட்சியிலும் இருந்தது. தை கிரிஸ் ஆற்றின் கிழக்கே, அசீரியர்கள் ஆண்டு வந்தனர். மெசபத்தோமியாவின் கிழக்கே (இன்றைய ஈரானிய எல்லையில்) ஈழம், கல் தேயம் போன்ற சிறிய நாடுகள் இருந்தன. இவ்விரு நாடுகளுக்கும் கிழக்கே பாரசீகமும், மேலும் கிழக்கே சிந்து வெளியும் இருந்தன. வடக்கே அனதோலியா என்ற நாடு கித்தியர் (Hittites) என்ற மரபினரால் ஆளப்பட்டு வந்தது. (அனதோலியாவிலிருந்தே ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்தனர்.) மெசப்பத்தோமியாவிற்கு மேற்கே, ஊகாரித் என்ற சிறிய நாடு கடற்கரையை யொட்டி இருந்தது. அதற்குத் தெற்கே போணீசியா (இன்றைய லெபனான்) அமைந்திருந்தது. மேலும் தெற்கே பாலத்தீனம் (கனான், இசராயெல் என்றும் சொல்லப்பட்டன) இருந்தது. மெசபத்தோமியா, பாரசீக வளைகுடா வழியே கடல் எல்லையைப் பெற்றிருந்தது. யூப்ரதீஸ், தைகிரீஸ் என்ற இரு ஆறுகளும் துணை ஆறுகளும் மெசபத்தோமியாவில், வடக்கிலிருந்து தெற்காகப் பாய்ந்து, பாரசீக வளை குடாவில் கலந்தன.

புவியியல் தொடர்பாக, மெசபத்தோமியாவின் மையப் பகுதி வறண்ட பாலைவனமும் கற்பாறைகள் நிறைந்த மேட்டு நிலமாக, காடுகளைக் கொண்டிருந்தது. யூப்ரதீஸ், தைகிரீஸ் ஆறுகள் அந்நாட்டிற்கு வளம் சேர்த்தன. பருவ காலங்களில் அவ்விரு ஆறுகளிலும் அடிக்கடி வெள்ளப் பெருக்கு ஏற்படும். வட மெசபத் தோமிய மலைப்பகுதிகளிலிருந்து ஓடி வரும் இரு ஆறுகள் மட்டுமே, அந்நாட்டின் வளமையை உறுதிப்படுத்தின. மெசபத்தோமியாவில் பெரும்பாலும் மழை அளவு குறைந்தே காணப்படும். அவ்வப்போது புழுதிப் புயல்களும் தோன்றும். பொதுவாக, இயற்கை

வளங்களான உலோகங்கள், கட்டுமானத்துக்குத் தேவையான மரங்கள், கட்டிடங்கள் கட்டுவதற்கான கற்கள் அரிதாகவே காணப்பட்டன. யூப்ரதீஸ் தைகிரீஸ் ஆறுகள் வழியே, வளைகுடா இணைக்கப்பட்டிருந்ததால், வணிகம் பெருமளவில், நீர்வழிப்போக்குவரத்தால் சிறப்புற்றிருந்தது.

கி.மு. 8000 ஆண்டுகளில் தான் வேளாண்மை மெசபத்தோமியாவில் அறிமுகமாயிற்று என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். மெசபத்தோமி யாவில் கி.மு.75000 ஆண்டுகளிலேயே மக்கள் வாழ்ந்திருந்தனர் என்று தொல்லியல் ஆய்வாளர்கள் கூறுகின்றனர். சிந்து வெளியைப் போலவோ, எகிப்தைப் போலவே வளமான நாடாக மெசபத்தோமியாவைக் கூற இயலாது. வேளாண்மை அறிமுகம் செய்யப்படுமுன், மக்கள் வேட்டையாடி உண்டு வந்தனர். நாகரிகக் கூறுகள் எவையும் அங்கு காணப்படவில்லை. வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறிய மக்கள் தாம், மெசபத்தோமியாவில் வேளாண்மையைத் தொடங்கினர். விவிலியம் குறிப்பிடும் நோவாவின் மரபினராக அவர்கள் இருக்கலாம். கிழக்கிலிருந்து வந்த மக்கள் தான் சுட்ட செங்கற்களால் சாந்துகளைப் பயன்படுத்தி வீடுகள் கட்டத் தொடங்கினர். அடிக்கடி வெள்ளப் பருக்கால் அழியும் நிலங்களைக் சீர்படுத்தினர். இரண்டு ஆறுகளிலும், கால்வாய்களை வெட்டி, வேளாண்மைக்கு நீரை எடுத்துச் சென்றனர். நீர்வழிப் போக்குவரத்தைச் சீர் செய்தனர். இரண்டு ஆறுகளின் கரைகளில் நகரங்களை உருவாக்கினர். இம்மக்களை செமிட்டிக் இனமக்கள் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

மெசபத்தோமியா என்பதற்கு, "ஆறுகளுக்கு இடையில்" (between the rivers) என்று பொருள் கூறுகின்றனர். எபிரேய மொழியில், மெசபத்தோமியா, அறம் நகரம் (Aram Naharaim) என்றும், சின்னாற்று நிலம் என்றும் (Land of Shinar), கல்தேயம் (Chaldea) என்றும் சொல்லப்பட்டுள்ளன. பொதுவாக, இரண்டு ஆறுகளுக்கும் இடைப்பட்ட சமவெளியே வளமான விரிந்து படர்ந்த, வேளாண்மைக்கேற்ற பகுதியாகும். மெசபத்தோமியா என்பதற்கு, படர்ந்து விரிந்துள்ள மேட்டுச் சமவெளி என்றும் விளக்கம் தரப்படுகின்றது. அப்பகுதியை, படன் அறம் என்று எபிரேய மொழி கூறுகிறது. (Paddan Aram) மிசை - படன் - மியா என்ற தமிழ்ச் சொற்களின் திரிபாகவே மெசபதோமியா உள்ளது. படன் என்ற தமிழ்ச் சொல், எபிரேய மொழியிலும் அவ்வாறே சொல்லப்பட்டுள்ளது. படம் என்பது விரிந்திருத்தலைக் குறிக்கும். கடம் – கடன், இடம் – இடன், நடம் – நடன் என்பதெல்லாம் ஈற்றுப் போலியென தமிழ் இலக்கண மரபு கூறும். அதுபோலவே, படம் – படன் என்று சொல்லப் பட்டது.

அறம் என்ற சொல்லின் பொருளை அறியாத மேலை நாட்டவர், அதனை அறாம் என்று ஒலித்தனர். நோவாவின் மகனாகிய செம் என்பவனின் மகனாக, நோவாவின் பெயரனாக அறம் என்பவன் எபிரேயக் குறிப்புகளில் சொல்லப்பட்டுள்ளான். அசீரியப் பதிவுகளிலும் அறம் என்ற சொல் காணப்படுகிறது. அறம் என்பவன் மரபினர் வாழ்ந்திருந்த இரு ஆறுகளுக்கும் இடைப்பட்ட பகுதி, படன் அறம் என்றும் சொல்லப்பட்டுள்ளதை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். மெசபத்தோமியா முழுவதையும், அறம் நகரம் என்றும் பதிவு செய்துள்ளனர்.[29] அறம் என்பது, திரிபுபடாத தமிழ்ச் சொல் என்பதும், அதற்கு இணையான மற்றொரு சொல், தமிழில் கூட இல்லை என்பதும், அச்சொல்லின் சிறப்பை உணர்த்தும். திருக்குறளை மொழி பெயர்த்த ஜி.யூ.போப், அறம் என்ற சொல்லுக்கு ஆங்கிலத்தில் சொல் இல்லை என்று கூறுகிறார். இருப்பினும் அச்சொல்லுக்கு அருகில் நின்று பொருள் தரும் Virtue என்ற சொல்லைப் பயன்படுத்துவதாகக் கூறுகிறார்.

அறம் என்பவன் வழிவந்த வர் பேசிய மொழியே, அறம் வாய்மொழி என்று சொல்லப்பட்டது. அறம் வாய் என்ற சொல்லில், வாய் என்பது மொழியைக் குறித்தது அறம் - வாய் - அறமாய்க் எனத் திரிந்தது. மெசபத்தோமியாவில் பரவலாகப் பேசப்பட்ட அறமாயிக் மொழி, சுமேரிய - அக்காடிய மொழிகளின் தாக்கங்களால் அருகத் தொடங்கியது. படன் அறம் பகுதியிலிருந்த மக்கள், காலப்போக்கில், தெற்கிலுள்ள பாலத்தீனத்தில் குடியேறினர். அங்கும் நாட்டுப் புறங்களில் வாழ்ந்திருந்த மக்களே அம்மொழியைப் பேசி வந்தனர். எபிரேயம் என்ற மொழியை ஆய்வு செய்த அறிஞர்கள், அது, சுமேரிய - அக்காடிய - அறமாயிக் மொழிகளின் கூட்டுக் கலவையாக உருவான மொழி என்று கூறுகின்றனர். கி.மு.1950 களில் வாழ்ந்திருந்ததாகக் கருதப்படும் அபிரகாம் என்பவரே, எபிரேய மொழியைப் பேசியதால், எபிரேயன் என்று முதன்முதலில் குறிப்புகளில் சொல்லப் பட்டுள்ளார். எபிரேயம், அறமாயிக் - சுமேரியம் ஆகிய மொழிகளுக்குக் காலத்தால் பிந்தியது என்றாலும், தன்னை வளப்படுத்திக் கொண்டதால், அது இலக்கிய மொழியாகக் கருதப்பட்டது. செம்மொழித் தகுதியும் அதற்கு வழங்கப்பட்டது. தமிழ்க் கண்ணோட்டத்தில் கூறுவதென்றால், சங்க இலக்கியங்கள் போன்ற உயர்ந்த தமிழாக எபிரேயமும், நாட்டுப் புற மக்கள் பேசும் வழக்குத் தமிழாக அறமாயிக் மொழியும் கருதப்படும். இயேசு, தன் கொள்கைகளை அறமாயிக் மொழியிலேயே மக்களுக்குக் கூறி வந்தார். அவருடைய கொள்கைப் பதிவுகள், எபிரேய மொழியில் எழுதப்பட்டன. (மேலும் விளக்கங்களை எபிரேயர் என்ற தலைப்பில் காண்க.)

மெசபத்தோமியாவில், கி.மு.10000 - 8000 ஆண்டுகளில், நோவாவின் மரபினர் குடியேறினர் எனலாம். அவர்களே, வேளாண்மையை அப்பகுதியில் முதன்முதலில் அறிமுகம் செய்தவர்களாவர். சுட்ட செங்கற்களால் கட்டிடங்கள் கட்டுவதையும் அவர்களே அறிமுகம் செய்தவர்களாவர். அவர் காலத்தில் எழுத்து முறை நடைமுறையில் இருந்ததற்கானச் சான்றுகள் கிடைக்கவில்லை. இருப்பினும் அவர்கள் எழுத்து முறையை அறிந்திருக்க வாய்ப்புகள் உண்டு. அகழ்வாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட களி மண் தட்டுகளில், பல எழுத்துகள், சுமேரியர் எழுத்து முறைக்கு மாறுபட்டிருந்தன. ஆனால் ஆய்வாளர்கள், அவற்றைப் பிரித்துப் பார்க்காமல், சுமேரியர்களுடையதாகவே அறிவித்து விட்டனர். முதல் குடியேற்ற மக்களாகிய செம் என்பவரின் மரபினர் பேசிய மொழியே செமிட்டிக் மொழியென சொல்லப்பட்டது.

சுமேரியர் வருகைக்கு முன்னரே, வேளாண்மை, வீட்டு விலங்குகளை வளர்த்தல், நகரங்களை உருவாக்குதல், ஆற்று நீரை மடைமாற்றிக் கால்வாய்களை வெட்டுதல் போன்ற துறைகளை அவர்கள் செய்திருந்தனர். மெசபத்தோமியாவின் மேட்டு நிலங்களையே, அவர்கள் குடியிருப்புகளுக்குத் தேர்வு செய்தனர். ஏற்கனவே வெள்ளத்தால் ஏற்பட்ட அழிவுகளை, கிழக்கு நாட்டில் (சிந்து வெளியில்) அவர்கள் உணர்ந்திருந்தனர். நகரங்களையும் உருவாக்கினர். ஊரூக் (Uruk) என்ற நகரமே அவர்கள் உருவாக்கிய முதல் நகரமாகக் கருதப்படுகின்றது. ஊர் என்ற தமிழ்ச் சொல், முன்னொட்டுச் சொல்லாக உள்ளது. ஊரகம் என்ற சொல்லே, ஊரூக் எனத் திரிபு பட்டிருக்க வேண்டும். உலக வரலாற்றை இரண்டாகப் பிளந்த வெள்ளம், மெசபத்தோமி யாவில் அறியப்படவில்லை. அதற்கான நிலவியல் தடையங்கள் எவையும் கிடைக்கவில்லை என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

**யூப்ரடீஸ் (Euphrates) :** அக்காலத்து நாகரிகங்கள், சிந்து, யூப்ரடீஸ், நைல் ஆற்றங்கரைகளில் அறியப்பட்டன. யூப்ரடீஸ் ஆறு, பல்வேறு வரலாற்றுப் பதிவுகளில் இடம் பெற்றுள்ளது. மெசபத்தோமியாவின் ஆறுகளில் மிக நீளமானது. வடக்கில் உள்ள வண் என்ற ஏரிப்பகுதியில் தோன்றி, தென் மேற்கில் வளைந்து, பாரசீக வளைகுடாவில் கலக்கு முன், தைகிரீஸ் ஆற்றுடன் இணைகிறது. கங்கை - யமுனை இணையும் இடத்தில் உள்ள அலகபாத் போன்று, யூப்ரடீஸ் - தைகிரீஸ் ஆறுகள் இணையும் இடத்தில் ஊர் நகரம் இருந்தது. முற்றிலும் நீர்வழிப் போக்குவரத்துக்குப் பயன்பட்ட யூப்ரடீஸ், மெசபத்தோமியாவில் வணிகம் செழிக்க உதவியது.

பாபிலோன், ஊர் போன்ற நகரங்களில் செயற்கையாக வெட்டப்பட்ட கால்வாய்கள் ஊருக்குள் சென்று, வளைந்து, திரும்பவும் யூப்ரடீசில் இணைக்கப்பட்டிருந்தன. அதனால் படகுகளில், பொருட்களை ஏற்றிவர முடிந்தது. அக்காலத்தவர், சாலைகளை அமைப்பதை விட, ஆறுகளேயே செப்பனிட்டு, போக்குவரத்துக்குப் பயன்படுத்தினர். யூப்ரடீசின் வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்த, பல்வேறு கால்வாய்கள் வெட்டப்பட்டு, உள் நாட்டில் வேளாண்மைக்கு நீரைக் கொண்டு சென்றன.

யூப்ரடீஸ் என்பது, கிரேக்கச் சொல்லினின்றும் பிறந்த ஆங்கிலச் சொல்லாகும். விவிலியம், யூப்ரடீஸ் ஆற்றை, பேராறு என்றே குறிப்பிடுகின்றது. பேராறு – பேராட் (Perat) என்று எபிரேய மொழியில் திரிந்துள்ளது. பாபிலோனிய மொழியில், இபுறத்து (E-Purattu) என்று குறிப்பிட்டுள்ளது. அதாவது, இப்புறத்து (ஆறு) என்ற தமிழ்ச் சொல்லால் அழைக்கப்பட்டது. மெசபத்தோமியாவின் இடது புறத்தில் ஓடுவதால் இடதுபுறத்து ஆறு, இ-புறத்து ஆறு என்றும் சொல்லப்பட்டிருக்கலாம்.

இப்புறத்து (தமிழ்) - இப்ரடோஸ் (கிரேக்கம்) - இப்ரதூஸ் (இலத்தீன்) - யூப்ரடீஸ் (ஆங்கிலம்), என்றவாறு தமிழ்ச் சொல் திரிபுபட்டுள்ளது. யூப்ரடீஸ் என்ற ஆற்றின் பெயர் தமிழ்ச் சொல்லால் அழைக்கப்பட்டது என்பது பலருக்கு வியப்பாக இருக்கலாம். அங்கு குடியேறிய தமிழர்கள்தாம், தமிழ்ப் பெயரை அந்த ஆற்றுக்குச் சூட்டியுள்ளனர்.

யூப்ரடீஸ் ஆறு தோன்றும் இடத்திலுள்ள வண் (Van) என்ற ஏரி, தமிழ்நாட்டின் வீராணம் ஏரியைப் போன்றது. அதற்குக் கிழக்கே, ஊர்மியா (urmiyah) என்ற ஏரி உள்ளது. இவ்விரு ஏரிகளுக்கும் வடக்கே கஸ்பியன் என்ற பெரிய ஏரி உள்ளது. அதனைக் கடல் என்றே அழைக்கின்றனர். நீரை வெளியேற்ற வழியில்லாததால், கஸ்பியன் ஏரி உப்புநீராக மாறியுள்ளது. இரண்டு இலக்கம் ஆண்டுகளுக்கு முன்பு, அட்லாண்டிக் கடலையும், பசிபிக் கடலையும் நடுத்தரைக் கடல், மெசபத்தோமியாவின் வட பகுதி, இமய மலைப்பகுதி, தாய்லாந்தைக் கடந்து, தென் சீனக் கடலுடன் இணைத்த பெரிய நீர்வழி இருந்ததாக, ஆய்வாளர்கள் கூறுகின்றனர். பிற்காலத்தில் ஏற்பட்ட இயற்கை மாற்றங்களால், அந்த நீர்வழி அடைபட்டுப் போயிற்று என்றும், அதன் வழியில் இருந்த பள்ளமான பகுதிகளே, வண் ஏரி, ஊர்மியா ஏரி, கஸ்பியன் கடல் போன்ற நீர்நிலைகளை உருவாக்கிவிட்டது என்றும் கூறுகின்றனர். உப்பு நீர் நிறைந்த அந்த ஏரியை, கசப்பு நீர் ஏரி என்று

அழைத்தனர். அதுவே கசப்பின் – கஸ்பியன் எனத் திரிந்துள்ளது. வண் என்ற ஏரி பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளது. இருப்பினும் வண் என்ற தமிழ்ச் சொல், மெசபத்தோமியப் பகுதியிலும் அறியப்பட்டிருந்தது என்பதை, அந்த ஏரியின் பெயர் நினைவட்டுகிறது. வண் என்பது, வளைவு என்றவாறு தமிழில் பொருள்படும். வானத்தில் மழைக்குப் பிறகு தோன்றிய வண்ணை, வண்ணம் அதாவது வளைவு என்றனர். அந்த வளைவில் பல நிறங்கள் இருந்ததால், வளைவு என்ற பொருள் நீண்டு, நிறம் என்ற பொருளில் வண்ணம் எனப்பட்டது. வண்ணம் என்பதற்கு முதற்பொருள் நிறம் என்பதன்று, வளைவு என்பதே. மூத்தோரை வரவேற்க, உடலை வளைத்து மரியாதை செய்வது தமிழர் மரபு.

வண் – வளைத்தல் : வளைதல், உடலை வளைத்தல்.

வண் – வணக்கு : வளைவு.

வண் – வணக்கு – வணக்கம் : உடலை வளைத்து வரவேற்றல் அல்லது மரியாதை செய்தல்.

ஊர்மியா என்ற ஏரியும் தமிழ்ப் பெயரைக் கொண்டதே.

அயம் என்ற தமிழ்ச் சொல்லுக்கு, ஏரி அல்லது குளம் என்பதே பொருளாகும்.

எப்போதும் ஊரும் நீரால் நிறையும் அக்குளம் அல்லது ஏரி, ஊரும் அயம் என்று சொல்லப்பட்டது. ஊர் – ஊரும் அயம் – ஊர்மியா எனத் திரிந்துள்ளது என்க.

*“அயம் வெள் ஆம்பல்”* [30]

**தைகிரீஸ் (Tigris) :** இதுவும் கிரேக்கச் சொல்லே. யூப்ரடீசை விட, பல பெயர்களால் தைகிரிஸ் ஆறு அழைக்கப்படுகிறது. கிழக்கு நாட்டிலிருந்து புலம் பெயர்ந்து வந்த மக்கள், தைகிரிஸ் ஆற்றங்கரையில் தான் குடியேறியதாக விவிலியம் கூறுகிறது. நோவாவின் மரபினர் வந்து குடியமர்ந்த பகுதி என்று விளக்கப்பட்டுள்ளது. எபிரேய மொழியில் இரண்டு பெயர்களால் தைகிரீஸ் ஆறு சுட்டப்படுகின்றது.

1. இடிக்கல் (Hiddikal) : வேகமாக, விரைந்து ஓடி வரும் ஆறு என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. இப்பெயரில் இரண்டு தமிழ்ச் சொற்கள் உள்ளன.

இடி : இடித்தல், தள்ளுதல், ஓசையுடன் ஓடி வருதல்.

ஆற்றுக்கு, கலுழி என்ற மற்றொரு சொல் தமிழில் உண்டு.

மரம் செடி கொடிகளையும், குப்பை கூளங்களையும், பல வகையான பொருட்களையும் கலந்து வரும் ஆறு, கலுழி எனப்பட்டது.

கல் + உழி : *"நுரை உடைக் கலுழி பாய்தலின்"*

கலுழி, பல வகைப் பொருட்களின் கலப்பு.

*"கேடில் சீர்க்கலுழன் ஆய கலுழவே"*[31]

கலுழன் : பல நிறங்களைக் கொண்டுள்ள பருந்து[32]

2. சினார் அல்லது சென்னார் (Shinar - Sennar) : ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல், சின்னாறு என்ற தமிழ்ச் சொல்லின் திரிபு. யூப்ரடீசை பேராறு என்றும் தைகிரீசைச் சின்னாறு என்றும் அழைத்தனர். இதுவும் தமிழர்கள் சூட்டிய பெயரே. சினார் என்பதற்கான பொருள் தெரியவில்லையென்பது ஆய்வாளர்களின் கருத்து. பொதுவாக, ஐரோப்பிய ஆய்வாளர்கள், அக்காலத்து மொழிகளை ஆய்வு செய்த போது, பல நூறு சொற்களின் மூலம் தெரியவில்லை என்றும், பொருள் தெரியவில்லையென்றும் குறிப்பிட்டுள்ளனர். பல சொற்களுக்குத் தவறான பொருளையும் தந்துள்ளனர். பல சொற்களுக்கு ஐயப்பாடான பொருளைத் தந்து கேள்விக் குறியொன்றை இட்டுள்ளனர். அவ்வாறு சொல்லின் மூலமும் (எந்த மொழியென்று) பொருளும் தெரியவில்லையெனக் கைவிடப்பட்ட பல நூறு சொற்கள் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன. பொருள் தெரியவில்லை என்று கை விடப்பட்ட சொற்களில், இடிக்கல் மற்றும் சென்னாறும் அடங்கும்.

பாபிலோனிய மொழியின் இடிக்கல் என்ற சொல் எபிரேய மொழியில், இடிக்கலத்து என்று சொல்லப்பட்டுள்ளது (Idikalat). கலத்தல் என்ற தமிழ்ச் சொல், பின்னொட்டுச் சொல்லாக உள்ளது. சுமேரிய மொழியில் இடிஞ்ச (Idigna) என்றவாறு குறிப்பிட்டுள்ளதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். எபிரேய, பாபிலோனிய, சுமேரிய மொழிச் சொற்களில், முன்னொட்டுச் சொல்லாக, இடி என்ற தமிழ்ச் சொல் காணப்படுகிறது[33]. இடிஞ்ச என்பது, இடிச்ச என்ற தமிழ்ச் சொல்லின் வட்டார வழக்குச் சொல்லாக உள்ளது எனலாம். (மேலும் ஒரு பெயராலும் தைகிரீஸ் ஆறு அழைக்கப்படுகிறது. அது பற்றி எபிரேயர் என்ற தலைப்பில் காணலாம்).

தைகிரீஸ் ஆறு, யூப்ரதீஸ் ஆறு இரண்டும் வண் ஏரிக்கு அருகில் உருவாகின்றன. தென்கிழக்குத் திசையில் வளைந்து, பாரசீக வளைகுடாவில்

கலப்பதற்கு சற்று முன்பாக, யூப்ரதீஸ் ஆற்றுடன் இணைகிறது. ஏறக்குறைய 600 மைல் (1000 கி.மீ.) தொலைவு ஓடி வருகின்றது. யூப்ரதீஸ் 2000 கி.மீ க்கும் சற்று நீளமானது. இன்றைய பாக்தாத் நகருக்கு அருகில், 4 மைல் இடைவெளியில் இரண்டு ஆறுகளும் நெருங்கி வந்துள்ளன. இந்த 4 மைல் இடைவெளியில், செயற்கையாக ஒரு கால்வாயை வெட்டி, இரண்டு ஆறுகளையும் இணைத்துள்ளனர். வேளாண்மைக்கும், போக்கு வரத்துக்கும் ஏற்றவாறு, அவ்விரு ஆறுகளையும் பயன்படுத்தியுள்ளனர். அசீரியர்களின் நகரங்களின் பெரும்பாலானவை தைகிரீசு ஆற்றங்கரை களிலேயே அமைந்திருந்தன. நினிவே (தற்கால மோசுல்), அசூர் (தலை நகரம்),) தைகிரீஸ் ஆறு, மிக விரைவாக, பெருத்த ஓசையுடன் ஓடி வரும் ஆறு என்று சொல்லப்பட்டுள்ளது. தோன்றிய இடத்திலிருந்து மோசுல் (நினிவே) நகரம் வரை, போக்குவரத்துக்குப் பயன்படவில்லை. யூப்ரதீஸ் ஆறு, தைகிரீஸ் ஆற்றை விட உயரமான பகுதியில் ஓடி வந்ததால், ஆறுகளை இணைத்ததில் எளிமையாக செயலாற்ற முடிந்தது[34] பாரசீக மொழியில் சொல்லப்பட்ட தீக்கர (Tigra) என்ற சொல்லை, கிரேக்கர்கள், தைகிரீஸ் என திரித்துக் கொண்டனர். ஆற்றின் விரைவையும், பேரொலியையும் கருத்தில் கொண்டு, தீக்கரம் என்று சொல்லப்பட்டிருக்க வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

29. Paddan Aram : The name used by the Jewish priestly tradition for the north west region of Mesopotamia between khabur and Euphrates river, in Hebrew, "Aram between the two rivers". (Genesis, 24 :10). In Assyrian records, Aram Padana, refers to the people or land of the Arameans. - Harper collin's Bible Dictionary, 796.

30. குறுந்தொகை, 293 : 5

31. குறிஞ்சிப்பாட்டு, 178

32. சீவக சிந்தாமணி, 3 : 43

33. Tigris : Hiddekel (Hebrew), Idikalat (Akkadian), from Sumerian Idigna, a river of Mesopotamia. Tigris joins the Eupharates, above the mouth of the rivers to form the Shatt el Arab, which flows through the marshy area. Near Bagdad, the Tigris and Euphrates are only 3-4 miles Near Bagdad, the Tigris and Euphrates are only 3-4 miles apart ; in ancient times the two rivers were connected by canals which served both for irrigation and for navigation - D.O.B.P.890.
The bed of the river ran some what higher than that of Tigris and this allowed ancient irrigation canals to carry Euphrates water across the land between the two rivers for agriculture and transport.
- Harper. Dictionary, P.314.



பாபிலோன் நகரம் யூப்ரடீஸ் ஆறு



மருது - க, சிலை



யூப்ரடீஸ் ஆறு



தொங்குந்தோட்டம்



முடிக்கப்படாத பாபிலோன் கோபுரம்

## 4. அமோரியர் என்ற மருது மக்கள்

மெசபத்தோமியாவில் அறியப்பட்ட பல்வேறு இனக் குழுக்களுடன், அமோரியரும் ஒருவராவர். நோவாவின் பெயரன் கனான் (Canaan), நோவாவின் இரண்டாவது மகன் காம் என்பவனின் மகனாவான். மீண்டும் மீண்டும் நாம் விவிலியத்துக்குள் நுழைவதற்கான காரணம் யாதெனில், நடுத்தரைக் கடலைச் சார்ந்த மக்களைப் பற்றிய செய்திகள், விவிலியத்தில் மட்டுமே காணப்படுவது தான். எகிப்திய, அசீரிய இலக்கியங்கள் ஆங்காங்கே சில செய்திகளைத் தந்தாலும், விவிலியத்தில் மட்டுமே பரவலான செய்திகள் காணப்படுகின்றன.

அமோரியர் (Amorites) என்பது மற்றவர்கள் அவர்களுக்கு வைத்த பெயராகும். அமர் (Amar) என்ற சொல்லிலிருந்து அமோரியர் என்ற பெயர் விரிந்தது. ஆனால், அமோரியர்கள், தங்களை மருது (Martu) என்றே அழைத்துக் கொண்டனர். மருது என்பது திரிபு படாத தமிழ்ச் சொல்லாகும். வேளாண்மைத் தொழிலோடு தொடர்பு கொண்ட மருது என்ற சொல், மருத நிலத்தையும் அந்நிலத்துக்கு அப்பெயர் வந்ததற்கான மருத மரத்தையும் குறிக்கும். இன்றும் கூடத் தமிழகத்தில், மருது (பெரிய மருது சின்ன மருது), மருதையன், மருதப்பிள்ளை, மருதமுத்து, மருத காசி போன்ற பெயர்கள் வழக்கில் உள்ளன. மருது என்றழைக்கப்படும் அமோரியர்கள், வேளாண்மைத் தொழில் செய்ததாகத் தகவல் இல்லை. ஆனால் அவர்கள் வாழ்ந்திருந்த பகுதி மருத நிலம் என்றே அழைக்கப்பட்டதாக குறிப்புகளில் காணப்படு கின்றன[34]. அமோரியர்கள் தங்கள் பதிவுகளில், தங்களை, மருது என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளனர்.

அக்காடியர்கள் (பாபிலோனியர்), திட்னம் (Tidnum) அல்லது அமுரியூம் (Amurium) என்றும், எகிப்தியர்கள் அமர் (Amar) என்றும், எபிரேயர்கள் ஈமோரி (Emori) என்றும் அழைத்ததாக, அவர்களின் குறிப்புகளில் காணப்படு கின்றன. சிரியக் குறிப்புகளில், அறம் - ஈபர் - நரி (Aram - Eber - Nari) என்றவாறு குறிப்பிடப்பட்டுள்ளது. மேற்கண்ட செய்திகளுக்கு முன்னதாகக் குறிக்கப்பட்டுள்ள பெயர், அமோரியர்கள் அழைத்த மருது என்ற பெயராகும்.

அமரு (Amaru) என்ற மலைப்பகுதியில் வாழ்ந்திருந்ததால், அமோரியர்கள் என அழைக்கப்பட்டிருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் அமரு என்ற சொல்லும், மேரு என்ற மலையைக் குறித்த சொல்லின் திரிபாக இருக்கலாம்.

கனான் என்பவனின் மரபினராகச் சொல்லப்படும் மருது மக்கள், தங்கள் முன்னோர்கள் செய்து வந்த வேளாண்மைத் தொழிலைக் கைவிட்டு, மலை மக்களாக மாறிப் போயினர். (இன்று நீலகிரி மலையில் வாழும் பழங்குடியினர், ஒரு காலத்தில் மருத நிலத்தில் வாழ்ந்திருந்த வேளாண் மக்களே என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.) மக்கள் புலம் பெயரும் போது, தங்கள் வாழ்க்கை முறைகளை மாற்றிக் கொள்வதென்பது, உலக வரலாற்றில் அறியப்படும் செய்திகளே. இன்றைய பாலத்தீனத்திலிருந்து இலபனான், சிரியா நாடுகளை உள்ளடக்கிய பகுதிகளில், அக்காலத்தில் அமோரியர் வாழ்ந்திருந்தனர் என்று பல்வேறு குறிப்புகள் தெரிவிக்கின்றன. நாடோடிக் குழுக்களாகவே அவர்கள் அறியப்பட்டுள்ளனர். வடக்கு சிரியாவில் வாழ்ந்திருந்த அம்மக்கள், கி.மு.2200 ஆண்டுகளில் தோன்றிய கடுமை யான வறட்சி, பஞ்சம் போன்ற காரணங்களால், மெசபத்தோமியாவின் தென் பகுதியில் கூட்டம் கூட்டமாக வந்து குடியேறலாயினர். வீரம் செறிந்த அம்மக்களின் வருகையால், ஊர் நகரத்தின் மூன்றாம் தலைமுறையினரின் ஆட்சி மறைந்தது. சிறுகச் சிறுக பாபிலோனின் அனைத்து நகரங்களையும் கைப்பற்றிக் கொண்டனர். (Babylonian city states such as Isin, Larsa, Eshnunna and Kish.) புதிய நகரங்களையும் உருவாக்கிக் கொண்டனர்.

அமோரியர்கள், அக்காடிய எழுத்து முறையையே பயன்படுத்தினர். 1800 - 1750 ஆண்டுகளில் எழுதப்பட்ட களிமண் தட்டுகள், மாரி என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டன. வடமேற்கு செமிட்டிக் மொழியே அவர்களது பேச்சு மொழியாக இருந்தாலும், கனானிய அக்காடிய மொழிக் கலப்பும் அவர்களுடைய குறிப்புகளில் காணப்படுகின்றன. குறிப்பாக, அம்மக்கள் பயன்படுத்திய பெயர்ச் சொற்கள், அக்காடிய மொழிச் சொற்களாக இல்லை. அதனால், தங்கள் பழைய மரபுகளைப் பேணிக் காத்தனர் என்பது தெளிவாகின்றது. வடகிழக்கு செமிட்டிக் மொழி பேசிய அமோரியர்கள், கிழக்கு செமிட்டிக் மொழி பேசிய மக்களை 200 ஆண்டுகள் ஆண்டனர்[35]. யூப்ரடீஸ் ஆற்றுக்கு மேற்கேயிருந்த அனைத்துப் பகுதிகளையும் அமோரியர்கள் ஆண்டதாக, அமோரியக் குறிப்புகள் கூறுகின்றன. கி.மு.2500 முதல் அறியப்படும் கிழக்கு செமிட்டிக் மொழிக்குறிப்புகளில், கி.மு.2250 ஆம் ஆண்டுகளில், பாபிலோனின் பல நகரங்களை அமோரியர்கள் அழித்தனர்

என்று குறிப்பிடப்பட்டுள்ளன. அவர்கள் நாட்டுப் புறங்களில் வாழ்ந்திருந்த, வீடுகளில் குடியிருக்காத, வடக்கு சிரியாவின் பெருங்கூட்டம் என்றும் சொல்லப்பட்டுள்ளனர்[36]. மருதுக்கள் கி.மு.2240 ஆம் ஆண்டில், பாபிலோனைச் சுற்றியிருந்த அனைத்து நாடுகளையும் வென்றெடுத்ததாக, அசீரிய, சுமேரிய, ஈழ, நாராம்சின் மன்னனின் அக்காடியக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

ஊர் நகரை ஆண்ட மூன்றாம் தலைமுறையினரின் ஆட்சியின் போது, மருதுக்கள் பெருங்கூட்டமாகப் புறப்பட்டு வந்து, மருது மன்னன் சூ - சின் தலைமையில், யூப்ரடீஸ் - தைகிரீஸ் ஆறுகளுக்கு இடையே 270 கி.மீ. (170 மைல்கள்) தொலைவுக்கு ஒரு பெருஞ்சுவற்றை எழுப்பியதாகச் சொல்லப்படுகிறது[37]. மருது மக்கள், வீரமிக்க பழங்குடித் தலைவர்களின் தலைமையில், தங்கள் கால்நடைகளுக்கு உணவு தேடி, பாபிலோனுக்குள் புகுந்தனர் என்று, அக்காடிய, அசீரிய இலக்கியங்களில் பதிவாகியுள்ளன.

"மருதுக்கள் வேளாண்மையை அறியாதவர்கள்; தவசங்களைப் பற்றிய அறிவில்லாதவர்கள் ; வீடுகளைக் கட்டத் தெரியாதவர்கள் ; வீடுகளில் குடியிருக்காதவர்கள் ; மலைவாழ்மக்கள், பச்சை இரைச்சியை உண்பவர்கள்"[38] என்றவாறு சொல்லப்பட்டுள்ளது. இது மிகையான கூற்றாகவே தெரிகின்றது. வீடு கட்டத் தெரியாதவர்கள், 270 கி.மீ. தொலைவுக்கு எவ்வாறு பெருஞ்சுவர் எழுப்பினர் என்பது புரியவில்லை. மருதுக்கள், கோதுமை பார்லி போன்ற தவசங்களை உணவாகக் கொண்டனர். ஆனால் அவற்றிலுள்ள சிறப்புகள் பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது.[39] ஊர் நகரத்தின் மூன்றாம் தலைமுறை ஆட்சி ஆட்டம் கண்ட வேளையில், அசீரியா உள்ளிட்ட நகரக்குழுக்கள், தங்கள் பழைய விடுதலைப் போராட்டங்களில் இறங்கினர். அவ்வேளையில் ஈழப் படைகள் (Elam) தென் மெசபத்தோமியாவில் தாக்குதல் தொடுத்தன. எந்த நேரமும் கவிழக் கூடிய நிலையில், ஊர் நகர ஆட்சி இருந்தது. அச்சூழ்நிலையை, மருதுக்கள் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டனர். போரிடாமலேயே, ஊர்நகரை, புதிய சுமேரியப் பகுதிகளைத் தமதாக்கிக் கொண்டனர். நாளடைவில், அண்டை நாடுகளையும் வென்று, பாபிலோனில் புதிய மருது மரபினைத் தோற்றுவித்தனர்.

அமோரியர்களின் எழுச்சி, பாபிலோனில் அரசியல், சமூக, பொருளாதாரக் கட்டமைப்புகளில், ஆழமான தாக்கங்களை உருவாக்கியது. அதுவரை, நகராட்சிகளாகத் தன்னுரிமை பெற்றிருந்த நகரங்கள், தங்கள் ஆட்சி உரிமைகளை இழந்தனர். மக்கள், கால் நடைகள், நிலங்கள்

அனைத்தும் கடவுளுக்கும், கோயில்களுக்கும் உரிமையாக்கப்பட்டன. அரசாங்க மற்றும் கோயில் நிலங்களை கால வரம்பு குறிப்பிடாமல், பொதுமக்களுக்குப் பகிர்ந்தளித்தனர். நகரங்களுக்கு விரிக்கப்பட்டிருந்த வரிகள் நீக்கப்பட்டன. கட்டாயப்படுத்தி வேலை வாங்குவதை குற்றங்களாக அறிவித்தனர். புதிய சூழ்நிலையில், ஏராளமானவர்கள் நிலங்களைப் பெற்ற தால், வேளாண் தொழிலுக்கு மாறினர். குடிமக்களுக்குப் பல உரிமைகள் வழங்கப்பட்டன. வணிகர்களுக்குச் சலுகைகள் அறிவிக்கப்பட்டன. கோயில் பூசாரிகள், நாட்டிற்காகவும், நாட்டு மக்களுக்காகவும் பூசைகள் செய்தனர். கி.மு.2000 முதல், சுமேரிய-அக்காடிய பழைய நாகரிக மரபுகள் குன்றத் தொடங்கின. சமயம், தத்துவம், தொழில் நுட்பம், அறிவியல், கவின் கலைகள் என்ற பழைய பாபிலோனிய நாகரிகத்தின் உச்சங்கள் மறையத் தொடங்கின. மருதுக்கள், சுமேரிய அக்காடிய தெய்வங்களையே வழிபட்டனர் எனலாம். சிலை வழிபாட்டில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தனர். (அதனால் கடவுளின் சினத்துக்குள்ளாகி, மருதுக்களின் ஆட்சியை கடவுள் அகற்றினார் என்று விவிலியக் குறிப்புகள் கூறுகின்றன. விவிலியக் சமயம், சிலை வழிபாட்டுக்கு எதிரானது என்பதை நோக்க வேண்டும்.)

ஏறக்குறைய 350 ஆண்டுகள், தம்மை எதிர்ப்பார் எவருமின்றி ஆண்ட அமோரியர் என்ற மருதுக்கள், புழூர்சின் என்ற அசீரிய மன்னனால், கி.மு.1740-35 ஆண்டுகளில் வீழ்த்தப்பட்டனர். தென் பகுதியில், பிலித்தியர் என்ற கடல் இனத்தார், அமோரியரை விரட்டியடித்தனர். (அக்கால அளவில் எபிரேயர் என்ற யூத இனம், எகிப்பதில் அடிமைகளாக இருந்தனர்.) பாபிலோனிலும், சிரியாவிலும் ஆட்சியை இழந்த அமோரியரை, கித்தியர் (Hittites) என்ற, தென்துருக்கியைச் சார்ந்த மரபு, முற்றிலுமாக வீழ்த்தியது. கி.மு.14 ஆம் நூற்றாண்டில் அமோரியர்கள், வரலாற்றுப் பக்கங்களிலிருந்து மறைந்து போயினர்.

விவிலியச் செய்தியின் படி, நாகன் என்ற நோவாவின் மகனான காம் என்பவனின் மகன், கனான் என்று அழைக்கப்படுகிறான். அவனுடைய மரபினரே மருதுமக்கள் எனப்படும் ஆமோரியராவர். கெடார் மரங்களைப் போல், உயரமாகவும் வலிமையாகவும் உள்ளவர்கள் என்றும்[40] ஜோர்டான் பகுதி முழுவதையும் தம் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்தவர்கள் என்றும் ஆமோஸ் ஆகமம் கூறுகிறது. விவிலிய ஆய்வாளர், நேவ் (J.Nave), மருது மக்களை, அரக்கர்கள் (giants) என்றே குறிப்பிடுகிறார்.[41] மருதுக்கள் தொடக்கத்தில், சாக்கடல் பகுதியில்தான் குடியேறினர் என்று சொல்லப்பட்

டுள்ளது[42]. எருசலேமுக்குத் தெற்கில் உள்ள மலை, அமோரியர் மலையென்றே சொல்லப்படுகின்றது[44]. எகிப்திலிருந்து மீண்ட இசராயெல் மக்களின் தலைவன் ஓசுவா, ஐந்து அமோரியத் தலைவர்களைக் கொன் றான்.[45] பின்னர் பல அமோரியத் தலைவர்கள் ஓசுவாவினால் கொல்லப் பட்டனர். சாமுயெல் என்ற இறைவாக்கினர் காலத்தில், இசறாயெல் மக்க ளுக்கும் அமோரியர்களுக்கும் நல்ல உறவுகள் இருந்தது[46].

மருதுமக்கள், நாகன் வழியில் செமிட்டிக் மற்றும் இந்திய ஐரோப்பிய இனங்களோடு தொடர்பு கொண்டிருந்தாலும், சில ஆரியச் சார்புடைய ஆய்வாளர்கள், கி.பி.19 ஆம் நூற்றாண்டில், அம்மக்கள் ஆரிய மரபினர் என்று பதிவு செய்துள்ளனர். அந்த வகையில், காம் மரபினின்றும், யாவன் மரபுக்கு அம்மக்களை மாற்றிக் கூறினர்களாலும் யாவனும் பங்காளிகள் என்று விவிலியம் கூறுவதால், அமோரியர்களை ஆரியர்கள் என்று கூறினர் போலும். இந்தியாவுக்கு வந்த ஆரியர்கள், அமோரிய மரபினரே என்று கூறினர்[47]. தற்கால ஆய்வாளர்கள், அமோரியர்கள் வட மேற்கு செமிட்டிக் மொழியைப் பேசியதாலும், செமிட்டிக் மரபினரின் தெய்வங்களை வழிபட்டு வந்ததாலும், செமிட்டிக் மொழிப் பெயர்களையே கொண்டிருந்தாலும், அவர்களின் முன்னோர்கள் மேற்கு மெசபத்தோமியாவில் வாழ்ந்திருந்த தாலும், அவர்கள் இந்திய - ஐரோப்பிய மரபினர் அல்லர் என்று கூறுகின் றனர்[48].

மருதுமக்கள் என்ற அமோரியர், கி.மு. 10000 - 8000 ஆண்டுகளில் சிந்து வெளியினின்றும் மேற்கில் புலம் பெயர்ந்த நாகனுடைய மரபைச் சார்ந்தவர்களே எனலாம். மேரு என்ற மலையைக் குறித்த தமிழ்ச் சொல்லால் அவர்கள், மலைமக்கள் என அழைக்கப்பட்டனர். மேரு - அமர் - அமரு - அமோரு - இமோரு என்றவாறு பல மொழிகளில் திரிபுபட்டுள்ளது. மேல் + உரு, உயரமான உருவம் கொண்டது என்ற பொருளில், மலையானது மேரு எனப்பட்டது. மருது என்ற தூய தமிழ்ச் சொல்லால் தம்மை அம்மக்கள் அழைத்துக் கொண்டனர். அமோரியர்களின் முன்னோனாகச் சொல்லப்படும் கனான் என்ற பெயரும் தமிழ் மூலத்தைக் கொண்டதே.

கன்னுதல் என்பதற்குக் கறுத்தல் என்பதே பொருளாகும்.

கன் - கன்னன் : கறுப்பன்

கன் - கண் : விழிகளிகளும் கறுமையைக் கருதி, கன் - கண் என நீண்டது.

கன்னன் - கண்ணன் இரண்டும் ஒரு பொருளைத் தரும் இரண்டு சொற்களே.

இசுதார் என்ற பெண் தெய்வம், அமோரியர்களின் தெய்வமாகவும் கருதப்படும். மெசபத்தோமியக் கதைகளிலும் இத்தெய்வம் சொல்லப் பட்டுள்ளது.

தார் என்ற தமிழ்ச் சொல், கூட்டம் என்ற பொருளைத் தரும்.

கூட்டமாகவுள்ள விண்மீன்களையும் தார் என்றே அழைத்தனர்.

பல எண்ணிக்கையில் உள்ள வாழைப் பழக்குலையை, தார் என அழைப்பதை நோக்குக.

தார் என்ற தமிழ் மூலச் சொல், தாரகை என்று வழக்குச் சொல்லாயிற்று.

தாரா என்று சமற்கிருதத்தில் திரிந்தது.

அமோரிய, பாபிலோனிய மொழிகளில் இசுத்தார் என்று சொல்லப்பட்டுள்ளது.

எபிரேய மொழியில் எஸ்தேர் எனத் திரிந்துள்ளது.

ஆங்கிலமொழி முன்னொட்டுச் சொற்களை நீக்கிவிட்டு, ஸ்டார் எனக் கூறுகிறது.

மேற்கண்ட சொற்களின் மூலம் தமிழில் உள்ளதை நோக்குக.

## அடிக்குறிப்புகள்

34. Amorites or Martu People : The Amorites called themselves as Martu, as also told by the Sumerians. They were called Tidnum or Amurum by Akkadians, Amar by Egyptians, Emori by Hebrews In the earliest Sumerian sources concerning the Amorites, beginning about 2400 B.C., the land of Amorites was called, "The Martu land", not associated with Mesopotamia, but with the lands to the west of Euphrates, including Canaan what was to become Syria by the 3rd Century B.C., then known as "The Land of Amurru", and later as Aram.
- Amorite People : Encylopedia Britannica Ine.

35. Eastern Semitic : The eastern Semitic language was spoken in Akkad, Assyria, Babylonia, Isin, Kish, Larsa, Ur, Nippur, Eridu, Adab, Akshak, Eshnunna, Nuzi and Ekallatum.
- Climate change : Environment and History of the Near East, Springer Science, and Business Media, P.148.

37. Great wall : William, H., Stiebuig Jr., "Ancient Near Eastern History And Culture, Longman, New York, 2003, P.79.

38. Martu : The Martu who know no grain . . . . The Martu who know no house nor town, the boors of the mountains . . . . . . The Martu who digs up truffles . . . . . . who does not bend their knees (to cultivate the lands), who eats raw meat, who has no house."

39. __________, Sumerian Texts of Varied contents, Chicago, 1934, No.3.

40. Amos, 2 : 9 (Bible).

41. Nave's Topical Bible : Amorites.

42. The Biblical Amorites seem to have originally occupied the region stretching the heights west of the Dead Sea - Genesis, 14 : 7.

43. These Amorites seem to have been linked to the Jerusalem region and the Jebusites may have been a sub group of them - Ezekiel, 16 : 3.

44. The Southern slopes of Judea (Southern Israel) where the mountain is called, "Mount of Amorites"
- Deuteronomy, 1 : 7, 19 and 20.

45. Five Kings of the Amorites were first defeated by Joshua - Joshua, 11 : 8.

46. It is mentioned in the days of Samuel there was peace between than and the Isralites - Isam. 7 : 14.

47. The view that Amorites were fierce, tall nomads led to an anachronistic theory, some racist writers in the 19th century, that they were a tribe of Ary-ans.
- Are the Jews a Race ? by Sigmund Feist.

48. Aefred Haldar, "Who were the Amorites?"

49. Canaan : Grandson of Noah. His descendants settled the land lying between Syria and Egypt in which the Israelites settled. The origin and meaning of the word are uncertain. Recently some scholars have suggested, Canaan means, purple, purple wool or black wool - D.O.B., P.117.

50. Babylon : The city was excavated by Robert Koldewey under the auspices of the Deutsches Orient gessellschaft (1899 - 1917) and some of the grandeur of the city so much admired by the ancients was revealed. The area of the ruins was roughly 2 sq.k.m the new city, an expansion built by Nebuchadnezer on the right bank of Euphrates, is on the left bank of the present course of the river.
- D.O.B. P.74.

## 5. பாபிலோனியர்

கி.மு.10000 - 8000 ஆண்டுகளில், கிழக்கு நாட்டினின்றும் மெசபத்தோமியாவில் குடியேறிய மக்கள் பற்றி, கி.மு.2500 ஆண்டுகள் வரை சரியான தகவல்கள் இல்லை. இடையில் சுமேரியர்கள், ஏறக்குறைய 2500 ஆண்டுகள் அப்பகுதியை ஆட்சி செய்ததால், முன்சொல்லப்பட்ட மக்கள், வரலாற்றுப் பதிவுகளில் இடம் பெறவில்லை. அறம் என்பவன் வழியில் வந்த மக்கள், ஏற்கனவே மெசபத்தோமியாவில் வாழ்ந்திருந்த மக்களுடனும், பின்னர் வந்த சுமேரியர்களுடனும் கலந்து போயினர். அக்கலப்பு மக்களால் தேசிய உணர்வுகளைப் பெற இயலவில்லை. கி.மு.4500 ஆண்டுகளுக்கு முன்பு, மெசபத்தோமியர்கள் பற்றிய செய்திகள் எவையும் கிடைக்கவில்லை.

பாபிலோன் என்பது தென்மெசபத்தோமியாவைச் சார்ந்த நாடாகும். யூப்ரதீஸ் தைகிரீஸ் ஆறுகள், பாபிலோனில் நெருக்கமாக ஓடிவந்ததால், அவை கொண்டு சேர்த்த வண்டல் மண்ணால், அந்நாடு செழிப்புற்று, வேளாண் தொழிலில் சிறந்து விளங்கியது. எபிரேயக் குறிப்புகளின்படி, பாபிலோனியா என்ற நாட்டின் தலைநகரமாக, பாபிலோன் இருந்தது. பாப் இலு (Bab - ilu) என்று அக்காடிய மொழியில் சொல்லப்பட்டது. அதற்கு "இறைவனின் வாயில்" என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. வாய் – இல் என்ற தமிழ்ச் சொல்லே, பாப் – இலு எனத் திரிந்தது. இறைவனின் கோயிலுக்கான (இலு) அல்லது இல்லத்துக்கான வழி (வாய்) என்று பொருள். பாபிலோன், அக்காடு (Akkad) என்றும் சொல்லப்பட்டது. அ + காடு, அழகிய நிலங்கள் என்ற பொருளில், அக்காடு பாபிலோனின் நிலவளத்தைக் கூறுகிறது. மிகப் பரந்து விரிந்த சமவெளியைக் கொண்டிருந்த பாபிலோன், வேளாண் தொழிலில் சிறப்புற்றிருந்தது.

இன்றைய பாக்தாத் நகருக்கு அருகில் பாபிலோன் அமைந்திருந்தது. இரண்டு ஆறுகளும், மிகவும் நெருங்கியிருந்த இடத்தில் பாபிலோன் அமைந்திருந்ததால், நீர்வழிப் போக்குவரத்தின் சிறப்புகளால், பாபிலோன் வணிகத் துறையிலும் சிறப்புற்றிருந்தது. கிழக்கு நாடுகளிலிருந்தும் எகிப்து,

ஆப்பிரிக்கா போன்ற மேற்கு நாடுகளிலிருந்தும் கொண்டு வரப்பட்ட ஏராளமான பொருட்கள், பாரசீக வளை குடாவினின்றும், இரண்டு ஆறுகள் வழியே பாபிலோனுக்கும், உள்நாட்டு நகரங்களுக்கும் எடுத்துச் செல்லப் பட்டன.

கி.பி.1899 – 1917 ஆண்டுகளில் இராபர்ட் கோல்டுவீ என்ற ஆய்வாளர், பாபிலோனின் பல இடங்களில் அகழ்வாய்வுகளை மேற்கொண்டார். ஈராக் நாட்டின் தொல்லியல் துறையும் பல அகழ்வாய்வுகளை மேற்கொண்டது. அகழ்வாய்வுகளில் பல்வேறு உண்மைகள் வெளிப்பட்டன[50]. ஏறக்குறைய 1.5 சதுர கி.மீட்டர் பரப்பளவிற்கு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. யூப்ரடீஸ் ஆற்றின் இரு புறங்களிலும் அகழ்வாய்வுகள் நடைபெற்றன. நெபூக்கட் நேசர் மன்னர் காலத்தில் உருவாக்கப்பட்ட நகரத்தின் சிறப்புகள் பல வெளிப் பட்டன. பல்வேறு கல்வாய்கள் நகரத்தின் உள்ளே தோண்டப்பட்டிருந்தது அகழ்வாய்வுகளில் தெரிய வந்தது. மிகப் பெரிய நீளமான மதிற் சுவர் ஒன்றும் அம்மன்னனால் கட்டப்பட்டிருந்தது. அகழ்வாய்வுகளுக்குப் பிறகு உருவாக்கப்பட்ட பாபிலோன் நகரத்தின் வரைபடத்தில், யூப்ரடீஸ் ஆற்றை நகரின் மையக் கோடாக வைத்து, இருபுறங்களிலும் நகர் உருவாக்கப் பட்டிருந்தது தெரிய வந்தது. சார்கோன் மன்னன், சார் – களி – சரி என்பவனால் அந்நகரம், கி.மு.2217 - 2193 ஆண்டுகளில் உருவாக்கப் பட்டதற்கான துல்லியமான சான்றுகள் கிடைத்தன. அகழ்வாய்வுகளில், ஆண்டுக் கணக்கைச் சரியாகக் கணக்கிட்டது முதன் முதலாக, பாபிலோனிய அகழ்வாய்வுகளில்தான் என்று சொல்லப்படுகின்றது. கடந்த நூற்றாண்டு களில் சிறப்புகள் எவையுமின்றி அறியப்பட்ட அந்நகரம், கி.மு.18 ஆம் நூற்றாண்டில், அமோரிய மரபைச் சேர்ந்த சுமு – அகம் ஆட்சி பீடத்தில் ஏறினான். கி.மு.2000 ஆண்டுகளிலேயே, சிறப்பு மிக்க இரண்டு கோயில்கள் கட்டப்பட்டிருந்தன.

எனினும் வலிமையற்ற ஆட்சியாளர்களும், திறமையற்ற மன்னர்களும் பாபிலோன் நாட்டை முன்னெடுத்துச் செல்ல முயலவில்லை. கி.மு.1792 – 1750 ஆண்டுகளில் ஆட்சி செய்த, அமோரிய மரபின் புகழ்மிக்க மன்னன், அமுராபி, பாபிலோன் ஆட்சிக்கு உச்ச நிலையை அளித்தான். பாபிலோனியரின் ஆட்சிப் பரப்பும் தெற்கே பாலத்தீனம் வரையில் விரிவடைந்தது. பல நாட்டுத் தூதுவர்களைத் தலைநகரத்தில் தங்கியிருக்க வைத்தான். பாபிலோன் பகுதியில் தன்னாட்சியுடன் செயல்பட்டு

வந்த, பல்வேறு நகர அரசுகளைத் தன் நாட்டுடன் இணைத்துக் கொண்டான். கி.மு.1600 வரை, பாபிலோனில் வலுவான சிறப்பான ஆட்சி நடைபெற்றது.

அகழ்வாய்வுகளின் முடிவில், பாபிலோன் நகரில் மட்டும் 53 கோவில்கள் புதைந்து கிடந்தது கண்டறியப்பட்டது. அவற்றில் ஈசாகில் (Esagil) என்பது பெரிய கோயிலாகும். பழைய மெசபத்தோமியர்கள், சிகுரத் என்ற கோயிலைக் கட்டி வழிபட்டனர். யா என்ற கடவுளின் மகன், மருது - க (Mardu - k) என்று அழைக்கப்பட்டான். அவனே ஈசாகில் கோயிலை தனக்காகக் கட்டிக் கொண்டான் என்று கூறுவர். அக்கோயிலில், மிகப் பெரிய மருது-க சிலை இருந்தது. (மலேசியாவிலுள்ள முருகன் சிலை போல). அச்சிலை, பல்வேறு போர்களின் முடிவில், பல மன்னர்களால் கடத்தப்பட்டு, மீண்டும் மீண்டும் மீட்டெடுக்கப்பட்டு, கோயிலில் வைக்கப்பட்டது தனி வரலாறு. மன்னர்கள் ஆண்டின் முதல் நாளன்று, (தமிழர்களைப் போன்று சித்திரை மாதத்தில்), நிசான் (Nisan) மாதத்தின் முதல் நாளில், மருது - க சிலையின் முன் நின்று, தங்கள் மன்னர் பதவிகளைப் புதுப்பித்துக் கொள்வார்கள்[51]. அன்று நாடு முழுவதும் கொண்டாட்டங்கள் நடைபெறும். (தமிழ்நாட்டு நாள் காட்டியில் மேழம் என்பதே ஆண்டின் முதல்மாதமாக, சங்க இலக்கியங்களில் சொல்லப்பட்டுள்ளன. இது சித்திரை என்று பிற்காலத்தில் சொல்லப்பட்டது. ஆங்கிலக் கணக்குக்கு ஏப்பிரல் மாதத்தில் வருவது. தைமாதமே ஆண்டின் முதல் மாதம் என்பது ஏற்கக் கூடியதன்று. வெளிநாடுகளில் புலம் பெயர்ந்து சென்ற தமிழர்கள், (எபிரேயர்கள், பாபிலோனியர்கள், சுமேரியர்கள், அராபியர்கள்) மேழத்தையே ஆண்டின் முதல் மாதமாகக் கொண்ட நாள்காட்டிகளை நடைமுறைப்படுத்தினர். சித்திரைத் தொடக்கம் என்பது ஆரியர்களின் ஆண்டுக்கணக்கு என்பது தவறான சிந்தனையாகும். நாள்காட்டிக்கும் ஆரியர்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.)

புகழ்பெற்ற மருது - க சிலையை, கி.மு.17 ஆம் நூற்றாண்டில் காசியர் (Kassites) என்ற மன்னர் மரபினர் தூக்கிச் சென்று விட்டனர். அந் நூற்றாண்டின் இறுதியில் அச்சிலை மீட்கப்பட்டது. நினூர்த்தன் (Ninurta) என்ற அசீரிய மன்னனால் (கி.மு.1243-1207) மீண்டும் அச்சிலை தூக்கிச் செல்லப்பட்டது. 64 ஆண்டுகள் கழித்து ஈழ நாட்டு மன்னன் குதூர் நாகுண்டன் (Kutur Nahunta) என்பவனால், அச்சிலை மீட்கப்பட்டு, ஈசாகில் கோயிலில் வைக்கப்பட்டது. அதன் பிறகும் இரண்டு முறை அச்சிலை தூக்கிச் செல்லப்பட்டு, மீட்கப்பட்டது. அச்சிலையைத் தூக்கிச் செல்வதை,

பாபிலோன் மீது பெற்ற வெற்றியை உறுதி செய்வதாக, தூக்கிச் சென்ற மன்னர்கள் கருதினர். எவ்வாறாயினும் அச்சிலையை மீட்டெடுப்பது, நாட்டுக்குப் பெருமை சேர்ப்பதாக, பாபிலோனியர்கள் கருதினர். அச்சிலையைத் தூக்கிச் செல்வது, பகை மன்னர்கள், பாபிலோன் மீது அதிகாரம் செய்யத் தகுதி பெற்றுவிட்டனர் என்பதை உணர்த்துவதற்காகவே என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

ஆண்டின் முதல் மாதமான நிசான் மாதத்தின் முதல் நாளன்று, மருது – க சிலையுடன், மற்ற கடவுள்களின் சிலைகளையும் ஊர்வலமாகத் தூக்கிச் செல்லும் நடைமுறை இருந்தது. இசுதார் என்ற பெண் தெய்வத்துக் கான வாயில், பலவாறு அழகுபடுத்தப்பட்டு, அதன் வழியே கடவுளர் ஊர்வலம் செல்லும். அந்நாட்டின் பெரிய திருவிழாவாக அது கொண்டாடப்பட்டது.

க என்ற உயிர்மெய் எழுத்து, எண்ணியலின் முதல் எண் என்ற சிறப்பையும் தமிழில் பெற்றுள்ளது. க என்ற எழுத்தையே கடவுளுக்குரிய தாக்கியவர்கள் தமிழர்கள். எகிப்திலும் மெம்பிஸ் நகரக் கோயிலில் க என்ற தெய்வமே வழிபடப்பட்டது. மருது என்பது அழகான தமிழ்ச் சொல்லாகும். மருத நிலத்தின் கடவுள், மருது எனப்பட்டான். மருதுக்கடவுள் என்றவாறு, மருது – க என்ற தமிழ்ச் சொல், பாபிலோனில் பயன்படுத்தப்பட்டது.

ஈ என்ற தமிழின் வேர், கொடுத்தல் என்ற பொருளைத் தருவது.

ஈ – ஈதல் – ஈகை – ஈசன் என்றவாறு விரியும்.

ஈசன் + இல் என்பது கோயிலைக் குறிக்கும். ஈசன் இல் – ஈசாகில் எனத் திரிந்துள்ளது.

இயேசுவின் பெயர், ஈசா என்று எபிரேய மற்றும் அரபு மொழிகளில் சொல்லப்பட்டுள்ளன.

கொடுக்கிறவர் என்ற பொருளையே அச்சொல், இரு மொழிகளிலும் தருகின்றது.

ஈசா என்ற எபிரேயச் சொல், ஈசன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என்க.

ஈசன் (தமிழ்) → ஈசா (அரபு, எபிரேயம்) → ஈசுஸ் (கிரேக்கம்) → ஜேசுஸ் (இலத்தீன்) → ஜீசஸ் (ஆங்கிலம்).

ஜீசஸ் என்ற ஆங்கிலச் சொல்லைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள், இயேசு என்று பதிவு செய்துள்ளனர். இயேசு என்ற சொல்லை, ஈசன் என்று எழுதுவதும் சொல்வதுமே, தமிழ் மற்றும் எபிரேய மொழிக் கண்ணோட்டத்தில் சரியானது. சிலர் யேசு என்றும், மற்றும் சிலர் ஏசு என்றும் எழுதுவது

தவறானது மட்டுமன்று ; ஏசுதல் என்பதற்கு - வைதல் - திட்டுதல் என்ற தவறான பொருள் வரக்கூடும். கன் - கன்னன் - கன்னான் : கறுமையான உலோகங்களைப் பயன்படுத்துபவன். கன்னன் : கறுப்பன். கன்னன் - கன்னான் - கனான் என்று திரிபுபட்டது. கனான் என்ற சொல்லுக்கு எபிரேய மொழியில், கறுமை, பழுப்பு என்றவாறு பொருள் சொல்லப்பட்டுள்ளன. கறுப்பு அல்லது பழுப்பு நிறமான கம்பளியை அம்மக்கள் உருவாக்கியதால், கனான் என்று புது விளக்கம் தரப்படுகிறது. ஏற்கனவே இச்சொல்லுக்கான மூலமும் பொருளும் தெரியவில்லையெனப் பலர் பதிவு செய்துள்ளனர்.

அமோரியர்களின் ஆட்சிபற்றி, தவறான தகவல்கள் ஆய்வாளர்களால் தரப்பட்டிருந்தாலும், அவர்களுக்கு முன்பு ஆண்ட சுமேரியர்களின் புதுமைப் படைப்புகளை அவர்கள் அழித்துவிடவில்லை. மாறாக, அவை அழிந்து போகாமலும் காத்தனர். பாபிலோன் முதன் முதலில், அக்காட்டுப் பேரரசன் சார்கோன் காலத்தில் (கி.மு.2350 - 2294) வெளியுலகிற்கு அறிமுக மாயிற்று. அமோரியர்கள் ஆட்சியைப் பிடிக்கும் காலம்வரை (கி.மு.1830) அதன் பெருமைகள் அறியப்படாமல் இருந்தன. அமுராபி மன்னன் காலத்தில் (கி.மு.1728 - 1686), புகழின் உச்சிக்கே பாபிலோன் சென்றது. லார்சா, ஈழம், ஆசீரியா, அமர், அக்காட்டுப் பகுதிகளை அவன் வென் றெடுத்தான். மேற்கிலிருந்த நடுத்தரைக் கடல் வரை, அவனது ஆட்சிப்பரப்பு விரிந்திருந்தது. தன்னுடைய ஆளுநர் சினிதினம் என்பவன், லார்சா நகரின் பொறுப்பில் இருந்த போது, அமுராபி மன்னன் எழுதிய கடிதம் அகழ்வாய்வு களில் கிடைத்தது. அதில் தமது நாடு எவ்வாறு அமைதிப் பூங்காவாக உள்ளதென விளக்கியிருக்கிறான். வணிகமும் கவின் கலைகளும் போற்றிப் பாதுகாக்கப்பட்டதைக் குறிப்பிட்டுள்ளான். தான் உருவாக்கி நடைமுறைப் படுத்தி வரும் சட்டங்கள் எவ்வாறு புதியவை மற்றும் சமூகப் பாதுகாப்புக் குரியவை என்றும் விளக்கியிருக்கிறான். அமோரிய மரபின் மிகச் சிறந்த மன்னனாக அமுராபி கருதப்படுவதோடு, அரசியலில் முதல் சட்டத் தொகுப்பை வெளியிட்ட முதல் மன்னன் என்ற பெருமைகளையும் பெற்றுள் ளான்.

அமோரியர்களின் ஆட்சியை, காசியர்கள் அகற்றிய பிறகு, பாபிலோன் அரசியல், கலாச்சாரம மற்றும் வரலாற்றுத் தொடர்பாக, இருண்ட காலமாகக் கருதப்படுகிறது. கி.மு.1530 - 1160 ஆண்டுகளில் நடைபெற்ற காசியர்களின் (Kassites) ஆட்சியிலும் கூட, முற்றிலுமாக, பாபிலோன் தனது பெருமைகளை இழந்துவிடவில்லை. ஆனாலும், கி.மு.ஏழாம் நூற்றாண்டு

வரை, அரசியலில் வலிமை குன்றிய நாடாகவே பாபிலோன் இருந்தது. அரசியலில் எழுச்சி பெற்ற அசீரியர்கள் காலத்தில், பாபிலோன் அசீரியர்களின் ஆட்சிக்குட்பட்ட நாடாகவே இருந்தது. (கி.மு. 745 - 626) கல்தேயத்தார் (Chaldeans) பாபிலோனில் தங்கள் அதிகாரத்தைச் செலுத்த முற்பட்ட காலங்களிலும், அசீரியருக்கு அடங்கிய குறுநில மன்னர்கள் போலவே ஆட்சி செய்தனர். தைகளத்துப் பள்ளீசர் (Tiglath Palleser) என்ற மன்னன் காலத்தில் பாபிலோன் தன்னாட்சியைப் பெற்றது. கல்தேயத் தலைவன், மருது க பள்ளாதன் கி.மு.721 ஆம் ஆண்டில், ஈழ மற்றும் அசீரியப் படைகளை வென்று, பாபிலோனில் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக் கொண்டான்.

கி.மு.626 : கல்தேயத் தலைவன் நபுஉசூர் பாபிலோனை வென்றான்.

கி.மு.612: அசீரியர்கள் முறியடிக்கப்பட்டனர்.

கி.மு.605 : நபூக்கத்நேசர், எகிப்தை வென்றெடுத்தான். அசீரிய எழுச்சி

கி.மு.597 : எருசேலம் நகரம் பாபிலோனியர்களின் ஆட்சிக்குட்பட்டது.

கி.மு.588 : யூதர்கள், பாபிலோனியருக்கு எதிராகப் போரிட்டனர்.

கி.மு.587 : யூதர்கள் முறியடிக்கப்பட்டனர்.

கி.மு.605 - 562 : நபூக்கத் நேசரின் நீண்ட ஆட்சி

கி.மு.550 : பாரசீகர் பாபிலோனை வெற்றி கொண்டனர்.

கி.மு.320 : கிரேக்கர்கள் பாபிலோனைக் கைப்பற்றினர்.52

பாபிலோனியச் சமயம் : பாபிலோனியச் சமயம் என்பது, பழைய செமிட்டிக் சமயத்தினின்றும் மறுபட்டது. அசீரிய - சுமேரியச் சமயங்களின் கலவையாக, பாபிலோனியச் சமயம் விளங்கியது. பல கடவுளர்களை பாபிலோனியர் வணங்கி வந்தனர். ஏறக்குறைய 3300 கடவுளர்கள் பாபிலோனியச் சமயத்தில் அறியப்படுகின்றனர். சுமேரியச் சமயத்தில் 330 கடவுளர்கள் இருந்தனர். அவர்கள் 3300 கடவுளராகப் பாபிலோனியச் சமயத்தில் பெருகினர். அக்கடவுளரின் பெயர்கள், அக்காடிய மொழியில் சொல்லப்பட்டுள்ளன. கடவுளர்கள், மனித உருவில் அறியப்படுகின்றனர். ஆனால் மனித ஆற்றலிலும் மேம்பட்டவர்களாகக் கருதப்படுகின்றனர். அவர்களுக்கு இறப்பு என்பது இல்லை. சிலை மற்றும் சித்திர வடிவங்களில், அவர்கள் கொம்புகளைக் கொண்ட தலைமுடியை அணிந்துள்ளனர். அவர்கள் இரு பிரிவுகளாக அறியப்படுகின்றனர். விண்ணகக் கடவுள ராகவும், இவ்வுலகம் சார்ந்த கடவுளராகவும் பிரிக்கப்பட்டுள்ளனர்.

அனைத்துக் கடவுளரைப் பற்றியும் குறிப்புகள் இருந்தாலும், சிலரே சிறப்புக்குரியவர்களாகக் கருதப்படுகின்றனர்.

முக்கடவுளர்களாக அனு (Anu) என்பவன் அண்ட வெளிக் கடவுளா வான். வெல் (Bel) எனப்படும் என்லில், காற்று மண்டக் கடவுளாவான். யா (Ea) என்ற கடவுள், நீர் சார்ந்த கடவுளாகச் சொல்லப்பட்டிருக்கிறான்[53]. மூன்று ஆட்களாகச் சொல்லப்பட்டிருந்தாலும், அவர்கள் ஒரு கடவுளாகவே கருதப்படுகின்றனர். இந்த மூவொரு கடவுள் கொள்கை சுமேரியர்களுடையது. இவர்களின் துணைவர்களாக 330 தேவர்கள் இருந்தனர் என்று சுமேரியத் தொன்மம் கூறுகின்றது. இந்த தத்துவத்தையே பாபிலோனியரும் பின்பற்றினர். வானம் (universe) என்பது ஒரு கடவுளாகும், நிலமும் நீரும் சேர்ந்த உலகம் ஒரு கடவுளாகவும், இவ்விரு நிலைகளையும் இணைக்கும் வாயு மண்டலம் மூன்றாவது கடவுளாகவும் சொல்லப்பட்டிருப்பது, அறிவியல் சார்ந்த வானியல் கொள்கையாகும். இக்கொள்கையின் உட்பொருள்பற்றி இதுவரை எந்த ஆய்வாளரும் சிந்தித்ததாகத் தெரியவில்லை. பேரண்டத் திலுள்ள விண்மீன்கள், சூரியன், நிலவு, கோள்களுடன், பூமிக்குள்ள உறவை இத்தத்துவம் வெளிப்படுத்துகிறது. வாயு அல்லது காற்று மண்டலம் என்பது, இரு நிலைகளுக்கும் இடையே உள்ள உறவை வலுப்படுத்துகிறது.

தமிழ்நாட்டில், ஒரு கடவுள் கொள்கை, பல கடவுள் கொள்கை, கடவுளே இல்லை என்ற கொள்கை ஆகிய மூன்றும் பழங்காலத்திலிருந்து தமிழர் களால் விவாதிக்கப்பட்டு வந்துள்ளன. கடவுள் கொள்கையைப் பற்றி நிற்கும் சைவ சித்தாந்தம், கடவுளை, அருவம், உருவம், அருவுருவம் என்ற மூன்று நிலைகளில் காண்கிறது. சுமேரியர் பற்றி நின்ற கடவுள் கொள்கையை, தமிழர்களின் கடவுள் கொள்கையாகக் கருதலாம். மூவொரு கடவுள் பற்றிய சிந்தனை தமிழர்களிடம் இருந்தது என்பதையே சுமேரிய கடவுள் கொள்கை வெளிப்படுத்துகிறது. முத்தமிழையே அவர்கள் கடவுளாக உருவகப்படுத்தினர் என்று கருதலாம். சுமேரியக் கடவுளரில் மூத்தவரான யா என்ற கடவுளின் இளமைக் கடவுளாக (முருகனைப் போன்று), தமிழ் என்ற கடவுளே சொல் லப்பட்டிருக்கிறான். தமுழ் (Tamuz) என்று அச்சொல்லை ஒலிக்கின்றனர்.

தமிழில் உயிர் 12, மெய் 18, ஆகக்கூடுதல் 30 என்றும், ஆய்தம் 1, குற்றியலுகர ஒலி 1, குற்றியலிகர ஒலி 1 என்றளவில், 33 ஒலிகள் தமிழில் உண்டு. தமிழ் என்ற மூவொரு கடவுளும், 33 ஒலிகளும் சேர்ந்ததே, தமிழ் மொழியின் மொத்த அடையாளமாகும். 33 ஒலிகள், தமிழைத் தூக்கி நிறுத்த

உதவுகின்றன. இந்த 33, சுமேரியர்களின் சிந்தனையில் தேவர்களாக உருவகம் செய்யப்பட்டுள்ளன. பாபிலோனியர் அதனை, 3300 என்ற விரித்துக் கொண்டனர். ஆரியர்களின் சமயம் அதனை 33 கோடித் தேவர்களாக உருவகம் செய்துள்ளது. மேற்கண்ட பாபிலோனிய, சுமேரிய, ஆரியத் தத்துவங்கள், தமிழ் என்ற அடிப்படையை மூலமாக முன்வைத்தே சொல்லப்பட்டுள்ளன. மூவொரு கடவுள் கொள்கை, பழந்தமிழர்களுடையது.

இந்த தத்துவத்தை, கிறித்துவம் நன்றாகப் புரிந்து கொண்டதின் அடிப்படையில், பிதா - மகன் - தூய ஆவி என்று, கடவுள் கொள்கையை வகுத்துக் கொண்டனர். பிதா ஒளியாகவும், மகன் மனிதனாகவும், தூய ஆவி காற்றாகவும் அறியப்படும். பிதாவை பேரண்டமாகவும், மகனை உலகமாகவும், ஆவியைக் காற்று மண்டலமாகவும் கூறும் வகையில், சுமேரிய பாபிலோனியக் கொள்கைகள் சொல்லப்பட்டன. கிறித்துவம் கூறும் மூவொரு கடவுள் கொள்கை, வானியலும் அறிவியலும் சார்ந்த, சுமேரியத் தமிழர்களின் கொள்கையே எனலாம். மேலும், சைவ சித்தாந்தம் கூறும் அருவம், உருவம், அருவுருவம் என்ற தத்துவப்படி, தூய ஆவி அருவமாகவும், மகன் என்ற இயேசு உருவமாகவும், அருவுருவமாகிய ஒளி பிதாவாகவும் சொல்லப்படும். உலகச் சமயங்கள் அனைத்திலும், சிவன் என்ற முழுமுதற் பொருளே, அடிப்படையாக உள்ளதை அறியலாம். (ஆசிரியரின் சேயோன், எல்-யா, க என்ற நூல்களைக் காண்க). உலகிற்குக் சமயத் தத்துவங்களையும், வேதாந்தங்களையும் அளித்தவன் தமிழனே என்பதை, உலகச் சமயங்களை உன்னிப்பார்த்து உணர்ந்தவர்களால் புரிந்து கொள்ள முடியும். ஆரிய வேதங்களில், கடவுள் என்று எவரும் சொல்லப்படவில்லை. ஆரியர்களுக்கு கடவுள் பற்றிய சிந்தனைத் தெளிவும் இருந்ததில்லை. வேதங்களை நுணுகி ஆராய்பவர்களுக்கு, ஆரியர்கள் கடவுளைத் தேடிக் கொண்டிருப்பது தெரிய வரும்.

நீர்க் கடவுளாகச் சொல்லப்பட்டுள்ள, யா என்ற சொல்லுக்கு, நீர் என்றே தமிழ்மொழி கூறும்.

யா என்ற சொல், அயம் என்று தமிழில் நீண்டு, நீரையே குறித்தது. யா என்ற சொல், யாம் (Yam) எனத் திரிந்து எபிரேய மொழியில் நீரைக் குறித்தது. பாபிலோனிய யா கடவுள், மனித முகத்தையும், மீனின் உடலையும் கொண்டுள்ளதாக, பாபிலோனியச் சிற்பங்களில் காணப்படு கின்றது.

யா என்ற கடல் கடவுள், தமிழனே என்றும், அவன் கடல் கடந்து சென்றதால், மீன் உடலை உருவமாக இணைத்துள்ளனர் என்றும் பாவாணர் கூறுகிறார்.

வானத்து உறுப்புகளில் நிலவு, சின் (Sin) என்று சொல்லப்பட்டுள்ளது.

சூரியனைக் காட்டிலும் உருவத்தில் சின் (ன) க் கடவுள் என்பது அதன் பொருளாகும்.

சூரியனைப் பெரிய கடவுளாகவும், நிலவை சின்னக் கடவுளாகவும் கருதினர். ஊர் நகரத்தின் காவல் தெய்வமாக சின் கருதப்பட்டது. அரண் (Haran) என்ற கோட்டை நகரின் காவல் தெய்வமாகவும் வழிபடப்பட்டது. அபிரகாமின் மரபினர் பற்றிய செய்திகளில், சின் (ன) கடவுள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. மக்களின் எதிர்காலத்தை (destiny) சின் (ன) க் கடவுளே தீர்மானிப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது.

செமஸ் (Shemesh) என்ற சொல், சூரியனைக் குறித்தது.

அது, செம்மை (வெப்பம், தீ, நெருப்பு என்றவாறு) என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். செம்மைக் கடவுளை, உடு (Utu) என்றும் குறிப்புகள் கூறுகின்றன. உடு என்பது, ஒளிரும் உறுப்பு என்பது பொதுச் சொல்லாகும். விண்மீன்களைக் குறிக்க பிற்காலத்தில் தமிழ் இலக்கியங்கள் பயன்படுத்திக் கொண்டாலும், உடு என்பது சூரியனையும் குறித்ததே. உடு கடவுள், சட்டம் - நீதி ஆகிய துறைகளுக்குப் பொறுப்பானவன் என்று சொல்லப்பட்டுள்ளது.[54]

பாபிலோனியத் தொன்மங்களில் தீய தேவர்கள் பற்றிய குறிப்புகளும் உள்ளன. அத்தீய ஆவிகளைத் துரத்தவும் கட்டுப்படுத்தவும், மந்திர மாய நடவடிக்கைகள் மேற்கொள்ளபட்டுள்ளன. கண்ணுக்குப் புலப்படாத இயற்கையின் ஆற்றல்களைக் கொண்டும், மனித சக்திக்கு அப்பாற்பட்ட வர்களின் உதவிகளைக் கொண்டும், அக்கலையில் விற்பன்னர்களாக இருந்தவர்கள் மந்திர மாயங்களைச் செய்தனர். ஆய்வாளர்கள், தீய சக்திகள் பற்றிய சிந்தனைகள், மக்களின் முன்னோர்களிடமிருந்து தலைமுறை களுக்கு மாற்றம் செய்யப்பட்டதாகக் கூறுகின்றனர். மாய மந்திரங்கள், சமயம் சார்ந்தவை அல்லவென்றும், அம்முறைக்கும் கடவுளுக்கும் தொடர்பில்லை என்றும் கூறுகின்றனர். எந்தவொரு மனிதனின் துன்பத் துக்கும் தீய சக்திகளே காரணம் என்பதை, தொன்றுதொட்டு மக்கள் நம்பி வந்துள்ளனர். மந்திர மாய வித்தைகள் தொடர்பாக பாபிலோனில் எந்த

இலக்கியமும் கண்டெடுக்கப்படவில்லை. அமுராபியின் சட்டங்களில், மாயமந்திரங்களைச் செய்வது, சட்டத்துக்குப் புறம்பானதாகவும், அவ்வாறு செய்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்றும் சொல்லப்பட்டிருந்தது.

பாபிலோனியச் சமயம், நல்ல சக்திகள், தீய சக்திகள் என்ற இருவகை ஆற்றல்களை நம்பிக் கொண்டிருந்தது. கடவுளர்கள் தங்கள் உருவங்களில் கோயில்களில் குடிகொண்டிருந்ததாக நம்பினர். அவர்களுக்குப் பாடல்களும், வேண்டுதல்களும், பலிப்பொருட்கள் மூலமாக நிறைவேற்றப்பட்டன. மன்னன், கடவுளின் அருள் பெற்று, கடவுளின் வழிகாட்டுதலின்படியே ஆட்சி செய்வதாக மக்கள் நம்பினர். மன்னனே, தலைமைக் குருவாக இருந்தான். படேசி (Patesi) என்று அவன் அழைக்கப்பட்டான். (படை என்ற தமிழ்ச்சொல், கடவுளுக்குப் படைத்தலையும், வீரர்களின் அணிவகுப்பையும் தமிழில் குறித்தது போல், படை என்ற சொல்லே, படேசி எனத் திரிந்து இரண்டு பொருளையும் குறித்தது. எகிப்திய மொழியில் படா எனப்பட்டது.) சுமேரிய - பாபிலோனிய - அசீரியக் கடவுளர், இயற்கையின் பாற்பட்டவர்களாக இருந்தனர். ஒவ்வொரு கடவுளும், ஒவ்வொரு நகரத்தின் பாதுகாவலர்களாக இருந்தனர். அசூர் நகருக்கு சூரியனும், ஊர் நகருக்கு நிலவும் அறியப்பட்டிருந்தனர். வானியலின் துணை கொண்டு சோதிடக் கலையை வளர்த்தனர். பாபிலோனியர்களே, உலகிற்கு சோதிடக் கலையை அறிமுகம் செய்தவர்கள் என்றும் சொல்லப்படுகின்றது. விலங்குகளின் பெயர்ச்சி, பறவைகளின் பறக்கும் திசைகள் போன்றவற்றிற்கும் பலன்கள் சொல்லப்பட்டன. வட்டத்தட்டில் நீரை ஊற்றி, அதில் சிறிதளவு எண்ணையை ஊற்றி, அது அமையும் வடிவத்தைக் கொண்டும் பலன்கள் சொல்லப்பட்டன. பாபிலோனியக் கெட்ட ஆவிகளை, டெமனோஸ் என்று கிரேக்க மொழியில் பதிவு செய்துள்ளனர். ஆங்கிலத்தில் டெமன் (Demon) எனப்பட்டது. தீயமனம் என்ற சொல்லே டெமன் என்று திரிந்தது எனலாம்.

பாபிலோனிய நாகரிகம், சுமேரிய நாகரிகத்துக்கு அடுத்து சொல்லப் படுகின்றது. ஏறக்குறைய, சுமேரியர்களின் நாகரிகத்தையே பாபிலோனியரும் பின்பற்றினர். சுமேரிய மொழியும் பாபிலோனிய மொழியும் கலந்து, அக்காடியம் என்ற மொழி உருவாயிற்று. அக்காடிய மொழியில் பல்வேறு இலக்கியங்கள் அறியப்பட்டுள்ளன. அண்டை நாட்டு மன்னர்களுக்கு, அக்காடிய மொழியிலேயே மடல்கள் எழுதப்பட்டன. எகிப்தின் அமர்ணா குறிப்புகளில், பல அக்காடிய மொழிப் பதிவுகள் அறியப்பட்டுள்ளன. சுமேரியர் பயன்படுத்திய ஆப்பு எழுத்து முறையையே (Cuneiform)

பாபிலோனியரும் பின்பற்றினர். பாபிலோனிய தொன்மக் கதைகளும் இலக்கியங்களும், சுமேரியத் தொன்மங்களைத் தழுவியே காணப்படு கின்றன. சுமேரிய – அக்காடியக் குறிப்புகளில் பல அகழ்வாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட நிலையில், அவ்வாறான ஒப்புமை ஆய்வாளர்களால் கண்டெறியப்பட்டுள்ளது. குறிப்பாக, சுமேரியரின் வெள்ளக் கதையைத் தழுவியே, பாபிலோனியக் கதையும் உள்ளது. அதே போல், எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ள சங்கீதம் (Psalms) என்ற தலைப்பில் வரும் பாடல் கருத்துகளைத் தழுவியே, பாபிலோனியக் கவிதைகளும் உள்ளன. கடிதங்களையும், இலக்கியங்களையும் அதிகாரம் பெற்ற அறிஞர்கள், இலக்கண முறைப்படித் திருத்திக் கொடுத்தனர். பாபிலோனியர், தம் வரலாற்றை எழுதி வைக்கவில்லையென்றாலும், கிடைத்துள்ள பல்வேறு களிமண் தட்டுக் குறிப்புகளில் அவர்களுடைய வரலாறு ஓரளவுக்கு வெளிப்பட்டுள்ளது.

பாபிலோனியர்கள் புதிய நாகரிக உத்திகளைக் கையாண்டு, வரலாற்றில் இடம் பெற்றுள்ளனர்[55]. அவர்களுடைய நாகரிகம், சுமேரிய நாகரிகம் சார்ந்தே காணப்படுகின்றது. பெரும்பாலான மக்கள் நகரங்களில் வாழ்ந்துள்ளனர். கவின்கலைகள், கைத்தொழில்கள், உள்நாட்டு, வெளிநாட்டு வணிகம் ஆகியவை வளர்ச்சி பெற, நாட்டுப் பொருளாதாரம் வலுவாக இருந்தது. வேளாண் தொழிலில் தன்னிறைவு பெற்றிருந்ததால், உணவுப் பொருட்களின் தட்டுப்பாடு அறியப்படவில்லை. பாபிலோனில் சட்டங்களின் ஆட்சி, நடைபெற்றது. நீதி மன்றங்கள் சரியான தீர்ப்புகளை சட்டங்களின் அடிப்படையில் வழங்கின. தனிமனித உரிமை பாதுகாக்கப்பட்டது. ஒவ்வொரு குடும்பமும் அரசாங்கத்தில் பதிவு செய்யப்பட்டது. பொருளியல் பண்டமாற்று, பொருட்களின் விலைகள், வணிக நெறிகள் முறைப்படுத்தப்பட்டன. தனியொருவனின் சொத்துக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. சொத்துக்களை விற்க, வாங்க சட்டப்படி உரிமைகள் வழங்கப்பட்டன. அடிமை முறை குறிப்பிட்ட விதிகளில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. அடிமைகள், மனிதாபி மான அடிப்படையில் நடத்தப்பட்டனர். எந்தப் பாபிலோனியக் குடிமகனையும் அடிமையாக்க இயலாதவாறு சட்டம் இயற்றப்பட்டது. ஒவ்வொரு நகர ஆட்சியும், மைய ஆட்சியான மன்னரின் ஆட்சியுடன் இணைக்கப்பட்டது. நாட்டை ஆள்பவராக கடவுளே கருதப்பட்டார். மன்னர் அவரது பகராளாகப் பணியாற்றினர். சில ஆய்வாளர்களின் கருத்துப்படி, பாபிலோனியச் சமூகம், பழங்குடிகள் சார்ந்த ஜன நாயக முறையாக (Primitive democracy) க் கருதப்பட்டது.

வணிகம் முறைப்படுத்தப்பட்டு, உள் நாட்டு வெளி நாட்டு வணிகங் களுக்குப் பாதுகாப்பளிக்கப்பட்டது. சுங்க வரி உள்ளிட்ட முறையான வரிகள் வணிகர்களிடமிருந்து தண்டப்பட்டன. நகரங்களுக்கு இடையே இருந்த கருத்து வேறுபாடுகள், அவ்வப்போது தலைதூக்கின. போர் நடவடிக்கைகள் மூலம் இணைக்கப்பட்ட பகுதிகளில் சட்டத்தின் ஆட்சியைக் கொண்டு வர இயலவில்லை. இவ்விரு குறைபாடுகளுமே, பாபிலோனிய ஆட்சிக்கான வீழ்ச்சியாகக் கருதப்படுகின்றது. வானியலும் அறிவியலும் சார்ந்த நாள்காட்டி பயன்படுத்தப்பட்டது. சோதிடக் கலை வளர்ச்சி பெற்றது. கணக்கியலில் புதிய முறைகள் கண்டறியப்பட்டன. ஒன்று முதல் பத்து வரையிலும், 12,14, 16,32,64 என்றவாறு மடங்குகள் விரிந்தன. எடைகள் வரையறுக்கப்பட்டன. சில எண்களுக்கு மந்திர சக்தி இருப்பதாகச் சொல்லப்பட்டது. எண் ஏழு, சிறப்பான எண்ணாகக் கருதப்பட்டது. கட்டிடம் கட்டுதல், நினைவுச் சின்னங்களை எழுப்புதல் போன்ற துறைகளில், அசீரியர்களைக் காட்டிலும் சிறப்பான முன்னேற்றம் காணப்பட்டது. தொங்கும் தோட்டம் என்ற மாளிகைத் தோட்டம், அதற்கான எடுத்துக் காட்டாகும். அணிகலன்கள், ஆபரணங்கள், பொன் வெள்ளி போன்ற உலோகங்களால் உருவாக்கப் பட்டன. கைத்தொழில்கள், மிகச் சிறந்த கலைஞர்களால், நுட்பமான முறையில் முன்னேற்றம் கண்டன. மரவேலைகள், சிறந்த தச்சர்களால் மேற்கொள்ளப்பட்டன. கைவினைக் கலைஞர்களுக்கு அரசாங்கம் உரிய சிறப்பையும் பாதுகாப்பையும் அளித்தது.

பாபிலோனியர், கி.மு.10000 - 8000 ஆண்டுகளில் கிழக்கு நாட்டிலிருந்து புலம் பெயர்ந்த மக்களின் மரபினராகவே கருதப்படுகின்றனர். சுமேரியர் ஆட்சியில் ஒரு கலப்பினம் உருவாயிற்று. அவர்களது தொன்மையான செமிட்டிக் மொழியும், சுமேரியரும் கலந்து அக்காடியம் என்ற புதிய மொழி உருவாயிற்று.

## அடிக்குறிப்புகள்

51. Esagil : The city contanied 53 temples, of which the greatest was Esagil, the temple of Mardu - k, with its temple tower or Ziggurat, the tower of Babel. In the temple, stood the statue of Mardu - k, from whom the king received his royalty each year when he" took the hands of Mardu-k", at the new year. This statue was removed several times by the enemies and periodically returned and restored. These adventures show not only political rise and fall of Babylon but also the importance of the possession of the statue by one who claimed kingship over the land of Mardu - k.

Nisan was the first month of the Babylonian calendar.

| | | |
|---|---|---|
| Nisan | - | March / April, |
| Iyyar | - | April / May |
| Siwan | - | May / June |
| Tammuz | - | June / July |
| Ab | - | July / August |
| Elul | - | August / September |
| Tishri | - | September / October |
| Marheswan | - | October / November |
| Tebet | - | December / January |
| Shebat | - | January / February |
| Adar | - | February / March |

52. Rulers of Babylon, D.O.B. PP. 75 - 76.

53. Triad : The Cosmic triad is composed of Anu, the god of heaven, Enlil (Bel), the god of upper air, and Ea, the watery abiss.

    - Ibid, P. 76.

54. The Astral elements : The astral triad is composed of Sin, the moon god, Shamash the sun god, and Istat, identified with planet, Venus.

55. Babylonia : Bab-il in Hebrew, Bab - ilu in Akkadian, probably means" gate of the gods". Geographically the city of Babylon lay on the left bank of the Euphrates, not far south of the modern Baghdad, where the Tignis and Euphrates approach each other most closly.



சமயத்தலைவனும் தொண்டர்களும்



அகழ்வாய்வு



சிகுரத் உள்ளிட்ட நகரின் தோற்றம்

## 6. அக்காடியர் என்ற செமிட்டிக் மக்கள்

கி.மு.10000 - 8000 ஆண்டுகளில், கிழக்கு நாட்டினின்றும் புலம் பெயர்ந்து சென்ற நாகனின் மரபினரே செமிட்டிக் மக்கள் என்று, பிற்கால ஆய்வாளர்களால் அழைக்கப்பட்டனர். அவர்களே, மெசபத்தோமியாவில் வேளாண்மையை அறிமுகம் செய்தவர்களாகக் கருதப்படுகின்றனர். சுட்ட செங்கற்களாலும் சாந்துப் பொருளாலும் வீடுகளையும் கட்டிடங்களையும் கட்டிக் கொண்டனர். மரம் மற்றும் உலோகத் தொழில்களை அறிந்திருந்தனர். ஆனால் அவர்கள் ஓர் அரசை நிறுவியதாகவோ ஆண்டதாகவோ வரலாற்றில் தகவல் இல்லை. கி.மு.4500 ஆண்டுகளில், சுமேரியர்கள் மெசபத்தோமியாவில் அறியப்படும் வரை, எந்த அரசும் ஆட்சியில் இருந்ததாகக் குறிப்புகள் இல்லை. நகர அல்லது வட்டாரத் தலைவர்களின் கீழ் மக்கள் வாழ்ந்திருக்கலாம் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சிந்து வெளியில், மெசபத் தோமியர்களுக்கு முன்பே வாழ்ந்திருந்த மக்கள், தங்களுக்கென ஓர் அரசை நிறுவியதற்கான சான்றுகள் கிடைக்கவில்லை யாயினும், அரண்மனைகளும், பெரிய கட்டிடங்களும், தவசக் குதிர்களும், சுற்றுச் சுவர்களும், கோட்டைக் கொத்தளங்களும் அகழ்வாய்வுகளில் கண்டறியப்பட்டதால், ஒரு பேரரசு சிந்து வெளியை ஆண்டிருக்கலாம் எனக் கருத வேண்டியுள்ளது. முறையான வணிக நடவடிக்கைகள், சுங்க, ஏற்றுமதி இறக்குமதி, துறைமுகங்கள், கப்பல் கட்டும் இடங்கள் என பலவாறு அறியப்படுவதால், பேரரசின் கட்டுப்பாட்டில் அவை நிகழ்ந்திருக்க வேண்டும் என ஆய்வாளர்களும் கருதுகின்றனர். சிந்து வெளியைப் போன்ற சான்றுகள், சுமேரியர் காலத்துக்கு முன்பு, மெசபத் தோமியாவில் அறியப்படாததால், முறையான அரசுகள் எவையும் இருந்திருக்க வாய்ப்புகள் இல்லையென்றே ஆய்வாளர்கள் கருதுகின்றனர். அந்த வகையில் சுமேரியருக்குப் பின்வந்த அரசாக, அக்காடிய அரசு கருதப்படுகின்றது.

சுமேரிய அரசை நிறுவியவர்கள், மெசபத்தோமியர்கள் அல்லர் என்றும், அவர்கள் வெளிநாட்டவர் என்றும் சொல்லப்படுவதால், மெசபத்தோமிய செமிட்டிக் மக்கள் நிறுவிய முதல் அரசாக, அக்காடிய அரசு கருதப்படுகின்றது.

அமோரியர்கள், அக்காடியர்களுக்குப் பின் ஆட்சி செய்தவர்கள் என்க. அக்காடு (Akkad) என்ற நகரைத் தலை நகராகக் கொண்டு ஆண்டதால், அவர்கள் அக்காடியர் எனப்பட்டனர். அக்காடு என்ற நகரம் எங்கிருந்தது என்பதை ஆய்வாளர்களால் உறுதி செய்ய இயலவில்லை. அகழ்வாய்வுகள் மூலமும் அந்நகரம் இருந்த இடத்தைக் கண்டறிய இயலவில்லை. அதனால், அக்காடு என்பது, நகரத்தைக் குறித்ததன்று, மாறாக நாட்டையும் மக்களையும் குறித்தது என்பதே நமது கருத்தாகும்.

அக்காடு என்பது திரிபு படாத தமிழ்ச் சொல் என்பதை விளக்க வேண்டியதில்லை. காடு என்பதே, அக்காடு என்ற சொல்லின் மூலச் சொல்லாகும். காடு என்பது மலையைச் சார்ந்த இடங்கள் என்பது பொதுக் கருத்து. கட்டப்பட்ட அல்லது சீர் செய்யப்பட்ட நிலமும் காடு எனப்படும். காடு என்பது புன்செய் நிலத்தைக் குறிக்கும் சொல்லாக தமிழ்நாட்டில் வழக்கில் உள்ளது. வானம் பொழியுது, காடு விளையுது என்பது தமிழ்நாட்டின் சொல் வழக்காகும். நீர்வளமுள்ள பகுதியை நன்செய் என்றும், நீர்வளமற்ற பகுதியைக் காடு என்றும் சொல்வது பிற்கால வழக்காகும். எங்கும் நீர் வேய்ந்து காணப்படும் நிலம், வேய்யல் – வேயல் – வயல் எனச் சுருங்கிற்று. காடு, கொல்லையென்றும் சொல்லப்படும். புதர்களையும் சிறு தாவரங் களையும் கொன்று (அழித்து) சீர்செய்யப்பட்ட நிலம், கொல்லை எனப்பட்டது. புன்செய் நிலத்தை வன்செய் நிலம் என்றும் கூறுவர்.

மெசபத்தோமியாவில் காடு என்ற சொல், நன்செய் – புன்செய் ஆகிய இருநிலங்களைக் குறித்தும் சொல்லப்பட்டது. அகக் காடு (நாட்டிலுள்ள நிலப்பகுதி என்ற சொல் கூட, அக்காடு எனத் திரிபு பட்டிருக்கலாம்.) அக்காடு என்ற சொல், வேளாண் தொழிலை, முதல் தொழிலாகக் கொண்ட நாடு என்ற பொருளையும் தரும். அகழ்வாய்வுக் குறிப்புகளில், சுமேரிய அக்காடுப் பேரரசு (Sumer - Akkad Empire) என்று சொல்லப்பட்டுள்ளதால், தமக்கு முன்பு ஆண்ட, சுமேரியர்களின் ஒத்துழைப்போடு, அப்பேரரசு செயல்பட்டது என அறிய முடிகிறது. ஏறக்குறைய 2000 ஆண்டுகள் மெசபத்தோமி யாவை ஆண்ட வெளிநாட்டவரான சுமேரியர்கள், உள்நாட்டு மக்களின் விருப்பத்தினை ஏற்று, அவர்களை ஆட்சிசெய்ய இசைவளித்திருக்க வேண்டும். இதன் மூலம், சுமேரிய அரசு, போர் நடவடிக்கைகள் மூலம் அகற்றப்பட்டது என்றவாறு, வரலாற்றுக் குறிப்புகள் எவையும் இல்லை என்பதை உணர்தல் வேண்டும்.

## பேரரசு பற்றிய குறிப்புகள்[56]

| | | |
|---|---|---|
| தலைநகரம் | : | அக்காடு? |
| மொழி | : | அக்காடியம், சுமேரியம், |
| சமயம் | : | சுமேரியம் |
| அரசு | : | மன்னராட்சி, முடியாட்சி |
| ஆட்சித் தோற்றம் | : | கி.மு.2334 |
| வெற்றிகள் | : | கி.மு.2340 தொடக்கம் |
| பரப்பளவு | : | 8,00,000 ச.கி.மீ. (3,08,882 ச.மைல்) |
| சிறப்பான மன்னர் | : | சார்கோன். |

அக்காடிய அரசு தோற்றுவிக்கப்படுமுன், அக்காடிய மொழி பேசி வந்த மக்கள், ஒற்றுமையின்றி பிரிந்திருந்தனர். அக்காடிய அரசு, மொழியின் அடிப்படையில், தம் மக்களை ஒற்றுமைப்படுத்தியது. அத்துடன், 2000 ஆண்டுகளுக்கு மேலாக, அப்பகுதியை ஆண்டு வந்த சுமேரியர்களையும் தங்களுடன் இணைத்துக் கொண்டது. தங்கள் நாட்டிற்கு மிக உயர்ந்த நாகரிகத்தையும், பண்பாட்டையும் கற்றுத் தந்த சுமேரியர்களுக்கு நன்றி கூறும் வகையிலும், தங்கள் ஆட்சியை, அக்காடிய - சுமேரிய ஆட்சியென்றே அறிவித்துக் கொண்டனர். அக்காடிய அரசு என்பது, தற்கால ஈராக், குவைத், வடகிழக்கு சிரியா, வடகிழக்கு துருக்கி, சிரியா, லெபனான், கிழக்கு மற்றும் தென்பகுதிகளைக் கொண்ட அனதோலியா, ஈரான் பஹ்ரைன், ஓமான், சவூதி அரேபியா, ஏடன், என விரிந்திருந்தது. ஏறக்குறைய, நடுத்தரைக் கடலுக்குக் கிழக்கில் இருந்த நாடுகளை அக்காடியப் பேரரசு கொண்டிருந்தது. அக்காடிய அரசு தோற்றுவிக்கப்படு முன்பே, அக்காடிய மொழிபேசிய செமிட்டிக் மக்களுக்கும், சுமேரியர்களுக்கும் நல்லுறவு இருந்தது. சுமேரியரில் பலர் அக்காடிய மொழியையும், அக்காடியர்களில் பலர் சுமேரிய மொழியையும் (இரண்டு மொழிகளையும்) பேசி வந்தனர். (அக்காடிய மொழி என்பதே, செமிட்டிக் மற்றும் சுமேரிய மொழிகளின் கூட்டுக் கலவையாகும்). அக்காடிய ஆட்சியின் தொடக்கத்தில் இரண்டு மொழிகளுமே அரசாங்க மொழிகளாக இருந்தன. ஆட்சியின் இறுதிக் காலத்தில், சுமேரிய மொழி கைவிடப்பட்டது. எக்காலத்தில் சுமேரிய மொழி கைவிடப்பட்டது என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. சிலர் கி.மு.3000 என்றும், சிலர் கி.மு.2000 என்றும் கூறுகின்றனர்[57].

அக்காடியப் பேரரசு வீழ்ச்சியடைந்த பிறகு, மெசபத்தோமியர்கள் இரண்டு பிரிவினராயினர். மெசபத்தோமியாவின் கிழக்குப் பகுதியில் அசீரியரும், தென்பகுதியில் பாபிலோனியரும் ஆட்சிகளை அமைத்துக் கொண்டனர். இவ்விருவரும் ஓரின மக்களே என்றாலும், அவ்வப்போது, அவர்களுக்குள் முரண்பாடுகள் தோன்றி, போர்களாகவும் வெடித்தன அசீரியர்கள், மெசபத் தோமியர்கள் தாம் என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. அசீரியர்கள் சூரியனையும், பாபிலோனியர் நிலவையும் வழிபட்டவர்கள் என்பதால், இவ்விரு மரபினும் வெவ்றோனவர்கள் என்றும் சொல்லப்படுகின்றது. (அசீரியர் என்ற தலைப்பில் மேலும் விளக்கங்களைக் காண்க.)

விவிலியக் குறிப்புகளில், நீம் ரோது (Nim rod) என்ற மன்னனே அக்காடியப் பேரரசை நிறுவியதாகச் சொல்லப்பட்டுள்ளது. அவ்வாறான ஒரு மன்னன் இருந்ததாக மெசபத்தோமியக் குறிப்புகளிலோ அல்லது வேறு குறிப்புகளிலோ காணப்படவில்லை. அக்காடிய மன்னர்கள் பற்றிய அவர் களுடைய குறிப்புகளிலும் காணப்படவில்லை. இதுவரை, 7000 அக்காடிய களிமண் தட்டுகள் கண்டெடுக்கப்பட்ட நிலையில், ஒன்றில் கூட, நீம் ரோது என்ற பெயர் காணப்படவில்லை. பல ஆய்வாளர்கள், பலவாறு முயன்றும், அக்காடு என்ற நகரம் எங்கிருந்தது என்பதை எவராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. அக்காடியப் பேரரசைப் பற்றிய குறிப்புகள் அடங்கிய களிமண் தட்டுகள், வடகிழக்கு சிரியாவின் காபூர் (காவூர்) என்ற ஊரின் மேற்குப் பகுதியில் கண்டெடுக்கப்பட்டன. அப்பகுதி, பிற்கால அசீரிய அரசின் ஒரு பகுதியாகும். ஊர்கிஷ் (Urkish, தற்கால தெல் - மோசன் என்ற ஊர்) என்ற பகுதிக் குறிப்புகள், அதுவரை அறியப்படாத வகையில், அக்காடிய மன்னன் நாராம் - சின் என்பவனின் மகளை, ஊர்கிஷ் மன்னனுக்கு மணமுடித்துக் கொடுத்ததைப் பற்றிக் கூறுகின்றன. ஊர்கிஷ் மன்னன், ஏந்தன் (Endan) என்று குறிப்பிடப்பட்டுள்ளான்[58]. செக்னா (தற்கால தெல் - லெய்லன்) என்ற இடத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளில், அக்காடியப் பேரரசின் வீழ்ச்சிக்கு, பருவகால மாற்றமே காரணம் என்று சொல்லப்படுகின்றது. பல நூறு ஆண்டுகள் நீடித்த வைப்பமும் வறட்சியும் விளைச்சல் இன்மையும் பஞ்சமும், மக்களை வெவ்வேறு பகுதிகளில் குடியேறச் செய்தன. ஒரு கட்டத்தில், மெசபத்தோமியாவை விட்டு 75 விழுக்காட்டு மக்கள் வெளியேறி விட்டதாகக் கருதப்படுகின்றது.[39] இந்த வெளியேற்றம் பற்றி ஆய்வாளர்களிடையே கருத்து வேறுபாடுகளும் உள்ளன.

அக்காடியப் பேரரசின் ஆட்சிக்காலம், கி.மு. 2350 - 2170 என்றும், 2230 - 2050 என்றும் இரு கணிப்புகள் உள்ளன. அக்காடியப் பேரரசுக்குப்பின், ஊர் நகரத்தின் ஆட்சி, மூன்றாம் தலை முறையினரிடம் சென்றதாகக் கருதப்படுகின்றது. அக்காடியப் பேரரசு காலத்தின் சமகால ஆட்சிகளாக, இசராயெல், எகிப்து, துருக்கி ஆகியவை சொல்லப்பட்டுள்ளன.

**மன்னர்களின் பட்டியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சார்கோன் | - | 2334 - 2279 | (Sar - gon) |
| 2. | இரிமூஸ் | - | 2278 - 2270 | (Rimush) |
| 3. | மணிதூசு | - | 2269 - 2255 | (Mani - Shtusu) |
| 4. | நாரம் - சின் | - | 2254 - 2218 | (Naram - Sin) |
| 5. | சார் - கனி - சாரி | - | 2217 - 2193 | (Shar - Kali - Shari) |
| 6. | இந்திரங்கனம் | - | 2192 - 2190 | (Interr - egnum) |
| 7. | தூது | - | 2189 - 2169 | (Dudu) |
| 8. | சூ - துருள் | - | 2168 - 2154 | (Shu - Turul) |

மேற்கண்ட பெயர்களுக்கெல்லாம், சரியான பொருள் விளக்கம் தரப்படவில்லை. சில ஆய்வாளர்கள், இவற்றுள் சில சுமேரியச் சொற்களின் கலப்பாக இருக்கலாம் என்பர். இவற்றில் சில பெயர்கள், தமிழ் ஒலிப்பிலும் காணப்படுகின்றன. கோ என்ற சொல்லும், உயர்வான கடவுளையும் மன்னனையும் குறித்தது.

*"எம் கோ வாழியவே"*[60]

கோ என்ற சொல், கோன் என்று விரிந்தது.

கோன் : மன்னன், கடவுள், உயர்ந்தவன், தலைவன் எனப் பொருள் விரியும்.

*"எம் கோன் வளவன் வாழ்க"*[61]

கோ என்ற சொல், இறைவனைக் குறித்து, அவன் குடியிருக்கும் இல் (லம்), கோயில் எனப்பட்டது.

*"அரும் பொருட்டு அனைத்தே அண்ணல் கோயில்"*[62]

கோயில் என்பது, மன்னனையும் குறித்தது, அரண்மனையும் குறித்தது.

*"வாயில் வந்து கோயில் காட்ட"*[63]

கோவில் என்பது, வளைவான கோபுர மாடங்களைக் கொண்ட அரண் மனையைக்குறிக்கும். வில் - வளைவு. வளைவான கூரை, மாடங் களையும் கொண்ட கட்டிடம் கோவில் எனப்படும்.

சார் கோன் என்பதில், சார் என்பது இனத்தைக் குறித்த சொல்லாகும்.

சார் என்பது, மெசபத்தோமிய அல்லது செமிட்டிக் இனம் என்பதை விளக்கும் சொல்.

சார் : இனம் *"ஒருசார் விலங்கும் உள என மொழிப "*[64]

நாரம் சின் என்ற பெயரில், சின் என்ற சொல் நிலவைக் குறித்தது. நிலவை வழிபடும் மரபைச் சேர்ந்தவன் என்று பெயரிலேயே சொல்லப்பட்டுள்ளது.

நாரம் (NARAM) என்ற சொல், சரியாகப் படிக்கப்பட்டதா என்பதில் ஐயப்பாடு உள்ளது. அச்சொல்லை, வலம் இடமாகப் படித்தால், மாரன் அல்லது மாறன் (MARAN) என்ற சொல் கிடைக்கிறது. மாரன் காமனையும், மாறன் பாண்டியனையும் நினைவூட்டும் சொற்களாகும்.

சார் – களி – சாரி ஆகிய மூன்றும் தமிழ்ச் சொற்களாக உள்ளன.

களி என்பது மகிழ்வையும்,

*"கண்களி பெறூஉம் கவின் பெறுகாலை"*[65]

சாரி என்பது விரைவான நடையையும் குறிப்பன.

*"சாரி பல ஓட்டியும்"*[66]

அக்காடியப் பேரரசு, அந்நகரின் பெயரால் அழைக்கப்பட்டதென்று கூறுவர். தைகிரிஸ் ஆறும், தெய்யாள ஆறும் சாரி (Diyala) சந்திக்கும் இடத்தில் அக்காடு நகரம் இருந்ததாகச் சொல்லப்பட்டாலும், அதற்கானச் சான்றுகள் கிடைக்கவில்லை. "தெய்யாள என்ற ஆறு, "தேய் ஆழ" ஆறு என்ற சொல்லின் திரிபாகத் தெரிகிறது. தொடர்ந்து ஓடியதால் தேய்ந்து ஆழமாகிப் போனதை அச்சொல் விளக்கும். அக்காடு நகரம், செமிட்டிக் மக்கள் வாழாத வெளிப்புறத்தில் இருந்ததாகவும் ஒரு கருத்து உண்டு. சார்கோன் என்ற சொல்லுக்கு, அக்காடிய மக்களின் அதிகார பூர்வமான மன்னன் என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது (Legitimate King of the people of Akkad) இது முன் சொல்லப்பட்ட தமிழ்ப் பொருளின் விளக்கத் தையே கொண்டுள்ளது. சார் என்பது அக்காடிய இனத்தின் பட்டப் பெயர் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

சார்கோன் என்பது, சிறப்புப் பெயரே அன்றி, இயற்பெயராக இல்லை. சில பழைய அக்காடியக் குறிப்புகளின்படி, சார்கோன், லெய் – பம் (Lel - Bum) அல்லது இதி – பெல் (Itti - Bel) என்ற ஏழ்மையான தோட்டத் தொழிலாளிக்குப் பிறந்தவன் என்று சொல்லப்பட்டுள்ளது. (பெல் என்பது, வல் – வல்லமை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். அது கடவுளின் பெயராகவும் கருதப்பட்டது) இசுதார் அல்லது இன்னன்னா என்ற பெண் தெய்வத்தின் பூசாரியாகவும், வழிபடுபவளாகவும் சார்கோனின் தாய் கருதப்படுகிறாள். (இன்னன்னா என்பது, என் அன்னை என்ற சொல்லின் திரிபாக இருக்கலாம்.) சார்கோனின் இளமை பற்றிய அசீரியக் குறிப்பில் காணப்படும் செய்தியாவது[67].

"என் தாய், தேவதைகளால் கருத்தரிக்கப்பட்டாள். என் தந்தையை நான் அறியேன். என் தந்தையின் உடன் பிறப்புகள் மலைகளில் வாழ்ந்திருந்தவர்கள். என்னுடைய ஊர், அசூர் பிரணு என்ற பாலைவனப் பகுதியில் இருந்தது. (பரண் அசூர் என்பது, மேட்டு நிலத்திலிருந்த ஊரைக் குறிக்கும் தமிழ்ப் பெயராகும். பரண் என்ற பாலைவனம் பற்றி, எபிரேயக் குறிப்புகளில் உள்ளன.) என் தாய் என்னை, யாருக்கும் தெரியாமல் கருதரித்தாள். அவ்வாறே பெற்றெடுத்தாள். ஒரு கோரைக் கூடையில் சந்துகளைக் களி மண்ணால் பூசி குழந்தையாயிருந்த என்னை அக்கூடையில் வைத்து, தலைப்பை மூடி, ஆற்றில் விட்டுவிட்டாள். நீர் அக்கூடையை மூழ்கடிக்க வில்லை. ஆறு என்னை இழுத்துச் சென்று, அக்கி (Akki) என்பவரிடம் சேர்த்தது. அக்கி, ஆற்றில் நீரை எடுத்துச் செல்பவராவார். அக்கி என்னை எடுத்துச் சென்று, தன் மகனைப் போலவே வளர்த்து வந்தார். அக்கி, ஆற்றிலிருந்து நீரை எடுத்துத் தோட்டத்திற்குப் பாய்ச்சும் வேலையைச் செய்து வந்தார். என்னை அத்தோட்டத்திற்க காவலனாகப் பணித்தார். நான் தோட்டக் காரனாக இருந்த போது, என் மீது அன்பு செலுத்தினாள் ......... நான் 50 ஆண்டுகள் மன்னனாக இருந்தேன்".

மேற்கண்ட கதையைப் போன்றே, மோசே என்ற எபிரேயத் தலைவனின் கதையும் விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ளது. மோசேயின் தாய், அவன் குழந்தையாய் இருந்த போது, அவனைக் கூடையில் பொதித்து, நைல் ஆற்றில் விட்டதாக விவிலியம் கூறுகிறது. வரலாற்றில் மிக உயர்ந்த வர்களாகக் கருதப்படுபவர்களின் பிறப்பும் அவ்வாறே சொல்லப்பட்டுள்ளதை அறியலாம்.

சார்கோனைப் பற்றிய பிற்காலத் தகவல்கள், அவனுடைய தாய், இசுதார் தேவதைக்கு பூசை செய்யும் தலைமைப் பூசாரிணியாக இருந்தாள் என்று கூறுகின்றன. ஏந்து (Entu) என்பது, பூசை செய்பவரைக் குறித்த அக்காடியச் சொல்லாகும். படையல் பொருட்களை ஏந்தி நிற்பதால், அச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். எவருக்கும் தெரியாமல் கருதரித்தாள் என்பது இழிவாகப் பார்க்கப்படுவதால், ஒரு பேரரசனின் தாயை, உயர்ந்த இடத்தில் வைக்கும் வகையில், தலைமைப் பூசாரிணியாக (High Priestess) பிற்காலத்தில் சொல்லியிருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் கருத்தாக உள்ளது. சார்கோன் பற்றிய மற்றொரு செய்தியில், கிஷ் நகரத்து மன்ன னிடம், சார்கோன் வேலையாளாக இருந்தான் என்றும், அவனே சார் கோனைத் தோட்டக்காரனாகப் பணித்தான் என்றும் சொல்லப்படுகிறது. தோட்டக்காரனாக இருந்ததால், நீர்பாய்ச்சும் முறை, கால்வாய்களைச் சீர்படுத்தும் முறை ஆகியவற்றை அறிந்திருந்தான் என்றும் அச்செய்தியில் சொல்லப்பட்டுள்ளது. பிற்காலத்தில், சார்கோன் மன்னனாக இருந்த போது, யூப்ரடீஸ் தைகிரீஸ் ஆறுகளின் வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்த, பல கால்வாய்களை உருவாக்கி, உள்நாட்டில் வேளாண்மைக்கு வழி வகுத்தவன் என்ற செய்திக்கு இணைப்பாக, தோட்டக்காரனாக இருந்து கால்வாய்களைப் பற்றி அறிந்திருந்தான் என்ற செய்தி தொடர்புபடுத்தப்பட்டுள்ளதாக, ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

தோட்டக்காரனாக இருந்த போது பலர் சார்கோனிடம் வேலை யாட்களாகப் பணியாற்றி வந்தனர். அவர்களையே போர் வீரர்களாக்கி, ஆட்சியைப் பிடித்தான் என்றும் சொல்லப்பட்டுள்ளது. சார்கோனுக்கு முன்பு, முறையான அரசுகள் எவையும் இல்லையென்பதால், சார்கோன் எளிதில் மன்னனாக முடிந்தது என்பர். நான்கு முறை தெற்கேயிருந்த கனான் நாட்டின் மீதும் சிரியா மீதும் சார்கோன் படையெடுத்துச் சென்றான். முழுமையாக மூன்றாண்டுகள், தலை நகரை விட்டு வெளியேறி, மேற்குப் பகுதி நாடுகளை, மெசபத்தோமியாவுடன் இணைக்க முயற்சிகளை மேற்கொண்டான். கடல் கடந்தும் மேற்கே சென்று கப்புத்தர (Kaputara) என்ற தீவை தன் ஆட்சியில் இணைத்துக் கொண்டான். வடக்கே, மலை நாடுகளை வென்று, அனதோலியாவையும் தன் ஆட்சிக்குட்படுத்தினான்.

கப்புத்தர என்ற தீவு, நடுத்தரைக் கடலில், சிரியாவை ஒட்டியுள்ள பகுதியாகும். கப்பு என்ற தமிழ்ச் சொல்லுக்கு, செம்மை, சிவந்த, சிவப்பு என்ற பொருளுண்டு. கப்பு – கப்பி : தவசங்களின் நொய், செந்நிறமானது.

*"கப்பி கடவவதாகக் காலை"*[68]

கல் - கல்பு - கப்பு என விரியும்.

செப்பு என்பதும் சிவந்த உலோகத்தைக் குறித்ததே. செம்பினால் ஆன கலம்.

*"முலை செப்புடன் எதிரின"*[69]

செம்பூ - செம்பு - செப்பு.

கப்புத்தரை : கப்புத்தர எனத் திரிந்தது. தரை - தர எனப்பட்டது.

தரை (தமிழ்) → த்ர (சமஸ்கிருதம்) → தெர (எபிரேயம்) → தர (அக்காடியம்) டெர (கிரேக்கம்) → டெரே (இலத்தீன்) → டெர்ர (ஆங்கிலம்).

Terracotta, Territory, Terrorist போன்ற ஆங்கிலச் சொற்கள், தரை என்ற தமிழ் மூலத்தின் திரிபுகளே. கப்புத்தரை என்ற சொல்லப்பட்ட தீவு, செப்புத் தரை என்றும் சொல்லப்பட்டது. செப்புத்தரை என்பதே, சைப்ரஸ் எனத் திரிந்துள்ளது[70].

கப்புத்தரை என்பதும், செப்புத்தரை என்பதும் ஓரிடத்தையே குறிப்பனவாகும்.

சைப்ரஸ் என்ற சொல், செப்பு என்ற சொல்லினின்றே பிறந்ததாக ஆங்கில அகர முதலிகளும் கூறுகின்றன.

மிகப் பரந்த மெசபத்தோமிய நாட்டை, 56 ஆண்டுகள் சார்கோன் ஆண்டதாகக் குறிப்புகள் கூறுகின்றன. தனது வாழ்நாள் முழுவதும், அண்டை நாடுகளில் சார்கோன் திறை பெற்று வந்தான். அவனை எதிர்த்துப் போரிட எவரும் துணியவில்லை. நாட்டில் அமைதி நிலவியதால், மக்கள் எவ்வகையான அச்சுறுத்தல்களுமின்றி வாழ்ந்து வந்தனர். அமைதிச்சூழல் நிலவியதால், தொழில்களும் வணிகமும் வளர்ந்தன. அனதோலியாவி லிருந்து வெள்ளியும், பாரசீகத்திலிருந்து (தற்கால ஆப்கானிஸ்தான்) மணிக் கற்களும் (lapis - lazuli), போணீசியாவிலிருந்து (இலெபனான்) கருங்காலி (Cedar), மரங்களும், கிழக்கு அரபியேவிலிருந்து (ஓமான்) செம்பும் இறக்குமதி செய்யப்பட்டன. உள்நாட்டு வெளிநாட்டு வணிகம் சிறப்புற்றிருந்ததாலும், உள் நாட்டில் வேளாண்மை தன்னிறைவு பெற்றிருந்ததாலும், நாட்டின் பொருளாதாரம் சிறப்புற்றிருந்தது. கிழக்கில் இருந்த இரு ஆறுகளின் சமவெளிப் பகுதிகளும் தவசக் களஞ்சியங்களாக (Bread Baskets), விளங்கின. பலவகையிலும் அரசுக்கு வருமானம் பெருகியதால், பல்வேறு கட்டிடங்களும், கோட்டைகளும், அரண்மனைகளும் கட்டப்பட்டன. வெற்றி பெற்ற நாடுகளிலிருந்து கிடைத்து வந்த திறைகள், நாட்டின் நகரங்களை

மேம்படுத்தச் செலவிடப்பட்டன. ஒவ்வொரு நகரிலும், குறிப்பாக, சார்கோன் வெற்றி பெற்ற நகரங்களில், மன்னனின் சிலைகள் வைக்கப்பட்டன. நடுத்தரைக் கடல் பகுதியில் உள்ள கடற்கரைகளிலும், மன்னனின் வெற்றியைக் குறிக்க சிலைகள் நிறுவப்பட்டன. பாபிலோன் நகரம் பலவாறு புதுப்பித்து எழிலூட்டப்பட்டது. மேற்கண்ட பணிகளில் சில, சார்கோன் II காலத்தில் நிகழ்வுற்றவை என்ற கருத்தும் உண்டு.

சர்கோன் தனது வாழ்நாள் முழுவதும் சுமேரியக் கடவுள்மீது மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தான். குறிப்பாக என்னினா (என் அன்னை) என்ற இசுதார் பெண் தெய்வத்தைப் போற்றி வணங்கி வந்தான். தன்னை அப் பெண் தெய்வத்துக்கான தலைமை பூசாரியாகவும் அறிவித்துக் கொண் டான். அவனுடைய மகளுக்கும் அன்னா என்ற பெயரைச் சேர்த்து எனது அன்னா (Enhedu anna), எனப் பெயரிட்டிருந்தான். அவளையே, அத்தெய் வத்துக்கு பூசை செய்யப் பணித்திருந்தான். ஊர் நகரிலிருந்த கோயிலில் அவளே தலைமைப் பூசாரிணியாக இருந்தாள்.

சர்கோனின் முதுமைக் காலத்தில், பல இன்னல்கள் அவனுக்கு ஏற்பட்டன. நாட்டின் பல பகுதிகளில் அவனுக்கெதிராகக் கலகங்களும் போராட்டங்களும் வெடித்தன. அதுபற்றிய ஒரு பாபிலோனியக் குறிப்பில், "சார்கோனின் இறுதிக் காலத்தில், பல பகுதிகளில் அவனுக்கு எதிராகக் கலகங்கள் மூண்டன. தலைநகரில் அவனை வீழ்த்தப்பலரும் நெருங்கி வந்தனர். அவர்களை எதிர்கொண்ட சார்கோன், அவர்களைப் போரில் வென்றதோடு, பகைவர்களின் பெரும் படைகளையும் அழித்தொழித்தான்" என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. ஈழநாட்டவரும் சார்கோனுக்கு எதிராக ஒரு கூட்டணியை அமைத்தனர். அக்கூட்டணியையும் வென்று, அவர்கள் மீண்டும் தலைதூக்க விடாமல் செய்தான். தோற்ற பகைவர்கள், சார்கோனுக்குத் திறை செலுத்தும் சிற்றரசர்களாயினர்"[72]

நாரம் - சின் : சார்கோனுக்குப் பிறகு அவனது இருமகன்களும் ஒருவருக்குப் பின் ஒருவராகப் பட்டமேற்றனர். இரிமுஸ் என்ற இளையவன், திறமையற்றவன், மணி ஸ்துது என்பவன், அரண்மனையில் சிலரால் படுகொலை செய்யப்பட்டான். மணியின் மகன் தான் நாரம் - சின் என்பவனாவான். (கி.மு.2254 - 2218). தனது பாட்டனைப் போன்று பெரும் படையை உருவாக்கி, தன் பாட்டன் காலத்திலும் தந்தையின் காலத்திலும் எதிர்த்தவர்களையெல்லாம் அழித்தான்" உலகின் பேரரசன் நாரம் - சின்",

என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டான். (Luga Naram - Sin), லுக என்பது உலக என்ற தமிழ்ச்சொல்லின் திரிபாகும். சுமேரியரின் சமய, நாகரிகத்தைப் பின்பற்றி வந்தான். தன்னை, அக்காட்டு நகரத்தின் கடவுளாக அறிவித்துக் கொண்டான். இந்த அறிவிப்பு, தனக்கு முன்பிருந்த மன்னர்களின் நிலைப்பாட்டுக்கு மாறானது. தன் தந்தையும் பாட்டனும் மக்களின் தலைவனாக அல்லது பகராளாகத் தம்மை அறிவித்துக் கொண்டிருந்தனர். எகிப்திய பாரோ மன்னர்கள் போல், தன்னையே கடவுளாக, நகரம் - சின் அறிவித்துக் கொண்டான். தொடக்க கால ஆட்சியில், பல எதிர்ப்புகளை எதிர் கொண்டாலும், அவற்றையெல்லாம் விரைவாகவே அழித்தான்.

மிகப் பெரிய அரண்மனையை, காபூர் ஆற்றங்கரையிலுள்ள, தெல் - பரக் என்ற இடத்தில் காட்டினான். மெகன் நாட்டின் மீது (ஓமான்) படையெடுத்து, மந்தன்னு என்ற மன்னனை வென்றான். அங்கு படைகளை நிறுத்தி, தற்காப்புக் கோட்டைகளையும் கட்டினான். சாக்ரோஸ் மலைப்பகுதியில் (இலெபனானுக்குக் கிழக்குப் பகுதி குடியர்களை வென்றான். கித்தியர்கள், அனதோலியர்கள், ஊரியர்கள் (Hurrains), சீப்பணி போன்ற 15 மன்னர்களை வென்றான். மெசபத்தோமியப் பொருளாதாரம், பருவ கால மழையை எதிர்பார்த்துக் காத்திருந்த நிலையில் இருந்தது. பொருளாதாரத்திட்டங்கள் கவனத்துடன் வகுக்கப்பட்டன. தவசங்கள் உமி நீக்கப்பட்டு, தூய்மைப்படுத்தப்பட்டு, உண்பதற்கேற்ற வகையில், குறிப்பிட்ட கொள்ளளவுள்ள கலயங்களில், மக்களுக்கு வழங்கப்பட்டன. தவசங்களும், எண்ணெயும் அரசாங்கப் பங்கீட்டு முறையில் (Ration), மக்களுக்கு அளிக்கப்பட்டது, அக்காடிய ஆட்சிக் காலத்தில்தான் என்று ஆய்வாளர்களால் கருதப்படுகின்றது. பொது விநியோக முறை இன்று அனைத்து நாடுகளிலும் நடைமுறையில் உள்ளன என்றாலும், முதன் முதலில் அத்திட்டத்தை அறிமுகம் செய்த நாரம் - சின், வரலாற்றில் சிறப்புக்குரியவனாகிறான். கிணறுகளை வெட்டும் தொழிலாளர்கள், நகரத்தில் பொதுக்கிணறுகளை வெட்டுபவர்களுக்கு, நல்ல ஊதியம் வழங்கப்பட்டது. நகரைச் சுற்றி அமைக்கப்பட்ட சுவர்களுக்கு பொது மக்களிடம் வரிகள் தண்டப்பட்டன. அது போல் கோயில்களைக் கட்டவும், பொதுமக்கள் வரியளித்தனர். நீர்பாசனத்துக்குப் பயன்பட்ட கால்வாய்கள், ஏரிகளைப் பயன்படுத்தியவர் களிடமிருந்தும் வரிகள் பெறப்பட்டன. முறையாகப் பெறப்பட்ட வரிகளுக் கான பதிவுகள் செய்யப்பட்டன.

அக்காடியப் பேரரசில் அக்காடிய மொழி, பொதுமக்கள் பேசும் மொழியாகவும், அரசாங்க மொழியாகவும் இருந்தது. அரசாங்கப் பதிவுகள் அனைத்தும் அக்காடிய மொழியில் இருந்தன. சுமேரிய மொழி பேச்சு மொழியாகவும், இலக்கிய மொழியாகவும் பயன்படுத்தப்பட்டது. ஈழத்தில் தனி மொழி பேசப்பட்டாலும், அம்மொழியை அக்காடிய எழுத்துகளில் எழுதத் தொடங்கினர். தொலைவிலுள்ள அரசுகளுக்கு அனுப்பப்பட்ட மடல்களும் அக்காடிய மொழியிலேயே இருந்தன. எகிப்தில், பாரசீகத்தில், அனதோலி யாவில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகளில், ஏராளமான அக்காடியக் கடிதங்களும் குறிப்புகளும் கிடைத்துள்ளன.

## அக்காடிய அரசின் வீழ்ச்சி

அக்காடிய அரசு தோன்றிய 180 ஆம் ஆண்டில், அதன் வீழ்ச்சியின் தொடக்கம் தெரிந்தது. கி.மு.2154 ஆம் ஆண்டில், அது முடிவுற்றது. அதன் பின்னர், ஊர் நகரத்தைத் தலை நகராகக் கொண்டு, மூன்றாவது சுமேரிய மரபு ஆட்சியைத் தொடங்கியது. நாரம் - சின்னுக்குப் பிறகு வந்த மன்னர்களால், பேரரசைக் கட்டிக் காக்க இயலவில்லை. கி.மு.2154 - 2112 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட 42 ஆண்டுகளில் மெசபத்தோமியாவில் என்ன நடந்தது என்பதை அறிய இயலவில்லை. கி.மு.2112 இல் ஊர் நகர ஆட்சி தொடங்கிய பிறகே, வரலாறு திரும்புகிறது. அந்த இடைக்காலத்தில், குடியர் (Kutians) என்ற இனத்தவர் பற்றிய குறிப்புகள், மெசபத்தோமியாவின் சில இடங்களில் அறியப்பட்டுள்ளன. அவர்கள், கால்நடை வளர்ப்போராகக் கருதப்படுகின்றனர். தங்களிடமிருந்த கால்நடைகளை, மெசபத்தோமி யாவெங்கும் மேய்ச்சலுக்கென விட்டனர். அதனால் விளை நிலங்களும், சமவெளிகளும் அழிந்து போயின. அக்காடிய அரசின் இறுதிக் காலத்தில் இந்நிகழ்வு நடந்தது. சூதுருள் (கி.மு.2168 - 2154) என்ற இறுதி மன்னனால், இக்குடியர்களை துரத்த இயலவில்லை. மேலும் இயற்கையும் மழையின்றி வறட்சியைத் தோற்றுவித்தது. இறுதியில், ஊர் நகரின் ஆட்சியைக் கைப்பற்றிய நம்மு என்பவன், அம்மணல் மக்களான குடியர்களை விரட்டி யடித்தான்.

இயற்கையொத்த நிகழ்வு, மெசபத்தோமியா மட்டுமின்றி, எகிப்து, கிரேக்கம் போன்ற நாடுகளிலும் உணரப்பட்டது. அது வட்டாரம், நாடு என்ற அளவில் விரிந்து, உலக அளவில் வறட்சி அறியப்பட்டது. அக்கால அளவில், மக்கள் பெருமளவில், பஞ்சம் பிழைக்க வெளி நாடுகளுக்கெல்லாம் சென்று குடியேறினர். வரலாற்றில் முதன் முதலாக அந்த வறட்சி காலமே பதிவு

செய்யப்பட்டுள்ளது. ஆய்வாளர்கள், தொல்லியல் மற்றும் நிலவியல் கூறுகளை ஆய்வு செய்து, கி.மு.2200 ஆண்டுகளில், பருவக் காற்று மாறி வீசியதாலும், பல எரிமலைகள் அக்கால அளவில் வெடித்துச் சிதறியதாலும், நாடுகளில் வெப்ப நிலை, முன் எப்போதும் இருந்ததை விட உயர்ந்தது. ஏறக்குறைய 400 ஆண்டுகள் தொடர்ந்த வறட்சியே, மெசபத்தோமிய அக்காடிய அரசின் வீழ்ச்சிக்கு முதல் காரணமாய் அமைந்தது. அவ் வறட்சியின் கடுமையைப் பற்றிப் பல ஆய்வாளர்கள் விளக்கியுள்ளனர்[73]. வடக்கு அட்லாண்டிக் பகுதியில் ஏற்பட்ட பருவக் காற்றின் திசை மாற்றம், யூப்ரடீஸ் தைகரிஸ் ஆறுகளை, வற்றச் செய்து விட்டது என்று சொல்லப் படுகின்றது[74].

வடக்கு மெசபத்தோமியாவின் தொல் லெய் லெய்லான் நகரின் சான்றுகளின் படி, நகரைச் சுற்றி பெரிய சுவர் கட்டப்பட்டிருந்ததையும், கோயில் உருவாக்கப்பட்டிருந்ததையும் தவசக் குதிர்கள் பல இருந்ததையும் அறிய முடிகிறது. அவையெல்லாம், இடிந்து விழுந்து மண்ணோடு மண்ணானதை, இடியாடுகள் மெய்ப்பிக்கின்றன. மனிதர்களின் நடமாட்டமே அப்பகுதியில் இருந்ததற்கான சுவடுகளே தெரியவில்லை. மண்ணை ஆய்வு செய்த போது, அம்மண் அப்பகுதியைச் சார்ந்திராத வேறு பகுதி மண் என்றும் சூறாவளிப்புயல், இடிபாடுகளின் மேல் படிந்துள்ளதையும் காண முடிந்தது. மழையில்லாததால், அப்பகுதி வறட்சியின் நிலையை உணர்த்தியது. கால் நடைகளின் எலும்புகள் அவ்விடத்தில் கிடைத்தன. 28000 பேர், அவ்விடத்தைவிட்டு அகன்று, நீருள்ள பகுதியை நாடிச் சென்றுள்ளனர். தெல் பராக் என்ற நகரம், தன் பரப்பளவில் 75 பங்கைச் சுருக்கிக் கொண்டுள்ளது. பின்னர் நுழைந்த அமோரியர், அக்காடியர்களுடன் வன்முறையில் ஈடுபட்டுள்ளனர். காலநிலை மாற்றங்கள் ஒட்டு மொத்தமாக மெசபத்தோ மியாவை சீரழித்து விட்டது. எகிப்தின் பழைய அரசு வீழ்ந்து போனதற்கும், அப்பருவ நிலை மாற்றமே காரணமாகச் சொல்லப்படுகின்றது.

கடும் வறட்சி, அரசின் நிதி வருவாயைக் குறைத்து, முற்றிலுமாக பொருளியல் கூறுகளைச் சிதைத்துவிட்டது. வேளாண்மை முற்றிலுமாக அழிந்து போயிற்று. கி.மு.2600 ஆண்டுகளில், யூப்ரடீஸ் தைகிரிஸ் ஆறுகள் வறண்டு போயின. கடும் பஞ்சத்தின் காரணமாக, உணவுப் பொருட் களுக்காக மக்களிடையே கடும் மோதல்கள் ஏற்பட்டன. நாட்டில் சட்டம் ஒழுங்கு சீர் குலைந்து போனது. அந்த சிக்கலான நிலையில் ஆட்சிப் பொறுப்பேற்ற ஊர் நகரத்து மூன்றாம் தலை முறையினர், நிலைமைகளைச்

சீராக்க முயன்றனர்[75]. குடியர்களை அடித்து விரட்டினர். கால்நடைகளை நிலங்களில் நுழைய விடாமல் தடுத்தனர். புதிய அரசு, சுமேரிய மரபைச் சார்ந்திருந்ததால், (கி.மு.2112 - 2004) மீண்டும் சுமேரிய மொழி ஆட்சி மொழியாயிற்று. இலக்கியம் மற்றும் சமய வழிபாட்டுக்கு மீண்டும் சுமேரிய மொழி பயன்படுத்தப்பட்டது. இடைக்கால ஐரோப்பாவில், இலத்தீன் மொழி அனைத்துத் துறைகளிலும் புகுத்தப்பட்டதை, ஆய்வாளர்கள் அச்சூழ் நிலையுடன் ஒப்பிட்டுக் கூறுகின்றனர்.

**அரசாங்கம்**

அக்காடியப் பேரரசு, மெசபத் தோமியாவில் சரியான முறையான அரசியல் கட்டமைப்பை உருவாக்கியது. எதிர்காலத்தில் எதிர் கொள்ள வேண்டிய சிக்கல்களையும் கருத்தில் கொண்டு அக்கட்டமைப்பு உருவாக்கப் பட்டது. அக்காடியர்களுக்கு முன்பு ஆண்ட சுமேரியர் ஆட்சிக் காலத்தில், நகரங்களை ஆட்சி செய்யும் அதிகாரம், சமயத் தலைவர்களிடம் அளிக்கப் பட்டிருந்தது. பிற்காலத்தில், இனன்னா தெய்வத்தை மணப்பவர்களிடம், தலைமைப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. அத்தெய்வத்தை மணப்பதென்பது ஒரு சடங்காகவே நிறைவேற்றப்பட்டது. எந்தத் தகுதியில் அத்தெய்வத்தை மணப்பவர் தேர்வு செய்யப்பட்டனர் என்பது தெரியவில்லை. ஆனாலும், மன்னனின் மகன்கள், உறவினர்கள், மன்னருக்கு நம்பிக்கையானவர் களையே தேர்வு செய்தனர் எனத் தெரிய வருகின்றது.

தொடக்கத்தில், மன்னர்கள் சமயத் தலைவர்களை அங்கீகரித்தனர். அத்தலைவர்களுக்குத் துணையாக இருந்தனர். மன்னன், மக்களின் உயர்ந்தவனாகக் கருதப்பட்டான். (லுக என்ற சொல், உலக என்ற சொல் திரிபு என ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.) லுக என்பவன் (மன்னன்) சமயத் தலைமைக்கு ஆதரவளித்து வந்தான். பிற்காலத்தில், சமயத் துறையிலிருந்து முற்றிலுமாக மன்னர்கள் தங்களை விடுவித்துக் கொண்டனர். இ (E), என்ற வீட்டில் அல்லது அரண்மனையில் தனியாக வாழத் தொடங்கினர். (இ என்ற சொல், இல் என்ற வீட்டைக் குறித்த தமிழ்ச் சொல்லின் சுருக்கமாகும்.)

சார்கோன் மன்னன் காலத்தில், அவனுடைய வெற்றி கீழ்க் கடல் பகுதியிலிருந்து (பாரசீக வளைகுடா), மேல் கடல்பகுதி வரை (நடுத்தரைக் கடல்) உறுதிப்படுத்தப்பட்டது. விண்ணகத்துக் கீழ் இருந்த உலகை, அதாவது சூரியன் தோன்றி மறையும் பரப்பளவை, சார்கோன் ஆண்டதாகக்

கருதப்பட்டது. சமயத் தலைவர்கள், நகரங்களின் ஆட்சிப் பொறுப்புகளில் அமர்த்தப்பட்டனர். சார்கோன் அவர்களுக்கும் மேலான அதிகாரம் பெற்றிருந்தான். பேரண்டத்தின் தலைவன் (Lord of the universe) என்று போற்றப்பட்டான். வரலாற்றில் முதன் முறையாக, கப்பல்களைக் கட்டி, பாரசீக வளைகுடா நாடுகளை, கடற்போரில் வென்றான் என்று சொல்லப்பட்டுள்ளது. இக்கூற்று தவறானது மட்டுமல்லாது, உண்மைக்கும் புறம்பானது. சுமேரியர் காலத்திலேயே, சிந்து வெளியின் லோத்தள் போன்ற பல துறை முகங்களுக்கும், ஊர் நகருக்குமிடையே கப்பல் போக்குவரத்து நிகழ்ந்ததாக அகழ்வாய்வுகள் கூறுகின்றன. கி.மு.5000 ஆண்டுகளில், சுமேரியர்கள், பாரசீக வளைகுடாவில் கடற்போர் நிகழ்த்தியே, மெசபத்தோமி யாவுக்குள் நுழைந்ததாக, சுமேரியர் வரலாறு கூறுகின்றது. சார்கோன், கிழக்குக் கடல் நாடுகளையும், மேற்குக் கடல் நாடுகளையும், (கப்புத்தர என்ற செப்புத் தரை – சைப்ரஸ்) கடற்படை கொண்டு வென்றான். ஆனாலும், சைப்ரஸ் தீவை, சார்கோன் வென்றதைப் பற்றி, ஆய்வாளர்களிடையே முரண்பாடுகள் உள்ளன.

சார்கோனின் பெயரன் நாரம் – சின், சார்கோனைக் காட்டிலும் பல்வேறு நாடுகளை வென்று, தனது ஆட்சியில் இணைத்துக் கொண்டான் என்று சொல்லப்படுகிறது. சார்கோன் தன்னை, நான்கு திசைகளுக்குமான மாமன்னன் என்று அறிவித்துக் கொண்டான். அவன் பெயரனோ, தன்னை நான்கு திசைக்குமான பேரரசன் என்று அறிவித்துக் கொண்டதோடு, தன்னையே கடவுளாகவும் அறிவித்துக் கொண்டான். இது, இவன் காலத்தில் எகிப்தியப் பாரோக்கள் அறிவித்துக் கொண்டதைப் போன்றது. அதன் தாக்கமாகக் கூட இருக்கலாம். பெரும்பாலான மெசபத்தோமிய மன்னர்கள், தங்களைக் கடவுளின் பகராள் (பிரதிநிதி) என்றே அறிவித்துக் கொண்டனர். நாரம் சின்னுக்குப் பிறகு எந்த மன்னரும் தம்மைக் கடவுள் என்று அறிவித்துக் கொள்ளவில்லை. தொன்மக் கதையில் சொல்லப்பட்ட கில் காமேஷ் என்பவனுக்கு, பாதி தெய்வத்தன்மை இருந்ததாகச் சொல்லப்பட்டது. நாராம் சின் தன்னைக் கடவுளாக அறிவித்துக் கொண்டதோடு, தன் உருவச் சிலைகளை, பொது இடங்களிலும் கோயில்களிலும் நிறுவச் செய்தான்[76]. தான் கடவுள் இல்லை என்பது நாரம் சின்னுக்குத் தெரிந்திருந்தது என்றும், தனது மக்களை அச்சுறுத்திக் தனக்குப் பணிந்து நடக்கவும், தான் விரும்பி யவாறு, அனைத்து அதிகாரங்களையும் கொண்டிருந்த கடவுள் பெயரால், தனது மக்களை நகரக் காவலர்களாக நியமிக்கவும், தமது அதிகாரிகளைத்

தம் பிடியில் வைத்திருக்கவும், நாரம் சின் கையாண்ட உத்தியே, தன்னைக் கடவுளாக அறிவித்துக் கொண்டது என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். நகர சமயத் தலைவர்களாகவும் ஆளுநர்களாகவும் தமது மகள்களை நியமித்ததால், பல்வேறு சிற்றரசர்களும் தமது மகள்களை மணக்க முன்வந்தனர். தரம் (Taram) என்ற தன் மகளை, ஊர் கேசம் (Urkesh) என்ற நகரின் தலைமைப் பூசாரிணியாகவும் ஆளுநராகவும், நாரம் சின் நியமித்ததாக களிமண் தட்டுக் குறிப்பொன்றில் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

## பொருளியல் கூறுகள்

அக்காடிய அரசின் பொருளாதாரம், பெருமளவில் வேளாண் மையைச் சார்ந்ததாகவே இருந்தது. அவை இரண்டு பிரிவுகளாக இருந்தன. யூப்ரடீஸ் தைகிரீஸ் ஆற்றுச் சமவெளிகளில், கால்வாய்கள் ஏரிகள் ஆகியவை வேளாண் தொழிலுக்கு ஏற்புடையதாக இருந்தன. அவ்விரு ஆறுகளிலும் அடித்து வரப்பட்ட வண்டல் மண், நிலங்களுக்கு வளமை சேர்த்தன. ஒரு தவசம் விதைக்கப்பட்டால், 30 தவசங்கள் விளைச்சலைத் தந்தன. அதாவது ஒரு மூட்டை விதைகளுக்கு, 30 மூட்டைகள் அறுவடை செய்யப்பட்டன. இந்நிலப் பகுதிகள் மெசபத்தோமியாவின் தென் பகுதியில் இருந்தன. வடக்குப் பகுதி, பெரும்பாலும் பருவ மழையை நம்பியே வேளாண்மை நடைபெற்றது. பருவ காலங்களில் பெரும்பாலும் மழை பொய்த்துப் போவதில்லை. தென் பகுதியில் (தற்கால ஈராக்கின் தென்பகுதி பருவ மழை, வடக்குப் பகுதியை விட குறைவாகவே இருந்தது. ஆண்டுக்கு 20 மி.மீ. மழையாக இருந்ததால், இரு ஆறுகளையும் நம்பியே வேளாண்மை நடை பெற்றது.

தென் பகுதியில் மண், உப்பு கலந்ததாக இருந்ததால், கோதுமை விளைவிக்கப்படவில்லை. மாறாக பார்லி, உப்பு மண்ணிலும் விளையும் பயிர் என்பதால், பார்லி பெருமளவில் பயிரிடப்பட்டது. கோதுமை வட பகுதிகளில் பயிரிடப்பட்டது. கி.மு.2600 ஆண்டுகளில், மெசபத்தோமிய நகரங்கள் மிகுந்த மக்கள் தொகை கொண்டவைகளாக இருந்தன. மக்களில், வேளாண்மை, தொழில், வணிகம் செய்தோர் நீங்கலாக மற்ற அனைவரும், படைப்பிரிவில் சேர்க்கப்பட்டனர். படை வீரர்களுக்கு, பெருமளவிலான வேளாண்மை உற்பத்திப் பொருட்கள் வழங்கப்பட்டன. அக்காடியப் பேரரசு ஐந்து இலக்கத்துக்கும் கூடுதலான படைவீரர்களைக் கொண்டிருந்ததால், விளைச்சலில் பெரும்பகுதி, அவர்களுக்க மானியமாகத் தரப்பட்டது. அதற்கேற்ற அளவில், வேளாண்மைத் தொழிலில், உணவுப் பொருட்கள்

உற்பத்தி செய்யப்பட்டன. அக்கால அளவில், உலகிருந்த மற்ற நகரங்களைக் காட்டிலும், மெசபத்தோமிய நகரங்களிலேயே, மக்கள் நெருக்கம் மிகுந்து காணப்பட்டதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

யூப்ரடீஸ் தைகிரீஸ் ஆறுகள் தோன்றும் வடக்கு மலைப்பகுதிகள், அக்டோபர் முதல் மார்ச் வரை பனிக்கட்டிகளால் மூடப்பட்டிருக்கும். கோடைகாலம் தொடங்கியவுடன், மார்ச் முதல் ஜூலை வரை, இரு ஆறுகளிலம் பனி உருகி வெள்ளம் பெருக்கெடுக்கும். கி.மு.3000 - 2600 ஆண்டுக்கால அளவில், அவ்விரு ஆறுகளும் பொய்த்துப் போகவில்லை என்று சொல்லப்படுகின்றது. கி.மு.2600 ஆண்டுகள் தொடக்கம், பருவ கால மாறுதல்களால், அவ்விரு ஆறுகளிலும் நீர் வரத்துக் குறைந்து போனது. ஆனால் அதே கால அளவில் எகிப்தில் உள்ள நைல் ஆற்றில், எதிர்பாராத காலங்களில் வெள்ளப் பெருக்குகள் தோன்றின. அந்நிலை தொடர்ந்து காணப்படவே, வெள்ளத்தை எதிர் கொள்ளும் வகையில், எகிப்தில் வேளாண் திட்டங்கள் மாற்றியமைக்கப்பட்டன. புதிய கால்வாய்களும் ஏரிகளும் தோண்டப்பட்டன.

அதற்கு நேர்மாறான சூழல் மெசபத் தோமியாவில் நிலவியதால், குறைந்த நீரை வீணாக்காத வகையில், வேளாண் திட்டங்கள் மாற்றியமைக்கப்பட்டன. ஏரிகளும் குளங்களும் வெட்டப்பட்டன. அதற்காக வேளாண் தொழிலாளர்களுக்கென தனி அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. ஆகஸ்ட் முதல் அக்டோபர் வரை, அவ்வேலையாட்கள் தங்கள் பணிகளைத் தொடர்ந்தனர். அதன் முழுப் பொறுப்பும் கண்காணிக்கும் பணிகளும் நகரக் கோயில் நிர்வாகங்களிடம் ஒப்படைக்கப்பட்டன. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க, விவசாயிகளுக்கு மாற்றுப் பணிகள் தரப்பட்டன. அரசாங்கச் சேமிப்புக் கிடங்குகளில் இருந்த தவசங்கள், ஊதியமாகத் தரப்பட்டன. அரண்மனையில் பல்லாயிரம் பேர்களுக்கான உணவு ஒவ்வொரு நாளும் தயாரிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு நாளும் சார்கோன் மன்னன், தனது அரண்மனையிலிருந்த 5400 போர் வீரர்களுடன் அமர்ந்து உண்பதாகச் சொல்லப்பட்டுள்ளது[77].

அறுவடை, கோடை காலத்தில் நடைபெற்றது. அக்காடியர் ஆட்சிக் காலத்தில் கால் நடைகளை மேய்க்க வந்த அமோரியர்கள், அறுவடைக்குப் பிந்திய நிலங்களில், கால்நடைகளை மேய்க்க அனுமதிக்கப்பட்டனர். அதற்கு வரியாக, ஆட்டு மயிர், ஆட்டிறைச்சி பால், வெண்ணெய் போன்றவற்றைக்

கோயில்களுக்குச் செலுத்தினர். அவை அரண்மனைக்கும், கோயில் பூசாரிகளுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டன. நல்ல பருவக் காலங்களில் அனைத்தும் நல்லபடியாகவே நடந்தன. பருவம் தப்பிய காலங்களில், மேய்ச்சல் நிலம் இல்லாததால், அமோரியர்கள், விளைச்சல் நிலங்களில் தங்கள் கால்நடைகளை மேயவிட்டனர். அதனால் அமோரியர்களுக்கும் வேளாண் மக்களுக்கும் இடையே பூசல்கள் தோன்றின. அப்பூசல்களே பிற்காலத்தில் வெடித்து, ஆட்சியைப் பிடிக்கும் அளவுக்கு மாறியது.

அக்காடியப் பேரரசில், கோதுமையும் பார்லியும் பெருமளவில் உற்பத்தி செய்யப்பட்ட போதிலும், தொழில் துறைகளுக்குத் தேவையான கனிம வளங்கள் இல்லாமற் போனது. உலோகங்கள், மூங்கில், கருங்காலி மரங்கள், கட்டிடத்துக்குத் தேவையான பாறைக் கற்கள் எனப் பல்வேறு பொருட்கள், வெளிப்பகுதிகளிலிருந்தும், வெளி நாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்யப் பட்டன. அரசின் வருவாயில் ஒரு கணிசமான தொகை, அதற்காகச் செலவிடப்பட்டது. வெள்ளி (தாரஸ் மலைப் பகுதிகளிலிருந்தும்) கருங்காலி மரங்கள் (இலெபனானிலிருந்தும்), செம்பு (ஓமானிலிருந்தும்) போன்றவை, வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. களி மண் தட்டுக் குறிப்புகள், மேற்கண்ட செய்திகளைத் தருகின்றன[78].

## கலைகள்

அக்காடியர்களுக்கு முன்பே, சுமேரியர்கள் கலைகளை மெசபத்தோமி யாவில் அறிமுகம் செய்திருந்தனர். அக்காடியர் காலத்துக் கலையென்பது, ஏறக்குறை சுமேரியர்கள் வளர்த்திருந்த கலைகளே. அக்காடியர்கள் காலத்தில், மனிதர், விலங்குகள், பறவைகள், கடவுளர்களின் உருவங்களில், உள்ளது உள்ளவாறு வெளிப்படுத்தும் தன்மை முன்னேற்றம் அடைந்தது. ஆனாலும் பல உருவங்கள் கோரமான அருவருக்ககத்தக்க, அச்சம் தரக் கூடியவைகளாக இருந்தன. மனிதர்களிலும் மாறுபட்டவர்கள் கடவுளர்கள் என்பதைக் காட்டுவதற்காக அவ்வாறு வரையப்பட்டன, எழுதப்பட்டன என்று சிலர் கூறுகின்றனர். ஆனாலும், மனிதர்களைப் பற்றிய சித்திரங்களில், அக்காலத்து மக்களின் உடைகள், அணிகலன்கள், போர்க்கருவிகள், ஆகியன பற்றிய செய்திகளை அறிந்து கொள்ளலாம். பெரும்பாலும் ஆண்கள், தாடியுடன் காணப்படுகின்றனர். சுருள் முடியும் நீண்ட மூக்குமாக அவை உள்ளன. உண்மையில் அவற்றை மெசபத்தோமியக் கலைகள் என்று கூறுவதை விட, சுமேரியக் கலையின் அடுத்த கட்டம் என்று கூறுவது பொருத்தமாக இருக்கும்.

## மொழி

மெசபத்தோமியாவில், கிழக்கு நாட்டினின்றும் மக்கள், கி.மு.10000 ஆண்டுகளில் குடியேறினர். அவர்கள் பேசிய மொழியே உலகின் முதன் மொழி என்று சொல்லப்பட்டது. அவர்களின் குடியேற்றத்துக்கு முன்பு, மெசபத்தோமியாவில் வாழ்ந்திருந்த மக்கள் என்ன மொழி பேசினார்கள் என்பது பற்றியச் செய்திகள் எவையும் இல்லை. அது பற்றித் தெரிந்து கொள்ளவும் மேலை நாட்டு ஆய்வாளர்கள் முயற்சிக்கவில்லை. உறுதியாக அவர்களும் ஏதோவொரு மொழியில் பேசியிருக்க வேண்டும். அம்மொழிக்கு எழுத்து வடிவங்கள் இல்லாமல் இருந்திருக்கலாம். முதன் மொழியைப் பேசிய கிழக்கு நாட்டு மக்கள், மெசபத்தோமியப் பழங்குடியினருடனும் தொடர்பு கொண்டிருக்க வேண்டும். மக்களே இல்லாத நாட்டில் அவர்கள் குடியேறி யிருக்கவில்லை. முதன் மொழியும் பழங்குடி மொழியும் கலந்ததே செமிட்டிக் மொழியாகத் திரிபுபட்டிருக்க வேண்டும். செமிட்டிக் மொழி அக்காலத்தில் எவ்வாறு பேசப்பட்டது என்பதற்கானச் சான்றுகள் இல்லை. அகழ்வாய்வு களில் கண்டெடுக்கப்பட்ட களிமண் தட்டுகளில் சில, அக்கால செமிட்டிக் மக்களின் வரிவடிவங்களாகக் கூட இருக்கலாம். ஆனால் பழையது புதியது அனைத்தையும், சுமேரிய வரிவடிவத்தோடு ஆய்வாளர்கள் இணைத்து விட்டனர். முதன் முதலில் பேசப்பட்ட, எழுதப்பட்ட மொழியாக சுமேரிய மொழியே உறுதி செய்யப்பட்டது. இது கூட ஒரு வரலாற்றுப் பிழை என்றே சொல்ல வேண்டும். ஒரு குறிப்பிட்ட இனமக்களை முன்னிறுத்தியே வரலாறு எழுதப்பட்டுள்ளது எனலாம்.

செமிட்டிக் என்ற மொழியே பின்னர் அக்காடிய மொழியென்று சொல்லப்பட்டது. கி.மு. 4500 - 2500 ஆண்டுகளில், சுமேரியர் மெசபத்தோமியாவை ஆண்டிருந்த போது, ஏறக்குறைய சுமேரிய மொழிச் சொற்களில் பெரும்பாலானவை, செமிட்டிக் மொழியில் கலந்துவிட்டன. செமிட்டிக் மொழி, சுமேரியக் கலப்பினால், இலக்கிய வளமை பெற்றுவிடவில்லை. அதற்கும் வரி வடிவங்களும் இல்லை. சுமேரியர் ஆட்சிக் காலம் முழுவதும், முற்றிலும் மாறுபட்ட மொழியாக, செமிட்டிக் மக்களால் பேசப்பட்டு வந்தது. அக்காடியம் என்ற பெயர், செமிட்டிக் மக்கள் ஆட்சிக்கு வந்த பிறகே சொல்லப்பட்டது. ஏறக்குறைய சுமேரிய மொழியாகவே கருதப்பட்ட அக்காடிய மொழியுடன் தொடக்கத்தில், சார்கோன் மன்னன் காலத்தில், சுமேரிய மொழியும் ஆட்சி மொழியாகவே இருந்தது. பின்னர் சுமேரிய மொழி விலக்கப்பட்டு அக்காடியம் மட்டும் ஆட்சி மொழியாக

இருந்தது. இருப்பினும் அக்காடியர்கள் ஆட்சிக் காலத்தில் கூட இலக்கிய மொழியாகவும், சமய மொழியாகவும், தெய்வீக மொழியாகவும், அறிவியல் மொழியாகவும் சுமேரிய மொழியே இருந்து வந்தது. அக்காடிய மொழி சுமேரிய மொழி மீது ஆதிக்கம் செலுத்தியது என்ற கூற்றை விட, சுமேரிய மொழியே அக்காடிய மொழி மீது ஆதிக்கம் செலுத்தியது என்பதே உண்மையாகும். ஏறக்குறைய தமிழும் மலையாளமும் போல சுமேரியமும் அக்காடியமும் இருந்தன. அக்காடிய மொழியின் வரிவடிவங்களும் எழுத்துகளும் சுமேரியருடையவை என்பதே, அக்காடியத்தினும் உயர்ந்த, பரவலாக அறியப்பட்ட மொழி சுமேரியம் என்பது தெரியவரும். நாளடைவில் ஆட்சி மாற்றங்கள் காரணமாக, சிறிது சிறிதாக அக்காடிய மொழி மறக்கப்பட்டது. ஆனால், கி.பி. முதல் நூற்றாண்டு வரையிலும், சுமேரிய மொழி, மெசபத்தோமியாவில் அறியப்பட்டு, பேச்சு வழக்கிலும் இருந்து வந்துள்ளது[79].

## அக்காடிய இலக்கியங்கள்

தமிழ்நாட்டில் நாட்டுப் புறங்களில் ஒரு பழமொழியுண்டு. புளிய மரத்துக்குக் கீழே புல்லும் முளைக்காது என்பர். ஆனாலும் சில செடிகள் முளைக்கும். ஆனால் அவை விரைவில் அழிந்து விடும். அதுபோல, சுமேரிய மொழியின் கீழ் வளர்ந்த அக்காடிய மொழியும் குறுகிய காலத்தில் மறைந்து விட்டது. அக்காடியர்கள் ஆட்சிக் காலத்திலும் கூட, சுமேரிய இலக்கியங்களை விஞ்சிய, அக்காடிய இலக்கியங்கள் படைக்கப்படவில்லை. சார்கோன் மன்னனின் மகள் "எனது அன்னா" (Exhedu anna), சுமேரிய நிலவுக் கடவுளின் மனைவியாகக் கருதப்படுகிறாள். (ஆண்டாள் நாராயணனை மணந்தது போல). அவளே அக்கோயிலின் தலைமைப் பூசாரிணியாகவும் இருந்தாள். அவள், நிலவுக் கடவுள் மீது பாடல்களைப் புனைந்திருக்கிறாள். பல, நிலவைப் போற்றிப் புகழும் பாடல்கள். கோயிலில் பூசைக்காலத்தில் பாடப்படும் பாடல்கள் என அவை சொல்லப்படும். தொடக்கத்தில் படர்க்கைப் பொருளில் பாடப்பட்டவை (third person) பின்னர் தன்னை முன்னிலைப் படுத்திப் பாடியிருக்கிறாள். ஆப்பு எழுத்து முறையில், களிமண் தட்டுகளில், அப்பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. "புலவராக, இளவரசியாக, பூசாரிணியாக மூன்று நிலைகளிலும் தனது ஆளுமையை விரித்திருக்கிறாள் என்றும், அம்மூன்று முக ஆளுமைகளும் பல நூற்றாண்டுகளைக் கடந்தும் வாழ்கின்றன", என்று, வில்லியம் ஆலோ என்ற ஆய்வாளர், அவளைப் புகழ்ந்துரைக்கின்றார்[80].

எனது அன்னா, இனன்னாவை, மக்களின் ஒழுங்குமுறைக்கும், போர்முறைக்குமான கடவுளாக, வெளிப்படுத்துகிறாள். இதன் மூலம், அக்காடியப் போர்க்கடவுளான இசுதாரை, சுமேரிய இனன்னா (lanna), வுடன் இணைத்துவிடுகிறாள். மற்ற கடவுளரைப் பின்னுக்குத் தள்ளி, இனன்னாவை முதன்மைப்படுத்துகிறாள். இனின்னா முன்னின்று, தன்னையே முதன்மைப்படுத்தி, தனது கடந்த காலப் பெருமைகள், தன் தந்தை சார்கோனின் வெற்றிகள், அவற்றுக்குத் துணையாகத் தான் இருந்தது. தனது தனித்திறமைகள் ஆகியவைகளை தெரிவிக்கிறாள். அப்பாடல்களில், தன்னைப் பற்றிய தற்பெருமைகள் வெளிப்பட்டாலும், நல்ல தரமான கவிதை நயத்துடன் அப்பாடல் இருப்பதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். தலைமைப் பூசாரிணிப் பதவியினின்றும் நீக்கப்பட்டு, தலைமறைவாக இருந்த காலங்களில், ஆட்சியாளன் (Lugalanne), கோயில்களை அழித்து விடுவான் ; அவற்றைக் காப்பாற்று என்றும் இனன்னாவை வேண்டுகிறாள். வைணவ உலகில் ஆண்டாளைப் போல, அக்காடிய இலக்கிய உலகில் அன்னா போற்றப்படுகிறாள்.

## கடவுளரின் சினம்

நாரம் சின் காலத்தில் நைப்பூர் தாக்கப்பட்டது. இக்கூர் (Ekur) கோயிலை நாரம் சின் இடித்தெறிய முற்பட்ட போது, என்லில் (பெல்), கடவுள் தலையிட்டு அக்கோயிலைக் காத்தான். அதன் விளைவாக, அனுன்னகி (Anunnaki) தலைமையிலான எட்டு தெய்வங்கள் ஒன்று சேர்த்து பேசி, அக்காடியப் பேரரசுக்கு அளித்து வந்த ஆதரவை விலக்கிக் கொண்டனர். மேற்கண்ட வாறு, ஒரு குறிப்பு காணப்படுகிறது. அச்செய்திகள் மூலம், நாரம் சின், கடவுளரின் சினத்துக்குட்பட்டான் என்றும், அவனது ஆட்சிக்காலம் இறுதிக் கட்டத்துக்கு வந்து விட்டது என்றும் அச்செய்தி கூறுகிறது.

*முதன் முறையாக நகரங்கள் தோற்றுவிக்கப்பட்டு*
*உருவாக்கப்பட்டதிலிருந்து,*
*மிகப் பரந்த வேளாண் நிலங்கள் விளைச்சலைத் தரவில்லை,*
*சமவெளிகளில் பறவைகள் காணப்படவில்லை,*
*கனிமரங்கள் பொய்த்து மதுவைத் தரவில்லை,*
*கூடிய மேகங்கள் மழையைப் பொழியவில்லை,*
*ஒரு செக்கலின் எண்ணெய் நான்கு செக்கல்களாயிற்று,*
*தவசங்களின் விலை பலமடங்கு உயர்ந்தது,*
*அவ்வாறே நகரங்களிலும் சந்தைகளிலும் விற்கப்பட்டன,*

*பரண் மேல் நின்று தூங்கியவன், அங்கேயே மாண்டான்,*
*வீட்டில் மாண்டவனை புதைப்பார் யாருமில்லை,*
*மக்கள் பசியால் மடிந்து கொண்டிருந்தனர்[81].*

மேற்கண்ட கவிதை, “அக்காடு மேல் சமயம்” என்றவாறு சொல்லப்பட்டுள்ளது. பல செய்திகள் நம்பகத் தன்மையற்ற தொன்மக் கதைகள் போல் உள்ளன. சார்கோனின் பிறப்பு கற்பனைச் செய்தியாக உள்ளது. அண்மையில், ஓமான் நாட்டில் நடைபெற்ற அகழ்வாய்வுகளில், பருவ நிலை மாற்றங்களால் ஏற்பட்ட வறட்சி காரணமாக, அக்காடியப் பேரரசு அழிந்தது (கடவுளால் அல்ல) என்று முடிவு செய்யப்பட்டது.

## முன்னேற்றங்கள்

அக்காடியர் ஆட்சிக் காலத்துச் சிலையொன்று, அக்காலச் சிற்பக் கலைஞனின் தொழில் நுட்பத்துக்குச் சான்றாக உள்ளது. இரிமுஷ் காலத்தில், ஒரு சிற்பக் கலைஞன், இரிமுஷ் சிலையை வடித்துள்ளான். அதுவரை அறியப்படாத தொழில் நுட்பத்துடன் அச்சிலை காணப்படுகிறது. இரிமுஷ், என்லில் கடவுள் முன் நின்று கொண்டு, தனது நல்லறங்கள் பற்றிய அறிக்கையை அக்கடவுள் முன் ஓதிக் கொண்டிருப்பது போல அச்சிலை உள்ளது. முற்றிலும் செம்பால் வடிக்கப்பட்ட அச்சிலை, முதலில் மெழுகினால் வார்ப்பெடுத்து, வார்ப்பின் அடிப்படையில் அச்சிலை உருவாக்கப்பட்டுள்ளது. வார்ப்பெடுத்து சிலை வடிக்கும் தொழில் நுணுக்கம் அதுவரை, உலகில் அறியப்படவில்லை. தற்காலத்தில் சிலை வடிக்கப்படும் முறைக்கு (Plastor & method) அதுவே முன்னோடியாகவும் கருதப்படு கின்றது[82].

அக்காடியப் பேரரசில், ஆறுகள் நீர்வழிப் போக்குவரத்துக்குப் பெரிதும் பயன்படுத்தப்பட்டன. அதுவரை இல்லாத அளவில், சாலைகள் போக்கு வரத்துக்காக நாடெங்கும் போடப்பட்டன. குறிப்பாக, சாலைகள் வழியே நாள்தோறும் கடிதப் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. (Postal Service). அலுவலர்கள், தொடர் பயணங்கள் மூலம், கடிதங்களைக் கொண்டு சேர்த்தனர். சுமேரியர் காலத்திலும் கண்டிராத முன்னேற்றம் இதுவாகும். மேலும் சாலைகள் போடப்பட்டதால், விரைவாகப் படைவீரர்களை நடத்திச் சென்று, போர் நடவடிக்கைகளை மேற்கொள்ள வழி காணப்பட்டது. கடிதங் களில், அது அனுப்பப்படும் இடத்தின் பெயரும் முகவரியும், அனுப்பியவரின்

பெயரும் முகவரியும் பொறிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு கடிதத்திலும், சார்கோனின் அரச முத்திரை பதிக்கப்பட்டது.

நிலங்களும் வீட்டு மனைகளும் அளக்கப்பட்டு பதிவு செய்யப்பட்டிருந்தன. குறிப்பிட்ட இடத்தின் நீளம், அகலம், பரப்பளவு, சந்தை மதிப்பு, உரிமையாளரின் பெயர், அவர் செலுத்த வேண்டிய வரி ஆகிய தகவல்கள் அந்தப் பதிவில் இருந்தன. (Cadastral Survey) வானியல் தொடர்பான செய்திகளைத் தொகுத்து நூல் நிலையங்களில் வைக்கப்பட்டன. சோதிடக் கலை பற்றிய நூல்களும் அந்நூல் நிலையத்தில் இடம் பெற்றிருந்தன. சார்கோன் மிகப் பெரிய நூல் நிலையம் ஒன்றை உருவாக்கியிருந்தான் எனக் குறிப்புகள் கூறுகின்றன. நாள் காட்டி பயன்படுத்தப்பட்டது, அடுத்து வரும் ஆண்டின் பெயர், சார்கோன் பட்டமேற்ற ஆண்டு, மன்னனின் ஆட்சியில் நிகழ்வுற்ற சிறப்பானவை, குறிப்பிடப்பட்டிருந்தன. நிலவை அடிப்படையாகக் கொண்ட நாள் காட்டி பயன்படுத்தப்பட்டது. மதிமறை நாள், மதி நிறை நாள் பற்றிய குறிப்புகளும் இடம் பெற்றிருந்தன. கோள்களையும் விண்மீன்களையும் இனம் கண்டு, அவற்றிற்குப் பெயரிட்டிருந்தனர். விண்மீன்கள், கோள்களின் நகர்வுகள் பற்றி அறிந்து, அதற்கேற்ற சோதிடப் பலன்கள் சொல்லப்பட்டன. அரசாங்க நிகழ்வுகள், போர்களைத் தொடங்குவது போன்றவற்றிற்கு, நல்ல நாள் பார்த்து சோதிடர்கள் குறித்தனர். மழை பெய்யவும், ஆற்றில் நீர் பெருகவும், விளைச்சல் அதிகரிக்கவும், பூசைகள் செய்யப்பட்டன. அறிவியலோடு மூடநம்பிக்கைகளையும் வளர்த்தனர்.

## அடிக்குறிப்புகள்

56. Taagepera, Rain, "Size and Duration of Empires, Growth - Decline Cureves, 3000 - 600 B.C., 1978, pp.180-195.

57. Akkadian - Sumer Empire : The Empire united all the Akkadian and Sumerian speakers for the first time under one rule. Akkadian Empire controlled Mesopotamia, modern Iraq, Kwait, North east Syria, South east Turkey, the Levant (Modern Syria and Lebanon), Eastern and Southern parts of Anatolia (modern Turkey), Dilmun and Meluhha (modern Bahrain and Oman) in the Arabian peninsula.
- Mish, Frederick, C., Editor in chief, "Akkad", Websiter's Ninth Collegiate Dictionary, Spring field, 1985.

58. Excavations at Tell Mozan (ancient Urkesh) brought to light a sealing of Taram - Agade, a previously unknown daughter of Naram - Sin, who was possibly married to an unidentified enden (ruler) of urkesh.
- Buccellati and Marilyn, "Taram Agade".

59. The Excavators at nearby Tell Leilan (ancient shekhna) have used the results from their investigations to argue that the Akkadiyan Empire came to an end due to abrupt climate change. The impact of this climate event on Mesopotamia in general and on the Akkadian Empire in particular, continued to be notly discussed.
-Weiss, H., "The Genesis and Collapse of Third Millennium North Mesopotanian Civilization, 1993., and Winner Malcolm, H., The Interaction of Climate change and Agency in the Collapse of Civiliztion, 2014.

60. புறநானூறு, 256 ; 1

61. மேலதே, 34 : 16.

62. பரிபாடல் திரட்டு, 8 : 4

63. சிலப்பதிகாரம், 20 : 46

64. தொல்காப்பியம், 27 : 34

65. நற்றிணை, 56 : 3

66. பெருங்கதை, 117 : 242.

67. One Legend related to Sargon in Assyrian tunies say that,
"My mother was a changing, my father I knew not. The brothers of my father loved the hills. My city is Asurpiranu (the wilderness herb fields) which is situated on the banks of Euphrates. My changeling mother conceived me, in secret and bore me. She set me in a basket of bushes, with bitumen she sealed my lid. She cast me into the river which rose not over me. The river bore me up and carried me to Akki, the drawer of water. took me as his son and reared me. He appointed me as his gardener. While I was gardener, Ishtar granted me her love and four and (fifty?) ....... Years I exercised kingship".
- Roux Georges, "Ancient Iraq", Penguin, 1982.

68. நாலடியார், 35 : 1.

69. குறுந்தொகை, 159 : 4.

70. Cyprus and Copper : Copper is a red brown metal, derived from,
Seppu (Tamil) → Kapara (Akkadian) → Kepra (Greek) → Cuprum (Latin) → Copper (English).
Cyprus was the chief source of copper, named after the metal.
- Concise Oxford, P.315.

71. Dalley proposes that these sources may have originally referred to Sargon II of Assyria, rather than Sargon of Akkad.
- "Babylon as a Name for Other Cities Including Nineveh", 2005, PP.25 - 33.

72. Steibing Jr.H.William, "Ancient Near Eastern History and Culture", University of New Orleans, 2009, P.71.

73. Aridity : It has recently been suggested that the regional decline at the end of the Akkadian period (and of the first intermediary Period that followed the ancient Egyptian Old Kingdom) was associated with rapidly increasuig aridity and failing ranifall in the region of the Ancient Near East, Caused by a global centennial- seale drought.
 - Richard A.Kerr, "Sea Floor Dust shows Drought Felled Akkadian Empire, 1998, PP.325-326.

74. There was an influence of the North Atlantic Oscilliation on the stream flow of the Euphrates and Tigris at this time which led to collapse of the Akkadian Empire.
 - Peter B.deMenocal, "North Atlantic Infulence on Tigris and Euphrates streamflow", Vol.20, Issue 8, 2000, PP.853 - 863,

75. The collapse of rain fed agriculture in the upper country meant the loss to Southern Mesoptamia of the agrarian subsidies which had kept the Akkadian Empire solvent. Water levels within the Tigris and Euphrates made the Empire solvent. Water levels within the Tigris and Euphrates fell beneath the level of 2600 B.C., and although they established for a time during the following Ur, III period, rivalries between pastoralists and farmers increased. Attempts were undertaken to prevent the former from herding their flocks in agricultural land such attempts led to increased political instability meanwhile severe depression occurred to re-establish demographic equilibrium with the legs favourable conditions.
 - Christie, Peter ; The Curse of Akkad : Climate Upheavels that Rocked Human History Annick Press, 2008 ; pp.31.4.8.

76. As Sargon extended his conquest from the "Lower Sea" (Persian Gulf) to the "Upper Sea"
 (Mediterranean), it was felt that he ruled" the totality of the lands under heaven", or "from sunrise to sunset", as contemporary texts put it.
 Naram - Sin, Sargon's grandson, this went further than with Sargon, with the king not only being called "Lord of the Four Quarters" (of the earth), but also elevated to the ranks of gods, with his own temple establishment.
 - Leick, Gwendolyn ; Mesopotamis : Invention of the City, Penguin, 2001.

77. S.N.Kramer, Quoted in Charles Keith Maisels, "The Emergence of Civilization", 1990, P.179.

78. In spite of surplus agricultural products, Akkad was short of almost everything else, particularly metal ores, timber and building stone, all of which had to be imported. The spread of the Akkadian state as for as the "Silver Mountain" (possibly the Taurus mountains), the Cedars of Labanon and the copper deposits of Magan (Oman) was largely motivated by the goal of securing control over these imports.
 - Bourke, stephen, "The Middle East : The Cradle of Civilization Revealed, Thames and Hudson, 2008, P.89.

79. Sumerian and Akkadian : During the 3rd millennium B.C., there developed a very intimate cultural symbosis between the Sumerians and the Akkadians, which included widespread bilingualism. The influence of Sumerian on Akkadian (vice versa) is evident in all areas, from lexical borrowing on a massive scale, to syntactic, morphological and phonological convergence. This has prompted scholars to refer to Sumerian and Akkadian in the third millennium as a sprachbund. Akkadian gradually replaced Sumerian as a spoken language some - where around the turn of the 3rd and the 2nd millennium B.C., (the exact dating being a matter of debate), but Sumerian continued to be used as a sacred, ceremonial, literary and scientific language of Mesopotamia until the first century A.D.
- Sumerian Language, Encyclopedia Britannica.

80. "As a poet, prineess and priestess, she was a personality, who set standards in all three of her roles for many succeeding centuries".
- Enheduanna, The Exaltation of Inanna, by William W.Hallo, 1979.

81. For the first time sluice cities were built and founded,
The great agricultural traets produced no grain,
The inundated tracts produced no ostriches,
The irrigated orchards produced neither wine nor syrup,
The gathered clouds did not rain,
At that time one Shekel's worth of oil was only one - half quart,
One Shekel's worth of grain was only one - half quart,
These sold at such prices in markets of all the cities,
He who slept on the roof died on the roof,
He who slept in the house, has no burial,
People were flailing at themselves from hunger.
- Marshal, Michael, "Ruined climate may have had a far more profound impact on past societies than we realised". Vol. 215, New Scientist, 2012.

82. The copper statue of Rimush, stood and reifed his virtues before the god, cast with the lost wax method, testifies to the high level of skill that craftsmen achieved during the Akkadian period.
- Van de Mieroop, M., A History of the Ancient Near East, B.C., 3000 - 323, Malden, 2007, pp.68-69.

# 7. அசீரியத் தமிழர்

அசீரியர்கள், பழங்காலத்தில் குடியேறிய மக்கள் என்றும், செமிட்டிக் இனத்தின் ஒரு கிளையென்றும் சொல்லப்படுகின்றனர். பொதுவாக, மெசபத் தோமியாவிலும், அந்நாட்டைச் சுற்றியுள்ள நாடுகளின் மக்களையும் செமிட்டிக் மக்களின் கிளை மரபினர் என்று கூறிவருகின்றனர். அசூர் என்பவன், நாகன் என்ற நோவாவின் பெயரன் என்றும் மேற்கோள் காட்டுகின்றனர். இது எந்த அளவிற்கு உண்மையென்றும் தெரியவில்லை. அசீரிய மக்கள், அடிப்படையில் இரண்டு காரணங்களால் மாறுபடுகின்றனர். அசீரியரைத் தவிர்த்த மற்ற மெசபத்தோமிய மக்கள், (சுமேரியர் உட்பட) நிலவைக் கடவுளாக ஏற்றுக் கொண்டிருந்தவர்கள். அசீரியர்களோ, சூரியனைக் கடவுளாக வழிபட்டவர்கள். செமிட்டிக் மக்கள் வேளாண்மைத் தொழிலை மேற்கொண்டிருந்ததாகச் சொல்லப்படுகிறது. அசீரிய மக்களின் முன்னோர் கால்நடை வளர்ப்பில் ஈடுபட்டிருந்தவர்கள். இந்த இரண்டு வேறுபாடு களையும் ஆய்வாளர்கள் கவனத்தில் கொள்ளவில்லை.

கி.மு.2500 முதல், கி.மு.599 வரையிலும், மெசபத் தோமியாவின் கிழக்குப் பகுதியை ஆண்டிருந்தவர்களாக அசீரியர்கள் கருதப்படுகின்றனர். தன்னாட்சி செய்து வந்த அசீரியர்கள், மேற்கண்ட கால அளவில், இடையிடையே ஆட்சியையும் இழந்து, மீண்டும் ஆட்சியைப் பிடித்துள்ளனர். ஏறக்குறைய 2000 ஆண்டுகள், அசீரியரின் ஆளுமை, மெசபத்தோமி யாவில் அறியப்பட்டுள்ளது. கி.மு.ஏழாம் நூற்றாண்டு அசீரியர்களின் ஆட்சி முடிவுற்ற காலமாகக் கருதப்பட்டாலும், கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல், கி.பி.மூன்றாம் நூற்றாண்டு வரையிலும் கூட அறியப்படுகின்றனர். அக்கால அளவில், பார்த்தீயன் பாரசீக ஆட்சிகளின் கீழ் அசீரியா இருந்தது. கி.பி.முதல் நூற்றாண்டில், கிறித்துவ சமயம் தோற்றுவிக்கப்பட்ட போது, கிறித்துவ சமயத்தின் முதல் தலைமையிடமாக, அசீரியா விளங்கியது. சிரியன் திருச்சபை என்பது, உரோமைத் திருச்சபைக்கு முன்பே அறியப்பட்டதாகும். அங்கிருந்து தான் கிறித்துவம் உலகெங்கும் பரவியது.

மெசபத்தோமியாவின் வடக்குப் பகுதியில் (தற்கால வடக்கு ஈராக்), தைகிரீஸ் ஆற்றை மையப்படுத்தி, அசீரியத் தலைமை இடம் இருந்தது. வடகிழக்கு சிரியா, தென் கிழக்குத் துருக்கி, ஈரானின் வடமேற்கு எல்லை ஆகிய பகுதிகளை உள்ளடக்கியதாக அசீரிய அரசின் ஆட்சிப் பகுதிகள் இருந்தன. அசீரியர்களின் ஆட்சி பல முறை எழுவதும் வீழ்வதுமாகவே இருந்தது. மெசபத்தோமிய நாகரிகத்தை உலகிற்கு எடுத்துக்காட்டாக உயர்த்தியதில், சுமேரிய, பாபிலோனிய, அக்காடிய, அசீரிய அரசுகளின் பங்கு நிறைய உண்டு. அசீரிய அரசின் ஆட்சிக் காலத்தில், தொழில் துறையிலும், தொழில் நுட்பத் துறையிலும், அறிவியல் துறையிலும், கலைகளுக்கான துறைகளிலும் பலவாறான முன்னேற்றங்கள் அறியப் பட்டுள்ளன. அக்காலத்தில் மிகப் பெரிய நூல்நிலையம், அசீரியர்களால் உருவாக்கப்பட்டது. அசீரிய ஆட்சி உச்சத்தில் இருந்த போது, சைப்ரஸ்தீவு முதல் ஈரான் வரையில் மேற்குக் கிழக்கிலும், ஆர்மீனியா, அசர்பைஜான் முதல் அரேபியத் தீபக்குறை, எகிப்துவரை, வடக்குத் தெற்கிலும், அசீரிய அரசு விரிவடைந்திருந்தது. வடக்கு ஆப்பிரிக்காவின் சகாரா, லிபியா வரை கூட, எல்லை விரிவடைந்திருந்தது.

அசீரியன் (Assyrian) என்பது, ஐரோப்பியர்கள் சுட்டிய பெயராகும். அதன் தலைநகரங்களாக, அசூர் என்ற நகரமும், சில காலங்களில் நினிவே நகரமும் இருந்தன. தொடக்கத்தில், மெசபத் தோமியாவின் நகர அரசுகளில் ஒன்றாகவே அசீரிய அரசு இருந்தது. (கி.மு.2600). அடுத்தடுத்த நூற்றாண்டுகளில் அசீரிய மன்னர்களாக அறியப்பட்டவர்கள், கால்நடை களை வளர்த்து வந்த இடையர் குலத்தலைவர்களே. கி.மு.2400 முதல், அக்காடிய அரசன் சார்கோன், அசீரியாவைத் தன் ஆட்சியில் இணைத்துக் கொண்டான். அசீரிய - சுமேரிய மொழி பேசிய மக்களையும் தன் ஆட்சியில் இணைத்துக் கொண்டு, அவர்கள் தரப்பில் எழும் எதிர்ப்புகளையும் குறைத்துக் கொண்டான். அக்காடிய ஆட்சிக் காலம் வரை (கி.மு. 2334 - 2154) அந்நிலையே நீடித்து வந்தது.

அக்காடிய அரசின் வீழ்ச்சிக்குப் பின், மெசபத்தோமியாவில் பல நகர அரசுகள் வலுப் பெற்றன. அசீரிய அரசும் தன் பங்கிற்கு, தன்னை நிலை நிறுத்திக் கொண்டது. அக்காலம் முதல், கி.பி.மூன்றாம் நூற்றாண்டு வரை, அசீரிய இனம் வரலாற்றில் தனியொரு இனமாக இடம் பெற்றது. பல முறை மேட்டு அரசு (Medes), அக்கமேனிய அரசு (Achamenian), செலூசிட் அரசு (Selucid), பார்தீய அரசு (Parthiyan), உரோமானிய அரசு (Roman), சசானிய

அரசு (Sasanian), இசுலாமிய அரசு (Muslim), போன்ற அரசுகளின் காலங்களில் அசீரிய மக்கள் பிறர் ஆட்சிக்குட்பட்டிருந்த போதிலும், அம்மக்கள் தங்களது இன, மொழிகளின் தனித் தன்மைகளை இழந்துவிட வில்லை. பிற்காலத்தில் (கி.பி.ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகு), அசீரிய மக்கள், தங்கள் முன்னோர்களின் நாட்டிலேயே சிறுபான்மையினராக்கப்பட்டனர். தங்கள் பழைய சமயக் கொள்கைகளைத் தொடர்ந்து கடைப்பிடித்து வந்தனர். தற்காலத்திலும், அவ்வின மக்கள், தங்கள் பழமையான மரபுகளுடன் வாழ்ந்து வருகின்றனர்.[83]

| | | |
|---|---|---|
| அரசு | : | அசீரியன் |
| தலைநகரங்கள் | : | அசூர், நினிவே |
| மொழிகள் | : | அக்காடியம், சுமேரியம், அறமாயிக். |
| சமயம் | : | பழைய மெசபத்தோமியச் சமயம் |
| அரசின் தன்மை | : | முடியாட்சி |
| சிறப்பான மன்னர்கள் | : | புழூர் அசூர் (கி.1975 க்கு முன்) - முதல் மன்னன் அசூர் பெல் கலா (கி.மு.1073-1056) கடைசி |
| ஆட்சித் தொடக்கம் | : | கி.மு.2600 |
| ஆட்சி முடிவு | : | கி.மு.612 |
| அசீரியாவின் இன்றைய பகுதிகள் | : | சிரியா, துருக்கி, ஈராக். |

அசீரியா என்பது தற்கால ஆங்கில ஆய்வாளர்கள் சூட்டிய பெயராகும். அக்காலத்தில் சுவர்த்து (Subartu), அழகினம் (Azuhinam), அசூர் என்றவாறு சொல்லப்பட்டது. அசூராயு (Assurayu), அதூரியா (Atouria), அதோர் (ஸ்டிராபோ அவ்வாறு கூறுகிறார். சிரியா (கிரேக்கம்), அசீரியா (லத்தீன், ஆங்கிலம், அசோரி ஸ்தான் (Asoristan -பாரசீகம்) என்றவா றெல்லாம் பதிவுகளில் உள்ளன. தற்காலத்தில் அறமாயிக் மொழி பேசும் கிறித்துவர்கள் வாழும் இடங்களான வடக்கு ஈராக், வடகிழக்கு சிரியா, தென்கிழக்கு துருக்கி, வடமேற்கு ஈரான் ஆகியவை, பழைய அசீரிய மக்களின் மரபினர் வாழும் பகுதிகள் ஆகும்.

**பழைய வரலாறு**

கி.மு. 7000 ஆண்டுகளில், அசீரியப் பகுதிகளில் மக்கள் வாழ்ந்திருந்தனர் என்பதற்கானச் சான்றுகள் கிடைத்துள்ளன. தெல் அசுனா (Tell Hasuna), என்ற இடத்திலுள்ள குகைகளில், மக்கள் வாழ்ந்திருந்த தற்கானத் தடயங்கள் கிடைத்துள்ளன. அம்மக்கள், அசீரிய மக்களின் முன்னோர்களா என உறுதிப்படுத்த இயலவில்லை. கி.மு.3500 - 3000 ஆண்டுகளிலேயே அசீரியர் என்ற இனம், மெசபத்தோமியாவில் அறியப்படுகிறது. அதற்கு முன்பு அவர்கள் எங்கிருந்தார்கள், அவர்களின் முன்னோர்கள் யாவர் என்பது பற்றிய செய்திகள் எவையும் இல்லை. அசீரியர்கள் மெசபத்தோமியாவில் அறியப்பட்ட காலங்களில், சுமேரியர்கள் ஆட்சிப் பொறுப்பில் இருந்தனர். சுமேரிய இனத்தோடும் மொழியோடும் அசீரிய இனம் கலந்து வாழ்ந்திருந்தனர். சுமேரிய மற்றும் அசீரிய மொழிகளையும் அவர்கள் பேசி வந்தனர். சுமேரியர்கள் நிலவை வழிபட்டு வந்தவர்கள், அசீரியர்கள் சூரியனை வழிபட்டவர்கள். சுமேரியர்கள் வேளாண் மக்கள். அசீரியர்கள் கால்நடைகளை மேய்த்து வளர்ப்பவர்கள்.

கி.மு.3000 ஆண்டுகளில், அக்காடிய இனமும், சுமேரியர்களுடன் கலந்தது. சுமேரியம் - அக்காடிய மொழிகளும் கலந்தன. செமிட்டிக் மக்களும், சுமேரிய மக்களும் இரண்டு மொழிகளையும் பேசிவந்தனர். அது போல் மெசபத்தோமியாவின் கிழக்குப் பகுதியில் அசீரியரும் சுமேரியரும் தம் மொழியோடு மற்றதையும் பேசிவந்தனர். அக்காடியர், அசீரியர் ஆகிய இரு இனத்தாகும் சுமேரிய மொழியை அறிந்திருந்தனர். மெசபத்தோமியா முழுவதும் சுமேரிய மொழி பரவலாக அறியப்பட்டிருந்தது.

கி.மு. 2600 ஆண்டுகளில், அசூர், நினிவே போன்ற நகரங்கள் சிறப்புக்குரிய நகரங்களாக இருந்தன. தைகிரீஸ் ஆற்றங்கரையில் மேலும் பல நகரங்கள் அறியப்பட்டிருந்தன. அக்காலத்தில் அந்நகரங்கள் அனைத்தும் சுமேரியரின் ஆட்சியின் கீழ் இருந்தன. அவை தன்னாட்சி நகராட்சிகளாக அமைந்திருக்கவில்லை. கி.மு.2284 முதல் கி.மு.2654 ஆண்டுக்கால இடைவெளியில், அசீரிய அரசு தோற்றுவிக்கப்பட்டிருக்க வேண்டும் என, கிரேக்க - உரோம எழுத்தாளர் ஜீலியஸ் ஆப்ரிக்கானூஸ் கருதுகிறார். விவிலியம் தரும் செய்திகளின்படி, அசீரியர்கள், நாகன் என்ற நோவாவின் பெயரன் அசூர் என்பவனின் வழிவந்த மக்கள் என்று கருதப் படுகின்றனர். விவிலியம் தரும் நேவாவின் மக்கள், பெயரன்கள் பெயர்கள் நாற்பதுக்கும் மேல் உள்ளன. அவர்கள் வரலாற்று மாந்தர்களே

என்பதற்கானச் சான்றுகள் எவையுமில்லை. வெள்ளக் காலத்துக்குப் பிறகு, எந்த வரலாறும் அறியப்படாத நிலையில், விவிலியம் மட்டுமே சில தகவல்களைத் தந்துள்ளதால், அதன் அடிப்படையில், ஆய்வாளர்கள், வரலாற்றை அறிய முயன்றுள்ளனர். அந்த நிகழ்வுகளும், சுமேரியர் வழியில் வந்த மரபுச் செய்திகளாகவே கருதப்படுகின்றன. கி.மு.12000 ஆண்டுகளுக்குப்பின் நிகழ்வுற்ற செய்திகள், கி.மு.1250 ஆண்டுகளில் தான் பதிவு செய்யப்பட்டுள்ளன. நீண்ட இடைவெளியில், அவை பல மாறுதல் களுக்கும் உள்ளாகி இருக்க வேண்டும். விவிலியம் தரும் செய்திகளில், பல வரலாற்று நிகழ்வுகளுக்கான ஒளிக்கீற்றுகள் தென்படுகின்றன என்ற அளவில் மட்டுமே அவற்றை நோக்க இயலும். அதனாலேயே, மேலை நாட்டு ஆய்வாளர்களால், நடுத்தரைக் கடலைச் சுற்றி வாழ்ந்திருந்த அக் காலத்து இனங்களைப் பற்றித் தெளிவான விளக்கங்களைத் தர இயல வில்லை. அவர்கள் வகுத்துக் கொடுத்த மொழிக் கொள்கை, அவர்கள் காலத்தில் (கி.பி.16 ஆம் நூற்றாண்டு) சரியெனக் கருதப்பட்டது. அக் கொள்கையில் கூட, விடை தெரியாத அளவில் பல கேள்விகள் இன்றும் உள்ளன.

அந்த அளவில் அசீரியர்கள், வெள்ளக் காலத்துக்குப்பிறகு மெசபத் தோமியாவில் குடியேறியவர்களா அல்லது பிற்காலத்தில் குடியேறியவர்களா என்பதை உறுதியாகக் கூற இயலவில்லை. பாபிலோனியர்கள் தாம் முதலில் குடியேறிய மக்கள் என்று மொழிக் கொள்கை கூறி, அவர்களை செமிட்டிக் மக்கள் என்று கூறுகிறது. எபிரேயர்களும், போனீசியர்களும் செமிட்டிக் மக்களே என்று கூறப்பட்டாலும், கி.மு. 2500 ஆண்டுகளுக்கு முன்பு, மெசபத்தோமியாவில் அவர்களைப் பற்றிய வரலாறு அறியப்படவில்லை. சுமேரிய மொழி மெசபத்தோமியா முழுவதும் ஏறக்குறைய 2500 ஆண்டுகள் பேசப்பட்டு வந்ததால், மெசபத்தோமியாவில் குடியேறிய பிற்காலத்தவரின் மொழிகளிலும் சுமேரிய மொழியின் தாக்கங்கள் உணரப்பட்டுள்ளன. எபிரேயமும், போனீசியமும் செமிட்டிக் மொழிகள்தான் என்று மொழிக் கொள்கை கூறினாலும், அவர்கள் கி.மு.2500 ஆண்டுகளில் தான் மெசபத் தோமியாவில் குடியேறியதற்கான தரவுகள் அவர்களது வரலாற்றில் காணப்படுகின்றன. எனவே, அசீரியர்களின் வரலாறும், மேலை நாட்டவர் கூறியுள்ளதைப் போன்று, உண்மையான வரலாறாக ஏற்க இயலவில்லை. அசீரியர்களைப் பற்றிய வரலாறு, மறு ஆய்வு செய்யப்பட வேண்டியுள்ளது.

அசீரியர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டபின் அறியப்படும் வரலாற்றுக்கு ஏறக்குறைய சான்றுகள் உள்ளன. அவர்களுடைய முன் வரலாறு, மறு ஆய்வு நோக்கில் பின் வரலாற்றுடன் இணைந்து இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. விவிலியக் கூற்றுப்படி, நாகன் என்ற நோவாவின் மகன் வயிற்றுப் பெயரான அசூர் என்பவன் சொல்லப்படுகிறான். ஏறக்குறைய மெசபத்தோமிய பழங்குடிகளின் முன்னோர்கள் அனைவரும், விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ளனர். கிரேக்கர்கள், அனதோலியர், இத்தியர், அமோரியர், குடியர், எபிரேயர், பாபிலோனியர், போணீசியர், உகாரியர், அராபியர், எத்தியோப்பியர், எகிப்தியர், ஆப்ரிக்கர் என்று விவிலியம் கூறும் முன்னோர்கள் பட்டியல், நோவா என்ற நாகன் என்பவனுடன் தொடர்பு கொள்கின்றன. இனங்கள் அனைத்தையும் விவிலியத்தில் இணைக்க வேண்டும் என்ற நோக்கில் சேர்க்கப்பட்டனவா என்ற நோக்கிலும் சிந்திக்க வேண்டியுள்ளது. இந்த இனங்கள் விவிலியத்தோடு, கி.மு.1250 அண்டுகளில் இணைக்கப்பட்டன என்பது உறுதி செய்யப்பட்டுள்ளதால், அனைத்து மக்களையும் ஒற்றுமைப்படுத்தும் நோக்கில் எழுதப்பட்டதா என்றும் சிந்திக்க வேண்டியுள்ளது. அக்காலத்தில், மோசே என்ற எபிரேயத் தலைவனால் இச்செய்திகள் பதிவு செய்யப்பட்டன எனக் கருதப்படுகிறது. அவனுடைய கூற்று உண்மையானதா என்பதை அப்போது எவரும் ஆய்வு செய்திருக்கவில்லை.

கி.பி.16 ஆம் நூற்றாண்டில் முதன் முதலில் மொழிகள் ஆய்வு செய்யப்பட்டபோது இருந்த சூழ்நிலையை விட, தற்காலத்தில் பல்வேறு துறைகளில் முன்னேற்றங்கள் அறியப்பட்டுள்ளதால், மொழிகள் பற்றிய ஆய்வும் முன் எப்போதையும் விட அறிவியல் சார்ந்து முன்னேறியுள்ளது. அந்த வகையில், மேற்சொல்லப்பட்ட இனங்கள் பேசிய மொழிகள் பற்றிய குறிப்புகள் பல அகழ்வாய்வுகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அம்மொழி களில் காணப்படும் சொற்கள் பலவும், மேற்கண்ட இனங்களின் மொழிகளில் கலந்து காணப்படுகின்றன. குறிப்பாக எபிரேயம், அக்காடியம், அசீரியம், அரபு, சுமேரியம் போன்ற மொழிகளின் குறிப்புகள் ஏராளமாகக் கிடைத் துள்ளன. அவற்றை ஆய்வு செய்கையில், இம்மொழிகளுக்கிடையே, பலவாறான தொடர்புகள் இருப்பதை உணர முடிகின்றது. அந்த வகையில், கி.பி.16 ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்ட மொழிக் கொள்கையில், முதன் மொழி என்று சொல்லப்பட்ட மொழியின் கிளை மொழிகளே மேற்கண்ட மொழிகள் என்பது உண்மையென்றே தோன்றுகிறது. அந்த நோக்கில்

அசீரியர்களைப் பற்றிய செய்திகளை ஆராயலாம். அசூர் என்ற சொல்லின் மூலம் எம்மொழியில் உள்ளதென ஆய்வாளர்களால் கூற இயலவில்லை. அது சுமேரிய மொழிச் சொல்லாக இருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் கருத்து84.

சுன் என்ற தமிழின் வேர்ச்சொல் நீண்டு,

சுன் – சுர் – சூர் என்றானது,

சுன் – சூர் ஆகிய இரண்டு சொற்களும் ஒரு பொருளையே குறித்தன.

சுள் – குறிப்பிட்ட ஓரிடத்தில் சுடுதல்

சுள்ளை – மட்கலத்தைச் சுடும் இடம். சூளை.

*"புகை அகல் இரு விளம்பின் ஊன்றும் சூளை"*[85]

சுர் – சுரம் : சிவப்பு, செம்மை,

சுரர் : ஒளி பொருந்திய தேவர்.

செம்மை நிறமானத் தம்மைத் தேவர் என்றும், (சுரர்)

அசுரர் : கறுமை நிறமானவரை அசுரர் என்றும் ஆரியர்கள் கூறிக்கொண்டனர்.

சுரம் : வெப்பத்தால் உடல் சூடாதல்.

சுர் : தெய்வம், தீ, நெருப்பு

*"சூர் நவை முருகன்"*[86]

சுர் – சூர் – சூரியன் : வெப்பமான தீப்பிழம்பு.

சூரியன் தமிழ்ச் சொல்லே. சூரியன் – சூர்யா எனச் சமற்கிருதத்தில் திரிந்தது.

சூரன் : சூரியன். "காதல் சூரனை அனைய சூரா" [87]

சூர் என்ற சொல், தமிழ்ச் சொல்லே என்பதை மேற்கண்ட எடுத்துக் காட்டுகளால் அறிக.

அசூர் என்பது, அச்சூர், அந்தச் சூரியன் என்றவாறு, அசூர் எனச் சுருங்கிற்று.

அசூர் என்பது, அசீரியர்களின் தெய்வத்தையும், அவன் குடியிருந்த கோயிலையும் குறித்தது. (Asur - Sun god). வணங்கும் கடவுளின் பெயரால், மக்களும் அழைக்கப்பட்டனர். மெசபத்தோமியாவில், சுமேரியர் அக்காடியர் உள்ளிட்டோர் நிலவையே வணங்கி வந்தனர். அசீரியர்கள் சூரியனை வழிபட்டதால் சூரிய குலமாயினர், சுமேரியர் சந்திர குலமாயினர்.

தமிழ் நாட்டிலும் சூரிய குலம், சந்திர குலம் அறியப்பட்டுள்ளது. குமரிக் கண்டத்தில் நிலை பெற்றிருந்த பாண்டிய அரசு, மீனையும் செங்கோலையும்

அரசுச் சின்னங்களாகக் கொண்டிருந்தது. மீன் வளர்ச்சியைக் குறிப்பதாக, தற்கால ஆய்வாளர்கள் கருதுகின்றனர். பாண்டியர்கள், தங்களைச் சந்திர குலம் என அறிவித்துக் கொண்டனர். அதற்கான காரணங்கள் பல சொல்லப்பட்டாலும், உண்மையான காரணம் யாதெனில், வெப்ப மண்டலத்தில் வாழ்ந்திருந்த பாண்டியர்கள், தண்மை மிகுந்த குளிர்ந்த நிலவை விரும்பினர். குமரிக் கண்டத்தில், சோழ, சேர மரபுகள் அறியப்படவில்லை. ஆனால் நான்குடன் பாலையும் இணைந்த ஐந்து நிலங்கள் அறியப்பட்டிருந்தன. குமரிக் கண்டக் காலத்திலேயே தமிழகமும் நிலை பெற்றிருந்தது. பாலை நிலம் தமிழ்நாட்டில் அறியப்படவில்லை. வெள்ளப் பேரழிவுக்குப் பின், குமரிக்கண்டத்து மக்களில் உயிர் பிழைத்தோர், தமிழகத்தில் குடியேறினர்.

தொல் தமிழகத்தில் வேளாண்மை அறியப்பட்டிருந்தது. வேளாண் குடியில் தோன்றிய பாண்டியர்கள் தமிழகத்தை ஆண்டு வந்தனர். தங்கள் வேளாண் குடியைச் சேர்ந்தவர்களுக்கு தமிழகத்தின் மேற்குப் பகுதியைப் பிரித்துக் கொடுத்தனர். அவர்கள் சேரர்கள் எனப்பட்டனர். அவர்களும் சந்திர குலத்தவர்களே. மலையிலும் (குறிஞ்சியில்), முல்லையிலும் வாழ்ந்திருந்த மக்கள், குளிர்ப் பகுதிகளில் வாழ்ந்திருந்தவர்களாவர். அவர்கள் தங்களுக்கு வெப்பமும் சூடும் தரும் சூரியனை வழிபட்டு வந்தனர். அதன்படி, பாண்டியரும் சேரரும் சந்திர குலமாகவும், குறிஞ்சி முல்லை மக்கள் சூரிய குலமாகவும் அறியப்பட்டனர். பிற்காலத்தில், தங்கள் பகுதிகளில், குறிஞ்சி முல்லை மக்கள் உருவாக்கிக் கொண்ட சோழ அரசு, தன்னைச் சூரிய குலமாக அறிவித்துக் கொண்டது. தமிழகத்தில் மூன்று அரசுகளும் இரண்டு குலங்களாகப் பிரிந்தன. பாண்டியரும் சேரரும் பங்காளிகளானதால், தங்களுக்குள் திருமண உறவுகளைத் தவிர்த்துக் கொண்டனர். இரு மரபினரும், சோழர்களாகிய சூரிய மரபுடன் திருமண உறவுகளைக் கொண்டிருந்தனர். மூன்று அரசுகளும் தமிழ் நாட்டின் மூவேந்தர் என்று அழைக்கப்பட்டனர். பல்வேறு அதிகாரப் போட்டிகளால் ஒருவரையொருவர் எதிர்த்துப் போரிட்டுக் கொண்டனர்.

முருகன் என்ற மன்னன், மதுரையை ஆண்ட பாண்டிய மன்னனாகக் கருதப்படுகிறான். வேளாண் குடியில் பிறந்த முருகன், வேளாண் குடிப்பெண்ணான தேவயானியை திருப்பரங்குன்றத்தில் மணந்தான். மன்னனாக முடிசூடு முன், திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்ற மரபுப்படியே, முருகனின் திருணம் நடந்தது. (இப்போதும் திருப்பரங்குன்றத்தில்

இரு வேளாண் மரபினர், முருகன் மரபினராகவும், தேவானை இல்லத் தாராகவும் தம்மைக் கூறிக் கொள்கின்றனர். அவர்களின் இரு குடும்பங் களும் இணைந்து, திருப்பரங்குன்றத்தில் ஆண்டு தோறும் முருகன் - தேவயானித் திருமணச் சடங்குகளை நடத்தி வருகின்றனர்).

முருகன் ஏற்கனவே, குறிஞ்சி நிலத்துப் பெண்ணான வள்ளியை, காதல் திருமணம் செய்திருந்தான். அத்திருமணம் தற்செயலானது. பாண்டியர்களை, குறிஞ்சி - முல்லை நிலத்து மக்கள் அவ்வப்போது தாக்கி வந்துள்ளனர். இரு நிலத்தாருக்கும் இடையே போர்களும் நிகழ்ந்துள்ளன. குறிஞ்சி நிலத் தலைவனான சூரன் என்பவனே, முருகனுக்குப் பகைவனாக இருந்தான். சூரன் வலிமை வாய்ந்த போர்ப்படையைக் கொண்டிருந்தான். சூரன், வேங்கட மலைப்பகுதியில் ஆட்சி செய்து வந்ததாக, மரபுச் செய்திகள் கூறுகின்றன. சூரனை அவனது இருப்பிடத்திலேயே சென்று போரிட்டு வெல்ல முயன்ற முருகன் சூரனைத் தேடி குறிஞ்சிக்குச் செல்கிறான். அங்கு, தற்செயலாக வள்ளியைச் சந்தித்துத் திருமணமும் செய்து கொள்கிறான்.

முருகனுக்கும் சூரனுக்கும் நடந்த போர், தமிழகத்தின் ஆறு இடங்களில் நிகழ்வுற்றன. திருத்தணி, சுவாமி மலை, பழமுதிர்ச் சோலை, பழனி, திருப்பரங்குன்றம் ஆகிய இடங்களில் வெற்றி தோல்வியின்றி முடிந்தன. இறுதியாக திருச்செந்தூர் கடலில் நடந்த போரில், சூரன் தோற்கடிக்கப் பட்டான். போரில் அவன் இறந்ததாகத் தகவல்கள் இல்லை. ஆனாலும் முருகனின் பெருமையை நிலை நாட்ட, சூரன் கொல்லப்பட்டதாகச் சொல்லப்பட்டது. மீண்டும் சூரன் போருக்கு வருவான் என்ற ஐயப்பாட்டின் காரணமாக போர் நடந்த ஆறு இடங்களிலும், கண்காணிப்புப் படைகளை முருகன் அமைத்தான். அவையே அறுபடை வீடு எனப்படுகிறது. படை வீடு என்பதற்கு வீரர்கள் தங்கியுள்ள இடம் என்பது பொருள். சூரன் என்ன ஆனான் என்பது பற்றித் தகவல் இல்லை. மீண்டும் முருகன் சூரன் போர் நடந்ததாகவும் செய்திகள் இல்லை.

மேற்கண்ட செய்திகளுக்கு வரலாற்றுச் சான்றுகள் இல்லை. ஆனால் தமிழ்நாட்டில் தொன்று தொட்டு நிலவி வரும் மரபுச் செய்திகள் மேற்கண்ட வற்றை ஓரளவிற்கு வரலாற்றுச் செய்திகளாகத் தருகின்றன. தமிழ் நாட்டில் சூரிய - சந்திர குலத்தாரிடையே ஏற்பட்ட மோதல்களை மேற்கண்ட தொன்ம - வரலாறு கூறுகிறது. இவ்வரலாற்றில் அறியப்படும் சூரன், கடலில் மாயமானதாகக் கருதப்படுகின்றது. முருகனின் வலிமையை உணர்ந்த

சூரன், முருகன் பார்வையினின்றும் அகன்று போயிருக்க வேண்டும். எஞ்சியிருந்த தனது படைகளுடன், கடல் கடந்து சென்றிருக்கலாம் என்ற கருத்து உள்ளது.

சூரியனை வழிபட்ட சூரனே, அசூர் என்ற அறியப்பட்டிருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது. சுமேரியர் சந்திர குலத்தைச் சார்ந்தவர்கள் என்பது உறுதி செய்யப்பட்டுள்ளது. (சுமேரியர் பாண்டியர் மரபினரே எனக் கருதலாம்). சுமேரியரைப் போன்ற பிற இனத்தாரும் சந்திர குலத்தைச் சார்ந்திருந்த போது, மெசபத்தோமியாவில் அறியப்படும் ஒரே சூரிய மரபு அசீரிய மரபே என்க. சூரன் – சூர் – அசூர் போன்ற சொற்களால் மட்டும் அவர்கள் தமிழ் நாட்டின் குறிஞ்சி – முல்லை மக்கள் என்று கருத இயலாது. தங்களைக் குறிஞ்சி – முல்லை மக்கள் என்றே மெசபத்தோமியாவிலும் பதிவு செய்துள் ளனர். அசீரியர்களின் மன்னர்கள் இடையர் குலத்தைச் சார்ந்தவர்களாகவே (Pastoral Chieftains), கருதப்படுகின்றனர். மேலும் இந்தத் தலைப்பில் சொல்லப்படும் பல தமிழ்த் தொடர்புச் செய்திகளால், அசீரியர்கள், தமிழ் நாட்டினின்றும் புலம் பெயர்ந்து சென்ற, குறிஞ்சி – முல்லை, சூரிய குல மக்களே என்ற சிந்தனை வலுவாக உள்ளது. மெசபத்தோமியரும், எபிரேயரும், எகிப்தியரும், அராபியரும் தமிழ்க்குடியின் கிளைகளே என்றிருக்க, அசீரியர்களும் தமிழர்களே என்ற கருத்தை வரலாற்று உலகில் முதன் முறையாக முன் வைக்கின்றோம். (மேற்கண்ட ஒவ்வொரு இனமும் எவ்வாறு தமிழ்க்கிளைகளாக அறியப்படுகின்றனர் என்பதை, தனித்தனி ஆய்வு நூல்களாக வெளியிட்டுள்ளோம்) இன்று தமிழ்நாட்டில் அறியப்படும் சாதிகள் அனைத்தும், சூரிய குல – சந்திரகுலத்தாரிடமிருந்து கிளைத்த உட்பிரிவுகளே. (மேலும் விளக்கங்களுக்கு, ஆசிரியரின் பண்டைத் தமிழரின் நில மேலாண்மை என்ற நூலைக் காண்க).

ஜார்ஜஸ் ரோவுக்ஸ் (Georges Roux), என்ற ஆய்வாளர், அசீரிய மன்னர்கள் பட்டியலில், பழமையானவர்களில், துடியன் (Tudia), என்ற மன்னனுடைய பெயர் காணப்படுவதாகக் கூறுகிறார். கி.மு.2500 – 2400 ஆண்டுகளில் துடியனுடைய ஆட்சி நடைபெற்றதாகவும், எபலா என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட களி மண் தட்டில் அது பற்றி அறியப்படுவ தாகவும் கூறுகிறார். அக்களிமண் தட்டில், துடியனுடைய செயல்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன. எபலா (Ebla), என்ற நகரில் இருந்த வணிகர்களின் குடியிருப்பில் கண்டெடுக்கப்பட்ட அக்குறிப்பு, அவ்வணிகர்களுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் பற்றிக் கூறுகிறது.[88]

ஏற்கனவே நாம் கூறியது போல, குறிஞ்சி நிலத்து ஊரைப் பற்றிய செய்தி புறநானூற்றில் காணப்படுகிறது. அங்கு நான்கு வகையான பணிகளைச் செய்த மக்கள் இருந்தனர். அவர்களைத் தவிர்த்து மற்றவர் எவரும் அங்கில்லை.

*"துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று"*[89]

*"உவலைக் கண்ணித் துடியன் வந்தென"*[90]

துடி என்ற இசைக்கருவியை முழக்குபவன், துடியன் என்று சொல்லப் பட்டான்.

துடிப்பானவன், சுறுசுறுப்பானவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

துடியன் என்ற அசீரியச் சொல்லுக்கான பொருள் விளக்கப்படவில்லை.

தொடக்ககால அசீரிய மன்னன் தமிழனே என்பதற்கு இப்பெயரும் ஒரு சான்றாகும்.

துடியனுக்குப் பின் ஆதாமு அல்லது ஆதமு (Adamu), என்ற மன்னன் பொறுப்பேற்றான் என்று சொல்லப்பட்டுள்ளது. இப்பெயருக்கும் விளக்கம் தரப்படவில்லை.

ஆதாம் என்ற சொல் எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ளது.[91]

ஆ என்ற ஓரெழுத்துச் சொல், தொடக்கம் (beginning or Genesis), என்ற பொருளைத் தரும். தாம – தாமம் என்பது சிவப்பைக் குறிக்கும். தாமம் : செம்மலர்.

*"சூடு நறவோடு தாமம் முகிழ் விரிய"*[92]

தாமம் + அரையென்பது, தாமரை எனச் சுருங்கும்.

தாமம் : செம்மலர் ; அரை : கொடி. கொடியில் பூத்த செம்மலர்.

செந்தாமரை என்ற சொல் தவறானது. அதுபோல் வெள்ளைத் தாமரை என்ற சொல்லும் தவறானது.

ஆதாம் என்பது, செம்மண்ணிலிருந்து தொடக்கத்தில் படைக்கப்பட்டவன் என்ற தமிழ்ப் பொருளைத் தரும் எபிரேய மொழிச் சொல்லாகும்.

ஆதாமு – ஆதாமு அல்லது ஆதமு என்று அசீரிய மொழியில் திரிந்துள்ளது. ஆதமுக்குப் பிறகு 13 மன்னர்களின் பட்டியல் உள்ளது. பிற்காலத்து அமுராபி மன்னனின் முன்னோர்களுக்கான பாபிலோன் நகரக் குறிப்பு, மேற்கண்டவாறு கூறுகிறது. துடியன், மலைவாழ் மனிதனாக அல்லது இடையனாக இருந்ததால், தனக்கென அரண்மனை எதனையும்

கட்டிக் கொள்ளாமல் ஒரு கொட்டகையில் (tent) வாழ்ந்திருந்ததாகக் குறிப்புகளில் காணப்படுகின்றன. ஏறக்குறைய 300 ஆண்டுகள், நாடோடி வாழ்க்கையையே மேற்கொண்டிருந்த தொடக்க கால அசீரிய மன்னர்கள், கி.மு.2100 ஆண்டுகளில் தான் அசூர் நகரத்தை உருவாக்கினர்[93].

அசூர் நகரம், அக்காடிய சார்கோன் மன்னனுக்குத் திறை செலுத்தி வந்தது. அக்காலத்தில், அக்காடியப் பேரரசின் சிற்றரசு போலவே அசீரியர்கள் இருந்தனர் என்பதை நூசு (Nusu) நகரக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. அசீரியர்கள், சார்கோன் ஆட்சியின் தொடக்கத்திலேயே, ஆசியா மைனர், அனதோலியா போன்ற இடங்களில் வணிகம் செய்ய, பேரரசின் அனுமதியைப் பெற்றிருந்தனர். அத்துடன் பேரரசின் உதவியையும் எதிர்பார்த்து, பின்னர் பேரரசின் ஆட்சிக்குட்பட்ட அனைத்து பகுதிகளிலும் வணிகம் செய்யத் தொடங்கினர். போணீசியர்களுக்கு முன்பே, மேலை நாடுகளில், வணிகக் குழுக்களாக அசீரியக் குழுக்களே அறியப்பட்டிருந்தன. ஏறக்குறைய, கி.பி. 500 வரையிலும் கூட, அவ்வணிகக் குழுக்கள், போணீசியருடன் வணிகப் போட்டியில் ஈடுபட்டிருந்தனர். (கி.பி. 300 ஆண்டுகளில், அசீரியக் குழு, சேர மன்னன் அழைப்பின் பேரில், தமிழகத்துக்கு வந்ததாக, சிரியன் (அசீரியரின் பிற்காலப் பெயர்) கிறித்துவக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. தோமா என்ற வணிகன் தலைமையில், 300 பேர் அடங்கிய குழு, தமிழகத்துக்கு வந்தது. அக்குழுவினரின் மரபினரே சிரியன் கிறித்துவர்களாகக் கேரளத்தில் அறியப்படுகின்றனர். இன்று பொன் வணிகத்தில் சிறப்புற்று விளங்கும் அலுகாஸ் குழுவினர், அசீரிய மரபின் இந்தியக் கிளையினரே என்க[94].

அசீரிய வணிகக் குழுக்களின் உதவியுடன், அக்காடிய வணிகக் குழுக்கள் இணைந்து வணிகம் செய்து வந்தனர். ஒரு கட்டத்தில் பேரரசின் உதவியோடு, அசீரிய வணிகக் குழுக்களைப் புறக்கணித்து, அக்காடியக் குழுக்கள் தன்னிச்சையாகச் செயல்பட்டன. வணிக நுட்பங்களையெல்லாம் தங்களிடமிருந்து கற்ற அக்காடியர்களின் போக்கு அசீரியர்களுக்கு எரிச்சலூட்டியது. சார்கோன் ஆட்சியின் இறுதிக் காலங்களில், அசீரிய வணிகக்குழுக்கள், அக்காடிய வணிகக் குழுக்களுடன் வன்முறைகளில் ஈடுபட்டனர். வடக்குப் பகுதி அசீரியர்கள், தங்கள் வணிகக் குழுக்களுக்கு ஆதரவாகச் செயலில் இறங்கினர். சார்கோன், அசீரியர்களைக் கடுமையாக ஒடுக்கினான். அதுவரை ஒன்றாக இருந்த வணிகக் குடியிருப்புகள், தனித் தனியாகப் பிரிக்கப்பட்டு, இரண்டு வணிகக் குழுக்களிடம் ஒப்படைக்கப்பட்டன.

அசீரியர்கள், தங்கள் மேலாண்மையை நிலை நாட்ட காலம் கனியும் எனக் காத்திருந்தனர். அக்காடியப் பேரரசு பொருளியல் கூறுகளால் பின்னடைவு கண்டது. அக்கால அளவில் குடியர் என்ற இடையர்குலத்தார், கி.மு.2154 இல், தென் மெசபத்தோமியைத் தாக்கினர். பேரரசு குடியர்களுடன் போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த குழப்பமான காலங்களில், வடக்கே அசீரியர்கள், அதுவே தக்க தருணம் என்பதை உணர்ந்து தன்னாட்சியை அறிவித்துக் கொண்டனர். குடியர்களும், வடக்கே தங்கள் கவனத்தைச் செலுத்தவில்லை.

கி.மு.2112 ஆம் ஆண்டில், பேரரசின் வீழ்ச்சி, குடியர்களின் கலகம், அசீரியரின் தன்னாட்சி என, மெசபத்தோமியா குழப்பமான அரசியல் சூழ்நிலையில் இருந்ததைப் பயன்படுத்திக் கொண்டு, சுமேரியரின் மூன்றாம் தலைமுறையினர் ஆட்சியைப் பிடித்தனர். ஊர் நகரில் தங்கள் அரசை நிறுவினர். அசீரியரின் அசூர் நகரம் வரை படையெடுத்துச் சென்று, அசீரியாவின் தென் பகுதியைப் பிடித்துக் கொண்டனர். அசீரியப் படைகள், மேலும் வடக்கு நோக்கிச் சென்று, நினிவே நகரில் தங்கின. ஊர் நகரில் தோன்றிய சூழ்நிலைகள் காரணமாக, நினிவே நகருக்கு முன்னேறாமல் சுமேரியப் படைகள் திரும்பின. இருப்பினும் ஊர் நகருக்குத் திறை செலுத்த அசீரியர்கள் ஒப்புக் கொண்டனர். அசீரியத் தலைவன் (சாரிகம் - Sariqum) ஒருவன் சுமேரிய ஆட்சிக்கு அடங்கி நடப்பதாக அறிவித்தான். முறையாக ஊர் நகரத்து அமர் - சின் (Amar-Sin) மன்னனுக்குத் திறையும் செலுத்தி வந்தான். கி.மு.2050 வரை அந்நிலை தொடர்ந்ததாக குறிப்புகள் கூறுகின்றன.

ஒரு பேரரசுக்கு அடங்கி நடக்கும் சிற்றரசனை, சா - கணக்கு அல்லது சா - கணக்க (Sa - Kanakku or Sa - Kanakka) என்று அசீரியக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. கணக்கன் என்ற சொல், கண்காணிப்பவன் என்ற பொருளில் சொல்லப்பட்டுள்ளது. கணக்கன், சரியான தமிழ்ச் சொல்லே.

கண் என்ற தமிழ் மூலச் சொல், காண் என்ற செயலைக் குறித்து நீண்டது.

கண் - கணி : ஒன்றைப் பற்றி, பார்த்து அறிந்து, முடிவுக்கு வருதல்.

கண் - காண் - கணி - கணியன் என விரிந்தது.

கணியன் : வானியல் உண்மைகளை வெளிப்படுத்திய ஆய்வாளன்.

கண் + அக்கு : கண்ணால் கூர்மையாகப் பார்த்து, அளவெடுத்தல்.

கண் + அக்கு - கண்ணக்கு - கணக்கு : துல்லியமான முடிவு.

கண் - காண் - காணியன் : மேற்பார்வையாளன்.

கண் - காணி - காண்காணி : மேற்பார்வை செய்தல்.

கண்காணி - கங்காணி : மேற்பார்வையாளன்.

கண் + அக்கன் - கணக்கன், திறமையான மேற்பார்வையாளன்.

(காணி என்ற நிலம் தொடர்பான சொல்லுக்கு, கண்ணால் பார்க்கும் அளவுக்குத் தெரியும் இடமே காணி எனப்பட்டது).

## பழைய அசீரியரின் ஆட்சி

வட்டார அளவில் முழுமையான தன்னாட்சியை அசீரியர்கள், கி.மு.21 ஆம் நூற்றாண்டில் தோற்றுவித்தனர். அது, கி.மு.18 ஆம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை தொடர்ந்தது. 18 முதல் 13 நூற்றாண்டுகள் வரையிலான காலங்களில், பாபிலோனியர்களிடமும், மைத்தண்ணியர்களிடமும் (Mytannis), ஊரியர்களிடமும் ஆட்சியை இழந்திருந்தனர். அசூர் தலைநகரில், கி.மு.2050 இல், கோயில் ஒன்று எழுப்பப்பட்டது. இடையில் அமோரியர்களின் படையெடுப்பால், இரண்டு நூற்றாண்டுகள், அசீரியர் களின் ஆட்சி நிலையற்றுக் காணப்பட்டது. கி.மு.1800 முதல் 1500 வரை, மைத்தண்ணியரும் ஊரியரும் வடக்கு மெசபத்தோமியாவில் அமைதியின் மையைத் தோற்றுவித்தனர். எங்கும் போர்க்களமாகக் காட்சியளித்தது. அனதோலியாவில் மைத்தண்ணியர்கள் தங்கள் அதிகாரத்தைக் கைப்பற்றப் போராடி வந்தனர். அவர்களை ஊரியர்கள் பல போர்க்காலங்களில் சந்தித்தனர். அனதோலிய நாடு, யாருடைய ஆட்சியின் கீழ் அப்போது இருந்தது எனக் கூற இயலவில்லை ஆட்சிகள் மாறிக் கொண்டேயிருந்த குழப்ப நிலையில், அனதோலிய மக்கள், தங்கள் நாட்டை விட்டுப் பல்வேறு திசைகளிலும் சென்று குடியேறத் தொடங்கினர். அக்கால அளவில்தான், அனதோலிய மக்களில் ஒரு குழுவினர் இந்தியாவுக்குப் புகலிடம் தேடி வந்தனர். அவர்களே வரலாற்றில் ஆரியர் எனப்படுகின்றனர்.

## இடைக்கால ஆட்சி

கி.மு.911 ஆம் ஆண்டில், ஆதாத் நிராரி (Adad Nirari) என்ற அசீரிய மன்னன், இடைக்கால ஆட்சியில் சிறந்த மன்னனாவான் மூன்று நூற்றாண்டுகள், அசீரியர்களின் ஆட்சி மெசபத்தோமியாவில் நிலைத் திருந்தது. எகிப்தின் 25 ஆம் மரபினர் ஆட்சியைத் தூக்கியெறிந்து, எகிப்தை அசீரியர்கள் கைப்பற்றினர். அத்துடன் எத்தியோப்பியா, நூபியா போன்ற பகுதிகளையும் வென்றனர். அசீரியரின் இடைக்கால ஆட்சியில் (கி.மு.1365

- 1056), அசூர் உவலித், நின்னூர்தன் I, திகலத் பள்ளீசர், ஆதாத் நிராரி போன்றவர் சிறப்பானவர்கள். இடைக்கால ஆட்சியில், மைத்தண்ணியர், ஊரியர்கள், கித்தியர்கள், எகிப்தியர், பாபிலோனியர், ஈழத்தார், கனானியர் என்றவாறு, அனைத்து நாட்டு மன்னர்களும் அசீரியர்களால் தோற்கடிக்கப் பட்டனர். முன் எப்போதும் இல்லாத வலுவான ஆட்சியையும், பரந்த நிலப்பரப்பையும் அசீரியர்கள் பெற்றிருந்தனர்.[95]

## இடைக்கால அசீரியச் சமூகம்

இடைக்கால சமூகம், அசீரிய மன்னர்களால், கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டிருந்தது. மன்னன், அசூர் கோயிலின் தலைமைக் குருவாகவும் இருந்தான். சமயத்தில் சில சீர்திருத்தங்களும் மேற்கொள்ளப்பட்டன. அதன்படி, கோயிலின் வழிபாட்டு முறைகள் மாற்றியமைக்கப்பட்டன. தலைமைக் குரு என்ற பதவி, அசீரியச் சமூகத்தின் மிக உயர்ந்த பதவியாகக் கருதப்பட்டது. சில காலங்களில், தலைமைக் குழு, தனியாக நியமனம் செய்யப்பட்டான். மன்னரின் நம்பிக்கைகக்குரியவர்களே அப்பொறுப்பில் அமர்த்தப்பட்டனர். நின்னூர்த்தன் I என்ற மன்னன் படுகொலை செய்யப்பட் டபோது, தலைமைக் குரு அந்நிகழ்வின் பின்னணியில் இருந்ததாகக் கருதப்பட்டது. அதன் பின்னர், தலைமைக் குழு பதவி நீக்கப்பட்டு, மன்னனே அப்பதவியை ஏற்றுக் கொண்டான்.

இடைக்கால அசீரியர்கள், நீண்ட நெடுங்காலம் போர் நடவடிக்கைகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர். அதனால், சமூகத்தில் பெரும்பாலான வர்கள், படைப்பிரிவில் சேர்க்கப்பட்டனர். மன்னன், போர் நடவடிக்கைகளில் ஈடுபட, மக்களின் ஆதரவையும் நம்பியிருந்தான். நாட்டின் பெரும் பணக் காரர்கள், படைகளுக்குத் தேவைப்பட்ட குதிரைகளை வாங்கிக் கொடுத்தனர். வணிகர்கள் பெரும் பொருளுதவிகளைச் செய்தனர். நாட்டு மக்களின் அனைத்து தரப்பினரும், மன்னனின் போர் நடவடிக்கைகளுக்கு ஒத்துழைப்பை நல்கினர். அண்டை நாடுகளில் காணப்படாத, பெரும்படை அசீரியர்களிடம் இருந்தது.

போர்களுக்குத் தேவையான குதிரைகள், அசீரியாவில் குதிரை வளர்ப்பு மூலம் பெருக்கப்பட்டன. கால்நடைகளை வளர்ப்பது போல், குதிரைகள் வளர்க்கப்பட்டன. படையின் முதுகெலும்பாக, குதிரைப்படையே கருதப் பட்டது. குதிரைகளைப் போருக்கெனப் பழக்கவும் பயிற்சியளிக்கவும் ஏராளமான பயிற்சியாளர்கள் நியமிக்கப்பட்டனர். பாபிலோனியாவை விட,

அசீரியாவில் வேளாண் நடவடிக்கைகள் குறைந்தே காணப்பட்டன. மன்னர்களின் ஆதரவில் தடையில்லா வணிகம், நாடு முழுவதும் நடைபெற்றது. மற்ற வணிகக் குழுக்கள், அசீரிய வணிகக் குழுக்களுடன் போட்டியிட இயலவில்லை. அக்காலத்தில் வலுவான வணிகக் கட்டமைப்பை உருவாக்கியிருந்த போணீசியர்கள், அசீரியர் ஆட்சியில், உள் நாட்டு வணிகத்தைக் கைவிட்டு, உலகளாவிய கடல் வணிகத்தை மேற்கொண்டனர். அதற்கான உறுதியான மரக்கலங்களையும், கடலோடும் ஆற்றலையும் போணீசியர்கள் கொண்டிருந்தனர். அசீரிய வணிகர்களுக்கு அவ்வாறான வாய்ப்புகள் இல்லையென்பதால், உள்நாட்டு (தரைவழி) வணிகத்திலேயே கவனம் செலுத்தினார். அசீரியாவின் வடக்கேயிருந்த மலைகளில், கனிமப் பொருட்கள் வெட்டியெடுக்கப்பட்டன. மரங்கள், பாறைக் கற்கள் போன்றவை இறக்குமதி செய்யப்பட்டன. போர்களால் கிடைத்த செல்வம், நாட்டின் பொருளாதாரத்தை மிகவும் உயர்த்தியிருந்தது. நாட்டின் ஒவ்வொரு குடிமகனுக்கும் போர்ப் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. வேளாண்மை, வணிகம், கலைத்தொழில்கள் போன்ற தொழில்களை மேற்கொண்டிருந்தவர்களுக்கும் போர்ப் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. தேவைப்படும் காலங்களில், அனைவரும் போருக்கு அழைக்கப்படுவர். (இரண்டாம் உலகப் போரின் போது, நேச நாடுகள், தங்கள் நாட்டு மக்களுக்கு (பெண்கள் உட்பட) இவ்வாறான போர்ப் பயிற்சிகளை அளித்தன). கி.மு.13-14 நூற்றாண்டுகளில், அசீரியாவில் நடைமுறைப்படுத்தப்பட்ட சட்டங்கள், பெண்களை இரண்டாம் தரக் குடிமக்களாகவே கருதின. அண்டை நாடுகளில், குறிப்பாக பாபிலோனில், பெண்களுக்கு அளிக்கப்பட்டிருந்த உரிமைகள் எவையும் அசீரியாவில் கடைப்பிடிக்கப்பட்டவில்லை. ஆண்கள், தங்கள் மனைவியரை, எக்காரணமும் சொல்லாமல், எந்த உதவித் தொகையையும் வழங்காமல் மணமுறிவு செய்ய முடிந்தது. அதே வளையில், ஒரு பெண் தவறான நடத்தையில் ஈடுபட்டால், அவளுக்குத் தசையடிகள் வழங்கப்பட்டன. குற்றங்களுக்கு ஏற்றவாறு சிலருக்கு மரண தண்டனையும் வழங்கப்பட்டது. ஆனால் பிற்காலத்தில் அறியப்பட்ட சில குறிப்புகளில், அவ்வாறான நடை முறைகள் மிகைப்படுத்திக் சொல்லப்பட்டன என்றவாறு காணப்பட்டன.

தவறான நடத்தையில் ஈடுபட்ட அதிகாரத்தில், அரண்மனையிலிருந்த பெண்களுக்கும், ஒறுப்பு வழங்கப்பட்டது என்பர். குற்ற அளவுக் கேற்றவாறு தண்டனைகள் வழங்கப்பட்டன. எவ்வாறாயினும், மற்ற நாடுகளைவிட, மனித உரிமைகளை மீறும் சட்டங்கள் அசீரியாவில் நடைமுறையில் இருந்தன

எனலாம். குற்றங்களை விசாரிக்க நீதிமன்றங்களும் இருந்தன. சொத்துரிமைகளில், போலியான பத்திரங்களைத் தயார் செய்பவர்கள் கடுமையாக தண்டிக்கப்பட்டனர். கடன் வாங்கியவர்கள், கடன் பெற்றவர் களிடம் தொகையைத் திருப்பிச் செலுத்த இயலாத நிலையில், கட்டாயப் பணிகளைச் செய்யுமாறு வற்புறுத்தப்பட்டனர். கடன் பெற்றவனை மற்றொருவனுக்கு விற்க, சட்டம் இடம் தரவில்லை.

அசீரியாவில் ஆண்கள் ஓரினச் சேர்க்கையில் பெரிதும் ஈடுபட்டதாக குறிப்புகளின் மூலம் தெரிய வருகின்றது. ஓரினச் சேர்க்கை, பெண்ணுறவு போன்ற குற்றங்கள் தனித்தனியாக பார்க்கப்பட்டன. சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்தவர்களும் ஓரினச் சேர்க்கையில் ஈடுபட்டிருந்தனர். அவர்களுடன் உறவு கொண்ட ஆண்கள் அல்லது பெண்களுக்கு, தண்டனைகள் அளிக்கப்படவில்லை அல்லது கண்டும் காணாமல் விடப்பட்டன. ஓமான் நாட்டில் கண்டெடுக்கப்பட்ட குறிப்புகளில், ஓரினச் சேர்க்கையாளர்களை, நீதிமன்றங்கள் விசாரிக்கவுமில்லை, தண்டிக்கவு மில்லை என்று சொல்லப்பட்டுள்ளன. ஆனால், மெசபத்தோமியாவில், ஓரினச் சேர்க்கை என்பது பரவலாக அறியப்படவில்லையென்றே ஆய்வா ளர்கள் கருதுகின்றனர்[96].

ஓரினச் சேர்க்கை என்பது, அக்காலத்தில் மேலை நாடுகளில் பரவலாக அறியப்பட்டிருந்ததாக, விவிலியக் குறிப்புகளும் தெரிவிக்கின்றன. பாலத்தீனத்தின் தென் பகுதியில், சாக்கடலுக்கு அருகில் இருந்த சோதோம், கொமரா ஆகிய இரண்டு நகரங்களிலிருந்த ஆண்கள், பரவலாக ஓரினச் சேர்க்கையில் ஈடுபட்டதாகச் சொல்லப்பட்டுள்ளது. விருந்தினர்களாக வெளியூரிலிருந்து வந்தவர்களையும் சேர்க்கைக்கு அழைத்தார்கள். அவ்விரு நகரங்களின் மேல் கடவுள் கோபமுற்று, அவ்விரு நகரங்களையும் அமில மழையால் அழித்ததாக, விவிலியம் கூறுகிறது. பாவங்களில் கொடிய பாவம் ஓரினச் சேர்க்கையே என்று விவிலியத்தில் இறைவன் கூறுவதாக செய்தி உள்ளது[97].

## புதிய அரசு : (கி.மு. 911 - 627)

புதிய அரசின் மன்னன் ஈசர் ஆடன் (Esar - addon), கி.மு. 671 இல் சினைப் பாலைவனத்தைக் கடந்து எகிப்தின் மீது படையெடுத்தான். அப் படையெடுப்பு பகைவர்கள் எதிர்பாராத வகையில், விரைவாக வழி நடத்தப்பட்டது. எகிப்தின் மேற்குப் பகுதிகளான லிபியா, சகாராவையும்

வென்று, எகிப்திய - லிபிய அரசன் என்று அறிவித்துக் கொண்டான். ஒரு சிறிய படையை எகிப்தில் நிறுத்தி விட்டு நாடு திரும்பினான். அசூர் - பணி - பால் தலைமையில் (கி.மு.669-627) அசீரிய அரசு விரிவடைந்திருந்தது. வடக்கே காகசஸ் மலைத் தொடர்ப்பகுதிகள் (இன்றைய ஆர்மீனியா, ஜியார்ஜியா, அசர் பைஜான் நாடுகள்), எகிப்து, நூபியா, லிபியா, அரேபியா, மேற்கே சைப்ரஸ் அந்தியோக், மேற்குப் பாரசீகம், காஸ்பியன் கடல் பகுதிகள் என அண்டை நாடுகள் அனைத்தும் அசீரியப் பேரரசின் கீழ் இருந்தன. மெசபத்தோமியாவில் பாபிலோன், ஈழம், மெடியா, ஊராற்று (அர்மீனியா), சிரியா, அனதோலியா, இசறாயெல், யூதா, சமாரா, மோவாப், இதாம், போணிசியா போன்ற நாடுகளும் அசீரியரின் ஆட்சியின் கீழ் இருந்தன. ஏறக்குறைய அன்றைய உலகமாக அறியப்பட்ட நாடுகளில் பெரும்பாலானவை அசீரியர்களின் கட்டுப்பாட்டில் இருந்தன. படை எடுத்துச் செல்லாத நாடுகள் மட்டுமே தனித்திருந்தன. முன் எப்போதும் இல்லாத அளவில், அதிகாரத்தின் உச்சத்தை அசீரியப் பேரரசு தொட்டிருந்தது. தொடர்ந்த படையெடுப்புகளால் அசீரியப் படை வீரர்கள் உற்சாகம் இழந்திருந்தனர். விரிந்து பரந்த பேரரசைக் கட்டிக் காக்க போதுமான படைகள் இல்லாமற் போனது. நாட்டின் வருவாய் பல மடங்கு படைகளுக்கே செலவிடப்பட்டது. மிகப்பெரிய பேரரசை நிறுவிய அசூர் - பணி - பால் இறப்புக்குப்பின், உள்நாட்டில் குழப்பங்கள் தோன்றின.

**பேரரசின் வீழ்ச்சி :**

அசூர் - பணி - பாலின் இறப்பு, பேரரசை அதிர்ச்சிக்குள்ளாக்கியது ; நடவடிக்கைகள் முடங்கிப் போயின. மூன்று பேர், அரசப் பதவிகளுக்குப் போட்டியிட்டனர். மூன்று பேருடைய ஆதரவாளர்களால் நாட்டில் உரிமைப்போர் தொடங்கியது. அதனையே எதிர்பார்த்திருந்த அண்டை நாடுகள் ஒவ்வொன்றாக, தன்னாட்சியை அறிவித்துக் கொண்டன. முதலில், எகிப்து தனது விடுதலையை அறிவித்தது. எகிப்தில் அசீரியர்களால் சிற்றரசாக நியமிக்கப்பட்ட 26 ஆம் மரபு, தன்னை தனியரசாக அறிவித்துக் கொண்டது. பின் ஒவ்வொரு நாடாக, அசீரியப் பேரரசின்றும் விலகி, தனியாட்சிகளை அமைத்துக் கொண்டன. கி.மு.599 இல், அசீரியப் படைகள், அனைத்து தரப்பிலும் நிகழ்ந்த போர்களில் முற்றிலுமாக முறியடிக்கப் பட்டன. அக்கமேனியர்கள் கி.மு.549-330, மாசிடோனியக் கிரேக்கர்கள், கி.மு. 332-312, பாரசீகர்கள், கி.மு.150, கி.பி.225 உரோமர்கள், கி.பி.116-118, சசானியர்கள், கி.பி.226-650, இசுலாமியர்கள், கி.பி.600-780,

மங்கோலியர்கள், கி.பி.1200-1300, தொடர்ந்து பல இசுலாமிய ஆட்சியாளர்கள் என அசீரிய வரலாறு தொடர்ந்தது. ஆட்டோமன் துருக்கியர்கள், கி.பி.1900 - 1928 வரை ஆண்டனர். ஈராக், 1933 ஆம் ஆண்டில் ஆங்கிலேயரிடமிருந்து விடுதலை பெற்றது. அசீரியா, ஈராக்கின் ஒரு பகுதியாயிற்று. இரண்டாம் உலகப் போரில், குர்திஷ் மற்றும் ஈராக்கியர்களால், ஆயிரக்கணக்கான அசீரியர்கள் படுகொலை செய்யப் பட்டனர். நேசப் படைகளை அசீரியரும், நாசிப்படைகளை ஈராக்கியரும் ஆதரித்தனர். இசுலாமியரின் பெரும்பான்மைக்குள் சிறுபான்மையினராக அசீரியர் மாறிப் போயினர். தற்காலத்தில் சிரியா என்ற அளவில் அழைக்கப்படும், அக்கால அசீரியா, இசுலாமிய வன்முறையாளர்களால் தாக்கப்பட்டு வருகின்றனர். அல்-கொய்தா, ஐ.எஸ்.ஐ.எல் போன்ற தீவிரவாத அமைப்புகளுடன் தற்போது போராடி வருகின்றனர். ஒரு காலத்தில் மேற்கு ஆசியாவை கட்டியாண்ட அசீரியர்கள் (இன்றைய சிரிய நாட்டினர்) அகதிகளாக ஐரோப்பிய தஞ்சம் அடைந்து வருகின்றனர்.

**அசீரியரும் கிறித்துவமும் :**

கி.மு.332 ஆம் ஆண்டில், அசீரியா, அலெக்சாந்தரின் படையெடுப்பால் வீழ்ந்தது. கி.மு.312 வரை, கிரேக்கர்களின் ஆட்சி அங்கு நிலைபெற்றிருந்தது. வடக்கு மெசபத்தோமியாவில் வாழ்ந்திருந்தோர், அறமியர்கள், போணிசியர்கள் அனைவரையும், பிற்கால கிரேக்க உரோமானியக் குறிப்புகள் சிரியன் (Syrians) என்றே குறிப்பிடுகின்றன. சிரியாக் (Syriac) என்றும் சில பதிவுகளில் காணப்படுகின்றன. இயேசு இறந்த பிறகு, கிறித்துவம் அசீரியாவுக்குள் நுழைந்தது. அசீரியர்கள் தங்கள் மெசபத்தோமிய சமயத்தைத் துறந்து, கிறித்துவத்துக்கு மாறினர். கி.பி.முதல் மூன்று நூற்றாண்டுகளில் அசீரியாவில் கிறித்துவம் பரவலாக அறியப் பட்டிருந்தது. அக்கால அளவில், அசீரியர்கள் தங்களுக்கான ஒரு சிறிய நாட்டைக் கொண்டிருந்தனர். கிறித்துவ இலக்கியங்கள் சிரியாக் மொழியில் எழுதப்பட்டன. (கி.மு.5 ஆம் நூற்றாண்டில், அசீரியர்கள், சிரியாக் என்ற மொழியை உருவாக்கிக் கொண்டனர்). சிரியாக் திருச்சபை (Syriac orthodox church) தோற்றுவிக்கப்பட்டது. கிறித்துவத் திருச்சபையின் முதல் ஆயர் (போப்பாண்டவர் என்றும் கூறலாம்) சிரியாவில் இருந்தார். அக்கால அளவில், ஐரோப்பாவில் குறிப்பாக உரோம் நகரில் கிறித்துவம் தடை செய்யப்பட்டிருந்தது. உலக வரலாற்றில் கிறித்துவத்தை முதலில் ஏற்றுக் கொண்ட நாடு என்ற பெருமையை, சிரியா பெற்றது[98].

கி.பி.226 ஆம் ஆண்டில், அசீரியா சசானியர்களின் (Sassanid) ஆட்சியின் கீழ் வந்தது. அக்கால அளவில், சிரியன் திருச்சபை வளர்ந் திருந்தது. சசானியர்கள், அசீரியாவை, அசோரிஸ்தான் (Asoristan) என அழைத்தனர். அதற்கு, அசீரியர்களின் நாடு என்பது பொருளாகும். (ஆப்கானிஸ்தான், பாக்கிஸ்தான், பலுச்சிஸ்தான், இந்துஸ்தான் என்ற பெயர்களை ஒப்பு நோக்குக) சசானியர்களின் காலத்தில் தான் அசீரியக் கிழக்குத் திருச்சபை (Assyrian Church of the East) பழைய சால்தியக் கிழக்குத் திருச்சபை (Ancient Chaldean Church of the East) சிரியாக் பழைய கிறித்துவத்துக்குத் தலைமை இடங்களாக இருந்தன. அக்கால அளவில் தான் சிரியாக் கிறித்துவக் கலாச்சாரம் (Syriac Assyrian Christian Culture) உருவாயிற்று. அசூர் நகர் உட்பட பல நகரங்களில் அசீரியர்கள் பழைய கோயில்களும் இருந்தன. அவற்றில் வழிபாடுகள் புறக்கணிக்கப்பட்டன. அசீரியத் திருச்சபையை, இயேசுவின் தலைமைச் சீடரும், முதல் போப்பாண்டவராகக் கருதப்படுபவருமான புனித பேதுரு (St.Peter) தொடங்கி வைத்ததாகவும் சொல்லப்படுகின்றது.

சசானியர்களுக்குப் பிறகு, அசீரியப் பகுதிகளை, அராபிய இசுலாமியர்கள், கி.பி.600 களில், அரேபியாவுடன் இணைக்க முற்பட்டனர். நபிகள் நாயகத்துக்குப்பிறகு, இசுலாமியப் படைகள், அசீரியாவை வென்று, தமது ஆளுகைக்குட்படுத்தின. ஆட்சிகள் மாறினாலும், அசீரியர்கள் தங்கள் நாட்டை விட்டு வெளியேறவில்லை. அடுத்த ஒரு நூற்றாண்டில், மெசபத்தோமியப் பகுதிகள் அனைத்தும் அரேபியர்களின் ஆட்சியின் கீழ் வந்தன. முற்றிலும் வெளிநாட்டு இசுலாமியர்களால் ஆளப்பட்ட அம்மக்கள், தங்கள் பழைய சமயங்களைத் தொடர்வதில் இடையூறுகளை எதிர் கொண்டனர். அசீரியர்கள், கிறித்துவத்தில் நிலைத்து நின்றனர். அரேபியர் களின் ஆட்சியில், அசீரியக் கிறித்துவர்கள் திம்மிக்கள் (Dhimmis) என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் நாட்டிலேயே அசீரியர்கள் இரண்டாம் தரக் குடிகளாக நடத்தப்பட்டனர். பல வகையான கட்டுப்பாடுகள் அவர்கள் மீது திணிக்கப்பட்டன. சில குறிப்பிட்ட பொறுப்புகளிலிருந்து அசீரியர்கள் தள்ளி வைக்கப்பட்டனர். அரசியல் உரிமைகள் மறுக்கப்பட்டன. ஒரு இசுலாமியன் சாட்சி சொல்லாத எந்த வழக்கும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஜிசியா (Jisiya) என்ற வரி, இசுலாமியர் அல்லாதவர்கள் மீது விதிக்கப்பட்டது. தங்களுடைய கிறித்துவ சமயத்தைப் பரப்புரை செய்வதற்குத் தடைகள் விதிக்கப்பட்டன. திருமணம், திருமண முறிவு, சொத்துரிமை போன்றவற்றில் அசீரியச் சட்டங்கள் பின்பற்றப்பட்டன[99].

சசானியர் காலத்திலேயே கிழக்குத் திருச்சபை, கிறித்துவ சமயக் கொள்கைகளை வகுத்திருந்தது. நெஸ்டோரியன் (Nestorian) என்று அக்கொள்கை சொல்லப்பட்டது. கிழக்குத் திருச்சபையினர், இசுலாமிய ஆட்சி எல்லைகளைத்தாண்டி, கிழக்கு நாடுகளில் கிறித்துவத்தைப் பரப்ப எண்ணினர். நெஸ்டோரியன் கிறித்துவக் கொள்கைகள் சீனாவுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. சீனாவில் கி.பி.600 முதல் 781 வரை நெஸ் டோரியன் கிறித்துவம் பரப்பப்பட்டது[100]. அசீரியக் கிறித்துவர்கள், அண்டை நாட்டு கிறித்துவர்களுடன், குறிப்பாக ஜியார்ஜியாவில் அராபியர்களால் துன்புறுத்தப்பட்ட கிறித்துவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர். அசீரியக் கிறித்துவத் துறவிகள் ஜியார்ஜியாவுக்குச் சென்று வந்தனர். அசீரியத் திருச்சபை, பல்வேறு சீர்திருத்தங்களைச் செய்து, துடிப்புள்ள சமயமாக, கி.பி.600 - 1300 ஆண்டுகளில், கிறித்துவத்தை வளர்த்தெடுத்தது.

கி.பி.1258 ஆம் ஆண்டில், மங்கோலியர்கள், மேற்கு ஆசியப் பகுதிகளின் மேல் படையெடுத்து, பாக்தாத் நகரைப் பிடித்துக் கொண்டனர். அசீரியர்கள் மங்கோலியருடன் நல்லுறவு கொண்டிருந்தனர். அசீரியக் கிறித்துவத் துறவிகள் மங்கோலியாவிற்குச் செல்லவும், கிறித்துவ சமயத்தைப் பரப்பவும் அனுமதிக்கப்பட்டனர். மங்கோலியர்கள் இசுலாமியரையும், யூதர்களையும் வெறுத்தனர். சுன்னத் செய்து கொள்ள அவர்கள் ஆட்சியில் தடை விதித்தனர். இசுலாமிய முறைப்படி இரைச்சியை மந்திரம் ஓதித்தூய் மைப்படும் (Halal) முறையைத் தடுத்தனர். எனவே, அப்பகுதியில் அவர்கள் கொள்கைக்கு ஏற்றவர்களாக அசீரியர்களே இருந்தனர். எர்பில் (தற்கால அர்பெலா) நகரத்து ஆளுநராக, ஒரு அசீரியக் கிறித்துவரை நியமித்தனர்.

காலம் தலைகீழாக மாறியது. இசுலாத்தை வெறுத்த மங்கோலிய ஆட்சியாளர்கள் இசுலாத்தைத் தழுவினர். அசீரியக் கிறித்துவர்களை வெறுத்தனர். எர்பில் நகரத்து ஆளுநரை நீக்கினர். ஆனால் எர்பில் கோட்டைக்குள் இருந்த ஆளுநரும் கிறித்துவர்களும் வெளியே வரவில்லை. அந்நகரத்து கிறித்துவ மக்களும் மங்கோலிய இசுலாமியருக்கு எதிராகத் திரும்பினர். மூன்று மாத முற்றுகைக்குப் பிறகு, கோட்டை திறக்கப்பட்டது. கோட்டைக்குள் இருந்த கிறித்துவர்கள் அனைவரும் படுகொலை செய்யப் பட்டனர். நகரிலிருந்த ஆயிரக் கணக்கானவர்களும் கொன்று குவிக்கப் பட்டனர். 14 ஆம் நூற்றாண்டில், மெசபத்தோமியாவின் வட பகுதியில், அசீரியக் கிறித்துவர்கள் பெருமளவில் இருந்தனர். துருக்கிய இசுலாமியர் தாமர்லென் (Tamur lane) அசீரியர் பகுதிகளில் நுழைந்து, கண்

மூடித்தனமாகப் பலரைக் கொன்றான். பல தேவலாயங்கள் இடிக்கப்பட்டன. ஒரு தேவாலயத்தை மட்டும் அவன் இடிக்கவில்லை.

தமிழ்நாட்டில் குடியேறியிருந்த அசீரியர்கள், இயேசுவின் தொண்டரான, புனித தோமையர் (St.Thomas) பெயரில், தங்கள் தாய் நாட்டில் ஒரு தேவாலயத்தைக் கட்டியிருந்தனர். அத்தேவாலயம் மட்டும் இடிக்காமல் விடப்பட்டது. புனித தோமையர் ஒரு யூதர் என்பதால், அவர் பெயரிலான தேவாலயத்தை விட்டுவிட்டனர். ஏற்கனவே கூறியபடி, தோமா என்ற வணிகன் தலைமையில், 300 பேரடங்கிய குழுவொன்று, சேரநாட்டிற்கு வந்தது. சேர நாட்டின் வணிகத்தை கடல் கடந்து எடுத்துச் செல்ல, தோமா அழைக்கப்பட்டான். அக்காலத்தில், தோமா ஒரு பன்னாட்டு வணிகளாகக் கருதப்பட்டான். தோமாவிற்கு அமைச்சர் பதவி கூட, சேரநாட்டில் தரப்பட்டதாக ஒரு தகவல் உள்ளது. அவர்களே, சேர நாட்டின் புனித தோமா கிறித்துவர்கள் என்றும், சிரியன் கிறித்துவர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். தற்போது அப்பிரிவைச் சேர்ந்தவர்கள், ஒரு கோடி என்ற அளவில் உள்ளனர். மேனாள் பாதுகாப்பு அமைச்சர் அந்தோணி, அசீரியக் கிறித்துவப் பிரிவைச் சார்ந்தவரே[101].

கி.பி.1552 இல், வடக்கு மெசபத்தோமியாவிலிருந்த அசீரியக் கிறித்துவர்களிடையே ஒரு பிளவு தோன்றியது. நெஸ்தோரியக் கொள்கையை ஏற்காதவர்கள், புதிய திருச்சபை ஒன்றை நிறுவி, அதற்கான ஆயராக, சீமோன் யோகண்ணன் (Shimon Yohannan) என்பவரைத் தேர்வு செய்து கொண்டனர். உரோம் நகரில் கத்தோலிக்கத் திருச்சபை, புதிய திருச்சபையை ஏற்றுக் கொண்டது. அசீரிய - மோசூல் திருச்சபை என்று பெயரும் சூட்டி (The Church of Assyria and Mosul), அதன் முதல் ஆயராக, யோகண்ணனையும் அங்கீகரித்தது. சிரியன் பழமைக் கோட்பாட்டுத் திருச்சபை, புதிய திருச்சபையை ஏற்றுக் கொள்ளவில்லை. ஏறக்குறைய 250 ஆண்டுகள், அசீரியத் திருச்சபைகளில், பல்வேறு குழப்பங்கள் நிலவி வந்தன.

இறுதியில், சீரியாக் பழமைக் கோட்பாட்டுத் திருச்சபை, அசீரியர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இன்று உலகெங்கும் 50 இலக்கத்துக்கு மேலான கிறித்துவர்கள், அத்திருச்சபையில் உள்ளனர். அதில் கேரளத் திருச்சபையும் அடக்கம். உலகக் கிறித்துவ வரலாற்றில் அசீரியர்களின் பங்குப் பணிகள், மறக்க இயலாதவை. முதன் முதலில் கிறித்துவ சமயத்தைத் தாங்கிப் பிடித்தவர்கள் அசீரியர்களே என்பது கிறித்து வரலாறு கூறும் செய்தியாகும்.

தற்காலத்தில், குறிப்பாக 2014க்குப் பிறகு, வடக்கு ஈராக்கிலும வடகிழக்கு சிரியாவிலும் உள்ள அசீரியக் கிறித்துவர்கள் மீது வன்முறைகள் ஏவப்பட்டு வருகின்றன. அதன் விளைவாக, அசீரியர்களும் ஆயுதங்களை ஏந்த முற்பட்டுள்ளனர். இசுலாமிய வன்முறையாளர்களை எதிர்க்கும் குர்துக்கள், துர்கோமர்கள், அர்மீனியர்களுடன் இணைந்து, அல்கொய்தா, மற்றும் ஐஎஸ்ஐஎல் போன்ற அமைப்புகளைத் தாக்கி வருகின்றனர். இவ்விரு அமைப்புகளும், 2014 ஆம் ஆண்டில், அசீரியக் கிறித்துவர்கள் மீது தாக்குதல் தொடுத்தனர். நகரங்களிலும் கிராமங்களிலும் வாழ்ந்திருந்த அசீரியர்கள் மீது ஏவுகணைகள் ஏவப்பட்டன. சொத்துகள் சூறையாடப்பட்டன. மேற்கண்ட இரு அமைப்புகளோடு, அராபிய சன்னிப் பிரிவு இசுலாமியரும் இணைந்துள்ளனர். அசீரியர்கள் கிறித்துவ சமயத்தில் இணைந்த போதிலும், தங்கள் பழமையான, தொல்லியல் தொடர்பான இடங்களைப் பாதுகாத்து வந்தனர். நினிவே, கலு, அசூர், துர் – சரூக்கின், அத்ரா போன்ற பழைய நகரங்களிலிருந்து நினைவுச் சின்னங்களை, மேற்கண்ட இசுலாமிய வன்முறைக்குழுக்கள் தகர்த்து விட்டன[102].

அசீரியர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள, படைப்பிரிவு ஒன்றையும் தொடங்கியுள்ளனர். ஆனாலும் எண்ணிக்கையில் குறைந்த அளவிலேயே படைவீரர்கள் உள்ளனர். தங்களுக்கு உதவக் கூடியவர் களுடன் இணைந்து போராடி வருகின்றனர்[103].

## அசீரியர்களின் மொழி

அசீரிய மொழியை, செமிட்டிக் குடும்ப மொழியுடன் இணைத்து, மொழிக் கொள்கையை வகுத்தனர். வடக்கு மற்றும் வடகிழக்கு செமிட்டிக் இனத்தைச் சார்ந்த மொழியாக அசீரியம் சொல்லப்பட்டது. சுமேரிய மொழி வெளிநாட்டினர் மொழி என்று ஒதுக்கப்பட்டது. ஆனால், மெசபத்தோமிய அக்காடிய – அசீரிய மொழிகளில், சுமேரிய மொழியின் தாக்கங்களே மிகுந்து காணப்பட்டன. முதல் மொழிக் கொள்கையை வகுத்த ஐரோப்பியர்கள், தங்கள் மொழிக் கொள்கைக்கான மூலமொழி அல்லது முதன்மொழி என்ற ஒன்றைக் குறிப்பிட்டார்கள். அம்முதன் மொழியாதென தற்காலத்தில் அறியப்பட்ட நிலையில், ஐரோப்பியரின் மொழிக் கொள்கையில் குறிப் பிடப்படாத பல மொழிகளும், அந்த முதன் மொழியுடன் தொடர்பு கொண் டிருப்பதை அறிய முடிகின்றது. துரானிய, மங்கோலிய, ஆப்பிரிக்க, கிந்திய மொழிகள் பலவும் அந்த முதன்மொழியோடு தொடர்பு கொண்டுள்ளன. எனவே, ஐரோப்பியரின் மொழிக் கொள்கை முற்றிலும் சரியானதே என்று கூறவும் இயலவில்லை.

அசீரியம், அக்காடிய மொழியின் கிழக்குப் பிரிவைச் சார்ந்த செமிட்டிக் குடும்ப மொழி என்று சொல்லப்படுகின்றது. அசீரிய - அக்காடிய மொழிகள், கி.மு.3000 ஆண்டுகளிலேயே சுமேரிய மொழியுடன் கலந்து போயிற்று. செமிட்டிக் - சுமேரிய மொழிகளின் கலப்புக் கிளை மொழிகளாகவே அசீரியமும், அக்காடியமும் கருதப்படும். அசீரிய மொழிக்குறிப்புகள், கி.மு.2500 ஆண்டுகளில், சுமேரிய எழுத்து முறையில் அறியப்பட்டுள்ளன. கி.மு.3000 ஆண்டுகளில், சுமேரியமும் அக்காடியமும், மக்களின் பேச்சு வழக்கு மொழிகளாக இருந்தன. அக்காடியப் பேரரசில் இரு மொழிகளும் அரசாங்க அலுவல் மொழியாக இருந்தன. அக்காடிய மொழியில், சுமேரிய எண் கணக்கு முறைகளும், எழுத்து முறைகளும் பின்பற்றப்பட்டன. சுமேரிய மொழியின் இலக்கணம், உவமைகள், உருபுகள், மொழிநடை அத்தனையும் அக்காடிய மொழியில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தன. பிற்கால ஆய்வாளர்களுக்கு, சுமேரிய - அக்காடிய மொழிகளைப் படிப்பதற்கு, அதாவது ஒன்றையொன்று தொடர்புபடுத்திப் படிப்பதற்கு எளிமையாக இருந்தது. அக்காடிய அரசின் பிற்காலங்களில், அரசாங்க மொழியாக அக்காடியம் மட்டுமே ஏற்கப்பட்டு, சுமேரியம் கைவிடப்பட்ட நிலையிலும், மக்களின் பேச்சு மொழியாகவும், இலக்கிய, பதிவுகள் செய்யப்படும் மொழியாகவும் சுமேரியம் இருந்தது.

அசீரியரின் புதிய ஆட்சியில் (கி.மு.900 க்குப் பிறகு), அறமாயிக் மொழி, பலராலும் பேசப்பட்டது. அக்காடிய மொழி பேசுபவர்களைவிட அவர்கள் கூடுதலாக இருந்தனர். மேலும் அறமாயிக் மொழி பேசும் மக்களைக் கொண்ட பகுதிகளில், அசீரியர்களின் ஆட்சி நடைபெற்றதால், மக்களின் நலன் கருதி, அறமாயிக் மொழியை அசீரியர்கள், தங்களுடைய ஆட்சி அலுவல் மொழியாக, அறமாயிக் மொழியை தேர்வு செய்து கொண்டனர். குறிப்பாக, தைகளத்துப் பள்ளீசர் (Tigalath Palesar) காலத்தில் (கி.மு.800) அறமாயிக், முழுத்தகுதி பெற்ற ஆட்சி மொழியாயிற்று. அசீரியரின் முன்னோர், சுமேரிய மொழியையும், பின் வந்தவர் அக்காடிய மொழியையும் பேசி வந்தனர். இறுதியாக வந்தவர்கள் அறமாயிக் மொழியை இணைத்துக் கொண்டனர். மூன்று மொழிகளுக்கிடையே பலவாறான உறவுகள் உண்டு. (அறமாயிக் மொழி பற்றி எபிரேயர் என்ற தலைப்பில் காண்க.) கி.மு.500 ஆண்டுகளில், மேற்கண்ட மூன்று மொழி களின் கலப்பாக, சிரியாக் என்ற மொழி தோன்றியது. இம்மொழியிலேயே, கிறித்துவ இலக்கியங்களும், திருச்சபை வழிபாடுகளும் நடைபெற்றன.

கி.பி.300 ஆண்டுகளில் சிரியாக் மொழி, அசீரியர்களின் மொழியாக மாறியது. தற்காலத்தில் உள்ள அசீரியர்களின் பெயர்கள், குடும்பப் பெயர்கள், இடப்பெயர்கள், பொருட் பெயர்கள் அனைத்தும் மேற்கண்ட நான்கு மொழிச் சொற்களாகவே உள்ளன. உலகெங்கும் தற்போது, 10,00,000 அசீரியர் உள்ளதாகச் சொல்லப்படுகின்றது[104]. 90 ஆண்டுக்கால முயற்சிக்குப் பிறகு, சிகாகோ பல்கலைக் கழகம், கடந்த 2011 ஆம் ஆண்டில், அசீரிய அகராதியொன்றைத் தொகுத்து வெளியிட்டது. ஏறக்குறைய அது அகராதி போன்று இல்லாமல், ஒரு கலைக்களஞ்சியம். போன்றே தொகுக்கப்பட்டுள்ளது. (Encyclopedia)[105].

## அசீரியச் சமயம்

அசீரியர்கள், மெசபத்தோமிய தெய்வங்களை வழிபட்டு வந்தாலும், தங்களுடைய இனக்கடவுளாக சூரியனையே வழிபட்டனர். மெசபத்தோமி யர்கள் நிலவை முதற்கடவுளாக வழிபட்டனர். இந்த வேறுபாட்டினை மேலை நாட்டு ஆய்வாளர்கள், சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. உடு (Utu) என்ற சூரியக் கடவுளையும் மெசபத்தோமியர் வழிபட்டனர் என்றாலும், அதனை நிலவுக்கு (Sin god) அடுத்தபடியாகவே வணங்கினர். சுமேரியரின் துணைக் கடவுள்களான தமிழ் (தமுழ்), தார் (அசுத்தார்), வானம் (அனு), காற்று (என்லில்), கடல் (யா) போன்ற கடவுள்களும் அசீரியரின் வணக்கத்துக்குரிய கடவுள்களாயிருந்தனர். இக்கடவுளை மெசபத்தோமியரும் வழிபட்டு வந்தனர். பாபிலோனிய நாள் காட்டியில் சிவன் (Siwan) என்ற பெயரில் மூன்றாம் மாதம் சொல்லப்பட்டுள்ளது. அச்சொல் பற்றிய வேறு குறிப்புகளும் விளக்கங்களும் அறியப்பட்டவில்லை. அச்சொல்லுக்கானப் பொருளும் தரப்படவில்லை. அச்சொல், கடவுளைக் குறித்ததா அல்லது வேறு பொருளைக் குறித்ததா என்றும் தெரியவில்லை. எகிப்துக்கும் மேற்கேயுள்ள பாலைவனத்தை, சிவன் பாலைவனம் (desert of siwan) என்றும் குறிப்பிடப் பட்டுள்ளனர். அதன் பெயர் விளக்கமும் சொல்லப்படவில்லை. அசீரியர் களின் முதல் தெய்வமான சூர், அப்பகுதியில் வேறு எந்த இன மக்களாலும் வணங்கப்படவில்லை. மேலும் அசீரியர்களின் கடவுள் பட்டியல் நீளமானது[106]. மேற்கண்ட கடவுளர் அனைவரும், கிறித்தவம் அசீரியர்களால் ஏற்கப்பட்ட பிறகு மறைந்து போயினர்.

கிறித்துவம், தொடக்கத்தில் இரண்டு திருச்சபைகளைக் கொண்டிருந்தது. பின்னர் ஏறக்குறைய 20 கிளைகளாக அவை பிரிந்தன. இருப்பினும் தொடக்கததில் அறியப்பட்ட கிழக்கு அசீரியத் திருச்சபை, சிரியாக் பழமைக்

கொள்கை திருச்சபை ஆகிய இரண்டும் இன்றும் உள்ளன. இவற்றுள், கேரள மலையாளிகளின் சிரியன் திருச்சபையும் அடங்கும்[107]. கி.பி.1626 ஆம் ஆண்டில், இயேசு சபையினரும், பிரான்சிஸ்கன் சபையினரும் (Jesuits and Capuchins), ஐரோப்பாவினின்றும் சென்று, சிரியாக் பழமைக் கொள்கை திருச்சபையுடன் இணைந்து, கிறித்துவத்தைப் பரப்பினர். அத்திருச்சபையின் தலைமை ஆயர் இறந்தபின், கத்தோலிக்கத் திருச்சபையின் ஆண்ட்ரூ என்பவரை, அப்பதவியில் அமர்த்தினர். அடுத் தடுத்த வந்த ஆயர்களும் கத்தோலிக்கத் திருச்சபையைச் சார்ந்தவர் களாகவே இருந்தனர். கடந்த இருபதாம் நூற்றாண்டில், அசீரியர்களில் சிலர், சீர்திருத்தத் திருச்சபையில் இணைந்தனர் (Protestanism). அதன்பின்னர் இரு வேறு சீர்திருத்தச் சபைகள் தோன்றின[108]. தற்போது பல்வேறு எண்ணிக் கையில் கிறித்துவச் சபைகள் அங்குள்ளன.

**கலை, சிற்பம், அறிவியல் :**

கி.மு. 3000 ஆண்டுகளுக்குப் பிறகு, மெசபத்தோமியா, அசீரியா, ஈழம், சால்தியா, சிரியா போன்ற நாடுகளில் அறியப்படும் கலை, நுண்கலை, வானியல், அறிவியல், சமயம், வழிபாட்டு முறைகள், போர்முறைகள், ஆட்சிமுறை, வேளாண்மை, தொழில்கள் அனைத்தும், சுமேரியரின் வழியில் அறியப்படுவனவே. காலத்திற்கேற்ற மாற்றங்கள் நிகழ்ந்தன வேயன்றி, அனைத்திலும் சுமேரிய நாகரிகத்தின் நிழல்களே படிந்திருந்தன என்பதால், பிற்காலத்தவர் புதிதாக எவற்றையும் கண்டுபிடித்தனர் என்று கூற இயலாது. குறிப்பாக சுமேரியர்களின் எழுத்து முறை, மேலை நாடுகளுக்குப் புதிய உலகத்தைக் காட்டின.

அசீரியக் கலையென்பது, சுமேரிய - அக்காடிய கலைகளின் வளர்ச்சியும் நீட்சியும் என்றே கருத வேண்டும். அரண்மனைகள் வண்ணக் கலவைகளால் அழகுபடுத்தப்பட்டன. சுவர்களில் ஓவியங்கள் தீட்டப்பட்டன. பாறைகளில் செதுக்கப்பட்ட புடைச்சிற்பங்கள், அரண்மனைச் சுவர்களில் பதிக்கப்பட்டன. எழுத்து முறை அறியப்பட்டதின் பயனாக, அரசாங்க அலுவல்களைப் பதிவு செய்ய, பள்ளிகள் திறக்கப்பட்டன. பள்ளிகளில் கற்று வெளி வந்தவர்களில் சிறப்புக்குரியவர்கள், அரண்மனையில் பதிவாளர் களாகவும் ஆணைகளைப் பிறப்பிக்கும் துறைகளிலும் பணிபுரிந்தனர். (Scribes) அவர்களில் சிலர், அக்காடிய - சுமேரிய மொழிகளையும் அறிந் திருந்தனர். அப்பள்ளிகளில் படித்த வேறுசிலர் கவிதைகள், இலக்கியங் களையும், படைத்தனர். களிமண் தட்டுகளில் வரலாற்றுக் குறிப்புகளை

எழுதுபவர்களாகவும் பணியாற்றினர். பிற்காலத்தில் பாறைகளில், குறிப்புகளும் எழுதப்பட்டன. புடைச் சிற்பங்கள் செதுக்கப்பட்டன.

போர்க்களக் காட்சிகள், மரக்கலங்களைச் செலுத்துதல், போர் வீரர்களின் உருவங்கள், இயற்கைக் காட்சிகள், விலங்குகள் என பல்வேறு புடைச் சிற்பங்கள் அகழ்வாய்வுகளில் கண்டறியப்பட்டுள்ளன. போர் வீரர்கள் போருக்குச் செல்லுமுன் உடுத்தியிருந்த ஆடைகள், எடுத்துச் சென்ற போர்க்கருவிகள் ஆகியவை பற்றி அறிந்து கொள்ளலாம். ஆண்கள் சுருள் முடியுடன் நீண்ட தாடியுடன் காணப்படுகின்றனர். விலங்குகளை வேட்டை யாடும் காட்சிகளும் உள்ளன. பாபிலோனியரின் கலைத்திறமைகளை விட அசீரியர் சிறந்திருந்தனர் என்பது ஆய்வாளர்களின் கருத்து. பாபிலோனி யர்கள் கட்டிய ஒற்றைக் கோபுர சிகரத்தைப் போல, இரட்டைக் கோபுரங்களை கொண்ட கோயில்களை அசீரியர் உருவாக்கினர்.

குறிப்பாக, புதிய அசீரிய அரசுக் காலங்களில், கலைத்துறையில் முன்னேற்றம் காணப்பட்டது. எடுத்துக்காட்டாக, இறக்கைகளைத் தொண்ட காளைகள், அரண்மனை வாயிலில் அமைக்கப்பட்டன. அவை, தீய உருக் களை நுழைய விடாமல் தடுத்தன என்று நம்பப்பட்டது. தமிழ்நாட்டில் யானைகள் அரண்மனை வாயில்களில் நிற்பது போல் அமைக்கப்பட்டன. பிற்காலங்களில் இரண்டு போர் வீரர்களின் (துவார பாலகர்கள்) சிலைகள் முன் வைக்கப்பட்டன.

மணிக்கற்களை (gems) மெருகூட்டி, கனிமங்களில் பொருத்தி, அணி கலன்கள் செய்யும் கைவினைஞர்களும் இருந்தனர். அகழ்வாய்வுகளில், பலவாறான அணிகலன்கள், பொன், வெள்ளி, செம்பு போன்றவைகள் செய்யப்பட்டவை, கண்டறியப்பட்டுள்ளன. சில கண்ணாடிக் கற்களும் கண்ட றியப்பட்டுள்ளன. அவை, தொலை நோக்கிகளாகப் பயன்படுத்தப்பட்டன என்று சொல்லப்படுகின்றது. வானத்து உறுப்புகளை உற்று நோக்க அவை, பயன்பட்டிருப்பது தெரிய வந்துள்ளது. அணிகலன்கள் செய்யும் தொழிலில், சிறு பொருட்களை பெரிதாகக் காட்ட அவை பயன்படுத்தப்பட்டன என்பதும் ஒரு கருத்து. அது போன்ற ஒரு உருப்பெருக்கி பிரிட்டிஷ் அருங்காட்சி யகத்தில் வைக்கப்பட்டுள்ளது.

அசீரியர்கள், போர் நடவடிக்கைகளில் பெரிதும் ஈடுபட்டிருந்தனர். அக்காலப் போர் முறைகளில், வில் – அம்பு என்ற கருவி, சிறப்பாகப் பயன் படுத்தப்பட்டுள்ளது. திறமையாகக் குறிபார்த்து எய்வதற்கான பயிற்சிகள்,

வில்லாளிகளுக்குத் தரப்பட்டன. பிற்காலங்களில், குதிரைகள் மீதமர்ந்து போரிடும் வில்லாளிகள் பெருமளவில் பயன்படுத்தப்பட்டனர். அசீரியர்களின் போர் வெற்றிகளுக்கான காரணம், அது வரை அப்பகுதிகளில் கையாளப் படாத புது உத்திகளை, அவர்கள் கையாண்டனர். புரவிகளின் மீதமர்ந்து நாலா புறமும் அம்பெய்தும் பயிற்சிகளைப் பெற்றிருந்தனர். குறுகிய காலத்தில், பகைவர்கள் எதிர்பார்க்கும் நேரத்துக்கு முன்பே, போர்க்களத்தில் நின்றது, அசீரியர்களின் வெற்றிக்கு மற்றொரு காரணமாகும். பிற்காலத்தில் அலெக்சாந்தரும், நெப்போலியனும் கூட இந்த உத்திகளையே கையாண் டனர். பகைவர்களை மிரளவைக்கும் காலாட்படை வீரர்கள், படையெடுத்துச் செல்லப்படும் நாடுகளின் புவியியல், நிலவியல் தொடர்பான புள்ளி விவரங்களை அளிக்கும் நிலவியல் பொறியாளர்கள், போர்களை நடத்துவ தற்கென தலைமையேற்கும் போர் நுட்பங்கள் தெரிந்த குழு போன்றவை, அசீரியர்களின் வெற்றிக்கான பிற காரணிகள் ஆகும்.

கி.பி. 1845 இல் நினிவே நகரம் அகழ்வாய்வுக்குட்படுத்தப்பட்டது. அப்போது, மிகப் பெரிய நூல் நிலையம் கண்டறியப்பட்டது. அசூர் - பணி - பால் மன்னன், அந்நூல் நிலையத்தை உருவாக்கியிருந்தான். சுமேரிய, அக்காடிய, அசீரிய மொழிகளில் ஏராளமான களிமண் தட்டுகள் கண்டெடுக் கப்பட்டன. ஆப்பு எழுத்து முறையில் எழுதப்பட்டிருந்த அக்களிமண் தட்டுகளைப் பிரித்து தனித்தனியாக அடுக்கி, அவற்றில் எழுதப்பட்டுள்ள வைகளைப் படித்து முடிப்பதற்கு, பத்து ஆண்டுகள் செலவிடப்பட்டன. 1857 ஆம் ஆண்டில், பிரிட்டனைச் சார்ந்த குழுவினர் (The Royal Asiatic society of Great Britain), அக்களிமண் தட்டுகளைப் படிக்க இயலும் என்று கூறினர். அவ்வாறே அக்களிமண் தட்டுக் குறிப்புகளைப் படித்து முடித்தனர். அதன்பிறகே, அசீரியரின் உண்மையான வரலாறு வெளிப்பட்டது. உலக வரலாற்றில், சிந்துவெளி, பாபிலோன், எகிப்து போன்ற நாகரிகங்களுக்கு இணையான நாகரிகம், கட்டிடக் கலை, இலக்கியங்கள், ஆட்சி முறைகள், போர் நடவடிக்கைககள் என, அசீரியர்களும் வரலாற்றில் இடம் பெற் றுள்ளனர்.

அசீரியர்கள், செமிட்டிக் மரபைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லப் பட்டாலும், கி.மு.2500 ஆண்டுகளுககு முன்பு அவர்களுடைய வரலாறு அறியப்படவில்லை. அசீரியர்கள், சுமேரியர்களைப் பின்பற்றியே தங்கள் சமூகத்தை அமைத்துக் கொண்டனர். சுமேரியர்களிடம் காணப்பட்ட நாகரிகக் கூறுகள், சுமேரியர்களுக்கு முன் வாழ்ந்திருந்த மெசபத்தோமிய

மக்களிடம் காணப்படவில்லை. அசீரியர்கள் சூரியனைத் தலைத்தெய்வமாகக் கொண்டிருந்ததால், அவர்கள் மற்ற மெசபத்தோமிய இனங்களிலிருந்து மாறுபடுகின்றனர். அவர்களுடைய வாழ்க்கைமுறையின் பல்வேறு கூறுகள், தமிழருடைய சமூக அமைப்பைப் போல் காணப்படுகின்றன. அசீரியர் களின் தனிப்பட்ட பெயர்கள், கடவுளரின் பெயர்கள், நகரங்களின் பெயர்கள் என்றவாறு, நூற்றுக்கணக்கானப் பெயர்களும் சொற்களும் தமிழ் மூலத்தில் உள்ளன. அண்டை நாடுகளில் அறியப்படாத வில்வித்தை முறைகளை, அசீரியரே அறிந்து, அதில் திறமை பெற்றிருந்தனர். வில்லும் அம்பும் வேட்டைக்குப் பின், போருக்கும் பயன்படுத்தப்பட்டது. தமிழ்நாட்டு மலை மக்கள் தான் முதன் முதலில் வில் அம்பைப் பயன்படுத்தியவர்கள். சேரர் களின் அரச முத்திரையாகவே வில் அம்பு அறியப்பட்டுள்ளது. கி.பி.300 ஆண்டுகளிலேயே, சேர நாட்டுடன் அசீரியர்கள் தொடர்பு கொண்டிருந்தனர். ஏறக்குறைய 300 பேர், அசீரியாவினின்றும் தமிழகத்துக்கு வந்து குடியேறியுள்ளனர். தமிழர்களுக்கும் அசீரியர்களுக்கும் இடையிலான அத் தொடர்புகள், தற்செயல் மற்றும் வணிகத் தொடர்புகளாகக் கருதப்பட இயலாது.

சிந்துவெளியில், கி.மு.10000 ஆண்டுக்காலம் முதலே, சிந்து ஆறு மற்றும் அதன் கிளை ஆறுகளில் வெள்ளப் பெருக்குகள் தோன்றியுள்ளன. அவ்வாறுகளும், பல்லாயிரம் ஆண்டுகளில், தங்கள் போக்கை மாற்றிக் கொண்டு ஓடியிருக்கின்றன. சிந்து வெளியில் அகழ்வாய்வுகள் நிகழ்த்தப் பட்ட இடங்களில் பெரும்பாலானவை ஆற்றங்கரை நகரங்களே. ஏறக் குறைய ஐந்துக்கும் மேற்பட்ட காலங்களில், சிந்து ஆறு, பல நகரங்களை மண் மேடுகளாக்கியுள்ளது. ஒவ்வொரு முறையும் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கின் போதும், ஒரு குறிப்பிட்ட அளவில், மக்கள் மெசபத்தோமியாவில் குடியேறியுள்ளனர். மெசபத்தோமியாவைச் சுற்றியுள்ள நாடுகளில், பல காலங்களில் சிந்து வெளி மக்களின் குடியேற்றங்கள் நிகழ்ந்துள்ளன. இதுவரை ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்ட 18 இனங்களில் அக்கால மொழிகள் அனைத்தும் தமிழ் மொழியுடன் தொடர்பு கொண்டுள்ளன. நூற்றுக் கணக்கான தமிழ்ச் சொற்கள் அம்மொழிகளில் காணப்படுகின்றன. 1963 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட நிக்கோலா இலெகோவரி என்பவருடைய மொழியியல் ஆய்வு நூலில், நடுத்தரைக் கடல் நாடுகளில் பேசப்பட்ட மொழிகளுக்கும், தமிழுக்கும் (திராவிடம் என்று கூறுகிறார்). உள்ள தொடர்புகளை அவர் வெளிப்படுத்தியுள்ளார். மெசபத்தோமியரும் தமிழரும்

ஓரின மக்களே என்று உறுதிபடக் கூறுகிறார். பலரும் அறிந்திராத பாஸ்க் (Basque) என்ற இன மக்களும் கூட, தமிழர்களே என்று தெரியப்படுத்து கிறார். அந்த வகையில், அசீரியர்களும் தமிழ்க்கிளையின் ஒரு பகுதியினரே என்ற முடிவுக்கு வரவேண்டியுள்ளது.

## அடிக்குறிப்புகள்

83. Assyrians : After the Akkadian Empire's fall, the greater remaining part of Assyria was geopolitical region and provnice of other nation between the mid 2nd century B.C and late 3rd century A.D, with a patch work of small independent Assyrian kingdoms adjacent to it. The region of Assyria fell under the successive control of the Medes, the Archamanid Empire, the Selucid Empire, the Parthian Empire, the Roman Empire, and the Sasanian Empire. The Muslims conquest of Persia in the mid seventh century finally dissolved it as a single entity, after which the remants of the Assyrian people gradually became an ethnic, linguistic, cultural and religious minority in the Assyrian home land, surviving there to this day, as an indegenous people of the region.
 - Parpola Simo, "National and Ethnic Identity in the Neo - Assyrian Empire and Assyrian Identity in Post Empire Times, Journal of Assyrian Academic studies, 2004.
84. Assur : Son of Shem, grand son of Noah (Genesis, 10:22). The etymology meaning of Assur, are uncertain. The origin of Ashur are not known - D.O.B. PP 62 - 63.
85. புறநானூறு, 228 : 2
86. மேலதே, 23 : 4
87. வில்லி பாரதம், 45 : 49.
88. Of the history of the kingdom of Assyria, little is known. In the Assyrian King's list, the earliest recorded was TUDIYA. In archaeological reports from Ebla, it appeared that TUDIYA's activities were confirmed with the discovery of a tablet where he concluded a treaty for the operation of a karum (traduig colony) in Elamite territory.
 - Georges Roux, "Ancient Iraq", P.187.
89. புறநானூறு, 335 : 7, மாங்குடி கிழார் பாடியது.
90. மேலதே, 269 : 6, ஔவையார் பாடியது.
91. ஆதாம் : எபிரேயத்தின் தாய்மொழி தமிழே, ம.சோ. விக்டர், 2004.
92. பரிபாடல் திரட்டு, 1 : 55.
93. Saggs, "The Might That was Assyria", P.24.
94. தமிழ் நாட்டுக் கிறத்துவம், ம.சோ. விக்டர், 2007.

95. Olmstead, A.T., "The calculated Frightness of Ashur Nazir Pal", Journal of the American Oriental Society 38, 1918, PP 209 - 263.

96. Homosexual : Assyria was open to homo sexual relationships between men. In the middle Assrian laws, sex crimes were punished identically whether they were homosexual or heterosexual. An individual with a higher social class faced no punishment for penetrating someone of lower social class, or whose gender roles were not considered solidly masculine. Oman texts referred to male homosexual acts without moral judgement or affirmation.
- Wayne R.Dynes, Taylor and Francis, "Homosexuality in the Ancient World, 1992.

97. Homo sexualism in the Biblical world ; A Historical perspective by Martti Nissinen, Fortness Press, 2004, pp.24-28.

98. Winkler, Church of the East ; A cocise History, P.1.

99. Under the Arabic Islamic empires, the Christian Assyrians were classed as Dhimmis, second class citizens that had certain restrictions imposed upon them. Dhimmis were excluded from specific duties and occupations reserved for Muslims, did not enjoy the same political rights as Muslims, their word was not equal to that of a Muslim in legal and civil matters without a Muslim witness, they were subjected to payment of a special tax (jizya) and they were banned from spreading their religion further in Muslim ruled lands. However personal matters such as marriage, divorce, property rights were governed by the cultural law of Assyrians.
- Clinton Bennet, Muslims and Modernity, continuum International Publishing Group, 2005, P.163.

100. The Church of the East formed a church structure the spread Nestorian Christianity to as far away as China, in order to proselytize away from Muslim ruled regions. In Iran and their home land in Mesopotamia, with evidence of their massive church structure being the Nestorian stela, an artifact found in china which documented over 100 years of Christian history in China from 600 - 781, A.D.
- Hill, Henry, "Light From the East. A Symposium on Oriental Orthodox and Assyrian Churches, Toronto, Canda, 1988, PP.108 - 109.

101. தமிழ் நாட்டுக் கிறித்துவம், ம.சோ.விக்டர், 2007.

102. The Assyrians have suffered seeing their ancient heritage desecrated, being systematically vandalised and destroyed by ISIS. These include the ruins of Nineveh, Kallu, Assur, Dur - Sharrukni and Hatra.
- ISIS destroy the oldest Christian Monastry in Mosul, Iraq. Al - Jazeera, 27.2.2015.

103. Assyrians in both northern Iraq, north east Syria and also central and southern Iraq have responded by forming armed Assyrian militias to defend their territories, and despite being heavily outnumbered and out gunned

have had success in driving ISIS from Assyrian towns and villages, and defending others from attack. Armed Assyrian milities have also joined forces with other peoples persecuted by ISIS and Sunni Muslim extremists, including the Kurds, Turcoman, Yezidis, Syriac - Aramean Christians, Shabaks, Armenian Christians, Kawilya, Mandeans, Circassians and Shia Muslim Arabs and Iraniyans.
- Martin Chulov, "Christian Militia in Syria defends ancient settlements against ISIS., The Guardian, 16.2.2016.

104. The descendant Eastern Aramaic dialects from the Neo - Assyrian Empire, as well as Akkadian and Mesopotamian Aramaic personal, tribal, family and place names, still survive to this day among Assyrian people in the regions of northern Iraq, south east Turkey, north west Iran and northest Syria that consituted old Assyria, and are spoken fluently by up to 1,000,000 Assyrians, with a further number having lesser and varying degress of flueney.
- George Roux, Ancient Iraq, 1964, P.308.

105. A Dictionary of an Ancient world, University of Chicago, The New York Times, dt.7.6.2011.

106. Gods of Assyrians : Gods other than Sur, within the Assyrian pantheon were Anu, Ball, Ea, Enlil, Ishtar, Shanash, Tammuz, Adad, Sui, Dagan, Ninurta, Nisroach, Nergal, Tiamat (demon god), Mullisu, Zababa, El and so on. There gods were gradually declined with the advent of Christianity between the first and tenth centuries, A.D.
- Parpola Simo, "Assyrian Identity in Ancient Times and Today, 2004.

107. The Assyrian people originally adhered to one of two churches - The Assyrian church of the East, an East Syrian Rite Church, or the Syriac Orthdox Church, a west Syrian Rite church. However, now there are nearly 20 different Assyrian Christian Churches including the ones followed by ethnically Malayali converts in India, known as, St.Thomas Christians.

108. Protestant Churches in Assyria :
1. The Assyrian Pentacostal Church
2. The Assyrian Evangelical Church

## 8. குடி (Guti) மக்கள்

வரலாற்றில் சில புகழ்பெற்ற இனங்களை வெல்வதின் மூலம், அறியப்படாத சில இனங்களும், வரலாற்றில் இடம் பெற்று விடுவதைக் காணலாம். அவ்வாறு வெளிச்சத்துக்கு வந்த இனம் தான் "குடி" என்பதாகும். குடி என்ற இனம், குடியம், குடியன் (Gutiam, Gutean), என்றவாறு பதிவு செய்யப்பட்டுள்ளது. தற்கால ஈரான் – ஈராக் எல்லைகளில் உள்ள சாக்ரோஸ் (Zagros) என்ற மலைத்தொடரில் வாழ்ந்திருந்த மக்களே குடி என்ற இனத்தைச் சார்ந்தவர்களாவர். அவர்களுடைய நாடு குடியம் (Gutium), என்றே சொல்லப்பட்டுள்ளது. தற்காலத்தில் ஈராக்கில் அறியப்படும் குர்து (Kurdu) இன மக்கள், குடி இன மக்களின் மரபில் வந்தவர்களாகவே கருதப் படுகின்றனர். குர்து மக்கள், குர்திஷ் (Kurdish), என்றும் அழைக்கப்படு கின்றனர். பெரும்பாலும் இவர்கள் இசுலாமியராகவே உள்ளனர். ஈரானிய மொழிகளில் ஒன்றாக குர்திஷ் உள்ளது. மொழியின் பெயராலேயே, அவ்வின மக்களும் குர்திஷ் என அழைக்கப்படுகின்றனர்.[109]

பொதுவாக ஒரு மொழியின் பெயராலேயே, அம்மொழி பேசும் மக்கள் அழைக்கப்படுகின்றனர். சுமேரிய மொழியைப் பேசியவர் சுமேரியர், எபிரேய மொழியைப் பேசியவர் எபிரேயர், அக்காடிய மொழியைப் பேசியர் அக்காடியர், அரபு மொழியைப் பேசியவர் அரேபியர் என்றவாறு பட்டியல் நீளும். தமிழர், தெலுங்கர், மலையாளி, கன்னடர் என்றும் அவை விரியும். தமிழ் நாட்டில் திராவிடம் பற்றிப் பேசுபவர்கள், உலகில் எங்கும் சொல்லப் படாத, கேள்விப்படாத புதிய கருத்தை முன் வைக்கிறார்கள். "நாங்கள் இனத்தால் திராவிடர்கள், மொழியால் தமிழர்கள்", என்பதாகும். திராவிடம் என்ற இனம் இருந்திருந்தால், திராவிடம் என்ற மொழி இருந்திருக்க வேண்டும். அவ்வாறு ஒரு மொழி இருந்ததில்லை. மொழியால் தமிழர் என்றால், இனத்தால் அவர் தமிழரில்லை என்றாகிறது. தமிழ்மொழி பேசுபவர்கள் தமிழர்களே. இதில் சிக்கல் என்னவென்றால், திராவிடக் கருத்தியலை முன் வைத்த, தற்போது வலியுறுத்துகின்ற எவரும் தமிழரில்லை. திராவிடம் என்ற பெயரில் தமிழரை ஏமாற்றி ஆள நினைக்கும்

ஒரு தமிழரல்லாத கூட்டம், எந்த நெறிமுறையும் இல்லாத (illogical) கொள்கை வடிவக் கருத்தியலே திராவிடம் ஆகும். வரலாறு தெரியாத திராவிடத் தலைவர்கள், தமிழரின் வரலாற்றையே மறைத்து வருகின்றனர்.

ஒரு மொழியால் அந்த இனம் அறியப்படவில்லையென்றால், அந்த மொழிக்கும் இனத்துக்கும் தொடர்பில்லை என்பது வரலாறு கூறும் செய்தி. எடுத்துக்காட்டு, சமற்கிருதம் என்ற மொழியின் உரிமையாளர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள், அம்மொழியின் பெயரை விடுத்து, தங்களை ஆரியர் என்று சொல்லிக் கொள்வதால், அந்த மொழிக்கும் இனத்துக்கும் தொடர்பில்லை என்பதை அறியலாம். அது போன்றே, தமிழும் திராவிடமும் கருதப்படும்.

தமிழருக்கு உரிய நாடு, தமிழ்நாடு எனப்பட்டது போல், குடி இனத் தவரின் நாடு, குடியம் என்றே அழைக்கப்பட்டது. குடி, குடியம் ஆகிய இரண்டு சொற்களும் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன. இவ்விரு சொற் களின் பொருளும், விளக்கமும் சொல்லப்படவில்லை. ஆய்வாளர்கள் அச் சொற்களுக்கான பொருள் தெரியவில்லையென்றும், மலைவாழ் மக்களா தலால், அவர்களுடைய மொழி எழுத்துவடிவில் பதிவு செய்யப்படவில்லை யென்றும் கூறுகின்றனர். ஆனால் குடி இன மக்களைப் பற்றி சுமேரிய, பாபிலோனிய, எபிரேய, எகிப்திய மொழிகளில் செய்திகள் உள்ளன. நாகரிகமற்ற இனங்களும், நாகரிக இனங்களை வென்று, நாடாளும் வாய்ப்புகளையும் பெற்றுள்ளன என்பதற்கு, குடி இனமக்கள் சான்றாக உள்ளனர்.

குள் என்ற வேர்ச் சொல்லுக்கு, குறுகியது, சிறியது என்று பொருள்.

குள் - குள என்று விரிந்து மேற்கண்ட பொருளையே குறித்தது.

குள் - குள - குளம்பு : கால் நடைகளின் சிறிய கால்பகுதி.

*"நவ்வி நோன் குளம்பு அழுந்தென"*[110]

குள் - குள - குளவி : காட்டு மல்லி, மிகச் சிறிய பூ.

*"குளவி மொய்த்த அழுகல் சில் நீர்"*[111]

குள் என்ற வேர், குடு - குடி என விரிந்தது.

குடு - குடும்பம் : தாய் தந்தை மக்கள் கொண்ட சிறு குடி.

*"குடும்பத்தைக் குற்றம் மறைப்பான்"*[112]

குடு - குடி என நீண்டது. ஒரு சிறிய பரப்பளவைக் கொண்ட ஊர்,

"*துறை கெழு சிறுகுடி*"[113]

ஊரில் வாழும் மக்கள்,

"*அத்தம் நண்ணிய அம்குடிச் சீறூர்*"[114]

மக்களில் தொழில் பல செய்வோர்,

"*துடியன், பாணன், பறையன், கடம்பன் என*
*இந்நாள் அல்லது குடியும் இல்லை*"[115]

என மேற்கண்டவாறு, குடி என்ற சொல்லுக்கான பொருள் அறியப்படும்.

குடி + அம் : குடியம் : அம் - தண்மையான, அழகிய, சீரான.

குடியம் : ஒழுங்குடைய அழகிய ஊர், நகரம், நாடு என விரியும்.

தற்கால விளக்கப்படி, பழங்கடி என்ற சொல், மலைவாழ் மக்களையே குறிப்பிடுகின்றது. (Tribes) தற்காலத்தில் அப்பழங்குடியினர், நிலையாக ஓரிடத்தில் வாழ்ந்து வந்தாலும் தொன்மைக் காலங்களில், அவர்கள் இடம் விட்டு இடம் பெயரும் நாடோடிக் குழுக்களாகவும் இருந்தனர். சுமேரியர் காலத்துக்கு முன்பு (கி.மு.4500), மெசபத்தோமியா உள்ளிட்ட பல நாடுகளில் வாழ்ந்திருந்தவர்கள், நாடோடி பழங்குடி இனத்தவராகவே அறியப்பட்டுள்ளனர். பெரும்பாலும் மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் அம்மக்கள் வாழ்ந் திருந்தனர். கி.மு.4000 ஆண்டுகளில், அந்த இனத்தவரின் மக்கள் தொகை, பெருமளவில் உயர்ந்து காணப்பட்டது. கி.மு.3000 ஆண்டுகளில், ஒரு நாட்டின் தவிர்க்க இயலாத சமூகமாக அவர்கள் உருவெடுத்தனர். சுமேரியர் நாகரிகம் மெசபத்தோமியாவில் அறிமுகம் செய்யப்பட்ட பிறகு, பல பழங்குடிச் சமூகத்தினர், நகர வாழ்க்கைக்குத் திரும்பினர். அவ்வாறு நகர வாழ்க்கைக்குத் திரும்பிய மெசபத்தோமிய பழங்குடியினரே, அக்காடியர் எனப்பட்டனர். சுமேரியரின் மொழி, பண்பாடு, நாகரிகக் கூறுகளுடன் கலந்த அக்காடியர்கள், சுமேரியருக்குப் பின் ஆளும் சமூகமாகவும் உருவெடுத்தனர். நாளடைவில், தங்களை வளர்த்துவிட்ட சுமேரியர்களையே ஒதுக்கித் தள்ளவும் துணிந்தனர்.

அக்காடிய சார்கோன் காலத்தில், அதுவரை உலகம் கண்டிராத அளவில், அக்காடியப் பேரரசு விரிவடைந்திருந்தது. அப்பேரரசை வெல்ல எவரும் துணியவில்லை. அப்போது எவரும் அக்காடிய அரசு ஒரு நாள் மறைந்து போகும் என்றும் கருதவில்லை. பேரரசின் வீழ்ச்சிக்கு இயற்கையே காரணமாயிற்று. பருவங்கள் மாறி மழை பொய்த்தது ; ஆறுகள் வறண்டன. ஆசியாமைனர், அரேபியா, சிந்துவெளி என அவர்கள் கொண்டிருந்த

வணிக உரவுகள் தளர்ந்தன. குடி என்ற இனமக்களின் வேட்டைக்காடாக் மெசபத்தோமியா மாறியது[116]. அடுத்த நூறு ஆண்டுகள், குடி ஆட்சி மெசபத்தோமியாவில் நிலை கொண்டது. மெசபத்தோமியாவைப் பிடித்த குடியினர், தெற்கே தமது பார்வையைத் திருப்பினர்.

மெசபத்தோமியாவில், தொடக்கத்தில் குடி இனத்தவர் நேரிடையான போரில் ஈடுபடவில்லை. இரவில் தாக்குவதும் பகலில் மறைந்து கொள்வதும் என, முறையற்ற போர்களில் ஈடுபட்டு வந்தனர். ஏறக்குறைய தற்காலத்தில் அறியப்படும் கொரில்லாப் போர்முறை போன்றது. அக்காடியப் படையை வெல்வதற்கான பெரும்படையையும் குடி இனத்தார் பெற்றிருக்கவில்லை. குடியினர் தொடுத்த மறைமுகப் போருக்கு இயற்கை துணைநின்றதால், அக்காடியர்களின் ஆட்சி வீழ்ந்தது.

கனான் நாட்டில், எரிக்கோ, செக்செம், பெத்சாண், கெசர் போன்ற இடங்களில் நகர ஆட்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. கனான் எனப் படும் பாலத்தீன நாடு மெசபத்தோமியாவைப் போன்ற நாகரிகக் கட்டமைப்பை என்றுமே உருவாக்கிக் கொண்டதில்லை. குடி இனத்தார் பாலத்தீனில் நுழைந்து பெரும் அழிவுகளைத் தோற்றுவித்தனர். எருசலேம் நகரைக் குடி இனத்தார் தாக்கியது பற்றிய செய்தியை, எசக்கியெல் என்ற அறிஞர், விவிலிய நூலில் குறிப்பிட்டுள்ளனர். (Ezekiel, 23 : 23). எபிரேய மொழியில் குடி இனத்தாரை, கோவர்கள் (Ko - as) என்று குறிப்பிடப்பட் டுள்ளனர். கோவர் என்ற தமிழ்ச்சொல், முல்லை நிலத்து மக்களைக் குறிப்பதாகும். கோவர்களின் கொடுஞ்செயல்களை எசக்கியெல் சாடுகிறார்.

குடி இனத்தார் எகிப்துக்குள்ளும் நுழைந்தனர். கி.மு.29 ஆம் நூற்றாண்டில், மெம்பிஸ் நகரத்திலிருந்து எகிப்திய ஆட்சி நடைபெற்று வந்தது. அதுவரை இல்லாத அளவில், எகிப்து பல துறைகளிலும் முன்னேற்றம் கண்டு வந்தது. குடி இனத்தார், மன்னர்களின் குடும்பங்களில் புகுந்து குழப்பங்களை ஏற்படுத்தினர். அரச பதவிக்குப் பலர் சண்டையிட்டுக் கொண்டனர். நைல் ஆற்றுக் கழிமுகப்பகுதிகளில், குடி இனத்தார் கொள்ளை கொலைகளில் ஈடுபட்டனர். ஆட்சியில் குழப்பங்கள் இருந்ததால், குடி இனத்தாரை அடக்க எவரும் முன்வரவில்லை. எகிப்தில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்தது. அக்குழப்பங்களில், தங்களுக்கு வேண்டியவற்றைச் சூறையாடிவிட்டு, மெசபத்தோமியா திரும்பினர். குடியினத்தாரின் முறையற்ற போர் முறைகள், மெசபத்தோமியாவில் நிலவிய வறட்சி, பாலத்தீனத்தில்

இருந்த வலுவற்ற நகர அரசுகள், எகிப்தில் மன்னர் பதவிக்காக ஏற்பட்ட உரிமைப் போர் எனப் பல்வேறு காரணங்களால், முறையான போர் எதனையும் நடத்தாமலேயே, குடி இனத்தார், மெசபத்தோமியாவில் நூறாண்டு காலம் நிலைத்திருந்தனர்.

குடி இனத்தாரின் முன்னோர்கள், அவர்கள் பேசிய மொழி, அவர்களுடைய வரலாற்றுப் பின்னணி எவையும் இதுவரை தெளிவாக அறியப்படவில்லை. தங்களுக்கென எந்தக் குறிப்புகளையும் பதிவுகளையும் அவ்வினத்தார் விட்டுச் செல்லவில்லை. மற்ற நாடுகளில் குடி மரபினர் பற்றிச் சொல்லப்பட்டுள்ள குறிப்புகளே, இவர்களைப் பற்றி அறிய உதவுகின்றன[117]. சுமேரியக் குறிப்புகள், குடி இனத்தாரை மகிழ்ச்சியற்ற மக்கள் (unhappy people) என்று கூறுகின்றன. குடி மரபினர் கேளிக்கைகள், விருந்து, இசை, நடனம் போன்ற பொழுது போக்குகளைப் பற்றி அறியாதவர்கள் என்றும், நாகரிகமற்ற மலைவாழ் மக்கள் என்றும், பேராசை வெறி பிடித்தவர்கள் என்றும் கூறுகின்றன[118].

குடிமரபினரின் பெயர்கள், சுமேரிய மன்னர்களின் பட்டியலில் உள்ள குறிப்புகளில் காணப்படுகின்றன. அக்காடிய, சுமேரிய, கித்திய, ஊரிய, ஈழ மொழிகளில் இவர்களுடைய பெயர்கள் எவையும் காணப்படவில்லை. இந்திய - ஐரோப்பிய மொழிக் குடும்பம் அல்லது தோச்சாரியன் (மைய ஆசியப் பகுதி மக்கள்) மொழி வகையைச் சார்ந்ததாக இருக்கலாம் என்பது ஆய்வாளர்களின் கருத்து. எது எவ்வாறாயினும், குடி மரபினரின் மொழி, எவ்வகையான கட்டமைப்பையும் கொண்டிருக்கவில்லை என்பது பொதுக் கருத்தாகும்.

கி.மு.1000 ஆண்டுகளில், மெசபத்தோமியாவின் தென்பகுதி, வடமேற்குப் பகுதி, சாக்ரோஸ் மலைக்கும் தைகிரிஸ் ஆற்றுக்கும் இடைப்பட்ட பகுதி ஆகியவற்றில் வாழ்ந்திருந்த மலைமக்கள் அனைவருமே குடி என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். சைரஸ் (Cyrus) என்ற பாரசீக மன்னன் ஆட்சியில், கூவாரு (Gubaru) என்ற படைத்தலைவனை, குடியம் பகுதிக்கு ஆளுநராக நியமித்த செய்தி கொல்லப்பட்டுள்ளது. அக்காடியர் ஆட்சியில், குடி மரபினர், பாபிலோனுக்குத் திறை செலுத்தி வந்தனர் என்று அக்காடியக் குறிப்புகள் கூறுகின்றன. அக்காடியர் ஆட்சியில், குடியம் திறை செலுத்தும் பகுதியென அறியப்படுகின்றது. நாரம் சின் ஆட்சியின் போது, குடி மரபினர் மீது தொடுக்கப்பட்ட போரில், அக்காடிய தரப்பில் 3,60,000 படை வீரர்கள்

இருந்ததாகவும், குடி அரசன் குளான் (Gulaan) என்பவனை வென்றதோடு, 90000 குடிப்போர் வீரர்கள் கொல்லப்பட்டதாகவும், அக்காடியச் செய்திகள் கூறுகின்றன. மற்றொரு குறிப்பில் குடிமரபினர் தாங்கிக் கொள்ள இயலாத அளவில், பெரும் பொருளாதாரச் சுமை அவர்கள் மேல் வைக்கப்பட்டது என்றும் சொல்லப்பட்டுள்ளது (Yoke was imposed on Gutim).

அக்காடியர்கள் வலிமையுடன் இருந்த காலத்தில், குடி மரபினர் அடங்கியிருந்தனர். அவர்கள் வலிமை குன்றிய காலங்களில், மறைந் திருந்தது தாக்குவதும் பின்னர் ஓடிப் போவதும் என்ற கோழைத்தனமான போர் முறையை (Hit and run) க் கையாண்டதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அத்தகைய தாக்குதல்களை எதிர் கொள்ள அக்காடியப் படையினரால் இயலவில்லை. ஈழம், லாகேஷ், சுமேரியப் பகுதிகள் என எவற்றையும் குடி மரபினர் விட்டு வைக்கவில்லை. ஈரிடு பைசர் (Eridupizer) என்ற குடி இனமன்னன் சிலையொன்று நிப்பூரில் கண்டெடுக்கப்பட்டது. அச்சிலையின் கீழ், "நான்கு திசைகளையும் வென்ற குடியம் மரபின் அரசன்" என்று எழுதப்பட்டுள்ளது. நான்கு திசைகளையும் வென்ற மன்னன் (King of four Quarters) என்ற சொற்றொடர், பெரும்பாலான மன்னர்கள் பற்றிய குறிப்புகளில் காணப்படுகின்றது.

குறிப்புகளில் குடி மரபில் சிறப்பான மன்னர்கள் இருந்ததற்கானச் செய்திகள் இல்லை. பிற்காலத்தில் அறியப்பட்ட செய்திகளில்,

"நாரம் சின் பாபிலோனிய மக்களைக் கொடுமைப்படுத்தியதைக் கண்ட கடவுள் மருது – க, குடி மரபினருக்கு ஆசி வழங்கி, குடி மரபை ஆட்சியில் அமர்த்தினான். குடிமரபினருக்கு, மருது – க வை எவ்வாறு வழிபட வேண்டும், எவ்வாறு மகிழ்ச்சிப்படுத்த வேண்டும் என்பது தெரியவில்லை. மருத – கவுக்குப் படைக்கும் முறைகள் பற்றியும் அறியாதிருந்தனர். அதனால் மருது – க கடவுள், குடி இனத்தார் ஆட்சிக்கும் முடிவு கட்டினான்". ஓராட்சி நிலை பெறுவதும், தொடர்வதும், மறைந்து போவதும், கடவுள் கையில் தான் உள்ளது என்ற நம்பிக்கையை மேற்கண்ட குறிப்பு வெளிப்படுத்துகிறது.

உடு ஏங்கல் (utu - Engal) என்ற மீனவன், கடவுளுக்குப் படைப்பதற் காக ஒரு மீனைப் பிடித்தான். அதனை மருது – க கடவுளுக்கென அவன் பிடித்தான். அதனை, படைப்பதற்கு முன், அம்மீனவனிடமிருந்து, குடி இனத்தவர் அம்மீனைப் பறித்து விட்டனர். அதனால், சினம் கொண்ட மருது – க, குடி மரபின் ஆட்சியை அகற்றிவிட்டு, உடு ஏங்கல் என்ற மீனவனை அரசனாக்கி னான். இப்படியும் ஒரு கதை சொல்லப்பட்டுள்ளது.

ஆட்சியிழந்த குடி மரபினருக்குப் பின், ஊர் - நம்மு (ur - Nammu) என்ற சுமேரிய மரபினன், ஆட்சியைப் பிடித்தான். இவனைத்தான் உடு ஏங்கல் என்ற மீனவன் என்பதாகச் சொல்லப்படுகிறது. மீனவன் என்ற குறிப்பு, தமிழர்களை, சிறப்பாக பாண்டியர்களைக் குறிக்கின்றது.

நம்மு - ஊர் : நம்மரபினன் என்ற பொருளிலோ, அல்லது.

ஊர் - நம்பி : என்ற பொருளிலோ சொல்லப்பட்டிருக்கலாம்.

இரண்டு சொற்களும் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன.

ஊர் நம்மு, சுமேரியரின் மூன்றாம் மரபினனாக, கி.மு.2050 இல் ஆட்சிப் பொறுப்பேற்றான். ஊர் நகரிலிருந்து குடி மரபினர் முற்றிலுமாக வெளியேற்றப்பட்டனர். பின்னர் அறியப்படும் சுமேரியப்பாடல் ஒன்றில், குடியருடன் நடந்த போரில் ஊர் நம்மு கொல்லப்பட்டான் என்றும், அவனுடைய படைகள் அவனைக் கைவிட்டு விட்டு ஓடி விட்டதாகவும் சொல்லப்பட்டுள்ளது.

குடி மரபினர் வெள்ளை அல்லது வெளுத்த உடலைக் கொண்டிருந்தனர் என்பர். உயரமான நல்ல உடற்கட்டுள்ளவர்களாக இருந்தனர். விவிலியத்தின் பழைய ஏற்பாட்டு நூலில், அவ்வாறு சொல்லப்பட்டுள்ளதை மேற்கோள் காட்டுகின்றனர். ஆய்வாளர்கள் முறையே ஹென்றி[119], அசீரிய வரலாற்று ஆய்வாளர் பிஞ்சஸ்[120], தொல்லியல் அறிஞர் லியோனார்டு ஊல்லி[121], ஆய்வாளர் இக்னேஸ் கெல்ப்[122], போன்றோர் மேற்கண்ட கருத்தை உறுதிப்படுத்துகின்றனர். ஜூலியஸ் ஓப்பர்ட் என்ற ஆய்வாளர், குடி மரபினர் அழகான தலைமயிரைக் கொண்டிருந்தனர் என்று கூறுகிறார். அவர்களைப் பற்றிய குறிப்புகளில், நம்ரம் (Namram) என்ற சொல் காணப்படுகிறது. அதற்கு, மாநிறம் (light coloured) என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. மாநிறம் என்பதே, மம்ரம் - நம்ரம் எனத் திரிந்துள்ளது எனக் கருதலாம். மாநிறம் என்ற கருத்தை மேலும் சில ஆய்வாளர்கள் உறுதி செய்கின்றனர்[123].

குடி என்ற சொல்லுக்கான பொருளாக, தற்கால ஆய்வாளர்கள், அனைவரும் (all) என்ற வாறு விளக்கமளித்துள்ளனர். அனைவரும் என்ற விளக்கம், சாக்ரோஸ் மலைப் பகுதியில் வாழ்ந்திருந்த மக்களைக் குறிக்கும் என்று கூறுகின்றனர். ஏறக்குறைய குடி மக்கள் என்ற தமிழ்ப் பொருளை நெருங்கியே அவர்களது விளக்கங்ள் உள்ளன என்று கூறலாம். தற்கால குர்து இனத்தார், ஷியா என்ற இசுலாமியப் பிரிவினராக உள்ளனர்.

இவர்களின் முன்னோர்களே குடி இன மக்கள் என்று சொல்லப்படுகிறது. ஷியா பிரிவைச் சார்ந்த இசுலாமியர்களாக இருப்பதால், ஈராக், அரேபியா போன்ற சன்னி பிரிவைச் சேர்ந்த இசுலாமியர்கள், இவர்களுக்கு எதிர் முகாமில் உள்ளனர். கிரேக்க அறிஞர் தாலமி (கி.மு.150), குடி இனத்தார் பற்றிய குறிப்புகளையும் தந்துள்ளார். இறுதியாக, குடி இனத்தாரை, இந்திய – ஈரானிய பழங்குடியினராக, தற்கால ஆய்வாளர்கள் முடிவு செய்துள்ளனர்.

குடி இனத்தாரின் இந்தியத் தொடர்பை தற்கால ஆய்வுகள் உறுதி செய்துள்ளன. ஒரு காலத்தில் நகரிய நாகரிக மக்களாக இருந்த குடி மரபினர், சிந்து வெளியினின்றும், ஆற்று வெள்ள அழிவின் காரணமாக, ஈரானில் சென்று குடியேறியுள்ளனர். பழைய வாழ்க்கை முறை மாறி, மலைமக்களாக வாழ்ந்துள்ளனர். குடிமரபினரின் பெயரும் வாழ்க்கை முறைகளும், அவர்களைத் தமிழ் இனத்தோடு இணைக்கின்றன. வழக்கம் போல, தமிழர் வரலாற்றுக் கண்ணோட்டத்தில் பார்க்காத ஆய்வாளர்கள், தங்கள் சிந்தனைகளில் தோன்றிய பல்வேறு செய்திகளைப் பதிவு செய்துள்ளனர். வேளாண் மக்கள், குறிஞ்சி நில மக்களாக மாறியதே, குடி மரபினரின் வரலாறு என்க.

## அடிக்குறிப்புகள்

109. The Guti :

Derived by the known exonyms Gutians or Guteans. They were a nomadic people of the Zogros Mountains (on the border of modern Iran and Iraq) during ancient times. Their home land was known as Gutium (or Sumerian Guti - um). The Guti are often regarded as precursors of the modern Kurds.

- Early History of Gutians.

110. நற்றிணை, 124 : 6.

111. குறுந்தொகை, 56 : 2

112. திருக்குறள், 103 : 9

113. குறுந்தொகை, 145 : 1

114. மேலதே, 41 : 3

115. புறநானூறு, 335 : 7 - 8.

116. George, Roux, Ancient Iraq, Pelican, 1966.

117. Guti People : Little is known of the origins, language or material culture of the Guti, as contemporary sources provide few details and no artifacts have been positively identified.

- Patton Laurie, L., The Indo - Aryan controversy, 2004.

118. Sumerian Sources : Sumerian sources portray the Guti as an "unhappy" barbarious and rapacious people from the mountains, apparently the central Zagros, east of Babylon, and north of Elam.
- Eller, Jack David, "Kurish History and Kurdish Identity", P.153.

119. Henry Hoyle Howorth, "The Early History of Babylonia", The English Historical Review, Vol - 16, No.61, 1901, P.32.

120. Theophilius Goldridge Pinches, "The Old Testament in the Light of the Historical Records of Assyria and Babylonia", Kessinger Publishing, (2005 re-print), P.156.

121. Leonard Woolley, "The Sumerians", Clarenden Press, 1929, P.5.

122. Ignace Gelb, "Hurriand and Sumerians", Studies in Ancient Oriental Civilization, 1944, P.88.

123. The identification of the Gutians as fair haired first came to light when Julius oppert (1877) published a set of tablets he had discovered which described Gutian slaves as "namrum", one of its many meanings being "light coloured". This racial character of the Gutians as blondes or being light skinned was also claimed by Georges Vacher de Lapouge in 1899 and later by historian Sydney smith in his Early History of Assyria. (1928), vol.I, 1928, P.72.

## 9. கனானியத் தமிழர்கள் (Canaanites)

கனான் என்பது பழைய பெயராகும். அப்பகுதி பாலத்தீனம் என்றும் அழைக்கப்பட்டது. கி.மு.1100 ஆண்டுகளில், எபிரேயர் என்ற யூதமக்கள், அந்நாட்டை வென்று குடியேறிய பிறகு, இசறாயெல் என்று அழைக்கப் பட்டது. இசறாயெல் ஆட்சி பிளவுபட்டவுடன், வட பகுதி இசறாயெல் என்றும், தென்பகுதி யூதேயா என்றும் அழைக்கப்பட்டது. கி.மு.550 ஆண்டுகளில், பாரசீகரும் தொடர்ந்து கிரேக்கரும், அவர்களைத் தொடர்ந்து உரோமர்களும் அப்பகுதிகளை ஆட்சி செய்தனர். கி.பி.முதல் நூற்றாண்டில், யூதர்களில் பெரும்பாலோர், (75 விழுக்காட்டுக்குமேல்), வெளி நாடுகளுக்குச் சென்று விட்டதால், மீண்டும் அப்பகுதி பாலத்தீனம் என்றே அழைக்கப்பட்டு வந்தது. 2000 ஆண்டுகளுக்குப் பிறகு ஐ.நா. பொதுச்சபை, யூதர்களுக்கு அவர் களது நாட்டைத் திருப்பிக் கொடுத்தது. அதன் பின்னர், 1948 ஆம் ஆண்டு முதல், இசறாயெல் என்ற பகுதியும், இசுலாமியர்களுக்கு பாலத்தீனம் என்ற பகுதியும் ஒதுக்கப்பட்டன. நடுத்தரைக் கடலையொட்டிய கிழக்குக் கடற்கரைப் பகுதி, பாலத்தீனம் என்று இப்போது அழைக்கப்படுகிறது.

கனான் என்ற பழைய பெயர், கி.மு. 1100 ஆண்டுகளிலேயே மறைந்து, போயிற்று. யூதர்கள், அந்நாட்டைக் கைப்பற்று முன்பாக, கனானியர் என்ற இனத்தார் வாழ்ந்திருந்ததாகச் சொல்லப்படுகின்றது. அவர்கள் ஓரினமாக இல்லாமல், மேலும் சில இனங்களோடு கலந்து வாழ்ந்திருந்ததாகவும் சொல்லப்படுகின்றது. அம்மக்கள் எக்காலத்தில் அப்பகுதியில் குடியேறினர் என்பதற்கானச் சான்றுகள் கிடைக்கவில்லை. கடந்த 19 ஆம் நூற்றாண்டில் கார்மலை (Mt.Carmel) எனப்படும் அந்நாட்டுப் பகுதியில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகளில், அம்மலைப் பகுதியில், 75000 ஆண்டுகளுக்கு முன்பே மக்கள் வாழ்ந்திருந்தனர் என்பதைக் கண்டுபிடித் தனர். அடுத்து எரிக்கோ (Jerico) என்ற நகரில், 50000 ஆண்டுகளுக்கு முன்பே மக்கள் வாழ்ந்திருந்தனர் என்றும் அறியப்பட்டது. அம்மக்கள் அப்பகுதியிலேயே வாழ்ந்திருந்தனரா அல்லது வேறு பகுதிகளுக்குச் சென்று விட்டார்களா என்பது பற்றித் தகவல்கள் கிடைக்கவில்லை.

மரபு வழிச் செய்தியின்படி, நாகன் என்ற நோவாவின் இரண்டாம் மகன் காம் (Ham) என்பவனின் மகனாக கனான் (Canaan) என்பவன் சொல்லப்படுகிறான். அவன் மரபினர் வாழ்ந்த நாடே கனான் என்று சொல்லப்பட்டது என்பர். விவிலியத்தைத் தவிர, வேறு சான்றுகள் அதனை உறுதிப்படுத்தக் கிடைக்கவில்லை. காம் என்பவன், நாகனின் (தந்தையின்) வெறுப்புக்கு ஆனானதாகவும், அவன் மரபினர், மற்றவர்களுக்கு அடிகளா யிருப்பார்கள் என்று கூறியதாகவும் ஒரு செய்தி, விவிலியத்தில் சொல்லப் பட்டுள்ளது. காம் என்பவன் மரபினர் அல்லது அடிமைகளாக இருந்தார்கள் என்பதற்கும் சான்றுகள் இல்லை. எவ்வாறாயினும், கனான் என்ற நாடு, பிற்காலத்தில் அறியப்படும் பல சிறப்பான வரலாறுகளுக்கு அடிப்படையாக இருந்துள்ளது என்பதை மறுப்பதற்கில்லை.

கனான் என்ற சொல்லுக்கான மூலமும் பொருளும் தெரியவில்லை யென ஆய்வாளர்கள் கருதுகின்றனர். மெசபத்தோமியாவில் நூசு (Nuzu) நகர அகழ்வாய்வின் போது, கினலு (Kinalu) என்ற சொல், களிமண் தட்டு களில் காணப்பட்டது. அச்சொல்லைச் சிலர், கனான் என்ற சொல்லோடு இணைத்துப் பார்க்க முற்பட்டனர். மேட்கினாகி (Mat Kniahi) என்ற சொல்லில், மேட் என்பது மேட்டு நிலம் என்றும், கினாகி என்பது கம்பளி என்றும் பொருள் கொண்டு, கம்பளி செய்யப்படும் மேட்டு நிலம் (upper land of wool) என்று பொருள் கொண்டனர். மேட் என்பது, மேடு என்ற தமிழ்ச் சொல்லின் திரிபு. மெசபத்தோமியாவின் கிழக்குப் பகுதியில் மெடஸ் (Medes) என்ற மேட்டு நிலம் பற்றிய செய்திகள் உள்ளன. கினாகி என்பது கம்பளி என்றாலும், அது கனான் நாட்டுக்குப் பொருந்தாது என்றும் சில ஆய்வா ளர்கள் கூறுகின்றனர். கம்பளி என்ற பொருளின் கறுமை நிறம் பற்றி அவ்வாறு கூறியிருக்கலாம் என்பது சிலரது கருத்து. இதுவரையில் கனான் என்ற சொல்லுக்கான தெளிவான விளக்கத்தை எவரும் கூற முன்வர வில்லை.

கறுமை நிறத்தோடு சில ஆய்வாளர்கள், கனான் என்ற சொல்லைத் தொடர்படுத்தியதால், அந்த நோக்கில் அச்சொல்லை விளக்க முற்படலாம்.

கல் என்ற தமிழின் வேர், கன் என நீண்டது.

கன் : கறுமை. கன்மலை : கறிய மலை.

இசறாயெல் நாட்டில், கார்மலை (Carmel) என்ற மலை, கறிய நிறமான மலையென்றே சொல்லப்படுகிறது.

கன் மலை : "கன் மலை மார்பும்"[124]

கன் மணி : கறிய கல். "கன்மணி தாமரைக் கையில்"[125]

கல் - கன் : கறுமை நிறம் கொண்ட உலோகம்.

கன்மம் - கனிமம் என்றானது. கனிமம் : உலோகம்.

கன் என்ற உலோகத் தொழிலைச் செய்தவர் கன்னார் எனப்பட்டனர்.

கன் + நெல், கன்னெல், கன்னல் எனப்பட்டது. கறுப்புநிறமான கரும்பு.

*"கன்னல் குடம் திறந்தால் ஒத்து ஊறி"*[126]

கன்னன், கன்னான் என்ற சொற்கள், கறிய நிற உலோகங்களைக் கையாள்பவன் என்று அறியப்படும்.

இரும்பைக் காய்ச்சி உருக்கி, கருவிகளைக் செய்பவனை, காயன் (Cain) என்று எபிரேய மொழி கூறுகிறது. உலோகங்களை வெப்பமூட்டி, துவட்டி எடுப்பவனை, துவள் காயன் (Tubal Cain) என்றும் கூறுகிறது.[127]

பொதுவாக கனான் என்ற நாடு, எகிப்துக்கும் சிரியாவுக்கும் இடையில் இருந்தது என்பர். அப்பகுதியிலேயே யூத மக்கள் குடியேறினர். ஆனால் பிற்காலத்தில் அந்நாட்டின் எல்லைகள் மாறிக் கொண்டே இருந்தன. முதன் முதலில் கனான் நாட்டில் கி.மு.3000 ஆண்டுகளில், மக்கள் வாழ்ந்திருந்ததாகச் சொல்லப்படுகிறது. அவர்களை, வடமேற்கு செமிட்டிக் மொழி பேசிய மக்கள் என்று கூறுகின்றனர். இயற்கை வளங்களோ, கனிம வளங்களோ எவையுமில்லாத அந்நாட்டில், மக்கள் குறைந்த எண்ணிக்கையிலேயே வாழ்ந்திருந்தனர். முதன் முதலில், தம்மை "மருது மக்கள்" எனக் கூறிக் கொண்ட அமோரியர்கள்தாம் கனான் நாட்டின் மீது படையெடுத்து வந்தனர் கி.மு.2200 ஆண்டுகளில் அவர்கள் படையெடுப்பு நிகழ்ந்தது. ஏற்கனவே அவர்கள் மெசபத்தோமியாவைக் கைப்பற்றி யிருந்தனர். மருது மக்களாகிய அமோரியரும், கனான் மரபினரே என்றும் சொல்லப்படுகிறது. அப்படையெடுப்பிற்குப் பின், அம்மக்களில் பலர் கனான் நாட்டிலேயே தங்கி விட்டனர். கனானியருடன் அமோரியரும் கலந்தனர். விவிலியத்தில் அமோரியரைப்பற்றிய குறிப்புகள் பல உள்ளன[128]. அமோரியன் ஒருவன், அபிரகாமுக்கு நண்பனாக இருந்தான் என்றும் விவிலியம் கூறுகிறது.

கி.மு.2000 ஆண்டுகளில், பல்வேறு செமிட்டிக் அல்லாத முரட்டுக் கூட்டத்தார் கனான் நாட்டின் மீது படையெடுத்து வந்துள்ளனர். அவர்களின் குடி என்ற இனம், கனான் நாட்டைச் சூறையாடியது. தொடர்ந்து ஊரியர்

களும், கித்தியர்களும் (Hurrians and Hittites) கனான் நாட்டில் நுழைந்தனர். அதனால் பலர், உயிருக்கு அஞ்சி எகிப்துக்கும் ஓடிப் போனார்கள். கி.மு.2000 - 1300 ஆண்டுகளில் அந்நிகழ்வுகள் நடந்தன. அவ்வாறு எகிப்துக்கு ஓடிப் போனவர்களில், எபிரேய மக்களும் அடங்குவர். அவர்கள் அனைவரும் எகிப்தில் பிற்காலத்தில் அடிமைகளாயினர். கி.மு.1300 ஆண்டுகளில் கனான், எகிப்தியர்களின் ஆட்சியின் கீழ் வந்தது. கனானில் இருந்த சில நகர அரசுகள், எகிப்துக்குத் திறை செலுத்தி வந்தன. எகிப்தியர் ஆட்சியில், கனானில் எவ்வகையான முன்னேற்றமும் ஏற்படவில்லை. கி.மு.1750 ஆண்டுகளில், கனானில் ஏற்பட்ட கடும் வறட்சியின் காரணமாக, மேலும் பலர் எகிப்துக்குக் குடிபெயர்ந்தனர். அம்மக்களைக் கொண்டே, எகிப்தில் கட்டிடங்களும், பிரமிடுகளும் கட்டப்பட்டன என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

முற்றிலும் வலிமையிழந்த நாடாக மாறிப்போன கனான் மீது, கரட்டுத் தீவினின்றும் (Crete island) குடி பெயர்ந்து, கனானின் மேற்குப் பகுதியில் குடியேறிய பிலித்தியர் என்ற முரட்டுக் கூட்டம், அவ்வப்போது, கனான் நகரங்களைச் சூறையாடி வந்தது. இறுதியில், கி.மு.1150 ஆண்டுகளில், மோசே தலைமையில், எகிப்தினின்றும் வெளியேறிய எபிரேய மக்கள், ஓசுவா என்பவன் தலைமையில், கனான் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர். கனான் என்ற பெயர் மறைந்து, எபிரேயர்களால், இசறாயெல் என்ற புதுப்பெயர் அந்நாட்டுக்குச் சூட்டப்பட்டது. (அபிரகாமின் மகன் ஈசாக்கின் மகன் யாக்கோபு என்பவனுக்கு, இசறாயெல் என்ற பெயரும் உண்டு. அவன் நினைவாக, அவனது மரபினர், புதியதம் நாட்டுக்கு இசறாயெல் என்று பெயர் சூட்டினர்). அதன் பிறகு நடந்த நிகழ்வுகள், எபிரேயர் அல்லது யூதரின் வரலாறாகக் கருதப்படும்.

கனானியர் வரலாற்றில் எந்த முத்திரைகளையும் பதித்தவில்லை. மெசபத்தோமிய, எகிப்திய நாகரிகங்கள் உச்சத்தில் இருந்த காலத்தில் கூட, கனானியர் அவை பற்றியெல்லாம் அறிந்தவர்களாகக் கூட கருத இயல வில்லை. பிற்கால ஆய்வாளர்கள், போணீசியர்கள், அமோரியர் ஆகிய இனத்தவரும், கனானியர் என்றே கூறுகின்றனர். வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட இனங்கள் பற்றிய தெளிவான முடிவுகள் எவற்றையும் இதுவரை ஆய்வாளர்களால் அறிய இயலவில்லையென்பதால், தொடர்பற்ற பல செய்திகளை வரலாற்றுச் செய்திகளாகப் பதிவு செய்துள்ளனர்.

## அடிக்குறிப்புகள்

124. ஓட்டக்கூத்தர், 1:17.

125. திருமந்திரம், 1403.

126. பெரியாழ்வார், 1:17:4.

127. Tubal Cain : The ancestor of all who forge instruments of bronze and iron. - Genesis, 4 : 22.

128. Amorites in Canaan : Genesis, 14 : 7 ; 14 : 13 ; 48 : 22, Numbers, 13 : 29 ; Joshua, 5 : 1 ; 10 : 5 ;
Judges, 1 : 34 - 35.

## 10. போணீசியத் தமிழர்கள் (Phoenicians)

கி.மு. 3000 - கி.பி. 700 ஆண்டுக்கால இடைவெளியில், மெசபத் தோமியா, சுமேரியா, பாலத்தீனம், அரேபியா, எகிப்து போன்ற நாடுகளின் வரலாறுகள், ஆண்ட மன்னர்களைப் பற்றியே பெரிதும் சொல்லப்பட் டுள்ளன. மன்னர்களுக்குத் தரப்பட்ட சிறப்பு மக்களுக்குத் தரப்படவில்லை. ஆங்காங்கே சமூகம், கலை, அறிவியல், சமயம், வழிபாடுகள் என, சிற்சில செய்திகளே சொல்லப்பட்டுள்ளன. அந்த நாடுகளில் பேசப்பட்ட மொழிகள் பற்றிய குறிப்புகள் பல கிடைத்துள்ள போதிலும், அவற்றைப் படிப்பதில் செலுத்திய கவனத்தை, அம்மொழிகள் பற்றிய தோற்றம், ஒப்புமை பற்றிய துறைகளில் செலுத்தவில்லை. தங்கள் கண்ணோட்டத்தில் சொல்லப்பட்ட ஆய்வுகளேயே, ஒவ்வொருவரும் பற்றி நின்றனர். மொழிகள் பற்றிய ஆய்வுகள் விரிவடைந்துள்ள இக்காலத்தில், பழைய ஆய்வுகள் முற்றிலுமாக மறு ஆய்வுகள் செயல்படல் வேண்டும். குறிப்பாக, கிழக்கு நாடுகளிலும் மக்கள் வாழ்ந்திருந்தனர், அவர்களும் தொன்மையான மரபைச் சேர்ந்த வர்கள் என்ற கண்ணோட்டம் சிறிதளவு கூட, மேலை நாட்டு ஆய்வாளர் களிடையே காணப்படவில்லை. 19 ஆம் நூற்றாண்டில், சில செர்மானிய அறிஞர்கள், சமற்கிருத மொழிக்கும் ஐரோப்பிய மொழிகளுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை மட்டுமே ஆய்வு செய்தனர். வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட மொழிகளைக் கூட, சமற்கிருதத்தோடு அவர் தொடர்பு படுத்தவில்லை. தமிழ் என்ற பழமையான மொழி இருந்தது பற்றி மேலை நாட்டு ஆய்வாளர்கள் சிந்திக்கவே இல்லை.

சிந்து வெளியில் குடியேறியவர்கள் தமிழர்களே என்பது தற்கால ஆய்வுகள் மூலம் ஏறக்குறைய உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. சிந்து வெளி மக்கள், ஆரியர்களே என்று, அவர்கள் தரப்பில் சொல்லப்படும் சான்றுகள் வலுவாக இல்லை. வேதங்களையும் புராணங்களையும் மட்டுமே சான்றுகளாகக் காட்டுகின்றனர். விவிலியச் செய்திகளும் ஏறக்குறைய அந்த அளவிலேயே உள்ளன என்றாலும், வேதங்களைவிட, வரலாறு தொடர்பான செய்திகள், விவிலியத்தில் நிறைய உள்ளன. விவிலியத்தின் முதல்

அதிகாரத்தைத் தவிர்த்த மற்ற அதிகாரங்கள், சம கால ஆசியர்களால் எழுதப்பட்டவை. சமய நோக்கில் அவை எழுதப்பட்டிருந்தாலும், சமூகம் பற்றிய பல செய்திகளும் அவற்றில் உள்ளன. ஓர் ஆய்வாளர் விவிலியச் செய்திகளை ஆய்வு செய்யும் போது, தள்ள வேண்டியவைகளைத் தள்ளி, ஏற்க வேண்டியவற்றை, பிற சான்றுகளுடன் ஒப்பிட்டு ஏற்கலாம்.

சிந்து வெளி நாகரிகம், கடந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து (1924 முதல்) ஆய்வு செய்யப்பட்டு வருகின்றது. ஒவ்வொரு பத்தாண்டு களிலும் புதுப்புது சான்றுகளின் அடிப்படையில், புதிய செய்திகள் வந்த வண்ணம் உள்ளன. சிந்துவெளி நாகரிகம், தொடக்க காலங்களில், கி.மு.2500 எனச் சொல்லப்பட்டது. இன்று கி.மு.10000 ஆண்டுகளைத் தொட்டு நிற்கின்றது. கடந்த 2010 ஆம் ஆண்டில், இசுலாபாத் பல்கலைக் கழகப் பேராசிரியர் குழு, மொகஞ்சதாரோவை ஆய்வு செய்தது. கி.மு.9500 ஆண்டுகளில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கினால், அந்நகரம் மண்மேடாகிப் போனதாக அறிவித்தது. 1970 களில், சிந்துவெளி நாகரிகம் அழிவுற்றதற் கான காரணம் சிந்து ஆற்றில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கே என்பதை ஆய்வாளர்கள் உறுதி செய்துள்ளனர். சில மண்மேடுகளை ஆய்வு செய்த போது, ஆறு அடுக்குகள் (layers) அம்மண்மேடுகளில், பல நூறாண்டுகள் இடைவெளிகளில், ஒன்றன்போல் ஒன்றாகப் படிந்துள்ளன. அந்த வகையில் சிந்து வெளியில் குறைந்தது ஆற முறை பெருவெள்ளம் தோன்றியுள்ளது என அறிவித்துள்ளனர். கி.மு.9500 ஆண்டுகளில் தோன்றிய முதல் வெள்ளம் மொகஞ்சதாரோவை அழிந்துள்ளது. எனவே, அந்நாகரிக நகரம், அதற்கும் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, அறியப்பட்டிருக்க வேண்டும் என்பதும் தெளிவாகிறது.

சிந்து வெளியில் ஒவ்வொரு முறை தோன்றிய வெள்ளப் பெருக்கிற்குப் பின்னர், அழிந்து பட்ட நகரங்களில் எஞ்சியிருந்த மக்கள், மேற்கே பாரசீகம் மெசபத்தோமியாவை நோக்கிச் சென்றுள்ளனர். மெசபத்தோமி யாவில் சிந்து வெளிமக்களின் குடியேற்றங்கள் பல கட்டங்களாக நிகழ்ந்துள்ளன. முதலில் மொகஞ்சதாரோவினின்று புலம் பெயர்ந்த மக்க ளையே, நாகன் அல்லது நோவாவின் மரபினர் என்று சொல்லியிருக்கலாம். மேலை நாட்டு ஆய்வாளர்கள், கி.மு.3000 ஆண்டுக்கால அளவிலான வரலாற்றையே தருகின்றனர். சுமேரியர் வரலாறு முழுமை பெற்றிருந்ததால், அதற்குச் சில ஆயிரம் ஆண்டுகள் முன் வைத்து, சுமேரிய நாகரிகம், கி.மு. 5000 ஆண்டுகள் என்று பதிவு செய்துள்ளனர். ஆறுமுறை ஏற்பட்ட

அழிவுகளின் போதும், மக்கள் மெசபத்தோமியாவில் குடியேறியுள்ளனர். அவர்கள் பற்றிய செய்திகள் எவற்றையும் ஆய்வாளர்கள் தரவில்லை. சுமேரியர்களுக்கு முன்பு குடியேறிய பல குழுக்களை, செமிட்டிக் மக்கள் என்ற பொதுவான பெயர் சூட்டி அழைத்து விட்டனர். அம்மக்களில் பலமுறை குடியேறியவர்களும் உண்டு. அவர்களையெல்லாம் மெசபத்தோமிய மக்கள் என்றே அறிவித்து விட்டனர். வரலாறு ஓரளவு தெரிந்த நிலையில், சுமேரியரை வெளி நாட்டினர் என்று பதிவு செய்துள்ளனர். சுமேரியருக்கு முன் குடியேறியவர்கள், பிறகு குடியேறியவர்கள் என்ற அனைத்து தரப்பினர் மொழிகளும் ஒன்றொடொன்று தொடர்பு கொண்டுள்ளன என்ற உண்மையை ஏற்றுக் கொள்ளும் ஆய்வாளர்கள், எதன் அடிப்படையில் அவ்வாறான தொடர்புகள் தோன்றின என்பதை விளக்கவில்லை.

மெசபத்தோமியாவில் குடியேறிய சிந்து வெளி மக்கள், அங்கிருந்து நான்கு திசைகளிலும் புலம் பெயர்ந்துள்ளனர். எகிப்தியரும், அராபியரும், பாலத்தீனியரும், அனதோலியரும், கிரேக்கர்களும், மெசபத்தோமியாவின்றே புலம் பெயர்ந்துள்ளனர் என்பதையும் ஏற்றுக் கொள்கின்றனர். பல ஆயிரம் ஆண்டு இடைவெளிகளில் சென்ற சிந்து வெளி மக்களின் மொழி, வட்டார அளவில் பிரிந்து நின்றதால், அப்பகுதிகளில் நிலவிய சூழ்நிலைகள் காரணமாக காலப்போக்கில் திரிபுபட்டன. ஆயினும் அடிப்படையிலான வேரும் மூலமும் சிந்து வெளி மொழியிலேயே காணப்பட்டன. அந்த சிந்து வெளி மொழியைத்தான், ஸ்குளோசர் என்ற ஆய்வாளர், கி.பி.1781 இல், முதன் மொழி என்று அறிவித்தார். அம்முதன் மொழி எதுவென்று அவருக்குத் தெரிந்திருக்கவில்லை.

கி.மு.3000 ஆண்டுகளுக்கு முன்பு போனீசியர்கள் பற்றிய எந்தக் குறிப்புகளும் மேலை இலக்கியங்களில் காணப்படவில்லை. அம்மக்கள், மெசபத்தோமியாவின் தொன்மக் குடிகளே என்று சிலர் கூறினாலும், அக்கருத்தும் மறுக்கப்படுகிறது. சில ஆய்வாளர்கள், போனீசியர்கள், பஹ்ரைன் (ஓமான்) நாட்டைச் சார்ந்தவர்கள் என்று கூறுகின்றனர். மேலும் சிலர், பஹ்ரைனுக்கும் கிழக்கிலுள்ள நாட்டினின்றும் வந்தவர்கள் என்று கூறுகின்றனர். வரலாற்றில் எபிரேயர்களும் போனீசியர்களும் ஒரே கால அளவில் அறியப்பட்டுள்ளனர். எபிரேயரின் பங்காளிகளே போனீசியர்கள் (Cousins) என்ற கருத்து பல ஆய்வாளர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. எனவே, எபிரேயரும் போனீசியரும், கி.மு.3000 ஆண்டுகளில், ஓரினமாகவே அறியப்படுகின்றனர். அவர்கள் உள்நாட்டவரா அல்லது

வெளிநாட்டவரா என்பதைப் பற்றிய விவாதம் இன்னும் நடந்து கொண்டி ருக்கிறது. ஸ்குளேசரின் மொழிக் கொள்கை, பல தவறான முடிவுகளை எடுப்பதற்கும் காரணமாயிற்று. கி.மு.2000 ஆண்டுகளில், மெசபத்தோமி யாவிலும் அதன் அண்டை நாடுகளிலும் பேசப்பட்ட மொழிகள் ஒன்றுக் கொன்று தொடர்புடையனவாக இருக்க, சுமேரியரை மட்டும் வெளிநாட்டவர் என்று கூறினார்.

எபிரேயரும் போணீசியரும் ஓரினமாக அறியப்பட்டு, இடையில் இருவேறு இனங்களாக அறியப்பட்டனர். கி.மு.2000 - 1500 ஆண்டுகளில், மெசபத்தோமியா, எகிப்து உள்ளிட்ட நாடுகளில் அரசியல் சூழ்நிலைகளில் அமைதியின்மை காணப்பட்டது. பல்வேறு இனங்களும் ஆட்சியைப் பிடிக்க, முனைந்து கொண்டிருந்த காலத்தில், தங்களுடைய பழைய இருப்பிடங் களை விட்டுப் பலரும் பல்வேறு திசைகளில் சென்று குடியேறலாயினர். அதனால் இந்த இனமக்கள் வாழும் நாடு என்று சொல்ல இயலாத நிலை ஏற்பட்டது. (அவ்வாறு அக்காலத்தில் புலம் பெயர்ந்து வந்தவர்களே இந்திய ஆரியர்களாவர்). பெரும் பணக்காரராகவும், ஏராளமான கால் நடைகளுக்கு உரிமையாளராகவும், பல நூறு பணியாட்களைத் தம்மிடம் கொண்டிருந்தவரு மான எபிரேயத் தலைவன் அபிரகாம் கூட, ஓரிடத்தில் நிலையாகத் தங்க இயலவில்லை. வடக்கே யூப்ரடிஸ் ஆற்றங்கரையில் வாழ்ந்திருந்த அபிரகாம், கனான் நாட்டுக்குக் குடிபெயர்ந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. அமோரியர் மற்றும் குடி இனமக்கள், மெசபத்தோமியாவில் தோற்றுவித்த அரசியல் வன்முறைகளே, அபிரகாம், கனான் நாட்டுக்குக் குடி பெயர்ந்த தற்கான காரணமாகும். கனான் நாட்டிலும் அவர்கள் புகுந்து குழப்பம் விளைவித்ததால், எகிப்துக்கு ஓடிப் போக வேண்டியதாயிற்று. மிகப் பெரிய ஆட்பலம் கொண்டிருந்த அபிரகாமுக்கே இந்த நிலையென்றால், சாதாரணப் பொதுமக்கள் நிலையற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

கி.மு.2000 ஆண்டுகளிலேயே எபிரேய மக்கள், பல இடங்களில் சென்று வாழ்ந்தனர். அவர்களில் ஒரு குழுவினர் அல்லது கூட்டத்தார், இன்றைய இலெபனான் பகுதியிலும் குடியேறினர். எகிப்திலும் பலர் அடிமைகளாயிருந்தனர். மோசே என்ற எபிரேயத் தலைவன், தம் மக்களை எகிப்தினின்றும் மீட்டெடுத்து கனான் நாட்டுக்குத் திரும்பும் வழியில், தம் மக்களுக்கான புதிய சமயம் ஒன்றைத் தோற்றுவித்தான். தம் மக்களை ஒரு மலையடிவாரத்தில் தங்க வைத்து விட்டு, 40 நாட்கள் தவத்தில் ஈடுபட, மலை மீது ஏறிப்போனான். புதிய சமயம் தோற்றுவிப்பதற்கான சிந்தனைகளில்,

அந்த 40 நாட்களிலும் ஈடுபட்டிருந்தான். விவிலியம், மோசே கடவுளைச் சந்திக்கச் சென்றதாகவும், அவனிடம் பத்துக் கட்டளைகளைக் கடவுள் அளித்ததாகவும் கூறுகிறது. மலையடிவாரத்தில் இருந்த மக்கள், கன்றுக் குட்டியொன்றை செய்து, அதற்கு விழா எடுத்து வழிபட்டு வந்ததாக விவிலியம் கூறுகிறது.

எல் என்ற கடவுளையும், காளையையும் எபிரேயர்கள் வழிபட்டு வந்தனர். மோசேயின் புதிய சமயம், அவ்வழிபாடுகளுக்குத் தடை செய்தது. புதிய கடவுள் கொள்கை எபிரேயர்களுக்குள் பிளவை ஏற்படுத்தியது. மோசேயின் புதிய சமயத்தை ஏற்காதவர்கள், தனியே பிரிந்து சென்றனர். தங்களுடைய பழைய சமயத்தையே தொடர்ந்து பின்பற்றி வந்தனர். பிரிந்து சென்ற எபிரேயரே போணீசியர் எனப்படுகின்றனர். போணீசியர்களின் சமயமும் வழிபாட்டு முறைகளும், தமிழரோடு நெருங்கிய தொடர்புடையவை. போணீசியர்கள் தனியே பிரிந்து சென்ற போதிலும், எபிரேயர்கள், இன அடிப்படையில் அவர்கள், போணீசியர்களோடு நல்லுறவு கொண்டிருந்தனர். எபிரேயர்கள், புதிய அரசியல் சூழ்நிலையில், தங்கள் சமய வழிபாடுகளில் கவனம் செலுத்தி வந்தனர். அரசியல் நடவடிக்கைகளில் ஆர்வமுடன் பங்கேற்றனர். போணீசியர்கள், அரசியல் நடவடிக்கைகளில் ஆர்வம் காட்டவில்லை. மாறாக, ஏறக்குறைய 1000 ஆண்டுகள், வணிக உலகின் முடி சூடா மன்னர்களாக விளங்கினர். போணீசியர்களின் வரலாற்றைத் தவிர்த்து, உலகின் வணிக வரலாறும், மொழி வரலாறும் எழுதப்படமுடியாத அளவுக்கு, புகழ்பெற்றனர்.

பொணீஸ் என்பதே, பொணீசியர்களுக்கான பெயர் மூலம் என்று கூறுவர்.

பொணிசியா (Phoenicia - Phoenicians) என்பது ஆங்கில சொல்லாகும்.

பொய்னிகே (Phoinike) என்பது கிரேக்கச் சொல்லாகும்.

பினிகிய்யா (Finiquiyah) என்பது அரபுச் சொல்லாகும்.

போனிக்ஸ் (Phonix) என்பது பிற்காலக் கிரேக்கச் சொல்.

பண் என்ற தமிழ் மூலச் சொல்லுக்கு 30 க்கும் மேற்பட்ட பொருள் உள்ளன.

பண் : குற்றங்குறைகள் இல்லாத நிலை. திருந்திய நிலை.

*"பண் அழி பழம்பார் வெண்குருகு ஈனும்"*[128]

பண் : செம்மையாக இருத்தல்.

*"பண் அமை பகுதி முப்பதி னெரு மூன்றும்"*[129]

பண் : இசை.

*"மண் முழ மறப்பப் பண்யாழ் மறபப"*[130]

பண், பண்டம் என விரிந்தது.

பண்டம் : விற்பனைக்குத் தகுதியான, தூய்மையான பொருள்.

*"பொன் மலிந்த விழுப் பண்டம்"*[131]

பண் + இயம் - பண்ணியம் : பண்டங்களை விற்கும் தொழில்.

*"கொடுப்போர் கடை தோறும் பண்ணியம் பரந்தெழ"*[132]

பண்ணியம் : விற்பனைப் பொருள் ; பண்ணியர் : வணிகர்.

பணி என்ற தமிழ்ச் சொல், தொழிலையும், வணிகத்தையும் குறித்தது.

*"குன்ற நாடன் பணிக்குறை வருத்தம் வீட"*[133]

பணி என்ற தமிழ்ச் சொல் வணிகத்தைக் குறித்தும், சமற்கிருதத்தில் சொல்லப்பட்டுள்ளது. பணி என்ற சமற்கிருதச் சொல் (Pani) பொனி (Poni) என்று அனதோலிய மொழியில் காணப்படுவதாகவும், அதுவும் வணிகத்தையே குறித்ததாகவும், சிந்துவெளி லோத்தள் என்ற நூலில், எஸ்.ஆர்.இராவ் என்ற ஆய்வாளர் குறிப்பிடுகிறார். பணி - பணியா என்றவாறு, வட இந்திய வணிகச் சமூகம் அழைக்கப்படுகிறது.

பணி (தமிழ்) → பணி (சமற்கிருதம்) - பொணி (அனதோலியம்) → பொணிக்ஸ் (கிரேக்கம்) → பெணிஸ் (பிரெஞ்சு) -பொணீஸ் (ஆங்கிலம்)[134].

சொற்களின் தோற்றம், திரிபுகள் பற்றி அறிந்திராத மேலை நாட்டவர், பொணிக்ஸ் என்ற சொல்லுக்கு, இரத்தச் சிவப்பு (blood red) என்று பொருள் கூறியுள்ளனர். இப்பொருளில் சொல்வழி, மொழிவழியென எந்தத் தொடர்பும் இல்லை. நம்மில் பலர் ஐரோப்பியர்கள் கூறினால் அது சரியாக இருக்கும் என்ற மயக்கத்தில் உள்ளனர். நம்மைவிட ஐரோப்பியர்களே புத்திசாலிகள் என்ற அடிமைப் புத்தி, நம்மில் பலரிடம் காணப்படுகிறது. உலக வரலாற்றையும், இந்திய வரலாற்றையும் குழப்பிக் குட்டிச் சுவராக்கியவர்கள் ஐரோப்பியர்கள்.

போணீசியர்களை, கனானியர்களுடன் இணைத்த சொற்களும் பல மொழிகளில் காணப்படுகின்றன. கெனானி, கினானி (Kenani, Kinani) என்று எகிப்திய அமர்ணா குறிப்புகள் கூறுகின்றன. கனா என்பதே, போணிக்ஸ் என்று திரிந்ததாக பிலோ (Philo) என்பவர் கூறுகிறார். கனா என்பது எவ்வாறு

போனிக்ஸ் என்று திரியும் எனத் தெரியவில்லை. கனானியர் பற்றிய சொற்களையெல்லாம், போணீசியர் மீது ஏற்றிப் பதிவுகளைச் செய்துள் ளனர். கனான் நாட்டில், போணீசியர் மட்டுமல்லாது வேறு இனத்தவரும் இருந்துள்ளனர் என்று குறிப்புகள் தெரிவிக்கின்றன.[135] கனான் என்ற சொல்லை, காயின் (Canaan - Cain) என்ற சொல்லோடு சிலர் குழப்பிக் கொண்டு, கனானியர் ஆதாமின் முதல் மகன் காய்ன் என்பவனின் மரபினர் என்று விளக்கமளித்துள்ளனர். அவ்வாறான பெயர் விளக்கங்களுக்கான அடிப்படைக் காரணம் யாதெனில், எபிரேயர்களை விட, போணீசியர்கள், பன்னாட்டு மக்களுக்கு அறிமுகமாகியிருந்ததே எனலாம். கி.மு.2000 - 500 ஆண்டுகளில், கிரேக்கம் முதல் இந்தியா வரை, அனைத்து நாடு களுக்கும் தெரிந்திருந்த மக்கள் போணீசியர்களாவர்.

கிரேக்க வரலாற்றுத் தந்தையென அழைக்கப்படும் எரடோட்டஸ் கூறுகிறார்: "பாரசீகர்களின் கருத்துப்படி, போணீசியர்கள் வரலாற்றில் சிறப் பாகச் சொல்லப்பட்டுள்ளனர். அவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வார்கள். போணீசியர்களின் முன்னோர்கள் எரித்திரையன் (Erythraean) கடற்பகுதிகளில் வாழ்ந்திருந்தனர். (செங்கடல் பகுதி. பின்னர், நடுத்தரைக் கடற்பகுதிகளுக்கும் புலம் பெயர்ந்தார்கள். தற்போது அவர்கள் வாழும் இடம் (தற்கால லெபனான்) அவர்கள் முன்னோர்கள் வாழ்ந்திருந்த இடமன்று. கடலில் நீண்ட தொலைவு, எகிப்திய அசீரியப் பண்டங்களை ஏற்றிக் கொண்டு கப்பல் பயணங்களை மேற்கொண்டவர்கள்" (போணீசியர்கள் தற்காலத்து பஹ்ரைன் நாட்டைச் சார்ந்தவர்கள் என்ற கருத்தும் சொல்லப்பட்டுள்ளது) எரித்திரியன் கடல் என்பது செங்கடலைக் குறிக்கும்.

நெருப்பு எரிவதால் தோன்றும் சிவப்பு நிறமாக அக்கடல் சொல்லப் பட்டது.

எரி திரைக் (திரை – கடல்) கடல் என்பதே, எரித்ரியன் என்று கிரேக்க மொழியில் திரிந்துள்ளது.

அக்காலத்தில், பிறைநிலாப் பிரதேசம் (Fertile Crescent) என்று சொல்லப்பட்ட, கடற்கரை நாடுகளான இசறாயெல், இலெபனான், பாலத்தீனம், சிரியா, பாபிலோன், பாரசீக வளைகுடாவைத் தொடும் பகுதிகளையே, அவ்வாறு அழைத்தனர். அப்பகுதிகளில் எல்லாம் செமிட்டிக் இன மக்கள் வாழ்ந்ததாகச் சொல்லப்பட்டது. அப்பகுதிகளில் எல்லாம்,

போணீசியர்களுக்குப் பண்டக சாலைகள் இருந்தன. இவையன்றி, ஆப்பிரிக்காவின் வடக்குக் கடற்கரைப் பகுதிகள் (கார்த்தேஜ் – Carthage), ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரைப் பகுதிகள், ஐரோப்பாவின் தெற்குக் கடற்கரைப் பகுதிகளிலும் வணிக நிறுவனக் கிளைகளைக் கொண்டிருந்தனர். அவர்களுடைய தொடர்புகள் அனைத்தும் அக்காலத்தில் புகழ்பெற்றிருந்த நகரங்களோடு இருந்தன. குறிப்பாக, லிபியா – மொராக்கோ பகுதிகள் அக்காலத்தில் கார்த்தேஜ் எனப்பட்டது. அங்கு மிகப் பெரிய பண்டக சாலையை போணீசியர் அமைத்திருந்தனர். ஏராளமான போணீசியர்கள் அங்கு குடியேறியிருந்தனர். காலப்போக்கில், போணீசிய – ஆப்பிரிக்கக் கலப்பினம் ஒன்றும் கார்த்தேஜ் பகுதியில் தோன்றியது. பெர் – பெர் என்ற மொழியைப் பேசிய ஆப்பிரிக்கப் பழங்குடி மக்கள் அங்கு வாழ்ந்து வந்தனர். பெர் – பெர் (Ber - Ber), சகாரா மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது என்றும் கூறுவர்.

ஸ்டிராபோ என்ற கிரேக்க வரலாற்று ஆசிரியர், அரேபியத் தீவக்கறையின் கிழக்குப் பகுதியில், பஹ்ரைன் போன்ற பகுதிகளிலிருந்தே, இலெபனான் நாட்டுக்கு, போணீசியர்கள் புலம் பெயர்ந்ததாகக் கூறுகிறார். எரடோட்டஸ், பிற்காலத்தில் ஸ்டிராபோவின் கருத்தை ஏற்றுக் கொண்டார். கி.பி.19 ஆம் நூற்றாண்டின் செர்மானிய ஆய்வாளர் ஆர்னால்ட் ஹீரன் (Arnold Heeran), கிரேக்கப் புவியியலார் கூறிய கருத்தின்படி, தைரஸ் அல்லது பஹ்ரைன் ஆகியவை, போணீசியர்களின் தாய்நாடாக இருக்க வேண்டும் என்பதே. போணீசியரின் வழிபாட்டுச் சின்னங்கள் அங்கே கிடைத்துள்ளன என்று சொல்லப்பட்டது. நூற்றுக் கணக்கான இடங்களில், போணீசியர்கள் சென்று வந்துள்ளனர். அங்கெல்லாம் கூட, போணீசியர்கள் பற்றிய தடயங்கள் கிடைத்துள்ளன. அதனால் அவையெல்லாம் அவர்களின் தாய்நாடுகள் என்று கூற இயலாது.

இலெபனானின் தென்பகுதியிலிருந்த துறைமுக நகரமான தைர் (Tyre) நகரில் கண்டறியப்பட்ட பல பொருட்களோடு, பாரசீக வளைகுடாப் பகுதிகளில் அறியப்பட்ட பொருட்கள் தொடர்புடையவைகளாக இருந்தன. தைர் என்ற ஊர், தெரெ (Tere) தைலாஸ் (Tylos), தீர் (There), டையர் (Tier) என்றவாறு பல சொற்களால் குறிப்பிடப்பட்டுள்ளன. தைலோஸ், தைர் போன்ற சொற்கள், வளைகுடா நாடுகளில் அக்காலத்தில் பயன்படுத்தப் பட்டன என்றும், தங்கள் பழைய ஊரின் பெயரை, குடியேற்ற ஊரில் வைத்துக் கொண்டனர் என்றும் விளக்கமளித்துள்ளனர். தீர், தெர என்றவாறு

அறியப்பட்ட சொற்களுக்கு, நிலம் அல்லது தரையென்றே போனீசிய மொழியில் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. மேலை நாட்டு ஆய்வாளர்கள் எவ்வாறெல்லாம் கற்பனை செய்துள்ளார்கள் என்பதற்கு தெர நகரம் ஓர் எடுத்துக்காட்டாகும்.

தீர், தெர என்ற துறைமுக நகரம், உள்நாட்டினின்றும் துண்டிக்கப்பட்ட நிலப்பகுதியில் உள்ளது. (இராமேஸ்வரம் போல). கடலின் நிலப்பகுதி என்ற பொருளில் தெர என்ற சொல், காரணப் பெயராக அமைந்தது. அது, உண்மையில் தரை என்ற தமிழ்ச்சொல்லின் திரிபே.

தரை (தமிழ்) → த்ர (சமற்கிருதம்) → தெரா (எபிரேயம்) → தெர (போனீசியம்) → தெர்ர (கிரேக்கம்) → டெர்ர (ஆங்கிலம்)[136].

போணிசியச் சொல்லின் மூலம் தமிழில் இருக்க, அதனை வளைகுடா நாட்டுச் சொல் என்று, தவறாகக் கருதியுள்ளனர். பஹ்ரைனுக்கும் கிழக்கில் நாடுகள் இருந்ததைப் பற்றி, மேலை நாட்டு ஆய்வாளர்கள் அறிந்திருக்க வில்லை.

கி.மு.1200 - 800 ஆண்டுகளில், உலகப் பொருளாதாரத்தை நிர்ணயிப்பவர்களாக, போணீசியர்களே இருந்தனர். ஆட்சி அதிகாரங்கள் எவையுமில்லாமல், நாடுகளின் பொருளியல் கூறுகளை ஏற்றவும் இறக்கவும் போணீசியர்களின் வணிகம் வலிமை பெற்றிருந்தது. மாமன்னர்களும் போணீசியர்களைப் பகைத்துக் கொள்ள விரும்பவில்லை. தற்கால உலக வணிகப் பொருளாதாரத்தை முதன் முதலில் முறைப்படுத்தியவர்கள் போணீசியர்களே, அவர்களின் வணிகத் திறமைக்கும் வலிமைக்கும் அவர்கள் பெற்றிருந்த கடலோடும் ஆற்றலே அடிப்படைக் காரணமாகும். அக்காலத்தில் எந்த நாட்டுக்கும் வலிமையான மரக்கலங்களோ கப்பல்களோ இல்லை. கப்பல்கள் கட்டும் தொழில் நுட்பத்தை முற்றிலுமாக அறிந்திருந்தவர்கள் போணீசியர்களே. மரக்கலங்களில் துடுப்புகளை வலிப்போர் பெரும்பகுதி இடத்தை நிரப்பிக் கொண்டிருந்தனர். வணிகப் பொருட்களை, பெருமளவில் ஏற்றிச் செல்ல இயலவில்லை. அதனால், துடுப்பு வலிப்போரின் எண்ணிக்கையைக் குறைத்து, மேலை நாடுகளில் முதன் முதலில் பாய்மரக் கப்பல்களை அறிமுகம் செய்வதவர்களும் போணீசியர்களே. எந்தவொரு பகைக் கப்பலும் நெருங்கி விட முடியாத அளவில் தம் மரக்கலங்களை விரைந்து செலுத்தும் வித்தையை அவர்கள் கற்றிருந்தனர். காற்றின் எதிர்த்திசையிலும், மரக்கலங்களைச் செலுத்தும் நுட்பத்தைக் கற்றிருந்தனர்.

நினைத்த இடத்தில் கப்பலை நிறுத்த, நங்கூரத்தைப் பயன்படுத்தியவர்களும் போணீசியர்களே.

போணீசியர்களின் வணிகப் பொருட்கள் பல வகைப்பட்டவை. நடுத்தரைக் கடலைச் சுற்றியிருந்த நாடுகளுக்கெல்லாம் தேவைப்பட்ட பொருட்களை, போணீசியர்கள் வழங்கினர். பொன், வெள்ளி, இரும்பு, செம்பு, ஈயம் போன்ற உலோகங்களை உற்பத்தியாகும் இடங்களில் கொள்முதல் செய்து, தேவைப்பட்ட நாடுகளுக்கு அளித்து வந்தனர். உணவுப் பொருட்களும் அவ்வாறே கொண்டு செல்லப்பட்டன. தூரக் கிழக்கு நாடுகளிலிருந்தும் பொருட்களைக் கொள்முதல் செய்தனர். எகிப்தில் பெருமளவில் விளைந்த பிரப்பங்கோரைகள், பாப்பிரஸ் என்ற தாளை செய்யப்பயன்படுத்தப்பட்டன. எகிப்திலிருந்து அக்கோரைப் புற்களை விலைக்கு வாங்கி, சைப்ரஸ் கிரீஸ் முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வந்தனர். பெருமளவில் வாங்கப்பட்ட கோரைகள், பிப்லோஸ் என்ற போணீசியர் துறை முகத்தில் இருப்பு வைக்கப்பட்டன. பிப்லோஸ் என்ற சொல், போணீசிய மொழியில் கோரையைக் குறித்தது.

இசறாயெல் அரசன் சாலமன் கட்டிய தேவாலயம் மற்றும் அரண்மனைக்கான தேக்கு மரங்கள், தமிழ் நாட்டினின்றும் கொண்டு செல்லப்பட்டன. அரிசி, மயில்தோகை போன்றவைகளும், நறுமணப் பொருட்களான மிளகு, இலவங்கம், பட்டை, கற்பூரம், அகில், முத்துக்கள் போன்றவை தமிழகத்தினின்றும் போணீசியர்களால் வாங்கிச் செல்லப்பட்ட பொருட்களாகும். பூம்புகாரும் கொற்கையும் முசிறியும், போணீசியக் கலங்கள் வந்து போன துறை முகங்களாகும். சாலமன் கட்டிய ஆலயம், தேக்கு மரப் பலகைகளால், சுவர்களாக எழுப்பப்பட்டவை. அப்பலகைகளின் மேல், செப்புப் பாளங்கள் வேயப்பட்டன. அப்பணிகளை திறம்படச் செய்யும் செப்புக் கன்னார்கள், பூம்புகாரிலிருந்து, எருச லேம் நகருக்குச் சென்றனர். சாலமனின் சம காலத்தவனான அகிராம் (Ahiram) என்ற போணீசிய மன்னன், மேற்கண்ட பொருட்களைத் தம் நாட்டு வணிகர்கள் மூலம் இறக்குமதி செய்து கொடுத்தான்[137]. அதற்குச் சன்மானமாக, இசறாயெல் நாட்டின் வடக்கிலிருந்த சில பகுதிகளை, சாலமன் அகிராமுக்குக் கொடுத்ததாக விவிலியம் கூறுகிறது. செங்கடலின், சினைத் தீவக் குறையின் வடகிழக்கு மூலையில், அகாபா (Aqaba) என்ற வளைகுடாப் பகுதியில், போணீசிய மன்னன், சாலமனுக்காக ஒரு துறைமுகம் ஒன்றையும் கட்டிக் கொடுத்தான். ஏராளமான மரக்கலங்களையும் அளித்தான் என்றும்

விவிலியம் கூறுகிறது. அத்துறைமுகம் ஓபீர் (Ophir) என்றழைக்கப்பட்டது[138]. தமிழ்நாட்டில் அக்காலத்தில் புகழ் பெற்றிருந்த உவரி (நெல்லை மாவட்டம்) த்துறை முகத்தின் கட்டமைப்பில் அது கட்டப்பட்டது என்றும், உவரி என்ற தமிழ்ச் சொல்லின் எபிரேயத் திரிபே ஓபீர் என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

போணீசியா என்று சொல்லப்பட்ட இன்றைய இலெபனானில், பிப்லோஸ், தெர, சிதன், சினமரா, அரவது, பெய்ரூட் போன்ற நகரங்களைப் பற்றிய குறிப்புகள், அமர்ணா பாப்பிரஸ் தாள் குறிப்புகளில் காணப்படு கின்றன. சிதோன் (Sidon) அல்லது சிதன் என்ற சொல், கனான் என்பவனின் மகனுடைய பெயர் என்று விவிலியம் கூறுகிறது.

சில் என்பது, மிகச் சிறிய பொருளைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லாம்.

சில் + துளி : சின்னச் சின்ன சிதறல்கள்.

சில் + துளி : சிற்றுளி, சிந்துளி என விரியும்.

சிந்துளி, சிந்து என வழக்குச் சொல்லாயிற்று.

சில் + தெறி = சிதெறி, சிதறி என்றானது.

சிதறுதல் : மொத்தமாக உள்ள பொருள், தனித்தனித் துளிகளாகச் சிந்துவது.

சிந்து, சிதறு ஆகிய சொற்கள் நீரோடு தொடர்புடையவை.

சிந்து என்ற சொல், சிந்தோன் - சிதோன் (Sidon) எனத் திரிபுபட்டுள்ளது.

இந்து என்ற சொல், சிந்து என்ற சொல்லின் நீட்சியே.

பாரசீகர்கள், சிந்து ஆற்றை, இந் - தூ (In-du) என்று குறிப்பிட்டனர்.

சிந்து பாயும் நாட்டை, இந் - தூ - யிஸ் (In - du - is) என்று பதிவு செய்துள்ளனர்.

இச் சொல்லையே, ஆங்கிலேயர்கள் இந்தியா என அழைத்தனர்.

இந்தியா என்ற சொல்லின் மூலம், சிந்து என்ற தமிழ்ச் சொல்லே.

நாகன் என்ற நோவாவின் மக்கள், சிந்து வெளியினின்றே மேற்கே புலம் பெயர்ந்ததாகக் கருதப்படுவதால், அம்மக்களில் ஒருவன், சிந்து என்ற பெயரால் அழைக்கப்பட்டிருக்கலாம். சிந்து - சிதோன் எனத் திரிந்தது என்க.

திரெ என்பது, தரை அல்லது நிலம் என்பதுபற்றி ஏற்கனவே விளக்கப் பட்டுள்ளது.

பிப்லோஸ் (Byblos) என்ற பெயரை, கிரேக்க மொழியில் பைபில் (Bible) என்றனர்.

பைபில் என்பது, உண்மையில், பிரப்பங்கோரையைக் குறித்த தமிழ்ச் சொல்லே.

பை + புல் – பைப்புல் எனச் சொல்லப்பட்டது. பைபில் எனத் திரிந்தது.

பச்சைப் புல்லால் செய்யப்பட்ட தாள் (Paper) பைப்பில் எனப்பட்டது.

பல தாள்கள் சேர்ந்த நூலை பைப்பில்லியோன் (Biblion) என அழைத்தனர்.

கிறித்துவர்களின் சமய நூல், புத்தகம் அல்லது நூல் என்ற பொருளிலே அறியப்படும்.

பைப்புல் என கிரேக்கர்கள் அழைத்த சொல்லே, பிற்காலத்தில் பாப்பிரஸ் என்றும் சொல்லப்பட்டது. பாப்பிரஸ், கிரேக்கச் சொல்லாகும்.

பிரம்பு என்பது கோரை வகையைச் சார்ந்தது. அம்பு என்பது, உள்ளீடு கொண்டது.

பைப்பிரம்பு – பைப்பிரப்பு என்றானது. (பிரப்பங்கோரை என்றும் சொல்லப்படும்)

பைப்பிரப்பு – பாப்பிரஸ் எனத் திரிந்தது. (Papyrus)

பாப்பிரஸ் என்ற கிரேக்கச் சொல்லில் இருந்தே, பேப்பர் என்ற ஆங்கிலச் சொல் பிறந்தது.

எகிப்திய மொழியில், கோரையை கம்பு (Kambu) என்றே அழைத்தனர். கம்பு என்பது, தமிழ்ச் சொல்லே. எபிரேய மொழியில் கோம் (பு) என அழைக்கப்பட்டது. போணீசிய மொழியில் பிப்லோஸ் என்றும், சைப்ரஸ் மொழியில், பாப்பிருஸ் என்றும், கிரேக்க மொழியில் பாப்பிரோஸ் என்றும், ஆங்கிலத்தில் பாப்பிரஸ் என்றும் சொல்லப்பட்டன[139].

தாளின் ஒரு பகுதி, பகே (Pake) என்று கிரேக்க மொழியில் சொல்லப்பட்டது. தமிழில் சொல்லப்படும், பக்கம் என்ற சொல்லின் திரிபே, பகே என்பதாகும். Pake - Page என்று ஆங்கிலத்தில் திரிந்துள்ளது.

தமிழர்கள், சென்ற நூற்றாண்டு வரை, பனை ஓலையையே எழுது பொருளாகப் பயன்படுத்தி வந்துள்ளனர். பனை ஓலைகளில் எழுதப்பட்டவை படியெடுக்கப்படாமல் போனால், 200 ஆண்டுகளில் அது மட்கிப் போகும். இன்று நமக்குக் கிடைத்துள்ள இலக்கியங்கள் அனைத்தும் கடந்த நூற்றாண்டுகளில் படியெடுக்கப்பட்டவைகளே. தமிழ்நாட்டில் பனை மரங்கள் மிகுந்து காணப்பட்டதால், பனை ஓலைக்கு மாற்றாக ஒரு எழுது பொருளை உருவாக்குவது பற்றித் தமிழர்கள் சிந்திக்க வேயில்லை. மெசபத்தோமியாவிலும் எகிப்திலும் பனை மரங்கள் காணப்படாததால், முதலில் களி மண் தட்டுகளிலும், பின்னர் பாப்பிரஸ் தாள்களிலும் எழுதலாம் எனக் கண்டு பிடித்தனர். தமிழ்நாட்டிலும் பனை மரங்கள் இல்லாது போயிருந்தால், மாற்று

எழுது பொருளைத் தமிழன் கண்டுபிடித்திருப்பான். பாப்பிரஸ் தாள் கூட எகிப்தியத் தமிழன் கண்டுபிடித்ததே. சீனர்கள் தாம், மரக்கூழினின்றும் தாளை உருவாக்கினர் என்பர். இலக்கு என்ற சொல், பனை ஓலையைக் குறிக்கும். தென் தமிழ்நாட்டுச் சொல்லாகும். இலக்கில் எழுதப்பட்டவையே இலக்கியம் ஆயிற்று.

போனீசியர்களின் மக்கள் தொகை நாளுக்கு நாள் பெருகியதால், புதிய குடியிருப்பை உருவாக்க முயன்றனர். அவற்றுள் ஒரு பகுதி நீரூற்றுகள் நிறைந்து, குடியிருப்புக்கு ஏற்றதாகக் கருதப்பட்டது. அங்கு உருவாக்கப்பட்ட நகரம், பீர் – ரூத் (Beer - ruth) என்று சொல்லப்பட்டது. அச்சொல்லுக்கு நீர் ஊற்று என்று பொருள். நீர் என்ற தமிழ்ச் சொல், எபிரேய போனீசிய மொழிகளில் பீர் எனத் திரிந்துள்ளது. நீர் ஊற்று – பீர் ரூத் எனத் திரிந்தது. பிற்காலத்தில் அந்நகரம், பெய்ரூட் என்று சொல்லப்பட்டது. தற்காலத்து இலெபனான் நாட்டுத் தலைநகரமாக உள்ளது.

கி.மு. 1200 முதல் கி.மு.800 வரையிலான கால அளவுகளில், நடுத்தரைக் கடல் நாடுகளில், வலுவான அரசுகள் எவையும் இல்லை. அதனால் நகரங்கள், ஏறக்குறைய தன்னாட்சி பெற்றவைகளாக விளங்கின. அச்சூழல், போனீசியர்களின் வணிகத்துக்கு ஏற்றதாக அமைந்தது. அக்கால அளவில் தான் உலகின் பல நாடுகளுக்கும் போனீசியர்கள் பயணம் மேற்கொண்டனர். தற்காலத்தில் அமைக்கப்பட்டுள்ள சூயெஸ் கால்வாய் இருந்த இடத்தில், அக்காலத்திலேயே எகிப்திய மன்னர்கள் ஒரு கால்வாயை வெட்டியிருந்தனர். அது நடுத்தரைக் கடலையும் செங்கடலையும் இணைத்தது. போனீசியர்கள் அக்கால்வாயின் வழியே, ஆப்பிரிக்காவின் கிழக்குக் கரை வழியே சென்று, நன்னம்பிக்கை முனையைக் கடந்து, ஆப்பிரிக்காவின் மேற்குக் கரை வழியே பயணித்து, ஜிப்ரால்டர் நீர் வழியாக, மீண்டும் தாயகம் திரும்பினர். இந்தப் பயணம் ஏறக்குறைய மூன்றாண்டுகள் நீண்டதாகச் சொல்லப்படுகின்றது. போனீசியர்கள், அட்லாண்டிக் கடலையும் குறுக்காகக் கடந்து தென் அமெரிக்காவுக்கும் சென்று வந்தனர் என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர். தென் அமெரிக்காவின் வடகிழக்குப் பகுதியான பெரு, கயானா போன்ற பகுதிகளில், போனீசியரின் உருவங் களும், பாய்மரக் கப்பலும் கொண்ட புடைச் சிற்பங்கள் காணப்படுவதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். அந்நிகழ்வு உண்மையாயின், கொலம் பசுக்கு 2500 ஆண்டுகளுக்கு முன்பே, அட்லாண்டிக் கடலைக் கடந்த பெருமைக்குரியவர்களாக போனிசியர்கள் கருதப்படுவார்கள். இங்கிலாந்து,

நெதர்லாந்து, போர்த்துக்கல், ஸ்பெயின் போன்ற நாடுகளுக்கும் அவர்கள் சென்று வந்துள்ளனர்.

கி.மு.1500 ஆண்டுகளுக்கு முன்பே, போணிசியர்கள், தமிழ் நாட்டுக்கு வந்துள்ளனர் என்று தற்கால இலெபனான் நாட்டு வரலாற்று ஆய்வாளர், ஆனி ஜிசூபி (Anne Josuffie) என்பவர் தெரிவிக்கின்றார். போணிசியர்கள், தென்னிந்தியாவுக்குச் சென்ற போது, அங்கு தங்களுடைய பண்பாட்டுக் கூறுகளும் கலாச்சாரமும் இருப்பதைக் கண்டு, தங்கள் முன்னோர்கள் பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொண்டனர் என்று கூறுகிறார்[140]. ஏற்கனவே சிந்து வெளியுடன், வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். போணிசியர்கள் தொடர்பான வணிகச் செய்திகள், பாரசீகத்திலும் கிடைத் துள்ளன. தமிழகத்துக்கு வந்து சென்ற போணிசியர்கள், மேலும் பலமுறை வந்துள்ளனர். கிரேக்கர்களையும், யூதர்களையும் தமிழகத்தில் அறிமுகம் செய்தவர்கள் போணீசியர்களே என்று கருதப்படுகின்றது. சாலமன் கட்டிய தேவாலயத்துக்கும் அரண்மனைக்கும் தேக்கு, கருங்காலி, சந்தனம் போன்ற மரங்களை, போணிசியர்களே எடுத்துச் சென்றுள்ளனர். மரத்தச்சர்கள், செப்புக் கொல்லர்களையும் தமிழ்நாட்டிலிருந்தே அழைத்துச் சென்றுள் ளனர். கிரேக்கர், யூதர், போணிசியர் ஆகியோரை, யவனர் என்றே தமிழ் இலக்கியங்கள் சுட்டுகின்றன. சாலமன் காலத்தில் தமிழ் நாட்டுக்கும் இசறாயெல் நாட்டுக்குமிடையே உறவை வளர்த்தவர்கள் போணீசியர்களே. பூம்புகார், உவரி, கொற்கை, முசிறி போன்ற துறைமுகங்களில் வணிகம் செய்தவர்களும் போணீசியர்களே. அக்கால அளவில், கிரேக்கரும் யூதரும் போணீசியரிடம் பணியாற்றியவர்களாகவே இருந்தனர். கி.பி.முதல் நூற்றாண்டில் தான், கிரேக்கர்கள் தமிழகத்தோடு நேரிடையாக வணிகத்தில் ஈடுபட்டனர்.

போணீசியர்களின் ஆட்சி முறை மூன்று அடுக்குகளைக் கொண்டது. மன்னன், கோயில்களின் பூசாரிகள், முதியோர் குழு என்பதாகும். மெசபத் தோமியாவைப் போல், மன்னன் கடவுளின் பகராளாகக் கருதப்படவில்லை. எகிப்தைப் போல் கடவுளாகவே கருதப்படவில்லை. வணிகர் நலன் காக்கும் வேந்தனாகவே கருதப்பட்டான். அவ்வேந்தனும் நகர எல்லைக்குட்பட்டவனே. பூசாரிகள், கடுமையான சமயச் சடங்குகளைச் செய்து வந்தனர். சிக்கலான காலங்களில், முதியோர் அவை, அறிவுரை கூற அமைக்கப்பட்டது. வலிமை யற்ற நகர அரசுகள், வலுவுள்ள நகர அரசுகளோடும் இணைக்கப்பட்டன. அகிராம் மன்னன், அனைத்து நகர அரசுகளையும் இணைத்து ஆண்டான்.

தொடக்கத்தில் அவன் தெர நகரின் ஆட்சியாளனாகவே இருந்தான். இதோபால் (Ithobaal) என்ற சமய குரு, ஆட்சியைப் பிடித்து, வடக்கு பெய்ரூத், சைப்ரசின் சில பகுதிகளையும் இணைத்துக் கொண்டு ஆண்டான் (கி.மு.887 - 856). தெர நகரத்து மன்னன் பைகமாலியன் (Phigamalion), கார்த்தேஜில் புதிய போணீசிய அரசை நிறுவினான். (கி.மு.820 - 774). இந்த அரசின் மூலம், போணீசியர்கள், வெளி நாடுகளிலும் தங்கள் ஆட்சியை விரிவுபடுத்தினார். தெர, சிதோன் போன்ற அரசுகள், ஒவ்வொரு காலத்திலும் சிறப்பு பெற்றிருந்தன.

பாரசீக மன்னன் சைரஸ், போணீசியாவை, கி.மு.539 இல் வென்று, தனது பேரரசின் ஒரு பகுதியாக அறிவித்தான். அதன் மூலம், மேற்கில் தனது எல்லையை விரிவுபடுத்தினான். போணீசிய மரக்கலங்களை, தனது கிரேக்கப் படையெடுப்புக்குப் பயன்படுத்திக் கொண்டான். போணீசியாவை, நான்கு சிற்றரசுகளாகப் பிரித்து தனக்குத் திறை செல்லுமாறு பணித்தான். அதன்படி சிதேன், தெர, அரவாது, பிப்லோஸ் ஆகியவை, பாரசீக ஆட்சிக் குட்பட்ட அரசுகளாயின. பாரசீகப் பேரரசுக்கான கப்பற்படை அந்நான்கு துறை முகங்களிலும் உருவாக்கப்பட்டன. கி.மு.350 - 345 காலங்களில், பாரசீக அரசுக்கு எதிராக கலகங்கள் நிகழ்ந்தன. அவற்றை அர்த்த செரஸ் III என்ற மன்னன் இரும்புக் கரம் கொண்டு அடக்கினான். (பாரசீக மன்னர்களின் பெயர்கள் கிரேக்கர்களால் பலவாறு உச்சரிக்கப்பட்டு எழுதப்பட்டன. சிரசு என்ற பெயர் சைரஸ் என்றும், அசுரன் என்ற பெயர் அரசுரஸ் என்றும், புருஷ் என்ற பெயர் போரஸ் என்றும் கிரேக்கத்தில் பதிவு செய்யப்பட்டன.)

அலெக்சாந்தர், கி.மு.332 இல், தெர நகரைக் கைப்பற்றினான். அந்நகரின் 2000 பேரைக் கொன்று குவித்தான் என்று கூறப்படுகிறது. ஆனாலும் அந்நகரத்து மன்னனை ஆட்சியில் தொடர அனுமதித்தான். மற்ற மூன்று நகரங்களும், எவ்வகையான எதிர்ப்புமின்றிப் பணிந்தன. அரதூஸ் நகர மன்னன் பணிந்து போனதால், மீண்டும் ஆட்சியில் நீடித்தான். சிதோன் நகர மன்னன் தூக்கியெறியப்பட்டான். மாசிதோனி யர்களின் வெற்றியால், நடுத்தரைக் கடலுக்குக் கிழக்கில் இருந்த துறைமுக நகரங்கள் பொலிவிழந்தன. அனைத்துத் துறை முகங்களும் கிரேக்கர்களின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தன. கிரேக்க நாகரிகம் புகுத்தப்பட்டதால், போணீசியரின் கலாச்சாரம் முற்றிலும் அழியத் தொடங்கியது. கார்த்தேஜ் நகர அரசு, உள்ளூர் பழங்குடியினரின் ஆதரவில் தொடர்ந்து முன்னேற்றம்

கண்டது. கிரேக்கர்களின் படையெடுப்புப் பாதையினின்றும் வெகு தொலைவில் கார்த்தேஜ் இருந்ததால், கிரேக்கர்களின் படையெடுப்பினின்றும் தப்பியது. அந்நகரத்துப் போணீசிய வணிகர்கள், இரும்பு மற்றும் மணிக்கற்களை தொடர்ந்து விற்று வந்தனர். அப்போதும் அவர்களிடமிருந்த கடல் மேலாண்மையும், மரக்கலங்களும், அவர்களுடைய வெற்றிகரமான வணிகத்துக்குத் துணை நின்றன. இறுதியாக, கார்த்தேஜ் நகரின் கனிம வளத்தைக் கருத்தில் கொண்டு, கி.மு. 146 ஆம் ஆண்டில், உரோமப் பேரரசு, கார்த்தேஜ் அரசைக் கைப்பற்றியது[141].

அலெக்சாந்தருக்குப்பின், கிரேக்கப் படைத் தலைவர்களின் ஆட்சியில், போணீசியா இருந்து வந்தது. கி.மு.197 முதல், கி.மு.65 வரை, கிரேக்கர் களின் கட்டுப்பாட்டில் போணீசியா இருந்தது[142]. கி.மு.65 இல், இடைக் காலத்தில் போணீசியாவைக் கைப்பற்றி ஆர்மீனிய மன்னன் தைக்ரேஸ் என்பவனை, லுக்குல்லஸ் (Lucullus) என்பவன் தோற்கடித்தான். இறுதியாக, பொம்பேய் அப்பகுதிகளை உரோமப் பேரரசுடன் இணைத்தான். கி.பி.200 வரை, போணீசியா உரோமப் பேரரசின் ஆட்சியின் கீழ் இருந்து வந்தது.

## மரபணு சோதனை

தற்காலத்தில் மரபணு சோதனைகள் என்ற புதிய ஆய்வுகள் அறியப்பட்டுள்ளன. (Genetic studies in Demographics). அண்மையில் தேனி மாவட்டத்தில் எடுக்கப்பட்ட மரபணு, ஆப்பிரிக்காவின் மையப்பகுதியில் வாழும் பழங்குடி இனத்தாருடன் ஒன்றுபடுவதாகக் கூறுகின்றனர். ஆப்பிரிக்கர்கள் முதல் இனமா அல்லது தமிழர்கள் முதல் இனமா என்ற கேள்விக்கு விடை அளிக்கப்படவில்லை. மூன்று இலக்கம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாக, தமிழரின் மரபணு சொல்லப்பட்டுள்ளது. இந்த முறை, அறிவியல் ஆய்வாளர்களால் உறுதி செய்யப்படவில்லை. எனினும் சில குறிப்பிட்ட இனங்கள் பற்றி மேலும் ஆய்வுகள் தொடர அவை உதவுகின்றன.

அந்த வகையில், போணீசியரின் மரபணுக்கள் சோதனைக்காக எடுத்துக் கொள்ளப்பட்டன. போணீசியர் குடியேற்றங்கள், வணிக நிறுவனங்கள் எங்கெல்லாம் இருந்தனவோ, அங்கெல்லாம் ஆய்வுகள் மேற்கொள்ளப் பட்டன. குறிப்பாக, சைப்ரஸ், தென்துருக்கி, கரட்டுத்தீவு (Crete), தூனிசியா, மொராக்கோ ஆகிய நாடுகளில் மரபணு சோதனைகள் நிகழ்த்தப்பட்டன. அங்கெல்லாம், மரபணுத் தொடர்புகள் இருந்ததாகக் கண்டறியப்பட்டது. போணீசியர்களின் குடியேற்றங்கள் அந்நாடுகளில் ஏற்கனவே அறியப்

பட்டுள்ளன. அதன்பின் அந்நாடுகளில் மரபணு சோதனை செய்து, அவர்கள் போணீசிய மரபணுவைச் சார்ந்தவர்களே என்று உறுதி செய்தனர். இவையெல்லாம் நகைச் சுவையான சோதனைகள் ஆகும். முடிவில், இம்மரபணுக்களின் மூலம் எங்குள்ளது என்பதைக் கண்டறிய இயலவில்லை என்று கூறுகின்றனர். இப்படியெல்லாம் வேடிக்கையான வித்தையான மரபணுச் சோதனைகள் எவ்வாறான பயன்களைத் தரும் எனத் தெரியவில்லை. உசிலம்பட்டி மரபணு, உள்நாட்டு ஆப்பிரிக்காவில் காணப்பட்டது என்பது தான் உண்மையான மரபணு சோதனை. போணீசிய மரபணுக்களை, தமிழ்நாட்டில் சோதனை செய்து பார்த்தால், அது உண்மையான தகவலைக் கூறும்[143].

## வணிகமும் பொருளியலும்

கி.மு.2000 ஆண்டுகளிலேயே, போணீசியர்கள், தங்கள் வணிகத் தொழிலை தொடங்கிவிட்டனர் எனக் கருதலாம். ஏறக்குறைய நடுத்தரைக் கடல் நாடுகளின் பொருளியல் கூறுகள், ஏறக்குறைய 1000 ஆண்டுக்கால அளவில், போணீசியர்களின் கைகளிலேயே இருந்தன. பலரும் அஞ்சித் தயங்கும் திசைகளிலெல்லாம் பயணித்தனர். தொடக்கத்தில், கிரேக்க நாட்டுடன் மட்டுமே வணிகம் செய்து வந்தனர். கட்டுமானங்களுக்குத் தேவையான மரங்கள், பாப்பிரஸ் கோரைகள், கண்ணாடிப் பொருட்கள் என அவை விரியும். அடிமைகளையும் விற்று வந்ததாகக் கூறுவர். போணீ சியர்களின் வணிகத்தில், சிவப்பு வண்ணத்தில் அவர்கள் அளித்த மூலப் பொருள், ஆடைகளுக்கு வண்ணங்கள் ஏற்றப் பயன்பட்டது.

சிவப்பு, இளஞ்சிவப்பு, பழுப்பு போன்ற நிறங்களை போணீசியர்கள், கடல் கிளிஞ்சல்களைக் கொண்டு தயார் செய்தனர். நடுத்தரைக் கடலின் கிழக்குப் பகுதியில், நத்தை அல்லது கிளிஞ்சல் எனப்படும் (Murex) உயிரினங்கள் மிகுதியாக அறியப்பட்டன. அவற்றைப் பிடித்துத் தருவதற் கென்றே, மீனவர்கள் வேலைக்கு அமர்த்தப்பட்டனர். கடற்கரைகளில், பெரிய அளவிலான அடுப்புகளை வைத்து, அந்த கிளிங்சல்கள் வேக வைக்கப் பட்டன. பின்னர் ஓடுகளைப் பிரித்தெடுத்து, தசைப்பகுதியை மேலும் காய்ச்சி, அத்துடன் சில மருந்துப் பொருட்களையும் சேர்த்து, வண்ணக் கலவை களைத் தயார் செய்தனர். ஒரு காலத்தில், அவ்வாறு காய்ச்சியெடுக்கப்பட்ட கிளிஞ்சல் ஓடுகள் மற்றும் கழிவுகளால், கடற்கரையே நாற்றம் அடித்து, பின்னர் கிளிஞ்சல்களைக் காய்ச்ச தனியிடம் ஒதுக்கப்பட்டது. கிளிஞ்சல் தசைப் பகுதிகளோடு சேர்க்கும் மருந்துப் பொருளை, போணீசியர்கள்

கமுக்கமாக வைத்திருந்தனர். அந்த வண்ணக் கலவைகளுக்கு அனைத்து நாடுகளிலும் தேவைகள் மிகுந்திருந்தன. குறிப்பாக, எகிப்தியரும் கிரேக்கரும் அக்கலவைகளை வாங்கினர். ஆடைகளுக்கு வண்ணம் தோய்க்க அக் கலவை பயன்பட்டது. பெரிய மண் குடுவைகளில் வண்ணங்கள் நிரப்பப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டன. ஜேம்ஸ் பிரிட்சர்ட் என்ற ஆய்வாளர், அகழ்வாய்வு செய்த போது, குவியல் குவியலாகக் கிளிஞ்சல் ஓடுகளும், மண் குடுவை களும், வண்ணக் கலவைகள் காய்ந்து போன நிலையிலும் கண்டறியப் பட்டன. வெகு தொலைவுக்கு மண் குடுவைகளில் ஏற்றிச் செல்வதில் சிக்கல்கள் தோன்றியதால், வட ஆப்பிரிக்காவின் கார்த்தேஜ் பகுதியிலும் இந்தத் தொழில் தொடங்கப்பட்டது. ஆடைகள், துணிகள் என நெசவுத் தொழிலில் சிறந்து விளங்கியவர்கள், துணிகளுக்குச் சாயமேற்றி விற்பனை செய்த போது, அதுவரையில் கண்டிராத வகையில் ஆடைகள் இருந்தன என மக்கள் வியப்படைந்தார்களாம். குறிப்பாக மன்னர்களும், செல்வர் களும் வண்ணம் தோய்த்த ஆடைகளை விரும்பி வாங்கினர்.

ஒரு பொருளை உற்பத்தி செய்வது ஒரு புறமிருக்க, உற்பத்தி செய்யப்பட்ட பொருளை, விற்பனைக் கேற்றவாறு எவ்வாறு மாற்றுவது என்ற கலையை போணீசியர்கள் அறிந்திருந்தனர். போணீசியாவில் கொடி முந்திரி (grapes) த் தோட்டங்கள் மிகுந்திருந்தன. எகிப்தியச் சூழ்நிலை கொடிமுந்திரிப் பயிருக்கு ஏற்றதாக அமைந்திருக்கவில்லை. எகிப்தியர்கள் மதுவின் மீது நாட்டம் கொண்டிருந்தனர். போணீசியர்கள் சுவையான மதுவை (wine) உற்பத்தி செய்தனர். பெரிய மண் சாடிகளில் அவற்றை நிரப்பி, எகிப்தில் விற்றனர். அண்மையில் (1997), நடுத்தரைக் கடலில், புதைந்து போன போணீசியக் கப்பல் ஒன்று கண்டறியப்பட்டது[144]. அதில் நூற்றுக்கணக்கான மதுச் சாடிகள் உடையாத நிலையிலேயே கண்டுபிடிக்கப் பட்டன. இலெபனானில் நடைபெற்ற அகழ்வாய்வுகளில், அப்பெரிய மதுச் சாடிகளைச் சுடும் சூளை கண்டறியப்பட்டது. மதுவை எகிப்தில் விற்ற போணீசியர் அதற்கு விலையாக, நூபியாவின் பொற்கட்டிகளைப் பெற்றனர்.

போணீசிய மலைகளிலும் காடுகளிலும் ஏராளமான கருங்காலி மரங்கள் (Cedar) வளர்ந்தன. தேக்கு மரத்துக்கு இணையான கெட்டித் தன்மை கொண்ட அம்மரங்களை எகிப்துக்கு, ஏற்றுமதி செய்தனர். கி.மு.1070 ஆண்டுகளில், வெண்அமோன் (Ven - Amon) என்ற எகிப்திய அதிகாரி, போணீசியாவிற்குச் சென்றான். மிகப்பெரிய ஏழு கருங்காலி மரங்களை, தனித்தனியாக ஏழு மரக்கலங்களில் எகிப்துக்கு எடுத்து வந்தான். அதற்கு

விலையாக, 4 மண் சாடி நிறைய பொன், ஐந்து வெள்ளிச் சாடிகள், விலையுயர்ந்த லினன் துணிகள் பத்து மூடைகள், மேலும் பத்து மூடைகளில் ஆடை வகைகள், 500 பாப்பிரஸ் தாள் சுருள்கள், 500 பசுக் கூடாரங்கள் 500 கார்க் கயிறுகள், 20 மூடைகளில் பயறு வகைகள், 30 கூடைகளில் மீன்கள் கொடுக்கப்பட்டன[145].

போணீசியர்கள் தங்கள் நாட்டுக்குத் தேவையான பொருட்களையும், அயல் நாடுகளில் விற்கவும், பல நாடுகளில் பொருட்களைக் கொள்முதல் செய்தனர். சார்டினியாவிலிருந்து வெள்ளியும், சைப்ரசிலிருந்து ஈயமும், பெற்றனர். ஈயம், செம்பைக் கெட்டிப்படுத்தக் கலக்கப்பட்டது. வெள்ளி, பொன், கண்ணாடி போன்ற பொருட்களைக் கொண்டு, கலைப்படைப்புகளை உருவாக்கினர். ஈயம், ஸ்பெயின் மற்றும் இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது.

தார்சேஸ் (Tarshes) என்ற இடத்திலிருந்து ஏராளமான கனிமங்களை, போணீசியர்கள் இறக்குமதி செய்துள்ளனர். அந்த இடம் எங்குள்ளது என்பதை ஆய்வாளர்களால் உறுதியாகக் கூற இயலவில்லை. ஆல்பிரைட் என்பவர், அது போணீசிய மொழிச் சொல்லே என்றும், மூலப் பொருட்களின்றும், பொருட்களைப் பிரித்தெடுத்து, புதிய பொருட்களைச் செய்யும் இடம் என்றும் கூறுகிறார். (Refinery). இந்த விளக்கம் எந்த அளவுக்கு உண்மை எனத் தெரியவில்லை. பொதுவாக ஒரு சொல்லுக்கு அல்லது இனத்தின் பெயருக்குச் சரியான பொருள் தெரியவில்லையென் றால், அதன் சிறப்பு பற்றிய பொருளை அதனுடன் இணைத்துவிடுவர். போணீசியர் என்ற சொல்லுக்குப் பொருள் அறியப்படாத நிலையில், வண்ணக் கலவை செய்யும் தொழிலோடு அதனைத் தொடர்புபடுத்தி, இரத்தச் சிவப்பு என்று பொருள் கூறினர். கனான் என்ற சொல்லுக்கு, கம்பளி என்று விளக்கமளித்தனர். அதுபோலவே, தார்சேஸ் என்பதற்கும் தொழிற்சாலைகள் தொடர்பான விளக்கத்தைத் தருகின்றனர். இதனை மறுத்து, உண்மையான பொருளைக் கண்டறிந்து கூறும் போது, நம் ஊரில் பலரும், மேலை நாட்டவர் கூறினால் தவறாக இருக்காது என வாதிடுகின்றனர்.

சாலமன் காலத்தில், தார்சேஸ் பகுதியிலிருந்து ஏராளமான கனிமங்களை அம்மன்னனுக்காக, போணீசியர்கள் இறக்குமதி செய்து கொடுத்தனர். தார்சேஸ் என்பது நகரமா, நாடா அல்லது தீவா, அது எங்கிருந்து என்பதில் குழப்பங்கள் உள்ளன. விவிலியம் பல இடங்களில்

அவ்விடத்தைக் குறிப்பிடுகிறது. சிலர் செங்கடல் பகுதியில் இருந்தது எனக் கூறினாலும், பெரும்பாலான ஆய்வாளர்கள், அவ்விடம் நடுத்தரைக் கடல் பகுதியில் இருந்ததாகக் கூறுகின்றனர். விவிலியச் செய்தியின்படி, அவ்விடம் வெகு தொலைவில் இருந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. (யோனா அதிகாரம், 1 : 3 ; 4 : 2). தரை என்ற தமிழ்ச் சொல், மேலை நாடுகளில் பலவறாகப் பயன்படுத்தப்பட்டது போல், தரை – தார் எனத் திரிந்துள்ளது. சேஸ் என்பது, சேய் அல்லது தொலைவு என்ற சொல்லின் திரிபாகும். தெர என்ற தரை கடலில் ஒரு தீவாக இருந்தது போல், தார் சேஸ் என்பது, வடமேற்கு ஆப்பிரிக்காவில் அமைந்திருந்த தீவு என்றே சிலர் கருதுகின்றனர். விவிலியச் செய்தியின்படி, ஒரு பெரிய மீனின் நீச்சல் வேகத்தில், மூன்று இரவுகள், மூன்று பகல்கள் செல்லும் தொலைவில் அத்தீவு இருந்ததாகக் கருத இடமுண்டு. (யோனா என்ற இறைவாக்கினரை, கடவுள் தார் சேஸ் செல்லும்படி கட்டளையிட்டார். அவரோ கடவுளின் கட்டளையை மீறி வேறு ஊருக்குக் கப்பலில் பயணமானார். புயல் காற்றினால் கப்பல் கவிழ்ந்தது. யோனாவை ஒரு பெரிய மீன் விழுங்கியது. மூன்று இரவும் பகலுமாக யோனா மீன் வயிற்றில் உயிருடன் இருந்தார். கடவுள் குறிப்பிட்ட, தார்செஸ் என்ற இடத்தில், அம்மீன் யோனாவைக் கக்கி விட்டுச் சென்று விட்டது. இது தான் விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ள செய்தி.)

போனீசியர்கள், தங்கள் வணிகப் பொருட்களை இருப்பில் வைத்து, மேலும் பல நாடுகளுக்கு விரைவாக எடுத்துச் செல்லும் வகையில், வடமேற்கு ஆப்பிரிக்காவில், கார்த்தேஜ் என்னுமிடத்தில் மிகப்பெரிய பண்டக சாலை ஒன்றை உருவாக்கினர். அது, போனிசியர்களின் இரண்டாவது வணிகத் தலை நகரம் எனப்படுகிறது. கார்த்தேஜ், தற்காலத்து மொரக்கோ நாட்டில் தோற்றுவிக்கப்பட்ட நகரமாகும். நாளடைவில், ஏராளமான போனீசியர்கள் கார்த்தேஜில் குடியேறினர். அங்கு வாழ்ந்திருந்த பெர் – பெர் என்ற ஆப்பிரிக்கப் பழங்குடியினருடன் கலந்தனர். பிற்காலத்தில் போனீசியர் களால் ஒரு நகர அரசே உருவாக்கப்பட்டது. அங்கிருந்து தான், அட்லாண்டிக் கடலைக் கடந்து தென் அமெரிக்காவின் கயானா வரை சென்று, வணிகம் செய்தனர் என்று சொல்லப்படுகிறது. ஆப்பிரிக்காவை மூன்றாண்டுகளில், கப்பல் வழியாகச் சுற்றி வந்த போனீசியர், அதனை ஒரு பெரிய தீவு என்றே குறிப்பிட்டுள்ளனர். ஏறக்குறைய தமிழ்நாட்டிலிருந்து, தென் அமெரிக்கா வரையிலுள்ள ஏராளமான நாடுகளை போனீசியர் அறிந் திருந்தனர். உலகப் பரப்பளவில், மூன்றில் இரண்டு பகுதிகளைச் சுற்றிய முதல் கடலோடிகள் போனீசியரே என்றால் அது மிகையன்று.

**போணீசியரின் மரக்கலங்கள்**

கி.மு.1500 ஆண்டுகளில், மேலை நாடுகளில் எந்நாட்டவரும் பெற்றிராத கடல் மேலாண்மையை, எவ்வாறு போணீசியர் மட்டும் பெற்றிருந்தனர் என்பது ஆய்வாளர்களுக்கே புரியாத புதிராக உள்ளது. மிகச் சிறந்த தொழில் நுட்பத்துடன் உருவாக்கப்பட்ட மரக்கலங்கள், பல மாதங்கள், பல ஆண்டுகள் கூட, தொடர்ந்து பயணம் செய்யும் வகையில் கட்டப்பட்டிருந்தன. அம்மரக்கலங்களைக் கருங்காலி (செடார்) மரத்தினின்றும் உருவாக்கியிருக்க முடியாது என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஏனெனில் அவை எடையில் கூடுதலாகவும் வலிமையாகவும், மிதக்கும் தன்மைக்கு ஒவ்வாததாகவும் இருக்கும் என்பது கருத்து. தேக்கு, பலா மரங்களின் பலகைகள், இழைப்பதற்கு எளிதாகவும், நீரில் பலகாலம் உறுதியாகவும் இருக்கும். போணீசியர்கள் அம்மரங்களை எங்கிருந்து பெற்றார்கள் என்பதற்கானச் சான்றுகள் இல்லை. தமிழ் நாட்டிலிருந்து அவற்றைக் கொண்டு சென்றிருக்கலாம் என்று கருதப்படுகின்றது.

போணீசியர்கள், கி.மு.3000 ஆண்டுகளில், சிந்துவெளி அல்லது தமிழகத்தினின்றும் மேலை நாடுகளில் குடியேறியவர்கள் என்பதை, மேலை நாட்டு ஆய்வாளர்கள் அறிந்திருக்கவில்லை. தற்கால ஆய்வுகள் அதனை உறுதி செய்கின்றன. பழங்காலம் முதல், குறிப்பாக வெள்ளக் காலத்துக்குப் பிறகு, தமிழர்கள் உலகெங்கும் கடலோடிச் சென்றுள்ளனர். அதற்கு அவர்கள் பல்வேறு மரக்கலங்களைப் பயன்படுத்தியுள்ளனர். தமிழ்மொழியில் மரக்கலங்கள் தொடர்பான பெயர்கள் 300க்கும் மேல் உள்ளன[146]. உலகின் எந்த மொழியிலும், மரக்கலங்களைப் பற்றிய சொற்கள் இந்த அளவுக்கு இல்லையென்பதே, தமிழர்களின் கடல் மேலாண்மையைத் தெளிவுபடுத்தும். ஒவ்வொரு பெயருக்குரிய மரக்கலமும் வெவ்வேறான வடிவமைப்பில் இருந்தன. ஆங்கிலேயர்கள் தமிழ் நாட்டுக்கு வருமுன் வரையிலும் கூட, 8000 டன் எடையைச் சுமந்து செல்லும் மரக்கலங்களைத் தமிழர்கள் வடிவமைத்துக் கட்டியிருந்தனர். தமிழரின் கடலோடும் ஆற்றலும் திறமையும் மரபு வழியில் வந்தவை.

தமிழர்களால் கடைப்பிடிக்கப்பட்ட அத்திறமைகளும் தொழில்நுட்பங் களும் உத்திகளும் போணீசியரால் பின்பற்றப்பட்டன. போணீசியரின் கடலோடும் ஆற்றல் மரபு வழியில் வந்தது என்பதை மேலை நாட்டவர் அறிந்திருக்கவில்லை. கடலோடும் ஆற்றலையும் கப்பல் கட்டும் நுட்பங்களையும், போணீசியர்களிடமிருந்தே கிரேக்கர்களும் உரோமர்களும்

கற்றனர். போணீசியர்களின் மரக்கலங்களில் வேலையாட்களாக, கிரேக்கர்கர்களே பணியாற்றி வந்தனர்.

போணீசிய மரக்கலங்களை, கிரேக்கர்கள் கிப்போய் (Hippoi) என்றும், கல்லோய் (Galloi) என்றும் அழைத்தனர். கிப்போய் என்பது குதிரை முகம் கொண்ட மரக்கலம் என்று சொல்லப்பட்டது. அவ்வாறான குதிரை முகம் கொண்ட மரக்கலங்களை, போணீசியர் இயக்குவது போன்ற புடைச் சிற்பங்கள், அசீரியரின் அரண்மனையில் இருந்தன. அசீரியர்களின் ஆட்சிக்கால இறுதியில் (கி.மு. 8-7 நூற்றாண்டுகள்) அச்சிற்பங்கள் செதுக்கப்பட்டன என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்[147].

கப்பல் என்ற சொல், பழந்தமிழ் இலக்கியங்களில் அரிதாகவே காணப்படுகின்றது.

*"பாயிலாத கப்பல் ஏறி அக்கரைப் படுமுனே"*[148]

கல் என்ற சொல்லுக்கு, பெரும் பாறாங்கல் என்பது பொருள்.

பல் என்பது, பல என்று பொருள்படும்.

பல பாறாங் கற்களைப் போன்ற உருவம் உடையதாக, கப்பல் கருதப்பட்டது.

*"உலைக் கல் அன்ன பாறை ஏறி"*[149]

குண்டுக்கல். *"கல் பிறங்கு அத்தம்"*[150]

கல் + பல் : கற்பல் – கப்பல் : பல குண்டு அல்லது பாறாங்கற்களைப் போன்ற வடிவம் கொண்டது.

தெப்ப (Tebbah) : எபிரேய மொழிச் சொல்[151]. மரக்கலம் – தெப்பம்

கெபல் (Gebel) : போணீசியச் சொல், மரக்கலம்152. – கப்பல்.

## தெப்பல் :

கிரேக்கர்கள் குறிப்பிடும் கிப்போய், கப்பலையே சுட்டுகிறது.

கப்பல் (தமிழ்) → கெபல் (போணீசியம்) → கிப்போய் (கிரேக்கம்)

ஸ்கப்பெ (Scype - செர்மானியம்) → ஸ்கைப் (Scipe - பழைய ஆங்கிலம்)

ஷிப் (Ship - ஆங்கிலம்).

கிரேக்கர்கள் குறிப்பிடும் கப்பல், குதிரை முகத்தைக் கொண்டிருந்தது.

பரி என்பது குதிரை, பரிமுகம் – குதிரை முகம்.

பரிமுக அம்பி : குதிரை முகம் கொண்ட மரக்கலம்.

*"பரிமுக அம்பியும் கரிமுக அம்பியும்"*[154]

நாய் முகம் கொண்டது நாவாய் என்றும், யானை முகம் கொண்டது கரிமுகம் என்றும், வடிவமைப்பில் மரக்கலங்கள் மாறுபட்டிருந்தன.

கல்லோய் என்ற கிரேக்கச் சொல், கலம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். கலம் : மரக்கலம், *"கடல் ஆழ் கலத்தின் தோன்றி"*[155]

**போணீசியரின் வணிக நிறுவனங்கள் இடம் பெற்றிருந்த நாடுகள் :**

1. அல்ஜீரியா - 11 இடங்கள், 2. இத்தாலி சார்டினியா - 5, சிசிலி - 4, 3. லிபியா - 3, 4.மால்டா - 6, 5.மாரிடானியா - 1,

6.போர்த்துக்கல் - 2, 7. ஸ்பெயின் - 9, 8.தூனிசியா - 7, 9.துருக்கி - 1, 10. மொராக்கோ - 7, 11. மற்ற இடங்கள் - 9.

**எழுத்துச் சீர்திருத்தம் :**

போணீசியர்களின் மற்றொரு சாதனையாக, மொழித்துறையில், புதிய வரிவடிவங்களை அறிமுகம் செய்ததாகக் கருதப்படுகின்றது. கி.மு.1500 ஆண்டுகளில் அச்சீர்திருத்தம் அறிமுகம் செய்யப்பட்டதாகக் கூறுவர். போணீசியர்களின் எழுத்து முறைக்கு முன்பு, சுமேரியர் அறிமுகம் செய்த ஆப்பு எழுத்து முறை (Cuneiform) யே நடைமுறையில் இருந்தது. அதனைத் தழுவி, அக்காடிய, அசீரிய எழுத்துமுறைகள் இருந்தன. எழுத்து முறையின் தொடக்கம் பற்றிய செய்திகள் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளன. போணீசியரின் எழுத்து முறையில், 22 எழுத்துகளும், 30 ஒலிகளும் இருந்தன. 8 ஒலிகள், அந்த 22 எழுத்துகளில் சிலவற்றில் அடிக்கோடு, புள்ளிகள் இடப்பட்டு பெறப்பட்டன. ஒவ்வொரு எழுத்துக்கும் ஓரொலி அறிமுகமாயிற்று. இதனால் எளிமையாய்ப் படிக்கவும் எழுதவும் எல்லோராலும் முடிந்தது. இந்த முறையை முதலில் எபிரேய மொழி ஏற்றுக் கொண்டது. கி.மு.1250 க்குப் பிறகு எழுதப்பட்ட பழைய ஏற்பாடு என்ற விவிலிய நூல், போணீசிய எழுத்து முறையில் எழுதப்பட்டதே. தொடர்ந்து சிற்சில மாற்றங்களுடன் அரபு மொழியில் ஏற்கப்பட்டது. நடுத்தரைக் கடல் நாடுகளில் அறியப்பட்ட வேறு சில மொழிகளும் புதிய முறையை ஏற்றுக் கொண்டன. போணீசியர்கள் தங்கள் வணிக நடவடிக்கைகளை, புதிய முறையிலேயே பதிவு செய்யத் தொடங்கினர். மேலே குறிப்பிடப்பட்ட வணிக நிறுவன நாடுகளிலும் புதிய எழுத்து முறை அறிமுகம் செய்யப்பட்டது. கிரேக்க நாட்டிலும், காட்மஸ் (Cadmus) என்ற போணீசிய வணிகர், புதிய எழுத்து முறையை அறிமுகம் செய்தார் என்று, எரடோட்டஸ் கூறுகிறார். கிரேக்கர்களும் போணீசிய முறையை ஏற்றுக் கொண்டனர். தொடர்ந்து உரோமானியர்களும் தங்கள் மொழியில் புதிய முறையை நடைமுறைப்

படுத்தினர். அதன் பின்னர், பிற்கால ஐரோப்பிய மொழியிலும் அம் முறையை ஏற்றுக் கொண்டன. இன்றைய ஐரோப்பிய மொழிகளின் மூல எழுத்துமுறை போணீசியர்களுடையதே என்று கூறி, அம்முறையை அறிமுகம் செய்த போணீசியர்கள் பாராட்டப் பெற்றனர்.

அண்மைக் காலம் வரை, போணீசியரின் எழுத்து முறை, மொழி யுலகில் ஒரு புதுமையான புரட்சிப் படைப்பென்றே சொல்லப்பட்டு வந்தது. ஏறக்குறைய 3000 ஆண்டுகளாக ஏற்கப்பட்டிருந்த செய்தியை, அண்மைக் கால மொழியியல் சார்ந்த ஆய்வாளர்கள் ஏற்க மறுக்கின்றனர். முற்றிலும் தொழில் மற்றும் வணிகத்துறையில் ஈடுபட்டு வந்த போணீசியர்களில், சிறந்த அறிஞர்கள், கல்வியாளர்கள், இலக்கியப் படைப்பாளிகள் என்று எவரும் சிறப்பாகச் சொல்லப்படவில்லை. மொழிகள் பற்றிய சிந்தனைத் தெளிவில்லாத போணீசியர்களால் எவ்வாறு புதிய எழுத்து முறையை உருவாக்கியிருக்க முடியும் என்ற கேள்வியை முன் வைக்கின்றனர். ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ள ஆன் ஜ்சுபி என்ற இலெபனான் நாட்டுத் தற்கால ஆய்வாளர், தங்கள் முன்னோர்களான போணீசியர்களின் எழுத்து முறையை ஆய்வு செய்துள்ளார். உறுதியாக, அப்புதிய எழுத்து முறை போணீசியர்களுடையதல்ல என்றும், போணீசியர்கள், இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்ட புதிய எழுத்து முறையில், சிற்சில மாற்றங்களைச் செய்து, அதனைத் தம்முடையது எனக் கூறிக் கொண்டார்கள் என்றும், அது முற்றிலுமான அறிவுத்திருட்டு (Plagiarism) என்றும் கூறுகிறார்[156].

இந்தியாவில், கி.மு.1500 ஆண்டுகளில், சிந்து வெளி நாகரிகம் அழிவுற்ற காலங்களில், சிந்து வெளி எழுத்துகளைச் சீர்திருத்தி, புதிய எழுத்து முறையை, தமிழறிஞர்களே அறிமுகம் செய்தனர். அதற்கு என்ன பெயர் அப்போது வைக்கப்பட்டது எனத் தெரியவில்லை. பிற்காலத்தில் பிராமி எனப் பெயர் வைக்கப்பட்டது. பிராமி என்பதற்கு உயர்வானது, முதன்மை யானது, சிறப்பானது என்பது பொருளாகும். ஆரியர்கள், அதனைப் பிரம்மாவே கண்டு பிடித்துக் கொடுத்தார் என்று கதை பண்ணி விட்டனர். பிரம்மா என்ற ஆரியக் கடவுள் கண்டுபிடித்துக் கொடுத்ததாகச் சொல்லும் ஆரியர்கள், பிராமி முறையைப் பின்பற்றவேயில்லை. வட இந்தியாவில், தமிழினின்றும் திரிபு பட்ட மொழிகளே, புதிய பிராமி முறையைப் பின்பற்றின. தமிழ் மொழியும் அதனை ஏற்றுக் கொண்டது. தமிழர்கள் கண்டுபிடித்த முறையை எக்காலத்தும் ஆரியர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. புதிய எழுத்துமுறை அறிமுகம் செய்யப்பட்டு, ஏறக்குறைய 1500 ஆண்டு

களுக்குப் பிறகே, சமற்கிருதத்துக்கு வரிவடிவம் அறிமுகமாயிற்று. அவ்வரிவடிவமும், கிரேக்கர்களின் வருகைக்குப்பின், கிரேக்கர்களின் உதவியுடன் உருவாக்கப்பட்டது. கிரேக்கர்கள் ஏற்கனவே, போணீசிய முறையை ஏற்றுக் கொண்டிருந்தனர். போணீசியச் சாயல், கிரேக்கர்கள் மூலமாக, சமற்கிருத எழுத்து முறையில் புகுத்தப்பட்டது.

போணீசியர்கள், கி.மு.2000 ஆண்டுகளிலிருந்தே, வட இந்தியாவோடும் தமிழகத்தோடும் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. தமிழகத்தில் அறியப்பட்டிருந்த புதிய முறையை (30 குறியீடுகளில் 8 ஐக் குறைத்து) 22 எழுத்துகளாக மேற்கில் அறிமுகம் செய்தனர். போணீசியர்கள் அறிமுகம் செய்த எழுத்துகளையும், பிராமி எழுத்துகளை ஒப்பிட்டு அண்மைக் காலம் வரை எவரும் நோக்க வில்லை. புதிய ஆய்வுகள், போணீசிய எழுத்து முறை, தமிழ்ப் பிராமி எழுத்து முறையைத் தழுவியதே என்பதை உறுதிப்படுத்தியுள்ளன. தமிழ் மொழி, மேலை மொழிகளின் மூலமாக உள்ளதை அண்மையில் கண்டு கொண்டதைப் போல், ஐரோப்பிய மற்றும் மேற்காசிய மொழிகளின் வரி வடிவங்களும் தமிழ் மூலத்தைக் கொண்டவையே என்றும் அறியப் பட்டுள்ளது. இதுவரையிலும் கூட, தமிழர்கள் தாழ்வு மனப்பான்மையுடன், தமிழக நிகழ்வுகளையே சுற்றிச் சுற்றிப் பேசி வந்துள்ளனர். உலகளாவிய அளவில், தமிழன் பல்வேறு புதுமைகளைப் படைத்துள்ளான் என்ற வரலாற்று உண்மைகள் தற்போது தான் வெளிவரத் தொடங்கியுள்ளன. (கிரேக்க உரோம அரசுகளை பாண்டியர்களே உருவாக்கி ஆண்ட செய்திகள், ஆசிரியரின், "பண்டைத் தமிழரின் நில மேலாண்மை", என்ற நூலில் காண்க.)

இப்போதும் பலர், போணீசியர்களே, மேற்கு நாடுகளில் புதிய எழுத்து முறையை அறிமுகம் செய்ததாக நம்பிக் கொண்டு எழுதி வருகின்றனர்[157]. போணீசிய மன்னன் அகிராம், புதிய எழுத்து முறையில் பல ஆவணங் களைப் பதிவு செய்துள்ளான். லெபனான், சிரியா, சைப்ரஸ், மோவாப் போன்ற நாடுகளில், புதிய எழுத்துமுறையிலான கல்வெட்டுகள் உள்ளன. நடுத்தரைக் கடல் நாடுகள் முழுவதும், பல்வேறு குறிப்புகளில் பதிவாகி யுள்ளன. போணீசிய மொழி, வடமேற்கு செமிட்டிக் மொழி என்று சொல்லப் பட்டாலும், அது எபிரேய மொழியின் கிளை மொழியே. தமிழினின்றும் கிளைத்த மலையாளம் போல், எபிரேயமும் போணீசியமும் அறியப்படும். ஒரு காலத்தில் அவ்விரு இனங்களும் ஓரினமாக இருந்தவர்களே. கி.பி.5

ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த, கிறித்துவ சமயத்தின் தத்துவ அறிஞர் புனித அகஸ்டின், போணீசிய மொழியை நன்கறிந்தவர். ஏற்கனவே எபிரேயம், இலத்தீன், கிரேக்கம் ஆகிய மொழிகளிலும் அவர் வல்லுநராக இருந்தார்.

**கலைத் தொழில்கள் :**

சுமேரியர்கள், மெசபத்தோமியர், எகிப்தியரைப் போன்று போணீசியர்கள் கலை உணர்வு கொண்டவர்களல்லர். ஆனால் உருவாக்கப்பட்ட ஒரு பொருளை, மெருகேற்றுவதில் திறமையானவர்கள். எவற்றையும் உற்றுநோக்கும் திறமை பெற்றிருந்த போணீசியர்கள், சுமேரிய, எகிப்திய கலை நுணுக்கங்களைக் கற்றறிந்தனர். பல நாடுகளின் கலைத் திறமைகளைக் கலந்து, புதிய முறைகளையும உருவாக்கக் கற்றுக் கொண்டனர். 1897, சனவரி 5 ஆம் நாள், தி நியுயார்க் டைம்ஸ் வெளியிட்ட கட்டுரையொன்றில், போணீசியர்களின் கலைத் திறமைகள் பற்றி அடியிற்கண்டவாறு சொல்லப்பட்டுள்ளது[158].

“பிற உழைப்பாளிகள் கலைஞர்களின் படைப்புகளில் நுழைந்து அவர்களின் உழைப்பை, தமது சிறு சிறு மாற்றங்களில், தமதாக்கிக் கொண்டு, தமது புதிய படைப்புகள்போல் உணர்த்தி விடுவார்கள். எகிப்தின் சிங்க உடல் சிலை, அசீரியாவில், ஆசியக் கலைப்படைப்பாக்கப்பட்டது. கிரேக்கத்தில் ஐரோப்பிய நுணுக்கத்தைப் பெற்றது. நைல் மற்றும் யூப்ரடீஸ் ஆற்றங்கரைகளில், போணீசியர்கள் நிறையவே கற்றுத் தெளிந்தார்கள். பாபிலோனியக் குழாய்கள் (Cylinders) போணீசியர்களால் புதிய மெருகூட்டி, ஐரோப்பாவில் விற்கப்பட்டன. கடவுளைக் கூட பிறரிடமிருந்து திருடிக் கொண்டவர்கள் போணீசியர்கள்”.

ஏற்கனவே, போணீசியர்கள் மீது பல குற்றச் சாட்டுகளும் உண்டு. வணிகத்தில் வெளிப்படைத் தன்மையற்றவர்கள் என்பர். சில கமுக்கச் சொற்களைத் தமக்குள் பரிமாறிக் கொண்டு, விலைகளைக் கூட்டுவர் என்றும், போணீசியப் பொருட்கள் தரமற்றவை (தற்கால சீனப் பொருட்களைப் போல) என்றும் சிலர் குற்றம் சாட்டுகின்றனர். இவையெல்லாம், பொதுவாக வணிகம் செய்பவர்கள் மீது சாட்டப்படுபவையே. போணீசியர்களின் கலைப் பொருட்களில், வட்ட வடிவிலான கிண்ணம் ஒன்று, ஊசி முனையில் நிறுத்தப்பட்டிருந்ததாகக் கூறுவர். அக்கிண்ணத்தின் மையப் புள்ளி மீது நின்ற அக்கிண்ணம், சுழலும் வகையிலும் அமைக்கப்பட்டிருந்ததாக கிரேக்கக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

## போணீசியச் சமயம்

தொடக்கததில் எபிரேயர்கள் கடைப்பிடித்து வந்த சமய வழிபாட்டு முறைகளை, மோசே மாற்றி, புதிய சமயம் ஒன்றைத் தோற்றுவித்த பிறகு, பலர் மோசேயுடன் இணைந்து கொண்டனர். மற்றவர்கள் தங்கள் பழைய சமயத்தைத் தொடர்ந்தனர். அவ்வாறு எபிரேயரில், பழைய சமயத்தைத் தொடர்ந்தவர்களே போணீசியர் எனப்பட்டனர். பொதுவாக, மெசபத்தோமிய, சுமேரிய, கனானிய வழிபாட்டு முறைகளும், போணீசியரிடம் காணப் பட்டன[159]. போணிசிய சமயம், சமூகம் சார்ந்த வழிபாட்டு முறைகளைக் கொண்டது. தனிப்பட்ட ஒருவரின் வழிபாட்டு முறையாகக் கருதப்படுவது. போணிசியர்கள், நகரங்களில் வாழ்ந்திருந்ததாலும், வணித் தொழிலைச் செய்து வந்ததாலும், அவ்விரு துறைகள் சார்ந்தே, அவர்களுடைய வழிபாட்டு முறைகள் அமைந்திருந்தன. ஒவ்வொரு முறையும் தங்களுடைய வணிகப் பயணத்தைத் தொடங்கு முன்பும், முடித்த பின்பும் வழிபாடுகள் நடத்தப்பட்டன. ஒரு கடற் பயணத்தில் கிடைத்த ஈட்டத் தொகையின் அடிப்படையில், வழிபாடுகள் பெரிதும் சிறிதுமாக அமைந்திருந்தன. வழிபாட்டு முறைகளை, தம் வாழ்க்கையின் பெரும் சடங்காக போணீ சியர்கள் கடைப்பிடித்து வந்தனர். அவை பற்றிய முழுத் தகவல்களும் கிடைக்கவில்லை.

எபிரேயப் பங்காளிகளைப் போல, போணிசியர்களும் சமயப் பற்றுமிக்கவர்களாகவே காணப்பட்டனர்[160]. 1928 ஆம் ஆண்டில், பழைய உகாரித் கோயிலின் இடிபாடுகளிடையே கண்டுபிடிக்கப்பட்ட களிமண் தட்டுகளில் எழுதப்பட்டுள்ள ஆப்பு எழுத்துக் குறிப்புகள், அவர்களின் வழிபாட்டு முறைகளை விளக்குகின்றன. பெரிய திருவிழாக்களில் நடைபெற்ற வழிபாட்டு முறைகளில், ஆண்களும், பெண்களும் கோயில் களில் கூடி வெளிப்படையாக உடலுறவு கொள்வதென்பது பரவலாக அறியப்பட்டிருந்தது. அக்காலங்களில் பெண்கள் கருவுறுவது கடவுளின் அருளைப் பெறுவதாகக் கருதப்பட்டது. தற்கால நோக்கில் அது அருவறுப் பானதாகக் கருதப்பட்டாலும், அக்கால அளவில், அது சமூகவிழாவாகக் கருதப்பட்டது. எபிரேய மக்களிடமும், அந்த நடைமுறை இருந்துள்ளது. மோசேயின் சமயம் தொடங்கப்படு முன், அந்நடை முறை பின்பற்றப்பட்டு வந்தது. யாக்கோபுவின் மகனான யூதா என்பவன் பற்றிய செய்தியில் அந்நிகழ்வு சொல்லப்பட்டுள்ளது. அக்காலத்தில் கோயிலில் பொதுமகளிர் இருந்தனர் என்பதை விவிலியம் தெரிவிக்கின்றது. அம்மகளிரை எவரும்

அணுகி உறவு கொள்ளலாம் என்றும் சொல்லப்பட்டுள்ளது. யூதா, தன் மருமகள் என்று அறியாமல், அவளைக் கோயில் பரத்தை எனத் தவறாக எண்ணி, உறவு கொள்ள முயன்றான் என்று விவிலியம் கூறுகிறது.

உலக நாகரிகம் எங்கிலும் பரத்தையர் இருந்துள்ளனர். அது, சமூகத்தின் வழக்காறுகளில் ஒன்றாகவே கருதப்பட்டது. தமிழ் நாட்டிலும் பரத்தையர் இருந்தனர் என்பதை, தமிழ் இலக்கியங்கள் சுட்டுகின்றன. பரத்தையர் இரு வகையாகச் சொல்லப்பட்டுள்ளனர். பொருளுக்காக, பலரையும் அணுகும் பொது மகளிர் ஒரு வகையாகவும், திருமணமான ஒருவனுடன் மட்டுமே உறவு கொள்பவள் மற்றொரு வகையாகவும் சொல்லப்பட்டுள்ளனர். மாதவியின் தாய் பொது மகளாகவும், மாதவி, கோவலனை மட்டுமே தலைவனாக ஏற்றிருந்தவளாகவும் சொல்லப்பட் டுள்ளனர். மாதவியின் மகள் துறவு பூண்டு கற்புடை மகளாக வாழ்ந்த செய்தியை மணிமேகலை தெரிவிக்கின்றது. ஒரு பொதுமகளிர் குடும்பத்தில் ஒவ்வொரு தலைமுறையும் ஒவ்வொரு வகையான வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துள்ளதால், பொது மகளிரும் சில கட்டுப்பாடுகளுடன் வாழ்ந்திருந்ததாக அறியலாம்.

கி.மு.1250 ஆண்டுகளில் மோசேயின் புதிய சமயம் தோற்றுவிக்கப் பட்டதாகக் கருதப்படுகிறது. அதன் பின்னர் எபிரேயர்கள் ஆட்சியை மேற் கொண்ட காலத்தும், பரத்தையர் அவர்களது நாட்டில் அறியப்பட்டுள்ளனர். கி.மு.800 ஆண்டுகளில், ஆட்சி செய்த ஓசையா (Josiah) என்ற மன்னன், பொது இடங்களில் பரத்தையர் வாழ்வதைத் தடை செய்தான் என்று விவிலியம் கூறுகிறது[161]. இயேசுவின் காலத்தில், மக்தலேன் என்ற பொது மகள் பற்றிய செய்தியை புதிய ஏற்பாடு கூறுகிறது. அவளுக்கு அறிவுரை கூறி, இயேசு அவளை நல்வழிப்படுத்தியதாகவும் விவிலியத்தில் சொல்லப் பட்டுள்ளது.

குழந்தைகளை அல்லது சிறுவர்களைக் கடவுளுக்குப் பலி கொடுக்கும் வழக்கம், மெசபத்தோமியா, கனான், போணீசியா போன்ற நாடுகளில் நடைமுறையில் இருந்தது. அதுவும், தலைப் பிள்ளையைப் (ஆணை மட்டும்) பலி கொடுப்பது, கடவுளுக்கு விருப்பமான ஒன்றாகக் கருதப்பட்டது. எபிரேயனான அபிரகாம், கடவுள் கேட்டுக் கொண்டபடி, தன் மகனான ஈசாக்கை, கடவுளுக்குப் பலி கொடுக்க முன் வந்த செய்தி விவிலியத்தில் காணப்படுகிறது. (இசுலாமிய மரபுகள், இசுமாயெல்லைப் பலி கொடுக்க

முன் வந்ததாகக் கூறுகின்றன. அந்த நிகழ்வின் நினைவாகவே பக்ரீத் பண்டிகை கொண்டாடப்படுகிறது) மோசே, கடவுள் அபிரகாமைச் சோதனை செய்தார் என்றும், சிறுவர் பலியை கடவுள் ஏற்கவில்லையென்றும் கூறி, தன் சமயத்தில், சிறுவர் பலியைத் தடை செய்தார். அதற்குப் பின்னும், போணிசியர்கள் தொடர்ந்து சிறுவர்களைப் பலி கொடுத்து வந்தனர். எபிரேயரும் போணிசியரும் ஓரின மக்களே என்பதற்கு, அந்நடைமுறையும் ஓர் எடுத்துக்காட்டாக உள்ளது[162].

போணீசியர்களின் தொன்மக் கதைகள், மெசபத்தோமியரின் கதைகளோடு மாறுபட்டவை. எபிரேய, போணீசியர்களின் முதல் தெய்வம் எல் என்பதே[163]. புயல் கடவுள், பால் எனப்பட்டான். தெர நகரின் கடவுள், மேல்கார்ட் எனப்பட்டான். போணீசியர்கள், தங்கள் வணிகத்தில் கமுக்கமான முறையைக் கடைப்பிடித்து வந்ததால், எவருக்கும் தெரியாத ஒரு கடவுள் பெயரை அவர்கள் அழைத்து வந்தனர். அக்கடவுள் பெயரைச் சொல்பவர்களுக்கெல்லாம் அவர் உதவி செய்து விடுவார் என்பதால், அப்பெயரையும் கமுக்கமாக, பிறர் அறியாமல், வழிபட்டு வந்தனர். அப்பெயரும் வணிகர்களில் சிலருக்கு மட்டுமே தெரியும். அவ்வாறே கமுக்கமான கடவுள் பெயராக, அதோனி (Adoni) என்ற சொல்லை, எபிரேயர்கள் பயன்படுத்தி வந்தனர். எபிரேயர்கள், தங்கள் கடவுள் பெயரைச் சொல்வதில்லை. இறைவன் மோசேக்கு அளித்த 10 கட்டளைகளில், முதல் கட்டளையாக, தன்பெயரை வீணாகச் சொல்லாதே என்பதாகும். அதனால் எபிரேயர்கள், கடவுள் பெயருக்கு மாற்றாக அதோனி என்ற சொல்லைப் பயன்படுத்தி வந்தனர். எபிரேயர்களின் கடவுள், யா - கோ - ஆ என்று அழைக்கப்பட்டார்[164].

## சொற்களுக்கான விளக்கங்கள்

எல் என்பது எபிரேய போணீசிய கனானிய சுமேரிய மக்களின் கடவுளாகும். சுமேரியரும் எல் என்ற கடவுளையே வழிபட்டனர். மெசபத்தோமியரின் கடவுள் யா என்பதாகும். எல் - யா என்ற இரண்டு பெயர்களும் சுமேரிய இலக்கியங்களில் காணப்படுகின்றன. மோசே காலத்துக்குப் பிறகு, எல் கடவுள் கைவிடப்பட்டு, யா -கோ - ஆ என்ற கடவுள் வழிபடப்பட்டது. அபிரகாம் முதல், மோசே காலம் வரை (கி.மு.2000 - 1200), எல் கடவுளையே எபிரேயர்கள் வழிபட்டு வந்தனர். அபிரகாம் தன் மகனுக்கு, இசமா - எல் என்றே பெயரிட்டதாக விவிலியம் கூறுகிறது. அபிரகாமின் கடவுள் பெயரும் எல் என்பதே. ஆதாம் தன் மகனுக்கு கா -எல், ஆப் - எல்

என்றே பெயர் சூட்டியதாக குர் ஆன் கூறுகிறது. எபிரேய மொழியில், கோயிலுக்கு பெத் - எல் என்றே சொல்லப்பட்டுள்ளது. ஆதாம் முதல் இயேசு வரையிலான விவிலியச் செய்திகளில் எல் என்ற சொல் பல இடங்களில் அறியப்பட்டுள்ளது. கடவுளின் தூதர்களாக மிக்கா – எல், காபிரி – எல், இரபா – எல் போன்றோர் அறியப்படுகின்றனர். எபிரேயர்களின் முது பெரும் தந்தையான அபிரகாமின் பெயரன், இசறா - எல் என்றே கொல்லப்பட்டான். அவன் பெயரையே, பிற்காலத்தில் குடியேறிய புதிய நாட்டிற்கும் இசறா – எல் என்ற பெயரே சூட்டப்பட்டது (கனான் என்ற பெயர் கைவிடப்பட்டது). மேற்கண்ட செய்திகள் மூலம், எல் என்ற கடவுள் எவ்வாறு போற்றப்பட்டார் என்பதை அறியலாம்.

உண்மையில், எல் என்பது தமிழ்ச் சொல்லே என்பதை, மேலை நாட்டு ஆய்வாளர்கள் அறிந்திருக்கவில்லை. அதனால், அச்சொல்லுக்கான மூலமும் பொருளும் தெரியவில்லை எனப் பதிவு செய்துள்ளனர். மாகறல் கார்த்திகேய முதலியார் என்ற தமிழறிஞர், தமிழில் உள்ள சொற்களின் வேரும் மூலமும் பற்றி விரிவான ஆய்வுகள் செய்துள்ளார். தமிழ் மொழியிலுள்ள சொற்கள் ஒரு வேர்ச் சொல்லில் இருந்து தான் வளர்ச்சி யடைந்தன என்பது அவரது கருத்தாகும். அந்த முதற்சொல், எல் என்பதே என எண்ணற்ற சான்றுகளுடன் நிறுவியுள்ளார். வேர்ச் சொல்லாய்வின் தந்தையெனப் போற்றப்படும் நல்லூர் ஞானப்பிரகாச அடிகளாரும், எல் என்பது, தமிழ்ச் சொற்களின் பழமையான வேர்ச்சொல் என்பதை ஏற்றுக் கொள்கிறார். தேவநேயப் பாவாணரும், எல் என்ற வேர்ச்சொல் பற்றி விளக்கியிருக்கிறார் (மேற்கண்ட மூவரின் ஆய்வுகளையும் தொகுத்து, வரலாற்று அடிப்படையில் எல் என்ற கடவுளை வணங்கிய இனங்கள் பற்றி, ஆசிரியரின் எல்யா என்ற நூலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது[165].)

எல் என்ற சொல், ஒளி பகல், ஞாயிறு, வெயில் என்றவாறு பொருள் விரியும். ஒளியையே கடவுளாகத் தமிழர்கள் கொண்டிருந்ததால், எல் என்பது கடவுளாயிற்று என கார்த்திகேயர் கூறுகிறார்.

ஒளி : *"தோடு ஆர் எல் வளை ஞெகிழ"*[166]

பகல் : *"கள்ளுடைப் பெருஞ்சோற்று எல் இமிழ் அன்ன"*[167]

ஞாயிறு : *"எல்படு பொழுதின்"*[168]

எல் செய்வான், எல்படுபொழுது, எல்ல, எல்லது, எல்லரி, எல்லவன் என்றவாறு எல் என்ற சொல் விரிந்தது.

பால் என்ற சொல், வால் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும்.

தமிழில் சொல்லப்படும் வகரம், பிற மொழிகளில் பகரமாகத் திரியும் என்பது பொதுவிதி.

பால் என்பதற்கு, ஆற்றல், திறமை, உயர்வான கடவுள் என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது.

வல் என்ற தமிழின் வேர், வால் என்றும் விரிந்தது.

வல் - வால் - வில் - வேல் என்றவாறும் விரியும்.

வால் என்பது, ஆற்றலையும் உயர்வையும், கடவுளையும் குறிக்கும் தமிழ்ச் சொல்லாகும்.

வால் அறிவன் என்று திருவள்ளுவர் கூறுவது, ஆற்றலுள்ள இறைவனைக் குறிக்கும்.

மேல்கார்ட் (Melkart) என்ற கடவுள், தெர நகரத்தின் கடவுளாவான்.

தெர என்பது, கடற்கரையின் மேற்குப் பக்கத்தில் உள்ள தீவு நகராகும்.

மேற்குத் திசையினின்றும் வரும் பகையைக் காப்பவன், என்பது பொருள்.

கார் என்ற தமிழ்ச் சொல், காத்தலையும் கடவுளையும் குறிக்கும்.

மேல்திசைக் கார்த்தல் (காத்தல்) என்ற பொருளில், மேல்கார்ட் எனத் திரிந்தது.

எபிரேயக் கடவுளான யா - கோ - ஆ (Ya - ho - ah) என்ற சொல்லுக்கான விளக்கத்தை அவர்கள் சொல்ல அஞ்சினார்கள். அதனால் அச்சொல்லுக்கான பொருளை இதுவரை அவர்கள் சொல்லவேயில்லை. அச்சொற்களைத் தனித் தனியாகப் பொருள் கொண்டால், முதலில் (அனைத்துக்கும் முன்பே) அறியப்பட்ட தென்திசைக் கடவுள் என்பது பொருள் தரும்.

யா : எபிரேய மொழியில் தென் திசை என்ற பொருளும் தரப்பட்டுள்ளது.

கோ : கடவுள், மன்னன் (தமிழ்ப் பொருள்)

ஆ : தொடக்கம், (Genesis, In the beginning) - தமிழ்ப்பொருள்.

ஆதன் என்ற தமிழ்ச் சொல்லை, சூரியன் எனவும் சிலர் பொருள் கொள்கின்றனர்.

ஆதன் - யாதன் என்றும் சொல்லப்படும்.

யாதன் - தென்திசைக் கடவுளான சிவன் (தட்சணாமூர்த்தி)

யாதன் - ஆதன் : ஒளி வடிவான கடவுள்.

ஆதன் - அதோனி என எபிரேய மொழியில் திரிந்தது.

அதோனி (Adoni) டொமினி (Domini) என்று கிரேக்கத்தில் திரிந்தது.

டொமினி : இறைவன். கிறித்துவ ஆண்டைக் குறிப்பிட, A.D. என்பது, கி.பி. என்ற பொருளைத் தருவது.

Anno Domini என்ற கிரேக்கச் சொல்லின் சுருக்கமே, கி.பி. எனப்படும் A.D.

இறைவன் (இயேசு) பிறந்ததற்குப் பின் என்று பொருள்.

இயேசுவை கடவுள் என்று ஏற்காத சமயத்தவர் (இசுலாமியர்), A.D. என்ற சொல்லைப் பயன்படுத்துவதில்லை.

அதோனி (Adoni) - அண்டோனி (Antony) என்று இலத்தீன் மொழியில் திரிந்தது.

ஆண்டனி என்று ஆங்கிலத்தில் சொல்லப்படுகிறது. மேற்கண்ட சொற்கள் அனைத்திற்கும், ஆதன் என்ற தமிழ்ச் சொல்லே என அறிக.

சிலர், ஆதன் என்ற சொல்லில் இருந்தே ஆதாம் என்ற சொல் பிறந்ததாகக் கூறுவர். இரண்டும் தமிழ்ச் சொற்களே என்றாலும், பொருள் வேறுபாடு உண்டு.

தெர நகரின் காவல் தெய்வமான மேல்கார்ட், கடல் தெய்வமாகவும், வணிகர்களின் பயணக்காலத் தெய்வமாகவும் கருதப்பட்டதால், போணீசியா முழுவதும் மேல்காட்டுக்கு சிறப்புகள் செய்யப்பட்டன. அசதார்ட், (இசுதார்) போன்ற பெண் தெய்வங்களும் ஆண் தெய்வங்களோடு தொடர்புபடுத்தப் பட்டன. இசுமன் (Eshmun) என்ற வேளாண்மைக் கடவுள், அசுதார்ட்டின் இணையாகக் கருதப்பட்டான். பாபிலோனிய இசுதார் தமுழ் (தமிழ்) என்ற இளமைக் கடவுளோடு தொடர்புபடுத்தப்பட்டாள். இருவரும் வேளாண்மைக் கடவுளர்களாக அறியப்பட்டனர். மர்செ (Marzeh) என்ற இடம், சமூக விழாக்கள் நடைபெறும் இடமாகக் கருதப்பட்டது. தங்கள் உறவுகளைப் புதுப்பித்துக் கொள்ள, மர்சே பயன்பட்டது. மர்சே என்பதற்கு மீண்டும் இணைதல் என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. மறுபடியும் உறவை உறுதி செய்தல் என்ற பொருளில் சொல்லப்படுகிறது. மறுசெய் என்பதே, மர்செ எனத் திரிபுபட்டிருக்கலாம். மர்சே கூட்டங்களில், ஒருவருக்கொருவர் பரிசுப் பொருட்களைக் கொடுத்து அன்பைப் பரிமாறிக் கொள்வர். குறிப்பாக வணிகர்கள் இவ்விழாவை விரும்பி நடத்தினர். இந்த விழாவின் மற்றொரு நோக்கம், தமது முன்னோர்களை வழிபடுவதாகும். பரிசுகள் பரிமாறிக் கொள்ளப்பட்ட பின், முன்னோர்களுக்குப் படையல் செய்து, அவ்வுணவை அனைவரும் உண்பர்.

போணீசியக் குடியேற்றமான கார்த்தேஜ் நகரில், போணீசியர் விழாக்களே முன்னெடுக்கப்பட்டன. ஒவ்வொரு ஆண்டும், கார்த்தேஜ் மக்கள், தெர நகருக்கு வந்து, மேல்கார்ட் கடவுளுக்கு விழா எடுப்பர். இசுலாமியர்கள் மக்காவுக்குச் செல்வதைப் போல், கார்த்தேஜ் மக்கள், தெர நகருக்கு வருவதைக் கடமையாகக் கொண்டிருந்தனர். படையலுக்கென ஏராளமான பொருட்களையும் கொண்டு வருவர். இந்த நடைமுறை, கார்த்தேஜ் நகரின் பழங்குடியினரான பெர் - பெர் மக்கள், ஆண்டு தோறும் எடுத்த விழாவைப் போன்று, கார்த்தேஜ் போணீசியரும் புனிதப் பயணம் மேற்கொண்டனர் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கார்த்தேஜ் நகரத்து பெர் - பெர் மக்களின் சில சடங்கு முறைகளை போணீசியரும், போணீசியரின் சடங்குகளை பெர் - பெர் மக்களும் பின்பற்றலாயினர். பல தலைமுறை களுக்குப் பின், இவ்விரு இனத்தாருக்கும் பொதுவான சமயம் ஒன்று, கார்த்தேஜில் உருவானது. பியூனிக் (Punic) சமயம் என்று அது சொல்லப் பட்டது[169].

பியூனிக் சமயம், பெர் - பெர் மக்களின் முன்னோர் வணக்க முறை களும், போணீசியர்களின் சமயச் சடங்குகளும் இணைந்த சமயமாகும். இரு இனமும் ஏராளமான மூட நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். இந்த உலகில் மக்கள் பிறந்ததே, இயற்கைக்கு மீறிய ஆற்றல் பெற்ற தெய்வங்களால் நடந்தது என்றும், இவ்வுலக வாழ்க்கை துன்பங்களும் கெடுதல்களும் நிறைந்தது என்றும் நம்பினர். இறந்த பின்பும் துன்பங்கள் தொடரா வண்ணம், மந்திரக் கயிறு, தாயத்து, அணிகலன் போன்ற ஏதாவதொன்றை, இறந்தவரோடு வைத்துப் புதைப்பார்கள்.

தெர நகரின் நிர்வாகம் போலவே, கார்த்தேஜ் நகரின் நிர்வாக அமைப்பு இருந்தது. நகரின் சிறப்பாக மதிக்கப்படும் 10 முதியவர்கள், ஆட்சியாளர் களால், கோயில்களையும், வழிபாட்டு முறைகளையும் கண்காணிப்பார்கள். கோயில்களுக்குரிய சொத்துக்களை நிர்வாகம் செய்வார்கள். சில கோயில் பூசாரிகள், வழிவழியாக, மரபு முறைப்படி பணியாற்றி வந்தனர். பியூனிக் சமயக் குறிப்புகளில், பூசாரிகள், கோயென் (Cohen) என்று அழைக்கப் பட்டனர். கோயன் என்ற தமிழ்ச் சொல்லே, கோயென் என்று திரிபுபட் டுள்ளது. கோயில் சடங்குகளைச் செய்பவன், கோயன் எனப்பட்டான். கோயிலுக்கள் நுழைபவர்களும், வழிபட வருபவர்களும், மூன்று நாட்கள் உடலுறவு கொள்ளாமல் இருந்திருக்க வேண்டும். பன்றிக் கறியை உண்டிருக்கவும் கூடாது[170].

கார்த்தேஜ் நகரை உருவாக்கியதாக, தெர நகரத்தின் தலைமைப் பூசாரியின் மனைவி, எலிசா என்பவள் சொல்லப்படுகிறாள். நகரக் கோயிலுக்குத் தேவையான சடங்குப் பொருட்களை, எலிசா, தெர நகரிலிருந்து கொண்டு வந்திருந்தாள். பெண் பூசாரிகளையும், புனிதமான பரத்தையரையும், சைப்ரஸ் தீவிலிருந்து அழைத்து வந்தாள்[171]. ஏற்கனவே, மேற்காசியாவின் தலைமைக் கடவுளாக இருந்த எல், பிற்காலத்தில் தனது மகன்களுக்கு அதிகாரத்தைப் பகிர்ந்தளித்து விட்டதாகச் சொல்லப்பட்டு, பின்னர் மறக்கப்பட்டான். கார்த்தேஜில், எல்கடவுள் மீண்டும் புதுப்பிக்கப் பட்டான். பால் அம்மோன் என்ற புதுப்பெயர், எல் கடவுளுக்குச் சூட்டப் பட்டது[172].

போணீசியர்கள், சிறுவர்களைக் கடவுளுக்குப் பலி கொடுத்து வந்ததைப் போலவே, கார்த்தேஜ் நகரிலும் எல் கடவுளான பால் அம்மோனுக்கும் பலியிட்டு வந்தனர். பால் அம்மோன், சிறுவர்கள் பலியை விரும்பி ஏற்பதாகச் சொல்லப்பட்டது. தியோதோரஸ் என்ற கிரேக்க அறிஞரின் குறிப்புகளின்படி (கி.மு.முதல் நூற்றாண்டு), அகதோக்கள்ஸ் (Agathocles) என்ற கிரேக்கப் படைத்தலைவன் (கி.மு.310) கார்த்தேஜின் மீது படையெடுத்தான். அப்படையெடுப்பினின்றும் தங்களைக் காக்க வேண்டி, பெரும் பணக்கார வீட்டுச் சிறுவர்கள், நூற்றுக் கணக்கில் பலியிடப்பட்டதாகக் கூறுகிறார். பிரெஞ்சு நாவலாசிரியர், பிளாபெர்ட் (Gustave Flaubert), "சலம்போ" என்ற தனது நாவலில், கார்த்தேஜ் சிறுவர்கள் பலி பற்றிக் குறிப்பிட்டுள்ளார் என, லான்செல் (Lancel), என்பவர் மேற்கோள் காட்டுகிறார். அந்த நாவல், பல மேடைகளில் நடிக்கப்பட்டது[174].

கி.மு.5 மற்றும் 4 ஆம் நூற்றாண்டுகளில், தனித் (Tanit) என்ற பெண் தெய்வம் கார்த்தேஜில் போற்றப்பட்டது. பழைய பால் அம்மோன் கடவுள் பின்னுக்குத் தள்ளப்பட்டான். அதனால் பால் அம்போன் சினமுற்றதாகக் கருதப்பட்டுதான், கிரேக்கப் படையெடுப்பின் போது அவனை அமைதிப்படுத்த, நூற்றுக் கணக்கான சிறுவர்கள் பலியிடப்பட்டனர். ஆனாலும் கிரேக்கர்கள் வெற்றி பெற்றதால், போருக்குப் பின் பால் அம்மோன் முற்றிலுமாக மறக்கப்பட்டான். தனித் பெண் தெய்வம், கார்த்தேஜின் காவல் தெய்வமானாள். தனித், "பேரிச்சம் பழங்களை அளவிடும் நிலையிலும், பழுக்கக் காத்திருக்கும் மாதுளம்பழம், மலரும் நிலையில் உள்ள தாமரை அல்லது அல்லி, மீன்கள், புறாக்கள் தவளைகள்" என பல்வேறு பழங்கள் தாவரங்கள் உயிரினங்கள் என, அவற்றிற்கெல்லாம்

பாதுகாவல் தெய்வமாகக் கருதப்படுகிறாள். உலக உயிரினங்கள் அனைத்துக்கும் சக்தியையும் ஆற்றலையும் அவளே தருகிறாள் என நம்பப்பட்டது. தனித் பெண் தெய்வம் பெர் – பெர் மக்களின் பழங்குடித் தெய்வம் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கிரேக்கப் படையெடுப்புக்குப் பின் பால் அமோனை, போணீசியர்களும் கைவிட்டு, தனித் தெய்வத்தை ஏற்றுக் கொண்டனர்.



மேற்கண்ட வடிவம், தனித் தெய்வத்தின் உருவமாகக் கருதப்படுகிறது. இது எகிப்திய, உயிர் வாழ்க்கை (Life) பற்றிய தத்துவத்தின் வடிவமாக, ஆய்வாளர்கள் கருதுகின்றனர். வட்டமும், நடுக்கோடும், செவ்வகமும், எகிப்தியச் சமயக் கருத்துக்களை உள்ளடக்கியவை என்றும் சொல்லப்படு கிறது. பார்வைக்கு, இரண்டு கைகளையும் விரித்து நிற்கும் ஒரு பெண்ணாகத் தெரிந்தாலும், உட்பொருள் பற்றித் தெளிவாக அறிய இயலவில்லை[175]. சில ஆய்வாளர்கள், தனித், போணீசியப் பெண் தெய்வமான அஸ்திராத் (Astrate) என்றும் கூறுகின்றனர். மிக வலுவான பொருளாதாரக் கூறுகளைக் கொண்டிருந்த கார்த்தேஜ், நாளடைவில், போணீசியர் பிடியிலிருந்து விலகி, தன்னாட்சி பெற்ற நகரமாயிற்று. எல், பால் அமோன், தனித் போன்ற தெய்வங்களையும் வழிபாட்டு முறைகளையும் கிறித்துவம் கார்த்தேஜில் நுழைந்தவுடன், இழந்து போயிற்று. உரோமர் கார்த்தேஜைப் பிடித்த பின்பு, கிறித்துவம் அப்பகுதியில் வளர்ந்தது, பியூனிக் சமயம் முற்றிலுமாக மறக்கப்பட்டது.

## போணீசியர்கள் உருவாக்கிய தாக்கங்கள்

மிகச் சிறிய நாட்டின் (தமிழ் நாட்டின் இரண்டு மாவட்டப் பரப்பளவே) மக்களாகிய போணீசியர்கள், நடுத்தரைக் கடல் சார்ந்த பல நாடுகளில், தங்கள் நாட்டைவிட பரப்பளவில் விரிந்திருந்த நாடுகளில் கூட, அழுத்தமான தாக்கங்களைத் தோற்றுவித்துள்ளனர். போணீசியச் சமயம், கடவுளர்கள் கூட, பிற நாடுகளில் பின்பற்றப்பட்டது. போணீசியரின் வணிகப் பொருட் களில், அவர்களது கண்டுபிடிப்பான வண்ணக் கலவை, ஐரோப்பிய நாடு களிலும் பெருமளவில் விற்பனை செய்யப்பட்டன. போணீசியரின் கலை, சுமேரிய பாபிலோனிய அசீரிய எகிப்தியக் கலைகளின் கூட்டுக் கலவை யாகும். மக்கள் எவற்றை விரும்புகிறார்கள் என்பதைக் கண்டறிந்து, மலிவு விலையில், கலைப் பொருட்களை விற்பனை செய்தனர். கொடி முந்திரிச் சாற்றினின்றும் இறக்கப்பட்ட மது, மற்ற நாட்டுத் தயாரிப்புகளைவிட சுவையாகவும், மயக்கம் தரும் வகையிலும் அமைந்திருந்தது. கண்ணாடிப்

பொருட்களும், செப்புத் தாம்பாளங்களும் கலை நயத்துடன் உருவாக்கப் பட்டன. தட்டுகளின் உள்ளே பலவாறு ஓவியங்கள் செதுக்கப்பட்டன. போணீசியத் தொன்மக் கதைகளை விளக்கும் படங்கள் அவற்றில் பொறிக்கப்பட்டிருந்தன. லண்டன் அருங்காட்சியகத்தில், போணீசியரின் பல்வேறு படைப்புகள், காட்சிக்காக வைக்கப்பட்டுள்ளன.

போணீசிய மொழிப் பெயர்களை, பன்னாட்டவர்களும் சூடிக் கொண்டனர். போணீசிய மொழியும் எழுத்துமுறையும் பல நாடுகளில் ஏற்கப்பட்டிருந்தன. போணீசிய மொழியறிந்த பிறநாட்டவர், தம் நாடுகளில் மதிப்பைப் பெற்றிருந்தனர். போணீசியருடன் வணிகம் செய்ய, அத்தகையோருக்கு உயர்வான ஊதியமும் தரப்பட்டது. கிரேக்க, உரோமப் பேரரசுகளின் எழுச்சி தோன்றியிராவிட்டால், போணீசிய மொழியே இன்று உலக மொழியாகவும் அறியப்பட்டிருக்கும் என்பது ஆய்வாளர்களின் கருத்தாக உள்ளது. நடுத்தரைக் கடல் நாடுகளில், போணீசியர்கள், கிரேக்கர்களுடனேயே நெருங்கியத் தொடர்புகளைக் கொண்டிருந்தனர். ஒரு பொருள், அது கிரேக்கப் பொருளாயினும், போணீசியப் பொருளே என்று கூறி விற்கப்பட்டால், அதன் விலை கூடுதலாக இருந்தது.

பொருட்களைப் பெற்றது போலவே, போணீசியரின் எழுத்து முறைகளையும் கிரேக்கர்கள் ஏற்றுக் கொண்டனர். ஏராளமான போணீசியச் சொற்கள், கிரேக்க மொழியில் கலந்தன. (நம்முடைய ஆய்வுகளில், எபிரேய - போணீசியச் சொற்கள் கிரேக்க மொழியில் கலந்ததால், கிரேக்க மொழி யிலும் பல தமிழ்ச் சொற்கள் அறியப்பட்டுள்ளன என்பதை கண்டறிந்துள் ளோம்.) கி.மு.800 ஆண்டுகளில், போணீசிய - கிரேக்கத் தொடர்புகள் வலுப்பெற்றிருந்தன. அக்கால அளவில் தான் பெருமளவிலான கிரேக்கர்களை, தமிழகத்துக்கு அழைத்து வந்திருக்க வேண்டும். மேலும், போணீசியர் வழியில், சில சமய வழிபாட்டு முறைகளும், கிரேக்கர் நாட்டில் புகுந்தன. எல், தமிழ், அஸ்தாரெத், பால் போன்ற கடவுளரைப் பற்றிய தொன்மக்கதைகள், பெயர் மாற்றங்களுடன், கிரேக்கத் தொன்மக் கதைகளிலும் காணப்படுகின்றன. போணீசிய வணிகர் காட்மஸ்தான், போணீசியரின் எழுத்து முறையை, கிரேக்க நாட்டில் அறிமுகம் செய்ததாக எரடோட்டஸ் கூறினாலும், கரட்டுத் தீவில் (Crete) வாழ்ந்திருந்த போணீசிய வணிகர்களே, அறிமுகம் செய்தனர் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். எரடோட்டஸ் கி.மு.400 ஆண்டுகளில் வாழ்ந்திருந்தவர். அவருக்கு 1600 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருந்ததாகக் கருதப்படும் காட்மஸ் பற்றி,

அவர் கூறியிருப்பது நம்பகத் தன்மையற்ற செய்தி என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். புதிய எழுத்துமுறை, கி.மு.1500 ஆண்டுகளுக்குப் பிறகே அறிமுகமாயிற்று என்பது அனைவராலும் ஏற்கப்பட்டுள்ளது. (பிராமி எழுத்துமுறை, கி.மு.1500 ஆண்டுகளில் தான் இந்தியாவில் அறிமுகமானது என்று மதிவாணன் உள்ளிட்ட ஆய்வாளர்கள் கூறுகின்றனர். பிராமியின் தழுவல், போணீசிய முறை என்பதால், எரடோட்டஸ் கூற்றும் பொருத்தம் இல்லாதது.) மேலும் காட்மஸ் பற்றிய போணீசிய – கிரேக்கக் கதைகளில், காட்மஸ் தெர நகரத்து மன்னன் அகனார் (Agenor) என்பவனின் மகன் என்றும் சொல்லப்பட்டுள்ளது. எவ்வாறாயினும், போணீசிய எழுத்துமுறையே, தொடக்க கால கிரேக்கர்களின் எழுத்து முறையாக இருந்தது என்பதை அனைவரும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

கிரேக்கச் சிந்தனையாளர் பிளாட்டோ, தனது குடியரசு (Republic) என்ற நூலில், கிரேக்கர்கள் அறிவைத் தேடி அலைந்தார்கள் என்றும், அம் முயற்சியில் அவர்கள் வெற்றி பெற்றார்கள் என்றும் கூறி, அதற்கு மாறாக, போணீசியரும் எகிப்தியரும் பணத்தைத் தேடி அலைந்தார்கள் என்றும், அவர்களுடைய இரத்தத்தில் அது ஊறிப் போயிருந்தது என்றும் கூறுகிறார். சட்டங்கள் (Laws) என்ற தம்முடைய படைப்பில், போணீசியர் மற்றும் எகிப்தியரின் செல்வம், பொருள், பணத்தின் மீது கொண்ட அளவில்லா ஆசையினால், தங்கள் வணிகத் தொழிலை அறிவார்ந்த முறையில் செய்யாமல், சூழ்ச்சியும் தந்திரமும் வெளிப்படைத் தன்மையில்லாமலும் செய்து வந்தனர் என்றும் பிளேட்டோ கூறுகிறார்[176].

விவிலியத்தில் பல செய்திகள் போணீசியரைப் பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளன.

1. தெர நகரத்து மன்னன் அகிராம், சாலமனின் தேவாலயத்தைக் கட்ட உதவி செய்தான்.

2. I அரசர் ஆகமம், 5 : 1 இல் சொல்லப்பட்டுள்ள செய்தி : அகிராம், தெர நகரத்து மன்னன் தனது பணியாட்களைச் சாலமோனிடம் அனுப்பி (அதிகாரிகள்), சாலமோன் மன்னனாகப் பதவியேற்றதுக்கு வாழ்த்துத் தெரிவித்தான். (I Kings, 5 : 1)

3. “இசறாயெல் நாட்டின் தான் என்ற (வடபகுதி) பகுதியின் யூதப் பெண்ணுக்கும், தெர நகரத்து தொழில் நுட்பக் கலைஞனுக்கும்

பிறந்தவனுக்கும் பிறந்த ஒருவனே, பொன் வெள்ளி, செம்பு, இரும்பு போன்ற கனிமங்களையும், கல், மரம், மணிக்கற்கள், வண்ணக் கலவைகள், நீலம், துணி வகைகள் போன்றவற்றில் தொழில் நுட்பங்களைப் பெற்றிருந்தான். மேற்கண்ட தொழில்களைச் செய்வதற்கான கருவிகளையும் மற்றும் கடைதல், குடைதல், அரவுதல் போன்ற பணிகளுக்கான கருவிகளையும் கொண்டிருந்தான் ......"
(II Chronicles, 2 : 14)

தெர நகரத்துத் தொழில் நுட்பக் கலைஞனின் தந்தையின் பெயர் குறிப்பிடப்படவில்லை. அவன் போணீசியன் அல்லன் என்றும், வெளிநாட் டினன் என்றும் போணீசிய மரபுச் செய்திகள் தெரிவிக்கின்றன. எனவே, அவன் தமிழகத்தினின்று போணீசியர்களால் அழைத்துச் சொல்லப்பட்டிருக்க வேண்டும் என்ற கருதுகோள் உள்ளது). பெயர் தெரியாத அத்தந்தையின் மகனே சாலமோனின் தேவாலயத்தை வடிவமைத்துக் கட்டிக் கொடுத்தவன் ஆவான். இசறாயெல் மன்னன் அகப் (Ahab) தெர நகரத்து இளவரசியை மணந்திருந்தான். சிரிய – போணீசிய உறவில் பிறந்த பெண் ஒருவளைப் பற்றி மாற்கு என்ற விவிலிய ஆசிரியர் குறிப்பிடுகிறார். (7 : 26)

பைபில் என்ற கிரேக்கச் சொல், பிப்லோஸ் என்ற போணீசியச் சொல்லின் திரிபே என்பர், போணீசியச் சொற்கள் நூற்றுக் கணக்கில் கிரேக்க மொழியில் கலந்துள்ளன என்பதை ஆய்வாளர்கள் பட்டிய லிட்டுள்ளனர். சுருக்கமாகப் போணீசியர்களைப் பற்றிக் கூறுவதென்றால்,

1. அதுவரையில் கோயில் சமயக் குழுக்களே எழுதிப் படித்து வந்த கல்வி முறையை மாற்றி, அனைவரும் படிக்கவும் எழுதவுமான புதிய எழுத்துமுறையை, நடுத்தரைக் கடல் நாடுகளில் அறிமுகம் செய்து, கல்வியை பொதுமக்களிடம் எடுத்துச் சென்றவர்கள்.

2. புதிய வழித்தடங்களைக் கண்டறிந்து, அதன் மூலம் சுமேரிய, மெசபத்தோமிய, எகிப்திய நாகரிகங்களைப் பரவச் செய்தவர்கள்.

3. குடும்ப ஆட்சியும், சமய ஆட்சியும் நடைபெற்ற காலங்களில், நகரங்களில் குடியரசு முறையை அறிமுகம் செய்தவர்கள்.

4. மரக்கலங்களில் பல அடுக்குகளை உடைய கப்பல்களை உருவாக்கி யவர்கள். பாய் மரங்களைப் பயன்படுத்தியவர்கள். இடைக்காலத்தில்

அறியப்பட்ட வியாபாரக்காற்று (Commercial wnid) என்ற பருவ காலத்தை முதன் முதல் கண்டறிந்தவர்கள்.

5. கிரேக்க, உரோம, ஆப்பிரிக்க மக்களிடையே ஒற்றுமைப் பாலமாக இருந்தவர்கள், என்றவாறு போணீசியர்களைக் குறிப்பிடலாம். உலக வரலாற்றில், பல நாடுகளில் தங்கள் பெருமைகளையும் சிறப்பு களையும் பதிவு செய்து கொண்டவர்களாக, போணீசியர்கள் கருதப் படுகின்றனர்.

## அடிக்குறிப்புகள்

128. நற்றிணை, 138 : 4.
129. தொல்காப்பியம், 22 : 5.
130. புறநானூறு, 65 : 1.
131. மதுரைக் காஞ்சி, 81.
132. மணிமேகலை, 7 : 124.
133. குறுந்தொகை, 333 : 5.
134. The name Phoenicians, like Latin Poenicus (adjective) later Punicus, comes from Greek Phoinikies, attested since Homer and influenced by Phonix, "Tyrian purple" from Phoinos (blood red) of uncertain etymology. The oldest attested form of the word is Mycenaean, Po-ni-ki-jo, Po-ni-ki, ultimately borrowed from ancient Egyptian Fenhu.
   - Gove, Philip Babcock, (Ed.), Webster's Third New International Dictionary of the English Language, Spring field, 1993., and,
   R.S.P.Beckes, Etimological Dictionary of Greek, Brill, 2009, P.1583.
135. In the Amarna Tablets (Egyptian) of the 14th century, B.C., people from the region called themselves Kenaani or Kinaani. Much later, in the 6th century, B.C., Hectaeus of Miletus writes that Phoenicia was formerly called khana, a name that Philo of Byblos later adopted into his mythology as his eponym for the Phoenicians : Khana who was afterwards called phonix.
   Some scholars have suggested that these references could relate not the Canaanites but to the Cainanites (the first generation of Adam's son, Cain) spoken of the septuagint (Greek translated Bible) version of the Table of Nations.
136. Terra : Earth from Greek and Latin origin.
   Terra firma : Dry land.
   Terra form : A planet like the earth.
   Terrain : A stretch of land.
   - Oxford Concise, P.1488.

137. Ahiram : King of Tyre, who enjoyed friendly relations with both David and Solomon. Solomon traded with him for materials and craftsmen to build his Royal Palace in Jerusalem. (II Samuel, 5 : 11). Solomon ceded some villages of Galilee after the work was finished. (I kings, 3 : 15, 9 : 10)

138. Ophir : (Meaning and etymology uncertain).
A harbour constructed by Ahiram for the king Solomon.
- I knigs, 9 : 28 ; 10 : 10 ; 22 : 49.

139. Papurus : Papyros (Greek), loan word from Egyption Kam, to Hebrew Gome, Cyperus Papyrus and Papyrus English. A reed which in ancient times grew abundantly in the marshes of the delta in Egypt and in the banks of Nile.
- D.O.B.P.634.

140. The Phoenicians took a voyage to South India, where their traditions and customs were existed and came to know about their past history of their ancestors.
- Amae Jousuffie, "Lebanon", Lonely Planet Publications, Australia, 2004, P.13.

141. Macedonian Rule : Alexander the Great took, Tyre in 332 B.C., and he was exceptionally harsh to Tyre executing 2000 of the leading citizens. Then he ganied control of the other cities. The rise of Macedon gradually ousted the remants of Phoenicia's former dominence over Eastern Mediterranean trade routes. Phoenician culture disappeared entirely in the mother land. Carthage oversaw the minnig of iron and precious metals, used its considerable naval power and mercenary armies to protect commercial interests. Rome finally destroyed it in 146 B.C., at the end of the Punic war.
- B.Tsrikni, "Canaan, Phoenicia, Sidon", P.274.

142. Following Alexander, the Phoenician homeland was controlled by a succession of Macedonian rulers:
Laomedan - 323 B.C., Ptolemy I - 320, Antigonus II - 315, Demetrius - 301, Seleucus - 296, Ptolemies of Egypt - 286 to 197.
In 197 B.C., Phoenicia along with Syria reverted to the seleucids. The region became increasingly Hellenized, although Tyre became autonomous in 126 B.C., followed by sidon 111 B.C., Syria including Phoenicia was seized and ruled by the knig Tigranes of Armenia from 82 B.C., until 69 B.C.
- Ibid.

143. Gentic studies : A study by Pierre Zalloua and others (2008) claimed that six subclades of haplogroup 12 (J.M-172) J2 in particular, were a "Phoenician Signature" amongst modern male populations in Coastal Lebanese Phoenician heartland and the broader area of the Levant (the phoenican periphery), followed by "Cyprus and South Turkey ; then crete, then Malta and East Socily ; then South Sardinia, Ibiza, and Souther Spain and finally Coastal Tunishia and cities like Tingris in Morocco.

(Samples from other areas with significant Phoenician settlements in Lybia and Southern France could not be included). This deliberately sequential sampling represented an attempt to develop a methodology that could link the documented historical expansion of a population, with a peculiar geographic genetic pattern or patterns. The researches suggested that the proposed genetic signature stemmed from a "Common source of related lineages rooted in Lebanon".

- Zalloua Pierre, A., "Identifying Traces of HIstorical Expansions : Phoenician Footprints in the Mediterranean". American Journal of Human Genentics, 2008, P.83.

144. Stager, L.E., "Phoenician Shipwrecks in the deep sea", 2003.

145. Sometime between 1075 B.C. and 1060 B.C., an Egyptian envoy by name of Wen - Amon, visited Phoenicia and secured seven great logs of Cedar wood in exchange for a mixed cargo including, 4 Crocks and one kak - men of gold, 5 silver jugs, 10 garments of royal linen, 10 kherd of good linen from upper Egypt, 500 rolls of furnished Papyrus, 500 cow's hides, 500 ropes, 20 bags of lentils and 30 baskets of fish.

- Barry cunliffe, "Europe between the Oceans", Yale University, 2008, PP.241 - 242.

146. எபிரேய மொழியில் தமிழின் வேர்ச் சொற்கள், ம.சோ.விக்டர், 2007.

147. The Greeks had two names for Phoenician ships :

Hippoi and Galloi. Galloi means tubs and Hippoi means horses. These names are readily explanied by depictions of Phoenician ships in the palaces of Assyrian Kings from the 7th and 8th Centuries, as the ships in these images are tub shaped (galloi) and have horse heads on the ends of them (hippoi). It is possible that these hippoi come from Phoenician connections with the Greek god Poscidon equated with the Semitic god, "Yam".

- Markoe, G.E., "Peoples of the Past : Phoenicians" University of California, Las Angels, 2000.

148. கப்பல் : சிவவாக்கியர், 245.

149. கல் : குறுந்தொகை, 12 : 2.

150. குண்டுக்கல் : மேலதே, 66 : 2.

151. Tebbah : The ark, built by Noah, Genesis, 8 : 21.

152. Gebel : Phoenician ship, "Lebanon", Lonely Planet, P.14.

153. தெப்பம் :

154. சிலப்பதிகாரம், 13 : 176.

155. குறுந்தொகை, 240 : 6.

156. Anne Jousuffie, "Lebanon", Lonely Planet, P.14.

157. The Phoenician alphbet was one of the first (consonantal) alphabets with a strict and consistant form, an as - yet unattested early pictorical Semitic alphabet, developed some centuries earlier. The oldest known representation of the Phoenician alphabet is inscribed on the sacrophagus of king Ahiram of Byblos, datuig to the 11th century, B.C., at the latest.
- Beck, Roger, B., World History, Patterns of Interaction.

158. "He entered into other men's labour and made most of his heritage. The sphinx of Egypt became Asiatic, and its new form was transplanted to Nineveh on the one side and to Greece on the other. The reosettes and other patterns of the Babylonian cylinders were introduced into the handwork of Phoenicia, and so passed on to the west, while the hero of the ancient Chaldean epic became first the Tyrian Melkarth, and then the Herakles of Hellas".
- The New york Times, 5.1. 1879.

159. W.Robertson Smith, "Lectures on the Religion of the Semites", Meridian Library, New York, 1956, PP, 1-15.

160. Like their Hebrew cousins, the Phoenicians were known for being very religious. Several of their reported practices have been widely criticized, in particular, the temple prostitution. Much of what is now known about their religion comes from one source cuneiform tablets found in 1928 at the temple ruins of Ras Shamra (ancient Ugarit).
- Gaster, "Ancient Religions", 1950, edited by Ferm.
- Donald Harden, "The Phoenicians", New York, 1962, PP.83-84.

161. II kings, 23 : 7 and Deuteromomy, 23 : 17.

162. S.G.F. Brandon, Editor, "Dictonary of comparative Religion", 1970, P. 173.

163. Ibid, El at page 258.

164. El ; Phoenician religious mythology does not appear as elaborated compared with existent literature of their cousin Semites in Mesopotamia. In Phoenicia, the supreme god was called "EL", which means god, other gods were called by royal titles as "Melkart", while the storm god was "Baal". On the other hand, the Phoenicians notorious for being secretive in business, might use these non-descriptive words as cover for the secluded name of the god, known only to a select few iniated into the inmost circle, or not even used by them, much as their neighbours the ancient Hebrews used the word "Adoni" to place a cover over their god.
- Ibid, P.173.

165. எல் - யா, ம.சோ.விக்டர், 2007.

166. குறுந்தொகை, 216 : 3.

167. அகநானூறு, 266 : 14.

168. புறநானூறு, 157 : 8.

169. Punic Religion : Over time the original Phoenician exemplar developed distinctly, synthesizuig Ber - Ber tribal practices, becomming the Punic religion at Cathage.
- Warmington, "Carthage" Penguin, 1964, P.161.

170. To enter the Temple of Eshmum, one had to obstain from sexual inter course for three days, and from eating beans and pork.
- Warmington, B.H., "Carthage, Ten Elders, Priesthood, Temple of Enshman", 1964, P.161.

171. Elissa brought not only ritual implements for the worship of Astrate, but also her priests and sacred prostitues (taken from Cyprus).

172. "In Semitic religion, the father of gods, had gradually been shorn of his power by his sons and relegated to a remote part of his heavenly home, in Carthage, on the other hand, he became once more, the head of the pantheon, under the emigmatic title of Baal Hammon".
- Picard, "The Life and Death of Carthage", 1945, P.45.

173. This Baal Hammon deity was recipiant of the very troubling of child sacrifice. Diodorus (late 1st century B.C.,) wrote that when Agathocles had attacked Carthage (in 310 B.C.) several hundred children of leading families were sacrificed to regain god's favour.
- Diodorus Siculus, Biblical History, cited in Lancel, 1995, PP.197, 249.

174. Lancel, Carthage, translated in English, Carthage, 1995, P.197. This noval inspired several operas.

175. On the symbol of Tanit, referred with Lancel's Carthage, translated as Carthage - A History (1995), PP. 201 - 204, this symbol may be related to the Egyptian symbol of life, the Ankh.

176. Plato : In his "Republic", Greek philosopher Plato contends that the love of money is a tendeney of the soul found amongst Phoenicians and Egyptians, which distinguishes them from the Greeks who led towards the lover of knowledge. In his "Laws", he asserts that this love of money has led the Phoenicians and Egyptians to develop skills in cunning and trickery, rather tham wisdom.
- Plato, Republc, Text No.IV, 435 E to 436 A.,
Plato ; Laws, Text No. V, 747 C.



மூன்றடுக்கு மரக்கலம்

| 𐤊 | 𐤉 | 𐤈 | 𐤇 | 𐤆 | 𐤅 | 𐤄 | 𐤃 | 𐤂 | 𐤁 | 𐤀 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| kaph | yōdh | ṭēth | ḥēth | zayin | wāw | hē | dāleth | gīmel | bēth | 'āleph |
| palm | hand | good | wall | weapon | hook | window | door | camel | house | ox |
| k | y | ṭ | ḥ | z | w | h | d | g | b | ' |
| [k] | [j] | [tˤ] | [ħ] | [z] | [w] | [e] | [d] | [g] | [b] | [ʔ] |

| 𐤕 | 𐤔 | 𐤓 | 𐤒 | 𐤑 | 𐤐 | 𐤏 | 𐤎 | 𐤍 | 𐤌 | 𐤋 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| tāw | šin | rēš | qōph | ṣādē | pē | 'ayin | sāmekh | nun | mēm | lāmedh |
| mark | tooth | head | eye of needle | papyrus | mouth | eye | fish | serpent | water | goad |
| t | sh | r | q | ṣ | p | ' | s | n | m | l |
| [t] | [ʃ] | [r] | [q] | [sˤ] | [p] | [ʕ] | [s] | [n] | [m] | [l] |

போனிசீய எழுத்துகள்

## 11. எபிரேயத் தமிழர்கள் (Hebrews)

கி.பி.1948 ஆம் ஆண்டு, ஐ.நா. பொதுச் சபை, உலகெங்கும் பரவி வாழ்ந்திருந்த எபிரேயர்களுக்கு, தனி நாடு ஒன்றை அளிக்கத் தீர்மானம் நிறைவேற்றியது. அதன் படி, அக்காலத்துக் கனான் என்றழைக்கப்பட்டு, பிற்காலத்தில் பாலத்தீனம் என்று சொல்லப்பட்ட நாட்டின் ஒரு பகுதியை அளித்தது. நடுத்தரைக் கடலின் கிழக்குப் பகுதி பாலத்தீனம் என்றும், அதனையொட்டிய மேற்குப் பகுதி இசறாயெல் என்றும் அழைக்கப்படு கின்றன. பாலத்தீனம் என்ற தற்காலப் பகுதியில் இசுலாமியர்கள் வாழ்ந்து வருகின்றனர். இசறாயெல் நாட்டில் எபிரேயர்கள் எனப்படும் யூதர்கள் வாழ்ந்து வருகின்றனர்.

இசறாயெல் நாடு, மேற்கே நடுத்தரைக் கடலையும், கிழக்கே ஜோர்டான் நாட்டையும், தெற்கே, அகாபா என்ற செங்கடலின் வளைகுடா மூலையையும், வடக்கே இலெபனான் நாட்டையும், வடகிழக்கே சிரியாவையும், தென் மேற்கே எகிப்தையும் எல்லைகளாகக் கொண்டுள்ளது. தெல் அவிவ் நகரம், தலைநகரமாக உள்ளது. வரலாற்றுப் புகழ்பெற்ற எருசலேம் நகரம், பாலத்தீனியர்களும் இசறாயெலரும் உரிமை கோரும் சிக்கலில் உள்ளது. ஐ.நா. மன்றம் அளித்த நாட்டின் பரப்பளவை விட, தற்போது சில பகுதிகளை, இசறாயெல் பிடித்துக் கொண்டுள்ளது. தற்காலத்து மக்கள் தொகை, ஏறக்குறைய 60 இலட்சமாகும். இதில் எபிரேயர் எனப்படும் யூதர் 83 %, அராபியர்கள் 11 %, யூதசமயத்தார் 85 %, இசுலாமியர் 11 % கிறித்துவம் உள்ளிட்ட பிற சமயத்தார் 4 % எபிரேயம் மற்றும் அரபு ஆட்சி மொழிகளாக உள்ளன. மலைகளும் பள்ளத்தாக்குகளும் பாலைவனமும் கலந்துள்ள நாடு இசறாயெல். யோர்தான் ஆறு அந்நாட்டின் நீளமான ஆறாகும். சிற்றாறுகள் சிலவும் உண்டு. கலீலீ (Galilee) எனப்படும் பெரிய ஏரி உள்ளது. தென் பகுதியில் உபபுக்கடல் எனப்படும் சாக்கடல் உள்ளது. இது, கடல் மட்டத்துக்க 900 அடிகள் பள்ளத்தில் உள்ளதாலும், அந்த ஏரியின் நீர் வெளியேற வழிகள் இல்லாததாலும் உப்பு நீராக உள்ளது.

இசறாயெல் (Isra - el) என்ற பெயர், அபிரகாமின் மகன் ஈசாக்கு, ஈசாக்கு மகன் யாக்கோபுக்கு உரியது. கி.மு.1100 ஆண்டுகளில், எகிப்தினின்றும்

மீண்ட எபிரேயர்கள், கனான் நாட்டைப் பிடித்துத் தமக்குரியதாக்கிக் கொண்டனர். புதிய நாட்டுக்கு, தங்கள் முன்னோன், யாக்கோபு என்கிற இசறாயெலின் பெயரைச் சூட்டினர். யாக்கோபுக்கு 12 மகன்கள் இருந்தனர். அவர்கள், யாக்கோபுவின் இரு மனைவிகள், மனைவிகளின் பணிப்பெண் களுக்குப் பிறந்தவர்களாவர். 12 மகன்களின் மரபுகளும், தங்கள் தனித் தன்மையைப் பாதுகாத்து வந்தனர். புதிய இசறாயெல் நாட்டில் குடியேற, 12 மரபுகளுக்கும் இடங்கள் ஒதுக்கப்பட்டன[1]. வடகோடியில் தான் (Dan) மரபினரும் தென்கோடியில் ஊதா என்ற யூதா மரபினரும், மற்ற பகுதிகளில் மற்றவரும் குடியேறினர். இலெவி (Levi) என்ற குருக்கள் மரபுக்கு இடம் ஒதுக்கப்படவில்லை. இசறாயெல்லில் மன்னராட்சி தோன்றியவுடன், அப்பிரிவுகள் மறக்கப்பட்டன. இருப்பினும், தற்காலத்திலும் கூட, சமயச் சடங்குகளில், தங்கள் மரபை அம்மக்கள் நினைவு கூறுகின்றனர்.

மேற்கண்ட 12 மரபினரிடையே, பிற்காலத்தில் கருத்து வேறுபாடுகள் எழுந்தன. எகிப்தில், இந்த 12 மரபினரும் அடிமைகளாக இருந்தனர். மோசே தலைமையில் அம்மக்கள் எகிப்தை விட்டு வெளியேறிய போது, யூதா மரபினர், மோசேயுடன் செல்லவில்லை. மோசேயின் தலைமையைப் புறக்கணித்தனர். குறுக்கு வழியில் கனான் நாட்டுக்கு வந்து விட்டனர். அதனால் மேசேயின் ஆதரவாளர்கள், யூதாமரபினர் மீது வெறுப்பு கொண்டிருந்தனர், ஓசுவா தலைமையில், கனான் நாட்டை எபிரேயர்கள் பிடித்த பின்னர், வேண்டா வெறுப்பாக, யூதா மரபினருக்கும் ஒரு பகுதியை (தென்பகுதி ஒதுக்கினர். அதுமற்ற பகுதிகளை விட வறட்சியான, மலைகளும் பாலை நிலமும் கொண்ட பகுதியாகும். அடுத்த நூறாண்டுகளில், யூதா மரபின் தாவீது, ஆட்சியைத் தன் ஆற்றலால் கைப்பற்றிக் கொண்டான். தாவீதின் மகன் சாலமோன், அரசை விரிவுபடுத்தினான். 12 மரபுகளில், யூதா மரபு முன்னிலைப்படுத்தப்பட்டது. அதுவரை எபிரேயர் அல்லது இசறாயெல் மக்கள் என அழைக்கப்பட்ட 12 மரபுகளும், யூதாவினர் என்றே அழைக்கப்பட்டனர். யூதாவின் பெயரால் அனைத்து எபிரேயரும், யூதர்கள் என அழைக்கப்படலாயினர். முன்னிரு பெயர்களும் மறைந்து, யூதமக்கள் (Jewish people) என இன்றும் அழைக்கப்படுகின்றனர். வரலாற்றில் அறியப்படும் எபிரேயர்கள், இசறாயெலர், யூதர் ஆகிய மூன்று பெயர்களும் ஓரினத்தைக் குறிப்பவைகளே. ஒவ்வொரு பெயருக்கான காரணங்களும் மேலே விளக்கப்பட்டுள்ளன.

எபிரேயர், எபிரேய மொழி பற்றி அறியாதவர்கள் தமிழ்நாட்டில் பலர் உள்ளனர். பல பேராசிரியர்களுக்குக் கூட, எபிரேயம் என்ற ஒரு மொழி இருந்தது, இருப்பது பற்றிக் கூட தெரிந்திருக்கவில்லை. கி.மு.3000 ஆண்டுகளில், முதன் முதலில் எபிரேயர்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அபிரகாம் (இசுலாமியர் இப்றாகிம் என்பர்) தான் முதன்முதலில் எபிரேயர் என்ற பெயரால் அழைக்கப்படுகிறார். அவருடைய தந்தை, பாட்டன் பற்றிய சிறுகுறிப்புகள் மட்டுமே கிடைத்துள்ளன. அபிரகாமின் முன்னோர்கள் பற்றிய செய்திகள் எவையும் அறியப்படவில்லை. கி.மு.1950களில், அபிரகாம் வாழ்ந்திருந்ததாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அவர் மரபில் தோன்றிய மக்களாக, எபிரேயர்கள் சொல்லப்படுகின்றனர். எகிப்து நாட்டில், அடிமைகளாக 10 இலட்சம் பேர் இருந்ததாக விவிலியம் கூறுகிறது. எகிப்தில் குடியேறாத எபிரேயர்கள், கனான் நாட்டில் வாழ்ந்துள்ளனர். மோசேயின் புதிய சமயத்தைப் புறக்கணித்து வெளியேறிய மக்களே, வரலாற்றில் போணீசியர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். மோசே காலத்திலேயே (கி.மு.1300) அப்பிளவு ஏற்பட்டுவிட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

கி.மு.1100 முதல் கி.மு.600 வரையிலும் எபிரேயர்களின் ஆட்சி நடை பெற்றது. 500 ஆண்டுகளில் அவ்வாட்சி முடிவுற்றது. பாபிலோனியரும், அசீரியரும், பாரசீகரும், கிரேக்கரும் (இடையில் எகிப்தியரும்), இறுதியாக உரோமரும், இசறாயெல் நாட்டை ஆண்டனர். யூதர்களின் உரிமைகள் பலவும் பறிக்கப்பட்டன. பாபிலோனியர் ஆட்சியில் பலர் அடிமைகளாக்கப் பட்டனர். கிரேக்கர் உரோமர் ஆட்சிகளில் நடந்த விடுதலைப் போர்கள் நசுக்கப்பட்டன. கி.மு. 550 லிருந்தே யூதர்கள், வெளி நாடுகளில் சென்று குடியேறத் தொடங்கினர். கி.பி. 76 ஆம் ஆண்டில், உரோமர்கள், எருசலேம் தேவாலயத்தை இடித்துத் தரைமட்டமாக்கினர். அந்நிகழ்வுக்குப்பிறகு 25 விழுக்காட்டுக்கும் குறைவான மக்களே அங்கு வாழ்ந்து வந்தனர். கி.பி.முதல் நூற்றாண்டில் தங்கள் நாட்டைவிட்ட வெளியேறிய யூதர்கள், 2000 ஆண்டுகளாக, உலகின் பல நாடுகளிலும் வாழ்ந்துள்ளனர். கி.பி.முதல் நூற்றாண்டின் இறுதியில், கேரளத்திலும் (அக்கால சேரநாடு) பலர் குடியேறினர். இன்றும் கூட, கொச்சியில் யூதர்களின் தெரு ஒன்றுள்ளது. அவர்களுக்கான தேவாலயமும் (Synagogue) அங்குள்ளது. 1948 ம் ஆண்டிற்குப் பிறகு பலர், இசறாயெலில் சென்று குடியேறிய போதிலும், மேலும் பலர், கொச்சியிலேயே உள்ளனர். அவர்கள் அனைவரும் மலையாளமும், கொச்சையான எபிரேய மொழியும் பேசுகின்றனர். பலருக்கு எபிரேய மொழி மறந்தே போயிற்று.

இந்தியாவில் உள்ளவர்களைப் போன்றே, உலகெங்கும் யூதர்கள் வாழ்ந்திருந்தனர். தாய் நாட்டை விட்டு வெளியேறிய பிறகு, அனைத்தையும் இழந்திருந்தாலும், தங்கள் சமய நூலான தோரா (Torah) வை மட்டும் இழந்துவிடவில்லை. (தோரா என்பது கிறித்துவர்களின் விவிலிய நூலான பழைய ஏற்பாடு தான்). யூதர்கள் தங்கள் சமயம் தொடர்பாக, தீவிரமான பற்றுள்ளவர்கள். எந்தச் சூழலிலும், தங்கள் மரபுகளை இழக்காதவர்கள். உருவ வழிபாடுகளைச் செய்யாதவர்கள். தாங்கள் வாழ்ந்திருந்த நாடுகளில் அவர்களின் நடவடிக்கைகள் காரணமாகவே, பலருடைய வெறுப்புக்கு ஆளாயினர். தாய் நாட்டை விட்டு வெளியேறிய யூதர்கள், போணீசியர் களைப் போல, வணிகத் துறையில் ஈடுபடலாயினர். ஐரோப்பாவில் பல நாடுகளில் வட்டித் தொழிலும் செய்து வந்தனர். (ஷேக்ஸ்பியரின் வெனிஸ் நகரத்து வணிகன் – The Merchant of Venice என்ற நூல், யூதர்களின் வணிக முறைகளைப் பற்றியதே) உலகெங்கும் சிறுபான்மையினராக இருந்த யூதர்கள், தங்களைக் காத்துக் கொள்ளும் வகையில், நெளிவு சுளிவுடன் வாழத் தலைப்பட்டனர். பிற்காலத்தில் அறிவார்ந்த மக்களாக உயர்ந்தனர். உலகின் தலைசிறந்த மனிதர்களின் பட்டியலில், பலர் யூதர்களாக உள்ளனர். அமெரிக்காவின் புகழ்பெற்ற அரசியல் அறிஞர் ஹென்றி கிசிங்கர், ஒப்புமைத் தத்துவத்தைக் கண்டுபிடித்த ஐன்ஸ்டீன் போன்றவர்கள் யூதர்களே.

ஈராயிரம் ஆண்டுகளாக தனித்தனி நாடுகளில் வாழ்ந்திருந்த யூதர்கள், அந்தந்த நாட்டு மொழிகளுடன் தங்கள் தாய்மொழியான எபிரேய மொழியைக் கலந்து பேசலாயினர். அதனால், பழைய எபிரேய மொழியின் செம்மொழித்தன்மையும், இலக்கிய வளமும் காணாமற் போயின. அவர் களுடைய சமய நூலான தோராவின் முதல் ஐந்து அதிகாரங்கள் (பெந்தெதியூக் என்று கிரேக்க மொழியில் கூறுவர்) எபிரேய மொழியின் இலக்கிய வளத்திற்குச் சான்றுகளாகும். இடைக்காலத்தில், குறிப்பாக, ஸ்பெய்ன் நாட்டிலிருந்த எபிரேய மொழி அறிஞர்கள், சமயம் தொடர்பான இலக்கியங்களைப் படைத்தனர். தொடர்ந்து கடந்த 20 ஆம் நூற்றாண்டு வரை பல இலக்கியங்களைப் படைத்தனர்[2]. அவை, விரல் விட்டு எண்ணக் கூடிய அளவிலேயே இருந்தன. யூதர்கள், தங்கள் தாய் மொழியான எபிரேய மொழியை, பெரும்பாலும் மறந்தே போயினர்.

ஐரோப்பாவிலிருந்த யூதர்கள், ஒவ்வொரு நாட்டிலும் ஒரு எபிரேய மொழியைப் பேசினர். ஸ்பெயினில் இருந்த யூதர் பேசிய எபிரேய மொழி,

செர்மனியில் இருந்தவருக்குப் புரியவில்லை. இங்கிலாந்தில் பேசப்பட்டது பிரான்சில் புரியவில்லை. காரணம் அந்தந்த நாட்டு மொழிகளுடன் எபிரேய மொழி கலந்து போனது. 1948 ஆம் ஆண்டில், மீண்டும் யூதர்களுக்கான நாடு அளிக்கப்பட்ட போது, இசறாயெல் அரசு, உலகெங்கும் வாழ்ந்திருந்த தம் மக்களை, தாய் நாட்டுக்குத் திரும்புமாறு அழைத்தது. கேரளத்திலிருந்தும் பலர் இசறாயெல் திரும்பினர். இசறாயெல் அரசு, இலவயமாக மனை, நிலங்களை அளித்தது. வீடுகளைக் கட்டிக் கொள்ளப்பொருளுதவி செய்தது. அப்போது மிகப் பெரிய குழப்பத்தை இசறாயெல் அரசு சந்தித்தது. தம் மக்கள் பேசிய எபிரேய மொழி, ஒருவருக்கொருவரால் புரிந்து கொள்ளப்பட வில்லை. கடந்த 2000 ஆண்டுகளாக வெளிநாடுகளில் வாழ்ந்திருந்த அச்சமூகம், தங்கள் தாய் மொழியை மறந்தே போனது. அவர்களுடைய பேச்சிலும் கொச்சையான சில எபிரேய மொழிச் சொற்களே வெளிப்பட்டன.

நிலைமைகளைப் புரிந்து கொண்ட இசறாயெல் அரசு, இலக்கிய வளம் மிகுந்த பழைய எபிரேய மொழியை, மக்களுக்குக் கற்பிக்க எண்ணியது. சிறுவர்களுக்கும் முதியவர்களுக்கும் எபிரேய மொழி கற்பிக்கப்பட்டது. முதியோர்களுக்கென தனிப் பள்ளிகள் தொடங்கப்பட்டன. முயற்சியுடன் மொழியைக் கற்குமாறு வேண்டுகோள் விடப்பட்டது. பாடநூல்கள், அரசாணைகள், செய்தித்தாள்கள், வானொலிகள், தொலைக்காட்சிகள் வாயிலாக எபிரேய மொழி வளர்க்கப்பட்டது. தற்போது, இசறாயெல் மக்களில் மூத்த தலைமுறையினரும், இளைய தலை முறையினரும் எபிரேய மொழியைப் பேசவும் எழுதவும் பயிற்சியை பெற்று விட்டனர். பழைய செம்மொழியான எபிரேயம் மீண்டும் புதுப்பிக்கப்பட்டுவிட்டது. தற்கால உலக மயமாக்கல் என்ற கொள்கையின் அடிப்படையில், பல மொழிகள் எபிரேயத்தில் கலந்துள்ளன. அவை பேச்சு வழக்கிலும் வந்துள்ளன. பழைய எபிரேயம் (Biblical Hebrew) என்பது, தமிழில் அறியப்படும் சங்க இலக்கியம் போன்றது. புது எபிரேயம் (Modern Hebrew) என்பது, தற்கால பேச்சு வழக்குத் தமிழ் போன்றது. புதிய எபிரேய மொழியில், அயல் மொழிச் சொற்கள், சிற்சில மாற்றங்களுடன் அவ்வாறே சொல்லப்படுகின்றன. சிகரெட், சினிமா, ரயில், டெலிவிஷன் போன்ற சொற்கள், அவ்வாறே பயன்படுத்தப்படுகின்றன.

கடந்த 2000 ஆண்டுகளாக, தொலைந்து போன, மறக்கப்பட்ட ஒரு செம்மொழியை, 50 ஆண்டுகளில் மீட்டெடுத்தது, உலக வரலாற்றில் மிகப் பெரும் சாதனையாகும். தங்கள் தாய்மொழியைக் கற்றுவிட வேண்டும்

என்ற வெறி அம்மக்களிடையே காணப்பட்டது. அரசாங்கத்தின் திட்டங் களுக்கு மக்கள் முழு ஒத்துழைப்பை நல்கினர். பல வெளிநாட்டு மொழிகளால் தன் வடிவத்தையே இழந்து நின்ற எபிரேய மொழி, இன்று தன் பழைய மரபுத் தன்மையுடன் நிமிர்ந்து நிற்கிறது. இந்த வரலாற்று நிகழ்வு, தமிழர்களுக்கு ஒரு பாடமாக அமைய வேண்டும். கடந்த ஈராயிரம் ஆண்டுகளாக, சமற்கிருதம் உள்ளிட்ட மொழிகளின் தாக்குதல்களால், ஓரளவுக்குச் சிதைந்து விட்ட தமிழ் மொழியை மீட்டெடுப்பது இன்று தமிழரின் தலையாய முயற்சியாக இருக்க வேண்டும். இன்று தமிழைப் பின்னுக்குத் தள்ளி விட முயலும் ஆங்கில மோகம், தமிழர்களிடமிருந்து விடுபடவேண்டும். பிற மொழிக் கலப்பில்லாமல் தமிழில் பேசவும் எழுதவும், ஏராளமான சொல் வளம் தமிழில் உள்ளது. கூடுமானவரை பிற மொழிச் சொற்களைத் தமிழில் மொழி பெயர்த்துக் கொள்ள வேண்டும். தமிழில் கலைச்சொற்களை உருவாக்க வேண்டும். ஐரோப்பிய நாடுகளைப் போன்று, தாய்மொழி யிலேயே கல்வியை கற்பிக்க வேண்டும். உயிரிழந்த எபிரேய மொழிக்கு மீண்டும் உயிர் கொடுக்க முடிந்தது என்றால், இன்றும் வளமையுடன் இருக்கும் தமிழ் மொழி மீது படர்ந்துள்ள அழுக்குகளை அகற்ற முற்பட வேண்டும். இசறாயெல் நாட்டில் அரசு எடுத்த முயற்சிக்கு மக்கள் ஒத்துழைப்பை நல்கினர். அதுபோல் தமிழ் நாட்டரசு, தமிழ் மொழியைப் பாதுகாக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

இன்று உலகப் பொருளியல் கூறுகளை நிர்ணயிக்கும் இடத்தில் யூதர்கள் உள்ளனர். வல்லரசுகளும் இசறாயெலுடன் நட்புறவாக இருக்க விரும்புகின்றன. ஒரு கோடிக்கும் குறைவான மக்கள் தொகை கொண்ட இசறாயெல் நாட்டைக் கண்டு, பெருமளவில் மக்கள் தொகை கொண்ட இசுலாமிய நாடுகளான எகிப்து, அரேபியா, ஜோர்டான், லெபனான், சிரியா போன்ற நாடுகள் அஞ்சுகின்றன. இசறாயெல் நாட்டின் முப்படைகளும், உலகின் மிகச் சிறந்த இராணுவமாகக் கருதப்படுகிறது. மொசாத் (Mozat) எனப்படும், அந்நாட்டின் புலனாய்வுத்துறையும் அதிரடிப்படையும், உலகப் புகழ் பெற்றது. 1948 க்குப் பிறகு பல போர்களை இசுலாமிய நாடுகள் இசறாயெலுக்கு எதிராக நடத்திய போதிலும், அவர்களால் வெற்றி காண இயலவில்லை. நாட்டின் பெரும்பகுதி பாலை நிலமாக இருந்த போதிலும், வேளாண்மைத் தொழிலை வெற்றிகரமாக நடத்தி வருகின்றது. வேளாண் மையில் புதுப்புது உத்திகளைக் கொண்டு, உற்பத்தியைப் பெருக்கி வருகின் றனர். சொட்டு நீர்ப்பாசன முறையை உலகிற்கு அறிமுகம் செய்தவர்கள்

இசறாயெல் நாட்டவரே. தாய் மொழிக் கல்வியே தொடக்கக் கல்வி முதல் பல்கலைக் கழகங்கள் வரை கற்பிக்கப்படுகின்றன.

தங்கள் மொழியின் மீதும், நாட்டின் மீதும் இசறாயெல் மக்கள் கொண்டுள்ள பற்று, வியக்கத்தக்கது. எபிரேய மொழியை வெளி நாட்டவர்களுக்குக் கற்பிக்கப் பல பள்ளிகள், தனியாரால் நடத்தப்பட்டு வருகின்றன. எபிரேய மொழியில் பேசும் வெளி நாட்டவருக்கு, அந்நாட்டு மக்களால் அனைத்து உதவிகளும் செய்யப்படுகின்றன. உலகிலேயே மொழிக்கான முதல் பல்கலைக் கழகத்தை நிறுவியவர்கள், அந்நாட்டவரே. (இரண்டாவதாக, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூரில் நிறுவப்பட்டது.) உண்மையான மொழிப் பற்றும், நாட்டுப் பற்றும் கொண்டவர்கள் இசறாயெல் மக்களாவர். கடந்த காலங்களில் அம்மக்கள் பல நாடுகளில் நசுக்கப்பட்டு ஒடுக்கப்பட்டனர். குறிப்பாக, செர்மனியில் இட்லர், ஆறு இலட்சத்துக்கும் மேற்பட்ட யூதர்களைக் கொன்று குவித்தான். கடந்த காலத்தின் தம் இனம் ஒடுக்கப்பட்ட வரலாற்றை அம்மக்கள் மறந்து விடவில்லை. அதன் வெளிப்பாடே இன்றைய இசறாயெல் நாட்டின் எழுச்சி யாகும். ஓரினம் முற்றிலுமாக அழிக்கப்பட்ட நிலையிலும், மீண்டெழுந்து வரலாறு படைக்க முடியும் என்பதற்கு, இசறாயெல் ஓர் எடுத்துக்காட்டாகும். அம்மக்களிடமிருந்தும், அரசிடமிருந்தும், தமிழர்கள் கற்றுக் கொள்ள வேண்டியவை நிறையவுள்ளன.

இன்று உலகில் அறியப்படும் பழங்காலத்து மொழிகள் இரண்டே என்று கூறலாம். ஒன்று தமிழ், மற்றது எபிரேய மொழியாகும். எபிரேய மொழி, இடையில் பலவாறு பேசப்பட்டாலும், 5000 ஆண்டுகளுக்கு மேலாக இன்றும் பேசப்பட்டு வருகின்றது. மற்ற பழைய மொழிகள் எல்லாம், அழிந்து போயின. தற்கால மொழிகள், கி.மு.2000 ஆண்டுகளுக்குப் பிறகு தோன்றியவை. பெல்ஜியம் நாட்டில் பேசப்படும் பிளமிஷ் என்ற மொழி, 300 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியது என்று சொல்லப்படுகின்றது. தமிழ் எக்காலத்தில் தோன்றியது என அறியப்படவில்லை. உலகின் மிகப் பழமையான இரண்டு மொழிகளும் இன்னும் பேச்சு எழுத்து வழக்கில் உள்ளன. அவ்விரண்டு மொழிகளுக்கும் இடையில் பல்வேறு தொடர்புகளும் காணப்படுகின்றன.

**பெயர்க் காரணங்கள் :**

ஹீப்று (Hebrew) எனப் பரவாகப் பலராலும் அழைக்கப்படும் மொழி, தமிழில் எபிரேயம் என்று மொழி மாற்றம் செய்யப்பட்டுள்ளது. ஹீப்று

என்பது ஆங்கிலச் சொல்லாகும். அக்காலத்திலேயே பல மொழிகளில், எபிரேய மொழி பற்றிய குறிப்புகள் உள்ளன. இப்றிம் (Ibrim), இப்றியிம் (Ibriyim), இவிரிம் (Ivirim), இவிரியிம் (Iviriyim), என்றவாறு 32 இடங்களில், 34 முறைகள், எபிரேய மொழியில் எழுதப்பட்ட விவிலியத்தில் சொல்லப் பட்டுள்ளன[3]. உரோமப் பேரரசில், கிரேக்க மொழியில் சொல்லப்பட்ட ஹீப்றய்யோஸ் (Hebraios) என்ற சொல், யூதர்களைக் குறிக்கப் பயன்படுத் தப்பட்டுள்ளது. ஸ்டிராங் எபிரேய அகராதியில் (Strong's Hebrew Dictio-nary), யில் எந்த நாட்டில் வாழும் யூதரையும், குறிப்பாக, யூதேயா (இசறாயெலின் தென்பகுதி பகுதியில் வாழும் யூதர்களையும் விளக்குவதாக அச்சொல் உள்ளது. ஆர்மீனிய, இத்தாலிய, புதிய கிரேக்க, செர்பிய, பல்கேரிய, ரஷிய, ரோமானிய மற்றும் பல தற்கால மொழிகளில், ஹீப்று என்ற சொல், யூதர்களைக் குறிப்பதாக விளக்கப்பட்டுள்ளன. ஹீப்று என்ற சொல்லிலிருந்து யூதர் (Jew) என்ற சொல் பிறக்கவில்லையென்பதை ஏற்கனவே விளக்கியுள்ளோம். ஹீப்று என்பது அம்மொழி பேசிய இனத்தின் பெயராகும். யூதர் என்பது, அவ்வினத்தின் ஒரு பிரிவினர் பெற்ற அரசியல் செல்வாக்கால், அனைவரையும் யூதர் என்றவாறு அழைக்கலாயினர். ஹீப்று என்ற பெயரின் ஒலிப்பைப் போன்றே, குர்திஷ் மொழியிலும் பிரெஞ்சு மொழியிலும் சொல்லப்பட்டுள்ளன.

ஹீப்று என்ற சொல்லிற்கான மூலச் சொல் எதுவென்று இதுவரை எவராலும் தெளிவுபடுத்தப்படவில்லை[4]. பெரும்பாலான ஆய்வாளர்கள், அப்பிறு (Apiru) என்ற சொல்லே மூலச் சொல் என்று கூறுகின்றனர். அப்பிறு என்ற சொல்லும் எந்த மொழிச்சொல் எனத் தெரியவில்லை என்பர். சிலர், அது சுமேரியச் சொல்லாக இருக்கலாம் என்று கருதுகின்றனர். சுமேரிய மொழியில் வேறு சொற்கள் எபிரேய மக்களைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளன. அப்பிறு என்ற சொல், இனத்தைக் குறிக்கவில்லை என்றும், இனக் குழுக்களில் ஒரு பிரிவையும் கூடக் குறிக்கவில்லை என்றும் கருதுகின்றனர். எகிப்தியக் குறிப்புகளில், எகிப்தில் இருந்த எபிரேய அடிமைகளை "கால் நடையாக வந்தவர்கள்" என்றவாறு குறிப்பிடப்பட் டுள்ளது. எகிப்தியர்களும் எபிரேய இனத்தின் மூலத்தை அறிந்திருக்கவில்லை என்றே சொல்லப்படுகிறது. கனான் நாட்டிலிருந்து எகிப்துக்கு வந்தவர்கள் என்பதை எகிப்தியர்கள் அறிவார்கள். ஆனால் கனானியர் என்றும் அவர்கள் அழைக்கப்படவில்லை. அதனால், எபிரேயர்கள், கனான் நாட்டைச் சார்ந்த வர்கள் அல்லர் என்பதும் தெளிவாகின்றது.

மேலும் சிலர், விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ள, ஈபர் (Eber) என்ற சொல்லை, மேற்கோளாகக் காட்டி, ஹீப்று என்ற சொல்லுக்கான மூலச் சொல் என்று கூறுகின்றனர்[5]. நாகன் என்ற நோவாவின் மகன் செம் என்ப வனின் மக்களில் ஒருவனாக ஈபர் சொல்லப்பட்டுள்ளான். (ஆதியாகமம், 10 :21-24) அபிரகாமின் முன்னோர்களில் ஒருவனாக ஈபர் சொல்லப்படுகிறான். தற்கால ஆய்வுகளின் படி, வெள்ளக் காலத்துக்குப் பிறகு அறியப்படும் ஈபர், கி.மு.10000 ஆண்டுகளில் வாழ்ந்திருந்தவனாக, (விவிலியச் செய்திகள் உண்மையாக இருப்பின்) அறியப்படுவான். கி.மு.1950 களில் வாழ்ந்திருந்த அபிரகாம், ஈபரின் மரபில் வந்த தற்கானச் சான்றுகள் இல்லை. ஏறக்குறைய 7000 ஆண்டு கால இடைவெளியை, தகுந்த சான்றுகளுடன் எவரும் நிரப்ப இயலாது. மேலும் கி.மு.3000 அல்லது 2500 ஆண்டுகளுக்கு முன்பு, எபிரேயர் என்ற இனம் பற்றி, சுமேரிய, மெசபத்தோமிய, எகிப்திய இலக்கியங்கள் எவையும், அவ்வினம் பற்றிச் சொல்லவில்லை. ஆய்வாளர்களின் பெரும்பான்மையோர், சொல் மற்றும் ஒலித் தொடர்பால், ஈபர் - ஹீப்று என்று இணைக்கப்படுவதை மறுக்கின்றனர். ஈபர் என்ற சொல்லுக்கும், பொருளும் மூலச் சொல்லும் விளக்கப்படவில்லை[6].

மேலே குறிப்பிட்டுள்ளதைப் போன்று, எகிப்தியர்கள், எபிரேயர்களை, சசு (Shasu) என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளனர். அச்சொல்லுக்கு, "கால் நடையாக (எகிப்துக்கு) வந்தவர்கள்" என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது[7]. எபிரேயர்கள், மோவாப், வடக்கு இதாம் (Moab and Edom) ஆகிய பகுதிகளிலிருந்து எகிப்துக்கு வந்தவர்கள் என்றும், எகிப்தியக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. சசு என்ற சொல், அவ்விரு பகுதிகளைக் குறிப்பிடவில்லை யென்றும் தெளிவுபடுத்துகின்றன. கி.மு.13 மற்றும் 12 ஆம் நூற்றாண்டுக் குறிப்புகள், எபிரேயர்களைக் குறிக்க, அபிறு என்றவாறு இரண்டு சொற் களைப் பயன்படுத்துகின்றன (Habiru and Apiru). இவையிரண்டும் ஒரே சொல்லின் இரண்டு உச்சரிப்புகளாகும். சில குறிப்புகளில் அப்பிறு (Appiru) என்றும் சொல்லப்பட்டுள்ளன. இச்சொல்லுக்கு, குடியிருப்புகளைக் கொண்டிருந்தாலும், நாடோடிகளாகத் திரிபவர்கள் (Semi - nomadic) என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. அப்பிறு என்ற சொல், எகிப்தியக் குறிப்பு களிலும் காணப்படுகின்றது. அது, சசு என்ற சொல்லிற்குப் பிறகு பயன் படுத்தப்பட்ட சொல் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்[8]. அப்பிறு என்ற சொல், ஹீப்று என்ற சொல்லுக்கான மூலச் சொல்லாக இருக்க வாய்ப்பில்லை என்று, ரெய்னி என்ற தற்கால ஆய்வாளர் கருதுகிறார்[9].

ஹீப்று என்ற சொல்லை, பல ஆய்வாளர்கள் ஆராய்ந்து ஆளுக்கொரு முடிவை அறிவித்துள்ளனர். பெரும்பாலானவர்களின் கருத்துப்படி அபிறு - அப்பிறு என்ற சொல்லே, ஹீப்று என்ற சொல்லுக்கான மூலச் சொல் என்று அறியப்படுகின்றது[10]. அச்சொல், "கடந்து வந்தவர்கள்", (ஆற்றுக்கு) அப்புறத்திலிருந்து வந்தவர்கள்" என்ற பொருளைத் தருவதாகக் கூறுகின்றனர். ஓசுவா, தன் மக்களிடம், நம்முன்னோர்கள் ஆற்றைக் கடந்து வந்தவர்கள் என்ற கருத்தைத் தெரிவிப்பதாக, விவிலியம் கூறுகிறது. அப்பால், அப்புறத்தில், அப்புறம் (beyond) என்ற கருத்து ஹீப்று என்ற சொல்லில் உள்ளதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஓசுவா (ஜோஷ்வா) தன் மக்களிடம்", கடந்த காலங்களில், உங்களுடைய முன்னோர்களும் அபிரகாமின் தந்தை தெராவும், பாட்டன் நகோரும் ஆற்றுக்கு அப்புறத்தில் வாழ்ந்திருந்து பல கடவுளரை வழிபட்டு வந்தனர்", என்று கூறுவதாக விவிலியச் செய்து உள்ளது. அது எந்த ஆறு என்பது தெளிவுபடுத்தப்பட வில்லை. அபிரகாமின் தந்தை பாட்டனுக்கு முன்பிருந்தவர்களும் என்ற சொல் வருவதால், யூப்ரடீஸ் ஆற்றுக்கு அப்புறத்தில் என்றவாறு பொருள் கூறுகின்றனர். எபிரேயர்களைப் பற்றிய தற்கால ஆய்வுகள், அவர்கள் தைகிரீஸ் ஆற்றுக்கு அப்பாலிருந்து வந்தவர்கள் என்று கூறுகின்றன. அபிரகாமின் பாட்டன் தந்தைக்கு முன்பிருந்த முன்னோர்கள் பற்றிய குறிப்பு எதுவும் விவிலியத்திலும் இல்லை. வேறு எங்கும் அறியப்படுவில்லை. ஆங்கில அகரமுதலிகள், ஹீப்று என்ற சொல்லுக்கு, "ஆற்றுக்கு அப்புறத் திலிருந்து வந்தவர்கள்" என்று விளக்கம் கூறுகின்றன[11].

அப்புறம் - அப்புறத்து என்ற தமிழ்ச் சொல்லே, அப்பிறு எனத் திரிபுபட்டுள்ளது. அப்பிறு, அபிறு, ஹீப்று ஆகிய சொற்களுக்கான வேர்ச் சொல்லும், மூலச்சொல்லும் எபிரேய மொழியில் காணப்படவில்லை. தைகிரீஸ் ஆற்றுக்கு (யூப்ரடீஸ் ஆற்றுக்கும்) அப்புறத்திலிருந்து வந்தவர்கள் என்பதையே அப்பிறு என்ற சொல் குறிக்கின்றது. இக்கூற்றை எபிரேயர் பற்றிய பிற குறிப்புகள் உறுதிப்படுத்துகின்றன. ஓசுவா, கனான் நாட்டை அடைந்தபோது, அங்கு கனானியர், அமோரியர், கிக்சோஸ் போன்ற பல தரப்பட்ட இனங்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது என்று விவிலியம் கூறுகிறது. கிக்சோஸ் (Hyksos) என்ற மரபினர், வட மெசபத்தோமியாவில் வாழ்ந்திருந்தவர்கள் என்று சொல்லப்படுகிறது. ஜோசபுஸ் என்ற இசுறாயெல் நாட்டு வரலாற்று அறிஞர், கிக்சோஸ் மக்கள், யாக்கோபுவின் மகனான, யோசேப்பு (Joseph) என்பவனின் மரபினர் என்று கூறுகிறார். ஒரு

நூற்றாண்டு காலம் அவர்கள் எகிப்தை ஆண்டிருந்ததாகவும் செய்திகள் கூறுகின்றன. யாக்கோபின் மரபில் வந்தவர்களாக பலர் சொல்லப்பட் டுள்ளனர்[12].

இயேசுவின் மறைவுக்குப் பிறகு, யூதர்கள் கிறித்துவத்தில் இணையத் தொடங்கினர். இயேசுவின் தொண்டர் பன்னிருவரும் யூதர்களாகவே இருந் தனர். கி.பி.மூன்றாம் நூற்றாண்டில், யூதர் அல்லாத மக்களே கிறித்துவத்தில் பெருமளவு இணைந்தனர். கிறித்துவ சமயத்தை வெறுத்தவர்கள், அச்சமயத்தினரைக் கிண்டல் செய்து, கேலியாக வைத்த பெயரே கிறித்துவர் (Christians) என்பதாகும். நாளடைவில் அப்பெயரே நிலைத்துவிட்டது. யூதக் கிறித்துவர்கள், ஹீப்று கிறித்துவர்கள் அல்லது மெசியாவின் (கிறித்துவர்கள்) யூதர்கள் என அழைக்கப்பட்டனர். (Messianic Jews).

எனவே, ஹீப்று என்ற சொல், அபிரகாம் தொடங்கி, வழிவழியாகப் பலருக்கும் சொல்லப்பட்டு வந்துள்ளது. மற்றொரு செய்தியின்படி, கனான் நாட்டிலிருந்த மக்களே, பிற்காலத்தில், போணீசியர்கள், மோவாபியர்கள் (Moabites), இடமியர்கள் (Edomites), அமோனியர்கள் (Ammonites), மிடியர்கள் (Midianites) என்றவாறு பிரிந்து போயினர். இவர்களும் அபிரகாமின் மரபைச் சார்ந்தவர்களே என்றும் சொல்லப்படுகிறது. எனவே, எபிரேய மக்களின் பிரிவுகளாகவே, அவர்களைக் கருதலாம். இப்பிரிவுகள் அனைத்தும், கி.மு.1500 - 1000 ஆண்டுகளில் அறியப்பட்டுள்ளன.

ஏற்கனவே விளக்கியுள்ளபடி, "அபிரகாம் என்கிற எபிரேயன்" (Abraham the Hebrew) என்று விவிலியம் குறிப்பிடும் சொற்களுக்கு, கிரேக்க மொழிபெயர்ப்பு விவிலியம், "கடந்து வந்து அபிரகாம்" (One who has passed over) என்று பொருள் கூறினர். அந்த One என்ற சொல், அபிர காமைக் குறித்ததா அல்லது அபிரகாமின் முன்னோர்களைக் குறித்ததா என்பதற்கு விளக்கமில்லை. "கடந்து வந்து ஒருவர்" பற்றிய விளக்கங்கள், ஒவ்வொரு பதிவிலும் ஒவ்வொரு பொருளை விளக்குவனவாக உள்ளன[13]. எபிரேயர்கள் கடந்து வந்தது, யூப்ரடீஸ் என்று சிலரும், செங்கடல், யோர்தான் ஆறுகள் என்று சிலரும், தைகிரிஸ் ஆறு என்று சிலரும், பல்வேறு வகையான கருத்துகளை முன் வைக்கின்றனர். ஆய்வாளர்கள் கூறும் பல செய்திகளை ஒப்பிட்டுப் பார்க்கும் போது, அவர்கள், தைகிரீஸ் ஆற்றைக் கடந்து வந்தவர்களாகவே கருதப்பட வலுவான சான்றுகள் கிடைக்கின்றன.

எகிப்தியர்கள், எபிரேயர்களை, தங்கள் இனத்தவராகக் கருதவில்லை. எகிப்தியர்கள், எபிரேயர்களுடன் சேர்ந்து உணவருந்துவதில்லை[14]. எபிரேயர் களை எகிப்தியர்கள் அடிக்கடி, காரணங்களின்றியே தாக்குவார்கள்[15]. எபிரேயப் பெண்கள், எகிப்தியப் பெண்களைப் போல் அழகானவர்கள் இல்லை[16]. இச்செய்திகளால், எபிரேயர்கள், வேறு இனத்தவர்கள் என, எகிப்தியர் சுட்டிக் காட்டுகின்றனர். தற்கால ஆய்வுகள், குறிப்பாக யுனெஸ்கோ வெளியிட்டுள்ள ஆப்பிரிக்க வரலாற்றில், எகிப்தியர்கள், மெசபத்தோமியாவி னின்றும் குடியேறியவர்களே என்று உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. எபிரேயர் களும், மெசபத்தோமியாவினின்று கனான் நாட்டில் குடியேறியவர்கள் என்று சொல்லப்பட்டுள்ளது. ஆனால் எகிப்தியர்கள், எபிரேயர்களை வேற்று இனம் எனக் கூறுவதால், பிற்காலத்தில்தான் எபிரேயர்கள் மெசபத்தோமியாவில் குடியேறியிருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது.

இசறாயெல் நாட்டைச் சுற்றியிருந்த நாடுகளும், அந்நாடுகளின் குறிப்புகளும், இப்ரி, அபிறு, அப்பிறு, இப்ரயீம், இப்றாயீம் என்றவாறு எபிரேய மக்களைக் குறிப்பிட்டுள்ளன. எபிரேயர்களும் தங்களை அவ்வாறே வெளிநாட்டவரிடம் கூறிக் கொண்டனர். எகிப்து நாட்டைப் பொருத்தவரை, எபிரேயர்கள் அடிமைகளாகவே கருதப்பட்டனர். எகிப்தில், எபிரேய அடிமைகளுக்கென தனிச்சட்டங்கள் இருந்தன. (பயணம், 21 : 2) எபிரேய ஆண் அடிமைகள், பெண் அடிமைகள் என்றவாறு குறிப்புகளும் காணப்படுகின்றன. எகிப்தில் பல்லாண்டுகள் அடிமைகளாக இருந்த எபிரேயர்கள், தங்களுக்கென தனி நாடு கிடைத்ததும், தாங்களும் அடிமைகளை வைத்துக் கொண்டனர். எபிரேயர்கள் அடிமைகளை வைத்துக் கொள்வது தவறு என, பல சமய அறிஞர்களும் சுட்டிக்காட்டியுள்ளனர். எபிரேயர்களிடம் அடிமைகளாக இருந்தவர்கள், ஏழாண்டுகளுக்குப் பிறகு விடுவிக்கப்பட்டனர். எனவே, எபிரேயர் என்ற பெயர், அனைத்துத்துறை களிலும், பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியலாம்[17].

ஆனாலும் இதுவரை அப்பெயர்களுக்கான விளக்கங்களைத் தெளிவாக எவரும் கூறவில்லை. பழைய செய்திகளும் விளக்கங்களும் இன்று மறுக்கப்பட்டுள்ளன. இந்நிலையில், சுமேரியக் குறிப்புகளில் மேற்கண்டவாறு சொல்லப்பட்ட எந்தப் பெயர்களும் காணப்படவில்லை. ஊர் மற்றும் இலார்சா குறிப்புகளிலும் (கி.மு.2000), அசீரியர்களின் வணிக நகரமான கப்படோசியாவில் (Cappadocia), ஆசியா மைனிரிலும் எபிரேய மக்களைப் பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. அவை கி.மு.2000

– 1800 கால அளவில் எழுதப்பட்டவை என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சுமேரியக் குறிப்புகளில் எபிரேயர்களை, ச – கழ் (Sa - Gaz), என்ற சொற்களால் பதிவு செய்துள்ளது தெரிய வந்துள்ளது. இரண்டும் இரண்டு சொற்களா அல்லது ஒரு சொல்லா எனத் தெரியவில்லை. அச்சொற்களை, ஆய்வாளர்கள் சரியாகப் படித்துள்ளார்களா என்பதும் தெரியவில்லை. பொதுவாக, தமிழில் பயன்படுத்தப்படும் ழகரம், மேலை நாட்டு எபிரேயம், அரபு, அக்காடியம் போன்ற மொழிகளிலிருந்து ஆங்கிலத்தில் பதிவு செய்யப்பட்ட சொற்களில், Z என்ற ஆங்கில எழுத்தைப் பயன்படுத்தி யுள்ளனர். தமுழ் (Tamuz), அழர் (Azar), கழ் அல்லது காழ் (Kaz) என்றவாறு உள்ளன. ச – கழ் அல்லது சாகாழ் என்ற சுமேரியச் சொல்லுக்கான பொருளை இதுவரை எவரும் கூறவில்லை.

கழ் – காழ் என்ற தமிழ்ச்செல், உறுதி, வலிமை, கெட்டித் தன்மையைக் குறிக்கும்.

*அகக் காழ் எனவே மரம் என மொழிப*
*புறக் காழ் எனவே புல்லென மொழிப* – தொல்காப்பியம்.

காழ் என்பது மரத்தில் வைரம் பாய்ந்த கெட்டித் தன்மையைக் குறிக்கும். எபிரேயர்கள், காழ் என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளதால், உடல் திறன்மிக்கவர்கள், வலுவான உடற்கட்டு உடையவர்கள் எனக் கருதலாம்.

எபிரேயர்கள், மெசபத்தோமியாவைச் சார்ந்தவர்கள், செமிட்டிக் இனமக்கள், அவர்களுடைய மொழியும் செமிட்டிக் குடும்பத்தைச் சார்ந்ததே என்று ஆய்வாளர்கள் கருதினாலும், அவர்களைப் பற்றிய பதிவுகள் அவ்வாறாக இல்லை.

கிரீன் பெர்க், ரைட், மெண்டனால் போன்ற ஆய்வாளர்கள் தரும் செய்திகள் எபிரேயர்களின் பண்புகளை விளக்குகின்றன[18].

1. எபிரேயர்கள், தொடக்கத்தில், போர் வீரர்களாகவே அறியப்படுகின்றனர். நல்ல உடற்கட்டும், போரிடும் திறமையும் கொண்டிருந்த அவர்கள், தேவைப்பட்டவர்களுக்கு அல்லது மன்னர்களுக்கு உதவ, போரிடு வார்கள். பகைவர்கள் என்று மன்னர்களால் காட்டப்படும் எவரையும் எதிர்த்துப் போரிடுவார்கள். போரிடுவதற்கு முன்பே, அவர்களடைய போருக்கான ஊதியத்தைப் பெற்றுக் கொள்வார்கள். பகை மன்னர்கள் மட்டுமல்லாது, மன்னனை எதிர்க்கும் உள்நாட்டுக் குழுக்கள் மீதும் போரிடுவார்கள். போரில் பலர் இறப்பது பற்றி அவர்கள் கவலைப்

படுவதில்லை. வீடு, நிலம், சொத்து என எதுவும் இல்லாத அவர்கள், போர்த் தொழிலை மட்டுமே, வருவாய்க்கான தொழிலாகக் கருதி வந்தனர்.

2. எபிரேயர்கள், முற்றிலும் நகர்ப்புற வாழ்க்கையை விரும்பியர்கள். நாட்டுப்புறங்களில் அவர்கள் வாழ்வது இல்லை. பிற்காலத்தில் அவர்கள் நாடோடிகளாக அறியப்பட்டாலும், முற்காலத்தில் அவர்கள் நகரிய நாகரிகத்தோடு தொடர்பு கொண்டவர்களாக இருந்தனர் என்று கிரீன் பெர்க் கூறுகிறார்.

3. ரைட், மெண்டனால் போன்ற ஆய்வாளர்கள், எபிரேயர்கள் நாடோடி இனத்தைச் சார்ந்தவர்களே என்றும், அவர்கள் எங்கிருந்து வந்தார்கள் என்பது தெரியவில்லை என்றும் கூறுகின்றனர். ஆனாலும், நகர்ப்புறங்களில் வந்து வாழத் தொடங்கினர் என்றும் கூறுகின்றனர்.

4. கி.மு. 2000 - 1750 ஆண்டுகளில், ஊர் நகரத்தினின்றும், தெற்கு மெசபத்தோமியாவிலும், வடக்கு சிரியாவிலும் சென்று குடியேறினர். ஊர் நகரில் அவர்கள் எக்காலத்தில் வந்து குடியேறினார்கள் எனத் தெரியவில்லை. வடக்கு சிரியாவிலுள்ள அலாலக் (Alalak) நகரக் குறிப்புகள், அவர்களை எந்த நாட்டுச் சட்டங்களையும் மதிக்காக, சட்டங்களுக்குப் புறம்பான வன்முறையாளர்கள் என்றும், தங்களுடைய வருமானத்துக்காக, நகரங்களைக் கொள்ளையடிப்பவர்கள் என்றும் கூறுகிறது.

5. தொடக்கத்தில் இனக்குழுவாகத் தங்கள் போர் முறைகளை நடத்தி வந்தவர்கள், பிற்காலத்தில் தங்கள் குழுவினர் அல்லாத பலரையும் தங்கள் குழுவில் இணைத்துக் கொண்டனர்.

6. அசீரிய நாட்டின் நூசு நகரக் குறிப்புகள், கி.மு.1500 ஆண்டுகளில் பதிவு செய்யப்பட்டவைகளாகும். தங்கள் போர் நடவடிக்கைகள் தேவைப்படும் எவரிடமும் ஒப்பந்தம் செய்து கொள்வார்கள் என்று கூறுகிறது. ஒப்பந்தப்படி, போர் நடவடிக்கைகளை ஊதியத்தை முன்கூட்டியே பெற்றுக் கொள்வார்கள் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

7. அப்போர் வீரர்களில் பலர், அக்காடிய, சுமேரிய மொழிப் பெயர்களைக் கொண்டிருந்தனர் என்று, நூசுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

8. எகிப்தில் கண்டெடுக்கப்பட்ட அமர்ணா குறிப்புகள், எபிரேயர்களைப் பற்றிய முன் வரலாறு தெரியவில்லையென்றும், அவர்கள் மெசபத் தோமியரா அல்லது வெளி நாட்டினரா என் அறிய இயலவில்லை என்றும் கூறுகிறது.

9. கனான் நாட்டை ஆண்ட மன்னன் அசிர்த்தா என்ற மன்னனுக் காகவும், அவன் மகனுக்காகவும் போரிட்டனர் என்ற குறிப்பும் காணப்படுகின்றது. அக்குறிப்பில், அவர்கள் கனானிய இனத்தைச் சார்ந்தவர்கள் அல்லர் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

10. கனானிய மன்னர்களுக்காக, எகிப்தில் உள்ள மன்னர்களை எதிர்த்துப் போரிட்டனர் என்றும், கனானிய மன்னர்கள், எகிப்திய அரசினின்றும் விடுதலை பெற உதவி செய்தனர் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

11. எகிப்தில் நேரிடையாகவும் மறைமுகமாகவும் போரிட்டனர். எகிப்தின் நகரங்களில் புகுந்து கொள்ளையடித்தனர். எகிப்திய மன்னர்களுக்கு எதிராகக் கலகம் செய்யுமாறு மக்களைத் தூண்டினர். தங்கள் கோரிக்கைகளைக் கேட்காதவர்களைக் கடுமையாகத் தாக்கினர். அமர்ணா குறிப்புகளின்படி, நாடு முழுவதும் பெருங்குழப்பங்களை விளைவித்தனர் என்றும், பல நகரங்களைச் சூறையாடினர் என்றும், அவர்களுடைய கண் மூடித்தனமான தாக்குதல்களால், நாடே நிலை குலைந்து போயிற்று என்றும் அக்குறிப்புகள் தெரிவிக்கின்றன.

12. எகிப்தியத் தாக்குதலில், எகிப்தியர்களால் ஒடுக்கப்பட்ட கனானியர்களும், பிறரும், எபிரேயருடன் இணைந்து கொண்டனர் என்றும் அமர்ணா குறிப்புகள் தெரிவிக்கின்றன.

13. அமர்ணா குறிப்புகளில், எபிரேயர்களை அடிமைகள் என்றும், வரன்முறை எவையும் இல்லாத முரட்டுக் கூட்டத்தார் என்றும், கி.மு.15–12 நூற்றாண்டுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. அவர்கள் அனைவரும் சிறைபிடிக்கப்பட்டு ஒடுக்கப்பட்டனர் என்றும் அக்குறிப்புகள் தெரிவிக்கின்றன.

14. எபிரேயர்கள், எகிப்தில் அடிமைகளாக்கப்பட்டனர் என்ற செய்தியை, விவிலியமும் உறுதிப்படுத்துகின்றது.

15. தொடக்கத்தில் தனி இனக் குழுவாகச் செயல்பட்டு வந்த எபிரேயர்கள், அதிரடியான போர் முறைகளால், பெரும் பொருளீட்டியதை அறிந்த

பிறரும் அக்குழுக்களில் இணைந்தனர் என்று ஆய்வாளர்கள் கருது கின்றனர்.

16. பல இனக்குழுக்களைத் தம்முடன் இணைத்துக் கொண்ட எபிரேயர்கள் பிறை நிலாப் பிரதேசம் (Crescent fertile) முழுவதும், தனித்தனிக் குழுக்களாகச் செயல்பட்டு வந்தனர்.

17. கிரீன் பெர்க், எபிரேயர்கள் ஒரு காலத்தில் நகரிய நாகரிகத்தில் வளமையுடன் வாழ்ந்திருந்த மக்கள் என்றும், ஏதோவொரு மிகப் பெரிய அழிவினால் அல்லது இயற்கைச் சீற்றத்தினால் தங்கள் உடமை களையிழந்து விட்டவர்கள் என்றும், கூறுகிறார்.

18. உடமைகளை இழந்ததால், தாங்கள் வறுமை நிலைக்குத் தள்ளப் பட்டதால், வேறு வழியின்றி, வன்முறைக் குழுக்களாக மாறி, கொள்ளையிடுதல் போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டதாகவும் கூறுகிறார்.

19. அக்கால அளவில், நகர அரசுகள், தங்களுக்குள் போரிட்டுக் கொண் டிருந்தன என்றும், அச்சூழ்நிலையைத் தமக்கு ஏற்புடையதாக்கிக் கொண்டு, எபிரேயக் குழுக்கள் வருமானத்தை ஈட்டின என்றும், திறமையான வல்லரசு எதுவும் அக்காலத்தில் இல்லாமற் போனது, அக்குழுக்களுக்குச் சாதகமாக அமைந்து விட்டது என்றும் கிரீன் பெர்க் கூறுகிறார்.

20. சிலர், எபிரேயரை நாடோடிக் குழுக்கள் எனக் கூறினாலும், பெரும்பாலான ஆய்வாளர்கள் கிரீன் பெர்க்கின் நிலைப்பாட்டை ஏற்றுக் கொள்கின்றனர்.

21. எபிரேய இனக்குழுவில், அபிரகாமின் வழிவந்தவர்களாகக் கருதப்படும் இடமியர் (Edomites), அமோனியர் (Ammonites), மிடியர்கள் (Midianites), போணீசியர்கள் போன்றவர்களும் இடம் பெற்றிருந்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். அப்போதெல்லாம் அவர்கள், பல தெய்வங்களை வழிபட்டு வந்த மக்கள் என்றே ஆய்வாளர்கள் கருது கின்றனர்.

22. மோசே, தம் மக்களுக்கென்று தனிச்சமயம் தோற்றுவித்த போது, மோசேயுடன் முரண்பட்ட குழுக்கள் எல்லாம் பிரிந்து போயின என்றும் சொல்லப்படுகின்றது.

23. மோசேயின் காலத்துக்குப் பிறகும், அப்போர்க் குழுக்களில் சில செயல்பட்டு வந்தன என்றும், தாவீது மன்னன் கூட, இக்குழுக்களைப் பயன்படுத்திக் கொண்டான் என்றும், விவிலியக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

24. மோசே காலத்துக்குப் பிறகு, எபிரேயக் குழுவினர், மேற்கண்ட இனத்தார் என்ற பெயரில் பிரிந்து போயினர். மோசேயின் வழியில் சென்றவர்கள், இசறாயெல் மக்கள் என அழைக்கப்பட்டனர்.

25. கி.மு.3000 ஆண்டுகளில், ஓரினமாகக் கருதப்பட்ட எபிரேயர்கள், கி.மு.500 ஆண்டுகளில், பல்வேறு பெயர்களில், பல்வேறு இனக் குழுக்களாகப் பிரிந்து போயினர். எபிரேயர்களின் முன்வரலாறு அறியப்படாததால், மேற்கண்ட இனங்களின் முன் வரலாறும் அறியப் படவில்லை.

26. அக்குழுவினரால், தற்காலத்தில் எபிரேயர் மட்டுமே, யூதர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். தங்கள் சமயத்தைப் பற்றி நிற்கின்றனர். மற்ற பிரிவுகள் எல்லாம், கிறித்துவம், இசுலாம் போன்ற சமயங்களில் இணைந்து விட்டனர்.

**எபிரேய மொழி (Hebrew Language):**

எபிரேய மொழி வடமேற்கு செமிட்டிக் மொழிக்குடும்பத்தைச் சார்ந்தது என ஆய்வாளர்கள் பிரிக்கின்றனர். தற்கால அரசியல் அமைப்புப்படி, இசறாயெல், பாலத்தீனம், இலெபனான், ஜோர்டான், சிரியா, ஈராக், ஈரானின் வடமேற்குப் பகுதி ஆகியவை, செமிட்டிக் மொழி பேசப்பட்ட நாடுகளாக அறியப்படுகின்றன. கி.மு.1500 ஆண்டுகளில், தென்னிந்தியா முழுவதும் தமிழ் மொழியே பேசப்பட்டது. அடுத்த 2000 ஆண்டுகளில், தெலுங்கு, கன்னடம், துளு, மலையாளம் என்றவாறு பல மொழிகள் கிளைத்தன. கிறித்துப் பிறப்பாண்டுகளில் இந்தியாவெங்கும் தாக்கங்களை உருவாக்கிய சமற்கிருத மொழி தமிழ் உள்ளிட்ட தென்னத்து மொழிகளை மேலும் பிளவு படுத்தியது. தமிழ் மட்டுமே, சமற்கிருதப் பிடியினின்றும் தப்பிப் பிழைத்தது. ஏனைய தென்னகத்து மொழிகள் அனைத்தும் பெருமளவிலான சமற்கிருதச் சொற்களை ஏற்றுக் கொண்டவைகளாயின.

மெசபத்தோமியப் பகுதிகளில், புதிய மொழி எதுவும், அந்நாட்டு மொழிகளில் தாக்கங்களைச் செலுத்தவில்லையென்பதால், அப்பகுதி

மொழிகள் அனைத்தும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையவை களாயிருந்தன. சமற்கிருத ஆதிக்கம் இல்லாமற் போயிருந்தால், இந்திய மொழிகள் கூட, தமிழோடும் நெருங்கிய தொடர்புடையனவாக இருந்திருக்கும். கடைசியாகத் தமிழினின்றும் கிளைத்த மலையாளம், தமிழோடு நெருங்கிய தொடர்புடையதாக உள்ளது போல், நடுத்தரைக் கடல் நாட்டு மொழிகள் தொடர்புடையனவாக இருந்தன. அவற்றுள் கனானியம், அறமாயிக் ஆகிய மொழிகள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. மேலே சொல்லப்பட்ட நாடுகளில் பேசப்பட்ட மொழிகள், வடமேற்கு செமிட்டிக் எனப்பட்டன. அறமாயிக், எபிரேயம் ஆகிய மொழிகளுக்கிடையே வேறுபாடுகள் மிகவும் குறைவு. அறமாயிக் என்பது பேச்சு மொழியாகவும், எபிரேயம் அதே அறமாயிக் மொழியின் இலக்கிய மொழியாகவும் கருதப்பட்டன. இயேசு பேசிய மொழி அறமாயிக் ஆகும். அவருடைய உரைகள் எபிரேய மொழியில் பதிவு செய்யப்பட்டன.

எபிரேய மொழியில் 22 எழுத்துகள் உள்ளன. இவை, போணீசியர் களின் புதிய எழுத்த முறையைத் தழுவியவை. எபிரேய மொழியில் உயிரெழுத்துகளுக்கென தனி வரிவடிவங்கள் இல்லை. 22 எழுத்துகளும் உயிர் மெய் எழுத்துகளாகவே உள்ளன. (Consonants). அம்மொழியில், உயிரெழுத்துகளின் ஒலியைப் பெற, உயிர்மெய் எழுத்துகளில் சிலவற்றில் புள்ளிகளும் கோடுகளும் இடப்பட்டு, அவ்வொலிகள் பெறப்படுகின்றன. அ, இ, ஐ, ஒ, உ என்றவாறு தமிழில் அறியப்படும் உயிரெழுத்துக் குறில்களே (a, e, i, o, u) எபிரேய மொழியிலும் உள்ளன. தமிழில் ஐ என்ற எழுத்துக்கு நெடில் இல்லை ஔ என்ற எழுத்தும் ஒலியும் எபிரேய மொழியில் இல்லை. மற்றபடி தமிழின் உயிரெழுத்து ஒலிகளை, எபிரேய மொழியிலும் பெற இயலும். எழுத்துகள், புள்ளி, கோடு, இடப்படும் போது வேறு ஒலிகளாகவும், அவை இல்லாத போது, இயல்பான ஒலிகளையும் பெறும். இந்த முறைக்கு நிக்குட் (Nikud) முறை என்று கூறுவர்[19].

உயிரெழுத்துகளில் எ என்ற தமிழ் எழுத்தின் ஒலி, e என்ற ஒலிப்பிலும் (egg), ஐ என்ற எழுத்தின் ஒலி, I என்ற எழுத்திலும் (mistake) ஒலிக்கப் படுகின்றன. ei என்ற இரு எழுத்துகளும் சேர்ந்து, தமிழில் ஏ என்ற ஒலியைப் பெறுகின்றன. (Day). எபிரேய எழுத்து முறையை, மேற்கோளில் காண்க[20].

தமிழில் உள்ள அனைத்து எழுத்துகளும், ஒரேயொரு ஒலியை மட்டும் தருபவை. இரண்டு ஒலிகள் கொண்ட எழுத்துகள் தமிழில் இல்லை. இதுவே

தமிழின் தனிச் சிறப்புகளுள் ஒன்று. உல மொழிகளில், சில எழுத்துகள் இரண்டு ஒலிகளைக் கொண்டவை ; சில மூன்று ஒலிகளையும் கொண்டுள்ளன. தமிழ் எழுத்துகளைக் கூட்டிப் படிக்க, எழும் ஒலிகள் அல்லது ஒலி, ஒரு சொல்லாக விரியும். மற்ற மொழிகளில், எழுத்துகளைக் கூட்டி படிக்க இயலாது. ஆங்கிலத்தில் எக்ஸ், டபிள்யூ (x - w) போன்ற எழுத்துகள் இரு ஒலிகளைக் கொண்டவை. அம் – அஹ போன்றவை சமற்கிருதத்தில் உள்ளன. அலெப், கிமெல் போன்ற எழுத்தொலிகள் எபிரேய மொழியில் உள்ளன. ஆங்கிலத்தில் உள்ள W என்ற எழுத்தும், ஒலியும் பெரும்பலான மொழிகளில் இல்லை. எபிரேய மொழியில் இவ்வொலியைப் பெற இரண்டு V என்ற எழுத்துகளைப் பயன்படுத்துகின்றனர். ஆங்கில w எழுத்து, எந்த மொழி விதிகளின் கீழும் இல்லை. அதன் ஒலிப்பும் சொல்லுக்குச் சொல் மாறுபடுகிறது. (When, what, who, waste, with, wound, wolf என்றவாறு விரியும்.)

பழைய எபிரேய மொழிக்கும் (Biblical Hebrew) புதிய எபிரேய மொழிக்கும் பல வேறுபாடுகள் உள்ளன. பழைய எபிரேய மொழியில், வினைச் சொல்லே, சொற்றொடருக்கு முதலில் வரும். எழுவாய் அல்லது பெயர் இறுதியில் வரும். இடையில் வரும் சொற்கள் பயனிலை – எழுவாய்ச் சொற்களை இணைக்கும்.

இறைவன் இவ்வுலகைப் படைத்தவன் – தமிழ் மற்றும் பிற மொழிகள்.

படைத்தான் இவ்வுலகை இறைவன் – எபிரேய மொழி நடை.

பழைய ஏற்பாடு என்ற எபிரேய மொழியில் உள்ள விவிலிய நூல் முழுவதும் பின்னர் சொல்லப்பட்ட மொழி நடையில் எழுதப்பட்டதே. கிரேக்கம் மற்றும் இலத்தீன் மொழிகளில் மொழி மாற்றம் செய்யப்பட்ட போது, Subject - Verb - Object என்ற விதிப்படி, மாற்றி எழுதப்பட்டன. பெரும்பாலான மொழிகள் இந்த முறையிலேயே அமைக்கப்படுவதால் அவ்வாறு மாற்றப்பட்டன. தமிழிலும் அவ்வழக்கு உள்ளதை அறியலாம். கம்பர் தமது காப்பியத்தில்,

*கண்டேன் சீதையை*

என்று குறிப்பிடுகிறார். இப்போதும் தமிழில் பேச்சு வழக்கில், வினையை முன்னிறுத்திப் பேசுவதைக் காணலாம்.

போங்க ரெண்டு பேரும் உடனே (இருவரும் போங்கள்)

அடி அந்தப்பாம்பைத் தம்பி (தம்பி அந்தப் பாம்பை அடி

சில வழக்குகளில், வினைச் சொற்களை மட்டும் பயன்படுத்துகிறோம்.

இருங்க (உட்காருங்கள்)

சாப்பிடுங்க, பேசுங்க, பாடுங்க.

இந்த வினைகளுக்கு முன், நீங்கள் என்ற எழுவாய் மறைந்துள்ளது. எபிரேய மொழியில், இருங்க நீங்க, சாப்பிடுங்க நீங்க என்றவாறு வரும். தற்கால எபிரேயம் (Modern Hebrew) ஆங்கில முறைப்படியே எழுதப்படு கின்றது. எபிரேய மொழியில் சொல்லின் இறுதி அசை (Syllable) அழுத்தம் தரப்படும். இசறாயெல் என்ற சொல்லில், யெல் என்பது அழுத்தம் கொண் டிருக்கும். வேற்று மொழிச் சொற்கள், எபிரேய மொழியில் சொல்லப்பட்டால்; முதல் அசை அழுத்தம் பெரும். இங்கிலிஷ் (ENGLISH) என்ற சொல்லின் முதல் அசை அழுத்தப் பெறுவதை நோக்குக.

எபிரேய மொழியில் சில நேரங்களில் வினைச் சொற்கள் இல்லாமல் இருக்கும்.

*She is a teacher*

என்பது, எபிரேய மொழியில், IS என்ற வினை இல்லாமல், அவள் வாத்திச்சி என்று அமையும்.

*அவன் வாத்திச்சி, அறை வீடு கழகம் - பாரதிதாசன்.*

தமிழிலும் எபிரேய நடை உள்ளதை அறியலாம். தமிழினின்றே மேற்கண்ட நடைமுறைகள் எபிரேய மொழிக்குச் சென்றன எனக் கருத இடமுண்டு.

பாலினத்தைக் குறிக்கும் பெயர்ச் சொற்கள், தமிழில் உள்ளதைப் போல், ஈற்றசையில் சொல்லப்படுவதில்லை. தமிழில் சில பெயர்கள் இருபாலரையும் குறித்துச் சொல்லப்படுகின்றன.

*அழகு எங்கு சென்றாள் ?*

*ரமணி எப்போது வருவான் ?*

அழகு, ரமணி ஆகியவை இருபாலாருக்குமான பொதுப் பெயர்களாக உள்ளன. ள் – ன் விகுதிச் சொற்களைக் கொண்டே, ஆணா பெண்ணா

எனத் தீர்மானிக்கிறோம். எபிரேய மொழியில் அவ்வாறு சொல்லப்படுவதில்லை. சூரியனைப் பெண் பாலாகவும் நிலவை ஆண்பாலாகவும் கூறுகின்றனர். பிரெஞ்சு மொழியில் அதற்கு நேர்மாறாகச் சொல்லப்படும். (தமிழிலும் அப்படியே).

*செங்கதிரோன் எழுந்தான் பார்*
*நிலவு ஒரு பெண்ணாகி* - *தமிழ் வழக்கு.*

புதிய எபிரேய மொழியில் பாலினத்தை வேறுபடுத்திக் காட்ட, சில அசைகளை இணைத்துள்ளனர். தமிழில் அறியப்படுவது போலவே நகரம், நாடு ஆகியவை, எபிரேய மொழியிலும் பெண்பாற் பெயர்களாகவே சொல்லப்படும். பிரெஞ்சு மொழியில் நாடு ஆண்பாலாகக் கருதப்படும்.

பெயரடைச் சொற்கள் (adjectives), பொதுவாக சொல்லுக்கு முன்வரும். அழகு நிலா, சிவந்த மலர், காய்ந்த இலை என்றவாறு தமிழில் அறியப்படும். ஆங்கிலத்திலும், a good movie, a good cake என்றவாறு சொல்லப்படும்.

எபிரேய மொழியில் பெயரடைச் சொற்கள், சொல்லுக்குப் பின் வைக்கப்படும்.

தோவ் (tov) என்ற சொல்லுக்கு நல்ல என்பது பொருள்.

Movie (seret) tov என்றும், Cake tova என்றும் சொல்லப்படும்.

ஆறுகள், ஊர்களின் பெயர்களும், தமிழைப் போல் அல்லாமல் முன்பின்னாக வரும்.

காவிரி ஆறு ; ஆறு பின்னொட்டாகவும், ஆற்றின் பெயர் முன்னொட்டாகவும் தமிழில் சொல்லப்படும்.

எபிரேய மொழியில் ஆறு முன்னொட்டாகவும், ஆற்றின் பெயர் பின்னொட்டாகவும் வரும், யாரு தான் (யோர் தான்). யாறு - யோர் எனத் திரிந்துள்ளது.

தான் என்பது ஓரிடத்தின் பெயர், ஒரு மரபின் பெயர். தான் தமிழ்ச் சொல்லே. யாறு தான் என்பதே கிரேக்கத்தில் ஜோர்டான் (Jordan) என்றும் திரிந்தது.

ஆற்றூர், பேரூர், மேரூர், நாகப்பட்டினம், அண்ணா நகர் என்றவாறு, ஊருக்கான சிறப்புப் பெயர் முன் வைக்கப்படுகிறது.

எபிரேய மொழியில் பெத் என்ற சொல் முன்னதாகவும், காரணப் பெயர் பின்பும் வைக்கப்படும்.

பெத் என்பது, பட்டி என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும்.

பாத் என்று அரபு மொழியில் திரிந்துள்ளது. (அய்தராபாத், இசுலாமாபாத்).

மேட்டுப்பட்டி, சடைக்கன்பட்டி, பள்ளப்பட்டி – தமிழ் வழக்காறு.

பெத் – லெகம், பெத் – சாயிதா, பெத் – சான் – எபிரேய மரபு.

பெத் – லெகம் : லெகம் என்பதற்கு உணவு என்று பொருள்.

அலகு – லெக – லெகம் எனத் திரிந்துள்ளது.

அலகு : நெல் முதலிய தவசம் அல்லது தானியம்.

அகம் என்ற தமிழ்ச்சொல், வீடு, ஊர், நாடு எனவும் பொருள் விரியும்.

அதுபோல பெத் என்ற சொல், வீடு, கோயில், ஊர் எனவும் விரியும்[21].

பெத் – லெகம் என்ற பழைய ஊர், தற்காலத்தில் பெய்ட் – லெகம் (Beit - Leham) என்று அழைக்கப்படுகிறது.

பெய்ட் என்பது, பட்டி என்ற சொல்லோடும் ஒலியோடும் நெருங்குகிறது.

சில எபிரேய மொழிச் சொற்களை, சுருக்கமாக எழுதும் மரபைக் கொண்டுள்ளனர். எபிரேய மொழியைக் கற்பவர்களுக்கு, தொடக்கத்தில் அவை மயக்கத்தையும் குழப்பத்தையும் கொடுக்கும். மொழிப் பயிற்சியில் அவை புரிந்து கொள்ளப்படும். பேங்க் (Bank) என்ற ஆங்கிலச் சொல்லை அதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

எபிரேய மொழியில் BNK என்றவாறு சுருக்கி எழுதுவார்கள்.

யா – கோ – ஆ என்ற அம்மக்களின் கடவுள் பெயர், YHWH என்று எழுதப்படும்.

வேர்ச் சொற்களை ஆராய்ந்து பார்க்கும் நடைமுறை, கி.பி.17 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே மேலை நாடுகளில் அறியப்பட்டது. கிரேக்கம், லத்தீன், ஆங்கிலம் போன்ற மொழிகளுக்கான வேர்ச் சொற்கள் எவையும், அம்மொழிகளில் இல்லை என்பது உண்மை. ஒரு மொழியிலுள்ள சொற்களின் மூலமும் வேரும், அம்மொழியிலேயே அறியப்பட்டால், அது தனிமொழியாகவும், முதல் மொழியாகவும் கூட கருதப்படும். உலக மொழிகளில், ஏறக்குறைய அனைத்துச் சொற்களுக்கான வேர்ச் சொற்கள் அம்மொழிகளில் இருப்பதில்லை. உலக மொழிகளில், தமிழில் அறியப் பட்டுள்ள சொற்களின் மூலமும் வேரும் தமிழிலேயே அறியப்பட்டுள்ளன. இந்தத் தகுதி உலக மொழிகளில் எவற்றுக்கும் இல்லை என்பதை உணர்தல் வேண்டும். அது பற்றியே, தமிழ் மொழியை, உலகின் முதன் மொழி என்று கூறுகிறோம். அக்காடியம் (பாபிலோனியம்) அசீரியம், எபிரேயம், அரபு,

எகிப்தியம் போன்ற மொழிகளில் காணப்படும் ஆயிரக்கணக்கான சொற்கள், அவை பல்வேறு வகையாகத் திரிபுபட்டிருந்த போதிலும், அம்மொழிகளின் வேர் தமிழில் உள்ளதை அண்மைக் கால ஆய்வுகள் மெய்ப்பிக்கின்றன. உலகம் முழுவதும் பரவியுள்ளதாகக் கருதப்படும் ஆங்கில மொழியின் ஒரு சொல் கூட, அம்மொழியின் வேர்ச்சொல்லாக இல்லை. சமற்கிருத மொழியில் வேர்ச் சொற்களாகக் காட்டப்படுபவை (Dhadhu), உண்மையில் தமிழ் வேர்களாக உள்ள நிலையில், பல சமற்கிருதச் சொற்களுக்கு வேர்ச் சொற்களே அறியப்படவில்லை. அதுபோலவே, எபிரேய மொழிக் கலைக் களஞ்சியங்களில், பல நூறு சொற்களுக்கு மூலமும், பொருளும் தெரியவில்லை எனக் குறிப்பிட்டுள்ளனர். அவ்வாறு கைவிடப்பட்ட சொற்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன. எபிரேயம் என்ற சொல்லே, தமிழ் மூலத்தில் உள்ளதென அறிய முடிகிறது. உலக மொழிகளில் வேர்ச் சொற்களை கண்டறிய 300 ஆண்டுகளுக்கு முன்புதான் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. தமிழ் மொழியில், வேர்ச் சொற்கள் பற்றிய விளக்கங்களும், அவற்றைக் கண்டறியும் வழிகளும், தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே இருந்தன என்பதை, தொல்காப்பியம் உரியியல் அதிகாரம் குறிப்பிடுகின்றது.

மேலும் எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ள முன்னுருபு (Preposition), பெயரடைச் சொல் (Adjective), ஒப்பீட்டுச் சொற்கள் (Comparison), பகரப் பெயர்கள் (Pronouns), முக்கால வினைகள் (Tenses), ஏவல் சொற்கள் (Imperatives), எதிர்மறை ஏவல்கள், முன்னொட்டுகள் (Prefixes), பின்னொட்டுகள் (Suffixes), கேள்விச் சொல் என்ற வினாச் சொல், என்றவாறு தமிழோடு தொடர்புடைய இலக்கண விதிகளும் உள்ளன.

கி.பி. 19 ஆம் நூற்றாண்டில், எபிரேய மொழி பேச்சு வழக்கில் இரு பிரிவுகளானது. வட ஆப்பிரிக்கா, ஸ்பெயின், மத்திய கிழக்கு, துருக்கி நாடுகளில் லாடினோ (Ladino) என்ற பெயரிலும், வடக்கு மற்றும் கிழக்கு ஐரோப்பாவில் இத்திஷ் (Yiddish) என்ற பெயரிலும் பேசப்படுகின்றன. இரண்டும் வேறுபாடுகளைக் கொண்டிருந்தாலும், இரண்டு மொழிகளும் எபிரேய எழுத்துகளையே எழுதப்பயன்படுத்தி வருகின்றன. முன்னது ஸ்பானிஷ் மொழியையும், பின்னது ஜெர்மன் மொழியையும் தழுவி யுள்ளன. இவ்வேறுபாடுகளைக் களைவதற்கான முயற்சிகளும் மேற்கொள் ளப்பட்டன. பென் – எகுதா என்ற எபிரேய மொழியறிஞர், பழைய எபிரேய மொழியின் மூலத்தைக் கொண்டு, ஆயிரக்கணக்கான புதிய சொற்களை எபிரேய மொழியில் உருவாக்கிக் கொடுத்துள்ளார்[22].



பயணம் செல்லும் மக்கள்




எபிரேய எழுத்துமுறை

## 12. எபிரேயர்களின் முன்னோர் யார் ?

எபிரேயர்களைப் பற்றிய பல்வேறு செய்திகள், எகிப்து, பாலத்தீனம், பாபிலோன், அசீரியா, போன்ற நாடுகள் தரும் குறிப்புகள், அவர்களைப் போர் மறவர்களாகவே காட்டுகின்றன. எபிரேயர் என்ற சொல், பலவாறு, பல மொழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. விவிலிய நூலில், முதன் முதலாக, அபிரகாம் பற்றிய செய்திகளில், அபிரகாமை, எபிரேயன் என்று சுட்டுகின்றன. அபிரகாமின் தந்தை, பாட்டனின் பெயர்கள் மட்டுமே விவிலியத்தில் காணப்படுகின்றன. அபிரகாமின் முன்னோர்கள் பற்றிய செய்திகள் எவையும் இல்லை. சுமேரியர்கள் தரும் செய்திகளின் படி, கி.மு.3000 ஆண்டுகளில், எபிரேயர் என்ற இனம், மெசபத்தோமியாவில் வாழ்ந்திருந்தது எனக் கருத இடம் உண்டு. ஈபர் என்ற நோவாவின் மகன் வழி மரபு என்ற கருத்தை ஆய்வாளர்கள் ஏற்கவில்லை. மேலும் தற்கால ஆய்வுகளின் படி, வெள்ளக் காலத்துக்குப்பிறகு அறியப்பட்ட ஈபர் என்பவன், அபிரகாமின் காலத்தோடு தொடர்புபடுத்த இயலாத நிலை உள்ளது. ஏறக்குறைய 7000 ஆண்டுக்கால இடைவெளியில், தனி ஒருவனின் மரபை விரித்துக் கொண்டுவரச் சான்றுகள் இல்லை. ஆற்றுக்கு அப்புறத்திலிருந்து வந்தவர்கள் என்ற கருத்தைப் பெரும்பாலான ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். அந்த ஆறு எதுவென்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

ஊர் நகரிலிருந்தே எபிரேயர்கள், வடக்கிலும் தெற்கிலும பிரிந்து சென்றனர் என்று சொல்லப்படுகின்றது. அபிரகாமின் தந்தை தெரா (Terah) என்பவன், ஊர் நகரில் வாழ்ந்திருந்ததாக, விவிலியம் கூறுகிறது. அபிரகாம், ஊர் நகரிலிருந்து, மெசபத்தோமியாவின் வடமேற்கில் உள்ள அரண் (Haran) நகருக்குக் குடி பெயர்ந்ததாகவும், மேலும் அங்கிருந்து, தெற்கிலுள்ள கனான் நாட்டிற்குச் சென்றதாகவும், பின்னர் எகிப்துக்குச் சென்று, மீண்டும் கனான் நாட்டுக்குத் திரும்பி, கனான் நாட்டிலேயே இறந்து போனதாகவும், அங்குள்ள கல்லறையில் புதைக்கப்பட்டதாகவும் விவிலியம் கூறுகிறது. அபிரகாமுக்கு முன்பு வாழ்ந்திருந்த எபிரேயர்கள் எங்கெல்லாம் குடிபெயர்ந் தார்கள் என்பது பற்றியச் செய்திகள் இல்லை. எனவே, எபிரேயர் வரலாறு, அபிரகாமை மையமாக வைத்தே பதிவு செய்யப்பட்டுள்ளது என அறியலாம்.

அபிரகாம், தனது வாழ்க்கையில், நிலையாக ஒரு நாட்டில் தங்கியருக்க வில்லை. மிகப் பெரிய கால்நடை மந்தைகளுக்கு உரிமையாளராகக் கருதப்படும் அபிரகாம், தோராயமாக, ஆயிரத்துக்கும் மேற்பட்ட பணியாளர் களைக் கொண்டிருந்தான். அவர்கள் அனைவரோடும் இடம் பெயர்ந்தது சென்றதும், தங்குவதற்கான தற்காலிகக் குடியிருப்புகளை அமைத்துக் கொண்டதும் மிகப் பெரிய பணியாகவே இருந்திருக்கும். கனான் நாட்டில் தங்கியிருந்த போது, தனது உறவினன் உலோத்து என்பனைச் சிறைபிடித்த வர்களை, போரில் வென்று, உலோத்தையையும், அவன் கூட்டத்தையும் மீட்டெடுத்ததாக விவிலியம் கூறுவதால், அபிரகாமின் கூட்டத்தினர், போர் வீரர்களாகவும் இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது. தனது பணியாளர்களை, போர் வீரர்களாகவே தேர்வு செய்திருக்க வேண்டும் அல்லது பயிற்சியளித்திருக்க வேண்டும் என்று கருதத் தோன்றுகிறது.

பெரும்பாலான ஆய்வாளர்கள், எபிரேயக் குழுக்கள், வருமானத்துக் காகவும் ஊதியத்துக்காகவும் போரிடும் வீரர்களாக இருந்துள்ளனர் என்ற கருத்து, அபிரகாமின் நடவடிக்கைகளால் உறுதிப்படுகின்றது. அபிரகாமைப் போல, பல குழுக்கள் மெசபத்தோமியாவில் இருந்துள்ளன என்பதை அறிய முடிகின்றது. அக்குழுக்களில் அபிரகாமின் குழுவைப் பற்றிய செய்தி மட்டுமே பதிவு செய்யப்பட்டுள்ளது எனலாம். மற்ற குழுக்ககளின் தலைவர்களைப் பற்றிய செய்திகள் இல்லை. எகிப்தில் குழப்பங்களை விளைவித்த கூட்டத்தினர், அடிமைகளாக்கப்பட்டனர். எபிரேயர் பற்றிய வரலாறு, பிற்காலத்திய நிகழ்வுகளாகவே உள்ளன.

ஆய்வாளர் கிரீன் பெர்க், எபிரேயப் போர்க் குழுக்கள், ஒரு காலத்தில் செல்வச் செழிப்புடன் நகரிய நாகரிகத்தில் வாழ்ந்திருந்தவர்கள் என்று கூறுகிறார். அது பற்றியே, அக்குழுக்கள், நகர்ப் புறங்களிலேயே வாழ விரும்பினர் என்றும் கூறுகிறார். ஏதோவொரு எதிர்பாராத நிகழ்வில், தங்கள் உடமைகளையெல்லாம் இழந்து விட்டனர். மேற்கொண்டு வாழ வழியின்றி, போர்த் தொழிலில் இறங்கி விட்டனர் என்றும் கூறுகிறார். எபிரேய மக்களின் பெயர்களில் பெரும்பாலானவை, சுமேரிய - அக்காடிய மொழிப் பெயர் களாகவே உள்ளன என்பதால், சுமேரியர்களோடு, ஏதோவொரு வகையில், எபிரேயர்களுக்கு உள்ள உறவு வெளிப்படுகின்றது. எபிரேயக் குழுக்களில் ஓரளவு தெளிவாகத் தெரிந்த அபிரகாம் பற்றிய செய்திகளை ஆராயலாம்.

அபிரகாமின் பாட்டனின் பெயர் நாகர் அல்லது நாகோர் என்று (Nahor) சொல்லப்பட்டுள்ளது. நாகர் அல்லது நாகோர் என்ற சொல்,

மேலை மொழிகளில் காணப்படவில்லை. நாகர் என்ற சொல்லுக்கான பொருளும் தெரியவில்லை என்று கூறுகின்றனர்[23]. நாகோரின் பெயரன் களாக அபிரகாம், நாகோர், பெத்து – எல் என்ற மூவர் சொல்லப்பட்டுள்ளனர். மேலை நாட்டு விவிலிய ஆய்வாளர்கள், பாட்டன் பெயரே, பெயரனுக்கும் சொல்லப்பட்டுள்ளதால், விவிலியத்தைப் பதிவு செய்ததில் ஏதோ தவறு நடந்து விட்டதாகக் கூறுகின்றனர். பெயரன் (பேரன்) என்ற சொல், தமிழரின் மரபு சார்ந்தது. பாட்டனின் பெயரை, பேரனுக்கு வைப்பதால், அவன் (பாட்டனின்) பெயரன் என்று சொல்லப்பட்டான். தமிழரின் குடும்ப நெறிகள் பற்றி ஐரோப்பியர்கள் அறிந்திருக்கவில்லை. அபிரகாம் தமிழ் மரபில் வந்தவனே என்பதற்கு, நாகோர் என்ற பாட்டனின் பெயரும், அபிரகாமின் உடன் பிறந்தவனும் பாட்டன் பெயரைக்கொண்டிருப்பதும் நல்லதொரு எடுத்துக்காட்டாகும்.

அபிரகாமின் தந்தையின் பெயர், தெரா (Terah) என்று சொல்லப்பட்டுள்ளது. அச்சொல்லுக்கான பொருளும் தெரியவில்லை என்று கூறுகின்றனர்[24]. தெரா, ஊர் நகரிலிருந்து குடிபெயர்ந்து கனான் நாட்டுக்குச் செல்ல நினைத்தான். ஆனால், மெசபத்தோமியாவின் வடமேற்கிலுள்ள அரண் (Haran) நகருக்குச் சென்று குடியேறினான். அங்கேயே இறந்து போனான்.

தரை என்ற தமிழ்ச் சொல்லே,

த்ர (சமற்கிருதம்) → தெரா (எபிரேயம்) → தெர்ரே (கிரேக்கம்) → டெர (ஆங்கிலம்) எனத் திரிந்துள்ளது பற்றி ஏற்கனவே விளக்கியுள்ளோம்.

தரை என்ற சொல்லுக்கு, மண், நிலம், காணி, இடம், வீட்டுமனை, நீரில்லாத பகுதி என்றவாறு தமிழில் பொருள் விரியும்.

எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ள தெரா என்ற பெயர்ச்சொல், மண்ணைக் குறிக்கிறது. தமிழ் மூலச் சொல்லை அறியாத ஆய்வாளர்களால், அதன் பொருளை உணர இயலவில்லை. தெரா காலத்துக்கு முன்பு மெசபத்தோமியாவில், கடவுளரின் உருவங்கள், புடைச் சிற்பங்களாகவும், ஓவியங்களாகவுமே உருவாக்கப்பட்டன. தெரா என்பவள்தான் முதன் முதலில், களிமண்ணைக் கொண்டு, சிலைகளைச் செய்தான் என்று சொல்லப்படுகிறது. மிகச் சிறந்த ஓவியக் கலைஞனாகவும், சிற்பியாகவும் தெரா திகழ்ந்தான். எனவே, தெரா என்பது அவன் இயற்பெயர் அல்ல வென்றும், அது காரணப் பெயரே என்றும் அறியலாம். மண் சிலைகளைச் சூளையிலிட்டுச் சுட்டு, அச்சிலைகளுக்கு மெருகூட்டினான். சுட்ட களிமண்

சிலைகளுக்கு தெர கோட்டா (Terra cotta) என்ற சொல் பிறந்ததற்கான காரணம் இப்போது புரியலாம். அபிரகாமின் தந்தையும் தமிழ்ப் பெயரால் தான் அழைக்கப்பட்டான்.

அபிரகாமின் உடன் பிறந்தவர்களாக நாகோர் மற்றும் பெத்து – எல் (Bethu - El) என்பவர்கள் சொல்லப்பட்டுள்ளனர். பெத் – எல் என்பது, எல் கடவுள் குடியிருக்கும் வீடு அல்லது ஊர் என்ற பொருளைத் தரும்[25]. எல் என்ற பின்னொட்டுப் பெயரைக் கொண்டிருப்பதால், அபிரகாமின் முன்னோர்கள், எல் என்ற கடவுளையே வழிபட்டு வந்தனர் என்பது தெளிவா கிறது. அபிரகாம், தன் தந்தையான தெரா என்பவன், மெசபத்தோமிய தெய்வங்களைச் சிலைகளாகச் செய்ததை விரும்பவில்லையென்றும், தன் தந்தையின் செயல், எல் கடவுளுக்கு எதிரானது என்று கூறியதாகவும், அதனால் தந்தைக்கும் மகனுக்கும் முரண்பாடுகள் தோன்றியதால், தந்தையை விட்டுப் பிரிந்து சென்று விட்டதாகவும் விவிலியம் கூறுகிறது. இச்செய்தியை திருக்குர்ஆன் உறுதிப்படுத்துகிறது. தெரா என்ற பெயர், அரபு மொழியில் ஆழர் அல்லது ஆசார் (Azar) என்று சொல்லப்படுகிறது. அவனுடைய கலைத் திறமையைக் கண்ட நிம்ராது (Nimrod) நகரத்து மன்னன், தனது மகளை மணமுடித்துக் கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது. அபிரகாம் அந்த இளவரசியின் மகனா எனத் தெரியவில்லை. என்றாலும், மிகப் பரந்த செல்வமும் பணியாட்களும், ஆசாருடையதே எனக் கருதலாம். தெரா என்ற ஆசார் அந்நகரத்துச் சமயத்தலைவனாக இருந்தான் என்றும் சொல்லப்படுகிறது[25].

அபிரகாம் என்ற பெயருக்கான பொது விளக்கம் மட்டுமே தரப்பட்டுள்ளது. தொடக்கத்தில் அப்றாம் அல்லது அப்றம் (Abram) என்றே அழைக்கப்பட்டதாகவும், பின்னர் கடவுள் காம் (Ham) என்ற பெயரை இணைத்ததாகவும் விவிலியம் கூறுகிறது[26]. அபிரகாம் என்ற சொல்லுக்கு, "நாடுகளுக்கிடையே உயர்த்தப்பட்ட தந்தை" (He who exalted among the nations) என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது.

தமிழில் அப்பா என்றழைக்கப்படும் சொல்லே, எபிரேய மொழியிலும் அப்பா என்றே சொல்லப்படுகிறது. தமிழில் அப்பா (Appa), எபிரேய மொழியில் வல்லினம் குறைக்கப்பட்டு அப்பா (Abba) என்று சொல்லப்படுகிறது. இயேசு தமது இறைவனை அப்பா என்றே அழைத்ததாக விவிலியம் கூறுகிறது. அப்பா என்ற சொல், சுருக்கமாக, அப் (Ab) என்றும், அபி (Abi) என்றும் சொல்லப்பட்டன[27].

உலக மொழிகள் அனைத்திலும் தமிழ்ச் சொற்களான அம்மா - அப்பா ஆகிய இரண்டும் சிற்சில மாறுதல்களுடன் பயன்படுத்தப்படுகின்றன.

மா, மாம், மம்மி, மாம்ஸ் என்றவாறு அம்மா என்ற சொல்லும்,

அப், அபி, அப்பா, பாப்பா, பப்பா, போப் என்றவாறு அப்பா என்ற சொல்லும், பயன்பாட்டில் உள்ளன.

தந்தையைத் தாதை என்பது தமிழ் வழக்கு,

தாதை, டாடி, டாட் என்றவாறு திரிந்துள்ளன.

சமற்கிருதத்தில் மா என்றும் மாதா என்றும் சொல்லப்படுகின்றன.

மா + தாய் - மாதாய் என்பதே மாதா எனத் திரிந்துள்ளது.

அபிரகாம் என்ற சொல்லை விளக்கும் போது, தமிழ்ப் பொருளே விஞ்சி நிற்கிறது.

அப்பா என்ற சொல்லின் சுருக்கம் அபி அல்லது அப்.

அறம் என்பது இடையில் வரும் தமிழ்ச் சொல்லாகும். அப் + அறம், அபி + அறம் அபிறம் என்று இணையும். (Abiram)

ஈற்றுச் சொல்லான காம் என்பது அகம் என்ற சொல்லின் திரிபு.

அகம் என்ற தமிழ்ச் சொல்லுக்கு, வீடு, நாடு என்று பொருள் விரியும்.

அபி + அறம் + அகம் சேர்ந்து, அபிரகம் அல்லது அபிரகாம் எனப்பட்டது.

அறம் என்ற இடைச் சொல், சரியான தமிழ்ச் சொல்லே.

நோவாவின் பெயரன் அறம் (Aram) என்று அழைக்கப்பட்டான். (செம் என்பவனின் மகன்). அவன் மரபினர் வாழ்ந்திருந்த பகுதி படன் அறம் என்று பிற்காலத்தில் அழைக்கப்பட்டது. அறம் என்ற சொல்லை அறாம் என்று தவறாக ஒலித்து விட்டனர். அபிரகாமின் முன்னோர்கள் வாழ்ந் திருந்தது அறம் பகுதியிலேயே என்று விவிலியம் கூறுகிறது.

முதல் சொல் அபி, தந்தையைக் குறித்தது. இடைச் சொல் அறம், வாழ்ந்திருந்த பகுதியைக் குறித்தது. (ஊர் நகரம் அறம் பகுதியிலேயே இருந்தது.)

அகம் என்பது நாடுகளைக் குறித்தது.

அறம் பகுதியைச் சார்ந்தவர், நாடுகளின் தந்தையாக உயர்த்தப்பட்டார். (Abi, who comes from Aram, is exhalted as the father of Nations.)

அபிரகாம் என்பதற்கு விவிலியம் தரும் பொருளில், அறம் என்ற இடைச்சொல்லுக்கான பொருள் தரப்படவில்லை.

எனவே, அபிரகாம் என்பது, தமிழ் மூலத்தில் சற்றே திரிபுபட்ட தமிழ்ச்சொல்லே. இந்த விளக்கம் பலருக்கு அதிர்ச்சியாக இருக்கலாம். (அபிரகாம் என்ற பெயர் தமிழ் மூலத்தில் இல்லை என்று சரியான விளக்கம் எவரேனும் தந்தால் ஏற்றுக் கொள்கிறோம்.) ஆனாலும் உண்மை அதுவே. அபிரகாம் தமிழ் மரபில் தோன்றியவனே என்பதற்குப் பலவாறு சான்றுகள் உள்ளன.

அபிரகாமின் குடும்பத்தில் உள்ளவர்கள், நாகோர், பெத் – எல், அவனுடைய பெண் ராக்கேல், மகன் இலெபன் ஆகிய பெயர்களும் தமிழ்த் திரிபுப் பெயர்களே.

இராக்கெல் என்பது, இராக்கு – எல் எனப் பிரியும்.

இராக்கு என்பது, தற்போதும் தென் மாவட்டங்களில் பரவலாக அறியப்படும் இராக்கம்மா, இராக்காயி போன்ற தமிழ்ப் பெயரே. இராக்கெல் எனச் சேர்த்து எழுதும் போது, மொழிக் குழப்பம் தோன்றும்.

லெபன் என்பவன், பெத் – எல்லின் மகன். அப்பெயருக்கு வெள்ளையன் என்பது பொருள். அபிரகாம் குடும்பத்தினர் கறுமை அல்லது மாநிறம் கொண்டவர்களே. அக்குடும்பத்தில் சற்று வெளுப்பாகப் பிறந்ததால் அவன் வெள்ளையன் எனப்பட்டான். இலபன் (Leban) என்பது, இலவன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். இலவு என்பதற்கு வெண்மை என்று தமிழில் பொருளுண்டு.

இலவம் பஞ்சு, இலவ மரம், இலவு காத்த கிளி என்பது தமிழ் வழக்காறு. இலபன் என்ற எபிரேய மொழிச் சொல்லில் இருந்தே, இலெபனான் (Lebanon) என்ற நாட்டின் பெயர் அழைக்கப்படுகிறது. அந்நாட்டின் வட பகுதி, பனி சூழ்ந்த மலைத் தொடரைக் கொண்டது[28].

அபிரகாமின் மனைவியின் பெயர் சாரா (ள்) என்று சொல்லப்பட்டுள்ளது.

சாரா என்ற சொல், அரபு மொழியிலும் காணப்படுகின்றது.

சார் + ஆள் : கணவனைச் சார்ந்திருப்பவள்.

சாராளின் எகிப்தியப் பணிப்பெண், ஆகார் (Agar) என்று அழைக்கப்பட்டாள்.

அவள் ஆப்பிரிக்கப் பழங்குடி இனத்தைச் சார்ந்தவள். அபிரகாம் - ஆகாருக்குப் பிறந்தவனே, இசமாயெல் ஆகும்.

கார் என்ற தமிழ்ச் சொல், கறுமை நிறத்தைக் குறிப்பது.

ஆகார் என்பதும் நிறத்தைக் குறித்த காரணப் பெயரே.

அபிரகாமின் மகன் (ஆகார் வயிற்றுப் பிள்ளை) இசமாயெல் எனப்பட்டான்.

அப்பெயருக்கான விளக்கம் தரப்படவில்லை.

எபிரேய மொழியில், ஆண் இச (Isa) என்றும், பெண் இசா (Isaa) என்றும் சொல்லப்பட்டனர். இச என்ற ஆண்பால் பெயர், பலர் பால் பெயராகவும் சொல்லப்பட்டது. மனிதன் - ஆண் பால், மனிதர்கள் - பலர்பால் என்பதைப் போல.

மா எல் என்பது, கடவுள் (எல்) பெரியவர் (god is great) என்ற பொருளைத் தரும்.

எல் கடவுள் அபிரகாமுக்குத் தந்த அருட்கொடையே, இசமாயெல் ஆவான்.

இச : ஆண் மகன். இச - மா - எல் என்ற வாறு அப்பெயர் விரியும்.

மா எல் தந்த ஆண் குழந்தை என்று, தமிழ்க் கண்ணோட்டத்தில் அப்பெயர் உள்ளது.

இச என்ற எபிரேயச் சொல், இசை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும்.

இசை - இச - இசா எனத் திரிந்தது. இணக்கம், இணைந்து வாழ்தலைக் குறிக்கும்.

**மட்குப் பள்ளம் :**

எபிரேய மக்கள், நீத்தாரை அடக்கம் செய்வர். அதற்கென அமைக்கப் பட்ட கல்லறைகளைப் பயன்படுத்துவர். ஏழைகள், பொது இடு காட்டிலும், செல்வர்கள், தம் குடும்பத்துக்கெனவுள்ள தம் இடத்திலும் கல்லறைகளை அமைத்துக் கொள்வர். அபிரகாம் தம் குடும்ப உறுப்பினர்களுக்கென, கல்லறைத் தோட்டம் ஒன்றை, கனான் நாட்டில், எப்ரான் என்ற ஊரில் வாங்கியதாக விவிலியம் கூறுகிறது. அக்கல்லறைத் தோட்டத்தில் தான் அபிரகாம், மனைவி சாராள், ஈசாக்கு முதலியோர் அடக்கம் செய்யப்பட்டனர். (ஆதியாகமம், 25 : 9). அந்த இடம் மக்கபெள (Makka pela) என்று அழைக்கப்பட்டது.

மக்கபெள என்ற சொல்லுக்கான பொருள் தெரியவில்லையென ஆய்வாளர்கள் கூறுகின்றனர்[29]. புதைக்கப்பட்ட உடல்கள் மட்கிப் போகின்ற

நிலையில், அந்தக் குழி அல்லது பள்ளம், மட்குப் பள்ளம் – மக்குப் பள்ளம் என்று சொல்லப்பட்டு, மக்கபெள எனத் திரிபுபட்டுள்ளது. தமிழ் மூலத்தை ஆய்வாளர்களால் அறிய இயலவில்லை. தற்போது அவ்விடம் எங்குள்ளது என்பதை அறிய இயலவில்லை.

## அபிரகாமின் இரு மரபுகள் :

அபிரகாமுக்கு ஆகார் வழியில் இசமாயெல்லும், சாராள் வழியில் ஈசாக்கும் பிறந்தனர். (இச – ஹாக், Ishahak என்பதே எபிரேய மொழிச் சொல்லாகும். ஆக்கப்பட்ட அல்லது கொடுக்கப்பட்ட ஆண் குழந்தை என்பது பொருள். எபிரேய ஆய்வாளர்கள், தாயை மகிழ்ச்சியடையச் செய்தவன் என்ற தொடர்பில்லாத பொருளைத் தருகின்றனர்.) இசமாயெல்லையே பலி கொடுக்க அபிரகாம் அழைத்துச் சென்றதாக இசுலாம் மரபுகளும், ஈசாக் என்று விவிலிய மரபுகளும் கூறுகின்றன. இவ்விருவரும், இளமையிலேயே பிரிக்கப்பட்டனர். இசமாயெல் அரேபியாவில் குடியேறினான்.

அரேபியாவில் புதிய மரபைத் தோற்றுவித்தவன் என்றும், அவனையொரு நபி என்றும் குர் ஆன் கூறுகிறது. (சுறா. XIX : 54).

அபிரகாமும் இசமாயெல்லும், காபா என்ற தொழுகைக் கூடத்தை நிறுவினார்கள். (சுறா, II : 127).

இசமாயெல்லுக்கு 12 மகன்கள் இருந்தனர் என்றும், நகரங்களை அவர்கள் ஆண்டு வந்தனர் என்றும் குர் ஆன் கூறுகிறது. அப்பன்னிரு மரபினரும் அரேபியாவில் பல்கிப் பெருகினர். ஏற்கனவே, நோவா வழிப் பெயரன் ஆத் என்பவன் மரபு (ஆதி என்ற தமிழ்ச் சொல்லே) அரேபியாவில் குடியேறியது. இவ்விரு மரபினரும் கலந்த புதிய மரபு, பிற்காலத்தில் அரேபியாவில் தோன்றியது. இசமாயெல்லின் மகன்களில் ஒருவனான கேதார் (Kedar) என்பவன் மரபில் தான் நபிகள் நாயகம் தோன்றியதாகச் சொல்லப்படுவதால், நபிகள் நாயகம் அபிரகாமின் வழிவந்தவராகவே கருதப்படுகிறார். இசமாயெல் மரபு, நபிகள் வழியே இசலாத்தை ஏற்றது.

ஈசாக்கின் மகன் யாக்கோபுக்கு 12 ஆண்களும் ஒரு பெண்ணும் பிறந்தனர். அந்தப் பன்னிரு மரபினரே இசறாயெல் இனமாகச் (பிற்காலத்தில் யூதர் என்றும்) சொல்லப்படுகின்றது. அம்மக்கள், மோசே தலைமையில் தங்களுக்கென ஒரு சமயத்தை உருவாக்கிக் கொண்டனர். எல் என்ற கடவுளே, அபிரகாம் வழியில், அரேபியருக்கும் இசறாயெலருக்கும்

முதற்கடவுளாகும். யூதர்கள், யாவே (Yahweh) என்ற கடவுளையும், இசுலாமியர் அல்லாவையும் தேர்வு செய்து கொண்டனர்.

மக்காவில் கட்டப்பட்ட முதல் தொழுகைக் கூடத்தை, அபிரகாமும் இசமாயெல்லும் இணைந்து கட்டினர். விண்ணிலிருந்து அபிரகாமிற்குக் கொடுக்கப்பட்ட வெள்ளை நிறக் கல், காபாவில் வைக்கப்பட்டது. பாவம் செய்த மனிதர்களின் கை பட்டு, அது கறுமை நிறமாக மாறியது என்று கூறுவர். (அக்கல் சிவ லிங்கமே என்று சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்). முதல் தொழுகையின் போது, ஏராளமான மக்கள் கலந்து கொண்டு அல்லாவைத் தொழுதார்கள் என்று குர் ஆன் கூறுகிறது.

தற்காலத்தில், உலகின் பல நாடுகளிலிருந்தும் மக்கா செல்லும் இசுலாமியர், தங்கள் நாட்டு உடைகளைக் களைந்து விட்டு, வெள்ளைத் துணியொன்றை அரையிலும், மற்றொன்றை மார்பிலும் அணிந்து சென்று தொழுகை நடத்துகின்றனர். அதற்கான காரணம் யாதெனில், முதன் முதலில் அபிரகாமும் இசமாயெல்லும், வெள்ளைத் துணிகளையே பயன்படுத்தினர் என்பதால், அந்த மரபு இன்றும் பின்பற்றப்படுகிறது என்பர். இடுப்பில் வேட்டியும், மார்பில் துண்டுமாக தொழுகை நடத்திய அபிரகாமும் இசமாயெல்லும், தமிழர் மரபையே அங்கு முன்னிறுத்தியுள்ளனர். வேட்டியும் துண்டுமே தமிழரின் அடையாளங்கள் என்பதை, அபிரகாம் அன்றே உறுதிப்படுத்தியுள்ளார் என்க.

அபிரகாம் தமிழ் மரபில் தோன்றியவர் என்பதற்கான சில எடுத்துக்காட்டுகளை மட்டும் மேலே விளக்கியுள்ளோம். மேலும் பல தொடர்புகளையும் கூற இயலும். இன்று உலக மக்களில் மூன்றில் இரு பங்கினர் போற்றும் ஒப்பற்ற தலைவனாக, முதுபெரும் தந்தையாக அபிரகாம் போற்றப்படுகிறார். அபிரகாம் தமிழரே என்ற வரலாற்று உண்மையை, சான்றுகளுடன் நிறுவியுள்ளோம். கிறித்துவர்களில் பலரும், இசுலாமியரில் பலரும் அபிரகாம் தமிழரே என்பதை ஏற்க மறுக்கிறார்கள். அதற்கான காரணம் யாதெனில், அவர்களுக்கு இன உணர்வைவிட, சமய உணர்வே மேலோங்கி நிற்பதாக அறியலாம்.

# 13. தமிழ் மொழியும் எபிரேய மொழியும்

எபிரேய மொழிக்கும் தமிழ் மொழிக்கும் நெருங்கிய தொடர்புகள் உள்ளன வென்று 1810 ஆம் ஆண்டில் எழுதப்பட்ட குறிப்பில், அப்போதைய சென்னை மாநில ஆளுநர் பிரான்சிஸ் ஒயிட் எல்லிஸ் குறிப்பிட்டுள்ளார். எல்லிஸ் ஒரு பன்மொழி அறிஞராவார். எல்லிஸ் காலத்தில் கூட பலரும், எபிரேயம் என்றொரு மொழிபற்றி அறிந்திருக்கவில்லை. தமிழ் நாட்டில் தற்காலத்தில் கூட சில பேராசிரியர்களுக்கு எபிரேய மொழிபற்றிய சிந்தனை இல்லை. எல்லிசுக்குப் பிறகு, கால்டுவெல் சில குறிப்புகளைத் தந்துள்ளார். ஆனால் இருவருமே ஆய்வு நோக்கில் முன்னெடுக்கவில்லை. எல்லிஸ் தன்னுடைய குறிப்பில், எபிரேய மொழிக்கும் தமிழ் மொழிக்கும் உள்ள உறவுகள் பற்றிய ஆய்வுகளை எதிர்காலத்தில் மொழியறிஞர்கள் முன்னெடுக்க வேண்டும் என்ற விருப்பத்தினையும் வெளியிட்டுள்ளார். தமிழ்நாட்டில் எபிரேய மொழியைக் கற்று டாக்டர் பட்டம் பெற்றவர்கள் கூடச் சிலர் உள்ளனர். அவர்கள், கிறித்துவம் தொடர்பாக, மூல விவிலியத்தைக் கற்பதற்காக எபிரேய மொழியைக் கற்றவர்கள். எபிரேய மொழியில் எழுதவும் பேசவும் பயிற்சியைப் பெற்றவர்கள். அவர்களிடம் தமிழ் – எபிரேய மொழி பற்றிய உறவுகள் பற்றிக் கலந்துரையாடிய போது, அவ்வாறு இருப்பதற்கு வாய்ப்பில்லை என்று கூறினர். சில சொற்களை மேற் கோளாகக் காட்டிய போது, ஏற்றுக் கொண்டனர். எபிரேய மொழியை அறிந்த அந்த அறிஞர்களுக்கு, தமிழின் ஆழமும் நுட்பமும் தெரியவில்லை. தமிழ் மொழியை நன்கு கற்றவர்களுக்கு, எபிரேய மொழி பற்றிய சிந்தனை இல்லை. மிகப் பெரிய இடைவெளி அவ்விரு மொழிகளுக்கும் இடையே உள்ளதால், அவ்வாறான ஆய்வுகளில் எவரும் ஈடுபடவில்லை. தேவ நேயப் பாவாணருக்கு மொழி அறிவும் இருந்தது, விவிலியம் பற்றியும் அறிந்திருந்தார். அவரும் கூட அம்முயற்சியில் நாட்டம் கொள்ளவில்லை.

சங்க காலத்தில், தமிழ் மொழிக்குப் போட்டியாக வேறெந்த மொழியும் தமிழ் நாட்டில் நுழையவில்லை. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு, புத்த சமயத்தாரும், அடுத்து பிராமணர்களும் சமற்கிருத மொழியைத் தமிழகத்தில்

புகுத்தினர். அவர்கள், சமற்கிருதத்தைப் பரப்ப வேண்டும், தமிழை அழிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் அவ்வாறு செய்யவில்லை. இனம், மொழி உணர்வுகளையும் தாண்டி, சமயம் என்ற உணர்வின் மேலீட்டால், சமற்கிருதத்தை அறிமுகம் செய்தனர். பல்லவர்கள் காலத்தில் சமற்கிருதத்தி லேயே அரசாணைகள் வெளியிடப்பட்டன. சமற்கிருத இலக்கியங்களும் படைக்கப்பட்டன. அடுத்து வந்த சோழர்கள் ஆட்சியில், தமிழ்மொழி முற்றிலுமாகப் புறக்கணிக்கப்பட்டது. காலம் காலமாக, தமிழ்நாட்டு ஆலயங்களில் தமிழ்மொழி கோலோச்சி வந்த நிலைமாறி, முற்றிலுமாக ஆலயங்களிலிருந்து தமிழ்மொழி அப்புறப்படுத்தப்பட்டு, சமற்கிருதம் ஆலய மொழியாகவும், சமய மொழியாகவும் திணிக்கப்பட்டது. தொடர்ந்து தமிழ் மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிய சமற்கிருத மொழியே, தமிழை அச்சுறுத்திய, அச்சுறுத்தி வருகின்ற மொழியாக அமைந்தது. ஆங்கிலேயர் வருகைக்குப்பின், இந்திய விடுதலை பெற்ற பின்னரும், இந்திய மொழிகளை குறிப்பாகத் தமிழ் மொழியை, ஆங்கிலம் அச்சுறுத்தி வருகின்றது. தமிழ் அறிஞர்களும் உணர்வாளர்களும் மொழித் திணிப்புகளை எதிர்த்துப் போராடி வருகின்றனர்.

ஒரு மொழி வளரவும், இலக்கியங்களை உருவாக்கிக் கொள்ளவும், ஆட்சியாளர்களே முதல் காரணிகளாக உள்ளனர். சங்க காலத்தில், மூவேந்தர்களும் தமிழைப் புரந்தனர். பல்லவர் ஆட்சிக் காலம் வரையிலும் கூடத் தமிழ் தொய்வடையவில்லை. பல்லவர்கள் தமிழைப் புறக்கணித்தனர். அவர்களுக்குப் பின் வந்த இடைக்காலச் சோழர்கள் முற்றிலுமாகத் தமிழை அகற்றினர். மன்னர்களின் ஆதரவு ஏறக்குறைய 1500 ஆண்டுகளாகத் தமிழ் மொழிக்குக் கிடைக்கவில்லை. மாறாக, சமற்கிருத மொழியை மன்னர்கள் போற்றி வளர்த்தனர். எனினும் எவருடைய ஆதரவும் இல்லாமல், தமிழ் மொழி இன்றும் தனித்தியங்கிக் கொண்டிருப்பது, அதன் சொல்வளம், மொழிவளம், இலக்கியவளம் என்றால் மிகையில்லை. சமற்கிருதம் ஆங்கில மொழிகளின் அச்சுறுத்தல்களிலிருந்து, தமிழ் மீண்டெழும். அதற்கான சூழல்கள் உருவாகத் தொடங்கி விட்டன.

எபிரேய மொழி, தமிழ் மொழி போல் அல்லாது, பல மொழிகளின் தாக்குதல்களால் கி.பி.முதல் நூற்றாண்டுக்குப் பிறகு சீர் குலைந்து போனது. எபிரேய மொழிக்கு, பார்க்கும் இடமெல்லாம் பகைகள் தெரிந்தன. ஒரு கால அளவில், எபிரேய மொழியே செத்து விட்டது என்ற நிலை கூடத் தோன்றியது. குறிப்பாக, ஐரோப்பிய மொழிகள், எபிரேய மொழியில் கலந்து,

அதன் தனித்தன்மையைப் பாழ்படுத்திவிட்டன. ஐரோப்பாவில் எபிரேய மொழி இரண்டாகக் கூடக் கிளைத்தது. பலர் தங்கள் தாய்மொழியான எபிரேய மொழியை மறந்தே போனார்கள். எந்த அரசும் அம்மொழிக்கு ஆதரவளிக்க முன் வரவில்லை. ஒன்றுபட்டிருந்த சோவியத் யூனியனில், எபிரேய மொழியைக் கற்பிப்பதற்குத் தடைவிதிக்கப்பட்டது. ஜெர்மனியில், அம்மொழி பேசிய மக்கள் கூண்டோடு சொல்லப்பட்டார்கள். கடந்த ஈராயிரம் ஆண்டுகளாக எபிரேய மொழி தாக்கப்பட்டு அழிவின் விளிம்பிற்குச் சென்ற நிலையிலும், எபிரேய மொழி இலக்கியங்களை அம்மக்கள் பாதுகாத்து வைத்திருந்தனர். அவ்விலக்கியங்களில் கண்டுள்ள சொற்கள், வாக்கியங்கள், மொழி நடை, இலக்கண மரபுகள் அனைத்தும், புதிய சூழ்நிலையில் தற்கால இசுறாயெல் அரசால் மீட்டெடுக்கப்பட்டுள்ளது.

தமிழ் மொழியை மீட்டெடுக்கும் முயற்சியில் உள்ளவர்களுக்கு, எபிரேய மொழியின் வரலாறு ஒரு பாடமாக அமைந்துள்ளது. ஈராயிரம் ஆண்டுகளாகக் காணாமல் போன ஒரு மொழியை, தங்கள் முன்னோர் களால் போற்றி வளர்க்கப்பட்ட எபிரேய மொழியை, அம்மக்களால் மீட்டெடுக்க முடிந்தது என்றால், அவர்களின் போராட்டங்களோடு ஒப்பிடும் போது, தமிழை சமற்கிருதத்திலிருந்தும் ஆங்கிலத்திடமிருந்தும் மீட்டெடுப்பது முடியாத செயலன்று. தமிழ் நாட்டில் ஆங்கில வழிக் கல்விக் கூடங்களை உடனடியாக மூட வேண்டும். உயர்நிலைக் கல்வி வரை தாய்மொழியிலேயே அனைத்துப் பாடங்களும் கற்பிக்கப்படவேண்டும். கல்லூரியில் சேரும் மாணவன் விருப்பப்பட்டால், ஆங்கிலம் உள்ளிட்ட ஐரோப்பிய மொழிகள், சமற்கிருதம் உள்ளிட்ட இந்திய மொழிகளைக் கற்க வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

பிரான்ஸ் உள்ளிட்ட ஐரோப்பிய யூனியனில் உள்ள 28 நாடுகளிலும் அவருடைய தாய் மொழியிலேயே கல்வி கற்பிக்கப்படுகின்றது. ஆங்கிலம் உள்ளிட்ட ஐரோப்பிய, இந்திய, சீன, சப்பானிய, கொரிய மொழிகள், கல்லூரிகளில் கற்றுத் தரப்படுகின்றன. கல்லூரி விடுமுறைக் காலமான ஜூன், ஜூலை, ஆகஸ்ட் ஆகிய மூன்று மாதங்களில், அயல் மொழி பயிலும் மாணவர்களை, அந்தந்த நாடுகளுக்கே, அரசாங்கம் அனுப்பி, பேச்சுப் பயிற்சியை வளர்த்துக் கொள்ள உதவுகிறது. சில வீடுகளைத் தேர்வு செய்து, கட்டணம் செலுத்தும் விருந்தினராக அம்மாணவர்களை அனுப்பி வைக்கின்றது. 2011 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம், நான் பாரீஸ் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் ஊடகத்துறை பேராசிரியர் தேவகுமாரன் என்பவரை

(செஷஸ்ஸ் தீவினின்றம் சென்றவர்) ச் சந்திக்கச் சென்றேன். தமிழ்நாட்டில் பிறக்காத தமிழர் அவர். பாரீஸ் பல்கலைக்கழக வளாகத்தில் ஒரு மரத்தடியில் அமர்ந்து ஒருவர் நூல் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார். என்னுடன் வந்த என் உறவினர், அந்த நபரைச் சுட்டிக்காட்டி, அவர் ஆறு மாதங்களாக பேராசிரியர் பணியிலிருந்து இடை நீக்கம் செய்யப்பட்டிருப்பதாகக் கூறினார். பிரெஞ்சு மொழிப் பேராசிரியரான அவர், மாணவர்களுக்கு அளித்த வினாத்தாளில் (அடைப்புக் குறிக்குள் ஓர் ஆங்கிலச் சொல்லை இணைத்திருந்தார். ஓர் ஆங்கிலச் சொல்லை பிரெஞ்சு மொழியோடு கலந்ததற்காக, ஆறு மாதங்கள் இடை நீக்கம் செய்யப்பட்டார் என்ற செய்தியை, தமிழ் நாட்டின் பேராசிரியர்களின் கவனத்துக்குக் கொண்டு செல்ல விரும்புகிறேன்.)

தாய் மொழியின் மீது எந்த மொழியின் கலப்பும் இருக்கக் கூடாது என்று கருதும் பிரெஞ்சு அரசு போல், தமிழ்நாட்டு அரசு இல்லை. ஆங்கில மோகத்தை மக்கள் விரும்பி ஏற்கவில்லை. அரசின் விளம்பரங்களும், செயல்பாடுகளும், இரு மொழிக் கொள்கையும் என, பல்வேறு நடவடிக்கை களால், ஆயிரக்கணக்கான ஆங்கிலப் பள்ளிகளைத் தமிழ்நாட்டில் தொடங்க அரசு முன் வந்ததும் ஒரு காரணமாகும். உலக மொழிகளைக் கற்க விரும்பும் தமிழ்நாட்டு மாணவர்களுக்கு, அ்ரசாங்கம் எந்த உதவியையும் செய்வ தில்லை. தனியார் நிறுவனங்களும் முன் வருவதில்லை.

நான் இத்தாலியில் உள்ள, அயல் நாட்டு மாணவர்களுக்கென, இத்தாலிய மொழியைக் கற்றுத் தரும் கல்வி நிலையத்துக்குச் சென்றிருந் தேன். மணப்பாறையைச் சேர்ந்த தமிழர் ஒருவர் அங்கு இத்தாலிய மொழி யைத் கற்று வருகிறார். அவரே என்னை அழைத்துச் சென்றார். ஏறக்குறைய 300 க்கும் மேற்பட்டவர்கள் (அனைவரும் 30 வயதுக்கும் மேற்பட்ட வர்கள் ; 65 வயதான ஆஸ்திரேலியர் ஒருவர் கூட இருந்தார்.) அங்கு படித்து வருகின்றனர். அவர்கள் அனைவரும் சீனா, ஜப்பான், கொரியா, ஆஸ்திரேலியா, இந்தியா, இலங்கை போன்ற நாடுகளைச் சேர்ந்தவர்களே. அந்த நாடுகளில் உள்ள இத்தாலிய நிறுவனங்களில் பணியாற்ற விரும்பும் தகுதியானவர்களையும், விருப்பம் உள்ளவர்களையும், இத்தாலிய அரசு இலவயமாக இத்தாலிய மொழியைக் கற்றுத்தர ஏற்பாடு செய்துள்ளது. தமிழ் மொழியைக் கற்றுத்தர வெளிநாட்டவருக்குத் தமிழ்ப் பயிற்சிக் கூடங்களை, இதுவரைத் தொடங்க அரசு முயற்சிகள் மேற்கொள்ளவில்லை. உலக நாடுகளில் சுற்றுப் பயணங்கள் மேற்கொள்ளும் போதுதான்,

தமிழர்களாகிய நாம், எவ்வாறு பின்னுக்குத் தள்ளப்பட்டு வருகிறோம் என்பதை உணர முடிகின்றது.

பெல்ஜியம் என்பது ஒரு சிறிய நாடு. ஐரோப்பாவின் நடுப்பகுதியில் உள்ளது. 60 இலட்சம் மக்களே வாழ்கின்றனர். அவர்களில் பாதி மக்கள் பிரெஞ்சு மரபையும், மீதியுள்ளனர் டச்சு மரபையும் சேர்ந்தவர்கள். பிளமிஷ் (Flemish) என்ற மொழியைப் பேசி வருகின்றனர். அம்மொழி 300 ஆண்டுகளுக்கு முன்பு, மேற்கண்ட இரண்டு மொழிக் கலப்பில் உருவானது. அம்மொழியே அங்குள்ள தொடக்கப்பள்ளிகள் முதல் பல்கலைக்கழகங்கள் வரை கற்பிக்கப்படுகின்றது. உலகிலேயே, கணினித் துறையில் மாயப் படங்களை (animation) உருவாக்கும் கலைக்கென ஒரு பல்கலைக்கழகம் அங்குள்ளது. (Brussels) உலகம் முழுவதிலிருந்து ஏராளமான மாணவர்கள் அங்கு பயின்று வருகின்றனர். அங்கு பயிலும் வெளிநாட்டு மாணவர்களுக்கு ஓராண்டு பிளமிஷ் மொழி கற்றுத் தரப்படுகிறது. பின்னர் பிளமிஷ் மொழியிலேயே; கணினி வழிக்கல்வி கற்பிக்கப்படுகிறது. அறிவியல், கணிதம், நிலவியல், கணினித் தொழில் நுட்பம் ஆகியவைகளுக்கான நூல்கள், பிளமிஷ் மொழியில் உள்ளன. 300 ஆண்டுக்கால மொழிக்கு, தற்காலத் தேவையான பாடத்திட்டங்கள், அம்மொழியிலேயே உள்ளன. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்துத் தமிழுக்கு மருத்துவம், சட்டம், அறிவியல், கணினித் தொழில் நுட்பம் ஆகிய நூல்கள் தமிழில் இல்லை. பல்கலைக் கழகங்கள் தமிழ்நாட்டில் இப்பார்வையில் சிந்திப்பது இல்லை. மேற்கண்ட செய்திகள் வழியே, தமிழர்களாகிய நாம், நமது மொழியைப் புறக்கணித்து, வேற்று மொழிகளைக் கற்பதையும் பேசுவதையும் பெருமையாகக் கருதினால், உலக அரங்கில் நாம் பின்னோக்கிச் சென்று கொண்டிருக்கிறோம் என்பதையே காட்டுகிறது. சமற்கிருதத்தையும் இந்தியையும் எதிர்ப்பதால் மட்டும் தமிழ் வளர்ந்து விடாது என்பதை, ஆட்சியாளர்களும் மக்களும் புரிந்து கொள்ள வேண்டும்.

மேற்கண்ட செய்திகளால், தாய் மொழிக்கு உலக நாடுகள் எவ்வாறு முதலிடம் தந்துள்ளன என்பதை அறியலாம். எபிரேயர்கள், தங்கள் தாய்மொழி மீது கொண்டிருந்த பற்றிக் காரணமாகவே, ஈராயிரம் ஆண்டுகள் கடந்தும், அவர்களின் தாய் மொழியை மீட்டெடுக்க முடிந்தது. எபிரேய மொழி மீட்டெடுக்கப்பட்ட வரலாறு, தாய் மொழிப்பற்றாளர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய வரலாறாகும்.

சிவனையும் காளையையும் இணைத்துள்ளது என்க. எல் கடவுளைவிட, அவனுடைய பிள்ளைகளே தொன்மக்கதைகளில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளனர். எல் கடவுளின் மகன்களில் வலிமையுள்ளவனாக ஆழியன் பால் (Aleyan Baal) கருதப்படுகிறான். அவனே மேகங்கள், மழை, நீர், கடல் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தும் கடவுளாவான்.

ஆழியென்பது கடலைக் குறித்த தமிழ்ச் சொல்லாகும். ஆழியன் : கடலன்.

பால் என்பது வால் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபு என்பது ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

கனானியக் கடவுள் யம் (Yam) என்பவன் கடலுக்குரியவன்.

யம் என்பதும் அயம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே.

ஆற்றுக்கும் ஒரு கடவுள் இருந்தான். எபிரேய, போணீசிய, உகாரிய மொழியில் ஆற்றை

நகர் (Nahar) என்றே அழைத்தனர்.

நகர் என்பது ஆற்றைக் குறித்த பழந்தமிழ்ச் சொல்லாகும். அது வழக்கிழந்து போயிற்று.

நகரின் (ஆற்றின்) கரையிலிருந்த ஊர், நகரம் எனப்பட்டது.

நகரின் அறிவியல் வளர்ச்சிக் கூறுகள் நகரிகம் – நாகரிகம் எனப்பட்டது.

எபிரேய மொழியில் ஓடு (நீளமான ஆறு, சிந்து) என்றும்,

யோர் (யாறு) என்றும், நகர் என்றும், வடி என்றும் அதனதன் நீளம் குறித்து இறங்கு வரிசையில் சொல்லப்பட்டுள்ளது.

உலகப் படைப்பு பற்றிய உகாரித் கதை, எல் என்ற கடவுள், தீய சக்திகளைப் போராடி வென்று, பேரண்டத்தைப் படைத்ததாகக் கூறுகிறது. இறப்புக் கடவுளான மோட் (Mot) என்பவன் ஆழியன் பாலைக் கொன்றான் என்றும் அவன் மனைவி அவனை மீண்டும் உயிர்ப்பித்தாள் என்றும் கதை நீள்கிறது.

மடி – மடிதல் : இறத்தல் என்றவாறு, மடி என்பதே மோட் எனத் திரிந்துள்ளது. சுமேரிய, பாபிலோனியப் பெண் தெய்வமான அஸ்தார் (Asthar) உகாரியத் தெய்வமாகவும் கருதப்படுகிறாள். அவள் மக்களுக்குப் பாலுணர்வைத் தூண்டுபவள். போர் வெறி கொண்டவள். எகிப்திய சித்திரம் ஒன்றில் இவள் ஆடையின்றி காணப்படுகிறாள். மேற்கண்ட தெய்வங்களைப்

பற்றிய பல பாடல்களும் உள்ளன. கின்ஸ் பெர்க் (H.L.Kinsbery) அவற்றை மொழி பெயர்த்துள்ளார். விவிலியத்தில் சொல்லப்படும் தானி – யெல் என்னும் கதாபாத்திரம் போன்றே, தானெல் (Danel) என்றொருவனின் கதை உகாரியத் தொன்மங்களில் காணப்படுகிறது.

தான் – எல் – தானெல் என்பது சரியான தமிழ்ச் சொல்லே.

தானி யெல் என்பதைவிட, தானெல் திரிபுபடாமல் உள்ளது.

தான் என்ற தமிழ்ச் சொல்லுக்கு, உயர்ந்தவன், பெரியவன் என்று பொருள்.

தமிழ்நாட்டில் இப்போதும் பெரியப்பனை, தானப்பன் என்று அழைக்கும் வழக்கு உள்ளது.

சென்னை, திருவல்லிக்கேணியில், தானப்ப (முதலி) தெரு என்ற தெரு உள்ளது.

தான் என்ற அகந்தை கொண்டவன் என்ற வழக்குச் சொல்லை நோக்குக.

தான் எல் என்பதற்கு, கடவுளாகிய எல் பெரியவர் என்பது பொருள். (El is great).

தான் என்ற தமிழ்ச் சொல்லே, Don என்று ஆங்கிலத்தில் திரிந்துள்ளது.

Don : Leader of unlawful elements.

உகாரியச் செய்திகளில் சிறப்பானது அவர்களுடைய எழுத்து முறையாகும். அந்த எழுத்து முறையைக் கொண்டே, விவிலியத்தில் எழுதப் பட்டிருந்த பல சொற்களை, ஆய்வாளர்கள் படித்துத் தெளிவு பெற்றனர். அவ்வெழுத்து முறையைக் கொண்டே மெசபத்தோமிய, கனானிய, எகிப்திய எழுத்துகளையும் எளிதாகப் படித்தனர் என்பர். உகாரிய எழுத்து முறை, கி.மு.1400 ஆண்டுகளில் பல இலக்கியங்களைப் படைத்துள்ளது. உகாரிய இலக்கியங்கள், முதலில் ஏற்பட்ட நில அதிர்வுகளாலும், கி.மு. 1180-1170 ஆண்டுகளில் நடைபெற்ற போர்களாலும் அழிக்கப்பட்டன. புதையுண்ட இலக்கியங்களே பெருமளவில் அறியப்பட்டுள்ள என்றால், அழிந்து போனவை ஆயிரக்கணக்கில் இருக்கும் என்பர். மீட்டெடுக்கப்பட்டவைகளில் சில, உகாரிய இலக்கிய வளமையை வெளிப்படுத்துவதாக உள்ளன[7].

உகாரிய எழுத்துமுறை ஆப்பு எழுத்து வடிவிலானது. உயிரெ முத்துகள் இல்லாதது. கி.மு.15 ஆம் நூற்றாண்டு முதல் அறியப்படுகின்றது. ஏறக்குறைய அக்காடிய எழுத்து முறையைத் தழுவியது. அதன் குறியீடுகள், எபிரேய போனீசிய அறமாயிக் வரிவடிவங்களைச் சார்ந்தது. பொதுவாக,

அப்பகுதியில் அறியப்பட்ட மொழிகளின் குறியீடுகளை அறிந்தவர்கள், மற்ற மொழிகளையும் எளிதாகப் படிக்க இயலும். நெடுங்கணக்காக 30 எழுத்துகளையும், குறுங்கணக்காக 22 எழுத்துகளையும் கொண்டது. களிமண் தட்டுகளில் எழுதப்பட்டுள்ள உகாரிய இலக்கியங்கள், தொடக்ககால எழுத்து முறைக்குச் சான்றுகளாக உள்ளன[8]. எபிரேய மொழி, உகாரியக் குறியீடுகள் பலவற்றைத் தன் வயமாக்கிக் கொண்டது. உகாரிய எழுத்துமுறைகளை முறைகளைப் பின்பற்றியே கிரேக்க இலத்தீன் எழுத்து முறை உருவாயிற்று என்பர். உகாரிய இலக்கியங்கள், (தமிழைப் போல) இடது பக்கம் தொடங்கி வலப்பக்கமாக எழுதப்பட்டுள்ளன. மேற்காசிய மொழிகள், வலது - இடது முறையில் எழுதப்பட்டவை. இதன் அடிப்படை யிலேயே கிரேக்கம் இலத்தீன் மொழிகள் இடம் - வலமாக எழுதப்பட்டன.

உகாரிய எழுத்துகளில் 28 உயிர்மெய் எழுத்துகளாகும். இரண்டு அரை உயிர் உயிர்களாகும். அவற்றில் எட்டு உயிரொலிகள் பெறப்பட் டுள்ளன. அவற்றில் மூன்று குறில்கள், ஐந்து நெடில்கள். இணைப் போலி களாக இரண்டு உள்ளன.

அ, ஆ, இ, ஈ, உ ஊ, ஏ, ஓ ஃ உகாரிய ஒலிகள்.

(a), (aa), (i), (ii), (u), (uu), (ea), (o)

தமிழில் அறியப்படும் ஐ (ay), ஔ (aw), ஒலிகளும் உள்ளன. தமிழ் ஒலிகளில் எ என்ற குறிலும், ஒ என்ற குறிலும் காணப்படவில்லை. மற்ற 10 உயிரொலிகளும் உகாரிய மொழியில் உள்ளன[9].

வடமேற்கு செமிட்டிக் மொழிக் குடும்பங்களில், உகாரிய மொழிதான் தமிழின் எழுத்தொலிகளோடு நெருங்கிய தொடர்புடையதாக உள்ளது. அதன் இலக்கண முறைகளும், அப்பகுதியில் பேசப்பட்ட மொழிகளுள் பழமை யானது. எபிரேயம், போணிசியர்களுக்கு முன்பே, தமது மொழிக்கென இலக்கண முறையை வகுத்துக் கொண்டவர்கள் உகாரியர்கள். உகாரிய இலக்கண முறை அக்காடிய, அரபு மொழிகளிலும் காணப்பட்டது. ஆண்பால், பெண்பால், வினைச் சொற்களில் கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம், பெயரடைச் சொற்கள் (Adjictives) தமிழில் அறியப்படும் இரண்டாம் வேற்றுமை (Accusative), எழுவாய் வேற்றுமை அல்லது முதல் வேற்றுமை (Nominative), கிழமை வேற்றுமை (genitive), ஒற்றை, இரட்டை, பன்மை எண்கள், (singular, duel, plural), என்றவாறு இலக்கண முறைகள், உகாரிய மொழியில் காணப்படுகின்றன. வாக்கிய அமைப்பு முறை, வினை

(verb), எழுவாய் (Subject), பயனிலை, (object) என்றவாறும், எழுவாய், பயனிலை, வினை என்ற முறையிலும் அமைந்துள்ளன. உடைமைச் சொல் (Possesser), உடைமை வேற்றுமை (Possessed) ஆகியவை குறித்த சொற்களும் காணப்படுகின்றன. பெயரடைப் பெயர்ச் சொற்களும் (noun - adjectives) பயன்படுத்தப்பட்டுள்ளன[10].

உகாரிய மொழியும், எழுத்து முறையும், இலக்கண விதிகளும், செமிட்டிக் மொழிக் குடும்பங்களில், தனித்தன்மையானதாகவும், பழமையான தாகவும் கருதப்படுகின்றது. கிரேக்க மொழி, கனானியம், எபிரேயம், அக்காடியம் போன்ற மொழிச் சொற்களில் பலவற்றை ஏற்றுக் கொண் டுள்ளது. இலக்கண முறையில், முற்றிலும் உகாரிய நடைமுறையைப் பின்பற்றுகின்றது. கிரேக்கத்தின் அடுத்த வளர்ச்சியான இலத்தீன் மொழியும், அதனின்றும் கிளைத்த ஆங்கிலம் உள்ளிட்ட ஐரோப்பிய மொழிகளும், உகாரிய இலக்கண முறையையே பின்பற்றின என்றால், அது மிகையன்று. வலம் – இடமாக அப்பகுதி மொழிகள் எழுதப்பட்ட நிலையில், உகாரிய மொழியைப் பின்பற்றியே, கிரேக்க மொழி, இடம் – வலமாக எழுதப்பட்டது.

**சில மேற்கோள் நூல்கள் :**


* A Concordance of Ugaritic words, by Cunchillos, Gorgias Press, 2003.
* On a New Grammar of Ugaritic, Israel Oriental Studies, by Greenstein Edward, L., 1998.
* Texts from Ugarit Solve Biblical Puzzles, by Edward, L., 2010.
* Ugaritic Word order and Sentence Structure, by Gerald H.Wilson, Journal of Semitic studies, 1982.


**அடிக்குறிப்புகள்**

1. Ugarit : An ancient city of the coast of Syria at the site of the modern Ras Shamra. The city lay near the coast, its harbour and port were situated at the bay of Minet - el - Beida. The ruins at that time completely buried were discovered by chance in 1928 ; the site was very thoroughly ex cavated by a French Mission in a series of campaigns 1929 - 1933 and excavations have been continued since 1946. The site was extraordinarily rich and was unique in the number of literary remains which were found.
   - D.O.B. P.907.
2. Bordreuil, "A Manual of Ugaritic Linguistic studies in Ancient west Semitic, 2009.

3. Ugaritic Texts : the literary remains comprised several hundred texts. These were written in cuneiform Akkadian, Egyptian Canaanite in cuneiform script, and in canaanite in the Ugaritic alphabetic script unknown before the discovery. The royal archives of the palace contained administrative and economic documents, these added to our knowledge of political and diplomatic history of the period and of trade, commerce, manufacture and daily life. The large number of personel names show the ethnic composition of the people of Ugarit and their neighbors.

4. Bible and the Ugaritic Texts : A number of literary phrases or mythological allusions are found verbally identical in Ugarit and in the Bible of the Old Testament; the ephithet of "Rider of the clouds", applied to Baal and to Yahweh (Psalms, 68 : 5) ; the mythological monster Lotan, the biblical Leviathan (Issaiah, 27:1) ; the mountain or the recesses of the mountains, the seat of gods (Psalms 48 : 3, Is. 14 : 13) ; the blessing with the dew of heaven and the fat of the earth (Genesis, 49 : 11); the course of no dew and no rain (II Samuel, 1 : 21). the rite of boiling a kid in milk. (Exodus, 23 : 19 ; 34 : 26)
   - Ref. from the Bible.

5. Religion : The religion of Ugarit is regarded as the basic religions of Canaanites and Hebrews with local variations which can not always sorted out. It is a nature religion whose gods and goddesses are identified with natural forces, in particular the forces of fertility. The mythology represents the cycle of the nature - the annual renewal and death of vegetation and the course of the seasons as a cosmic struggle between divine personal beings. The ritual integrates the worshippers with the cycle and with the divine forces which maintain the cycle.
   - D.O.B. P.907.

6. El : The head of the pantheon is El, the progenitor of the gods often called "El the Bull".
   - Ibid, P.908.

7. Literary texts recovered at Ugarit include the Legend of Keret, the Legend of Danel, the myth of Baal Aliyan and the death of Baal - the later two are also collectively known as the Baal cycle - all revealing aspects of a Canaanite relgion.

8. Gordon Cyrus Herzi, "The Ancient Near East", W.W.Norton company Press, 1965.

9. Ugaritic phonology : Ugarit has 28 consonantal phonems, including two semivowels, and eight vowel phonems (three short and five long vowels) :
   a, aa, i, ii, u, uu, ea, o.
   (The phonemes ee and o occur only as long vowels and are the result monophthonggization of the diphthongs, "ay and "aw" respectively.)
   -del Olmo Late, Joaquin, "A Dictionary of the ugaritic Language in the Alphabetic Tradion,

Bill Acadamic Publishers, (Originally in Spanish, translated by W.G.E. Watson, 2004.

10. Grammar : Ugaritic is an inflected language, and its grammatical features are highly similar to those found in classical Arabic and Akkadian. It possess two genders (masculine and feminine), three for nowns and adjectives (nominative, accussative, and genitive), three numbers (singular, dual and plural), and verb aspects similar to those found in other north - west Semitic languages. The word order for Ugaritic is Verb - Subject - Object and Subject - Object - Verb, possessed - possessor, and noun adjective, Ugaritic is considered a concervative Semitic Language, since it retains most of the Proto - semitic phonemes, the case system and the word order of the Proto - Semitic anscestor.
 - Schniedwind William, M., "A Premier on Ugartic Language, Culture and Literature, Cambridge University - 2008.

# 17. பிறத் தமிழ் இனங்கள்

அபிரகாம் காலத்துக்கு முன்பே, நடுத்தரைக் கடலுக்குக் கிழக்குப் பகுதிகளில் குடியேறிய இனத்தார், அடுத்த ஈராயிரம் ஆண்டுகளில், வடக்கே துருக்கி முதல் தெற்கே பாலத்தீனம் வரையில் உள்ள நாடுகளில் பரவி வாழ்ந்திருந்தனர். அமோரியர், குடியர், ஊரியர், அனதோலியர், சிரியர், உகாரியர், போணீசியர், மோவாபியர், இதாமியர், எபிரேயர் என்றவாறு பல இனங்களாகப் பிரிந்துள்ளனர். இவர்களில் ஓரினத்தின் முன் வரலாறு கூட இதுவரை தெளிவுபடுத்தப்படவில்லை. இந்த இனங்கள் பேசிய மொழிகள் அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருந்தன. விவிலியம் குறிப்பிடும் நோவா என்பவனின் மரபினர், மேற்கண்ட இனங்களுக்கு முன்பு, மெசபத்தோமியாவில் குடியேறினர். நோவா மக்களின் குடியேற்றம், கி.மு.10000 ஆண்டுகளில், அதாவது வெள்ளக் காலத்துக்குப் பிறகு நிகழ்ந்தது எனக் கருதலாம். சுமேரியர்கள் வெளி நாட்டினரே என்று உறுதி செய்யப்பட்டுள்ளதாலும், அவர்களின் குடியேற்றம் கி.மு. 6000 - 5000 ஆண்டுகளில் நிகழ்ந்துள்ளதாக, ஆய்வாளர்கள் கருதுவதாலும், சுமேரியரின் குடியேற்றக் காலம் ஓரளவிற்கு உறுதி செய்யப்பட்டுள்ளது.

மேலே சொல்லப்பட்ட இனங்கள் ஒரு பொது மொழியினின்றும் கிளைத்த மொழிகளையே பேசி வந்ததால், அவை ஒன்றுக் கொன்று தொடர்பு கொண்டிருந்தன. மேலும் கி.மு. 10000 ஆண்டுகள் முதல், கி.மு. 3000 ஆண்டுகள் வரை, பல குழுக்கள் மெசபத்தோமியாவிலும், அதனைச் சுற்றியுள்ள நாடுகளிலும் குடியேறியுள்ளனர். இவர்களில் முதலில் குடியேறியவர்கள், அடுத்தடுத்துக் குடியேறியவர்கள் என்று எவரையும் வகைப்படுத்துவதற்கான சான்றுகள் இல்லை. பொதுவாக எபிரேயர் என்ற இனத்துடன் பல இனங்கள் இரத்த உறவு கொண்டுள்ளன. வடக்கு தெற்காக ஏறக்குறைய 2000 கி.மீ. அளவிலும் கிழக்கு மேற்காக, 1500 கி.மீ. அளவிலும், மேற்கண்ட மக்கள் வாழ்ந்திருந்தனர் என்பதால், அவர்களுடைய மொழிகளில் மாறுபாடுகளும் இருந்தன. ஏற்கனவே மெசபத்தோமியாவில் குடியேறிய மக்களோடு, மேற்கண்ட இனங்கள் கலந்து விட்ட சூழலில், தனி இனம் என்று முறையாகப் பிரித்துப் பார்க்கவும் இயலவில்லை.

இந்தியாவில், காஷ்மீர் முதல் குமரி முனை வரை, ஆரியர்கள் வருகைக்கு முன்பு ஓரினமே வாழ்ந்திருந்தது. தங்களுடைய தொழில், பொருளியல் கூறுகள், மன்னர்கள் வகுத்துக் கொண்ட எல்லைகள் ஆகியவற்றால் பிரிந்திருந்தாலும், வெளிநாட்டவர் கலப்பின்றி தனி இனமாகவே கருதப்பட்டனர். ஆரியர்களின் வருகைக்குப்பிறகு, பாரசீகரும், ஊணர்களும், மங்கோலியரும், கிரேக்கர்களும், அராபியர்களும், பிற்காலத்தில் ஐரோப்பியர்களும் வருகை தந்ததால், தனி இனமாகக் கருதப்பட்ட இந்திய இனம், கலப்பினமாக மாறிப் போயிற்று. தமிழ்நாட்டில் கலப்பினங்கள் பெரும்பாலும் அறியப்படவில்லையாயினும், அராபியர் போர்த்துக்கீசியர், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர்களால் சிறிய அளவில் கலப்பினங்கள் தோன்றின. தமிழ்நாட்டில் இன்று அறியப்படும் ஆங்கிலோ இந்தியர் சமூகம் அதற்கொரு சான்றாகும். தற்காலத்தில் நகர்ப்புறங்களில் கலப்பினங்களும், நாட்டுப் புறங்களில் தனித்தமிழ் இனமும் அறியப்பட்டுள்ளன. இனங்கள் ஒன்றோடொன்று கலந்து போவது, தற்காலத்தில் தவிர்க்க இயலாத ஒன்று. குறிப்பாக, வளமான, வாழ்க்கை வசதிகள் நிரம்பிய நாடுகளில், கலப்பினங்கள் பெருமளவில் அறியப்படுகின்றன.

## மிடியர்கள் (Midian):

அபிரகாமின் மற்றொரு கிளையாக, மிடியர்கள் கருதப்படுகின்றனர். அபிரகாமின் மனைவி சாராவின் பணிப்பெண் மூலம் இசமாயெல்லும், சாராவின் மகன் ஈசாக்கு வழியில் யாக்கோபும், இரண்டு மரபுகளின் தலைவர்களாயினர். இருவருக்கும் 12 ஆண்கள் பிறந்திருந்ததாகச் சொல்லப்படுகிறது. அதன்மூலம் 24 மரபுகள் பாலத்தீனத்திலும் அரேபியாவிலும் உருவாயின. காலப்போக்கில் அவை பல்கிப் பெருகி ஒரு நாட்டின் மக்கள் தொகை அளவில் அறியப்பட்டன. அபிரகாமின் மனைவி சாரா இறந்தபின், கெத்தூரா (Ketura) என்ற பெண்ணை அபிரகாம் திருமணம் செய்து கொண்டதாக விவிலியம் கூறுகிறது. (ஆதியாகமம், 25 : 2 - 4). கெத்தூராவின் பிள்ளைகள் வழியில் தோன்றிய இனமே, மிடியர்கள் என்று சொல்லப்படுகின்றனர். இசாராயெலர், அராபியர், மிடியர் ஆகிய மூன்று இனங்களும், அபிரகாமின் நேரிடையான மரபுகளாகும்.

மிடியர்கள், இசமாயெல் மரபுடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்றும், அவர்களோடு உறவு கொண்டிருந்தனர் என்றும் சால்லப்படுகின்றது. அதனால் ஒரு சாரார், மிடியர்களை இசமாயெலர் என்றும் அழைக்கின்றனர். இசறாயெல் நாட்டின் தென்மேற்குப் பகுதியில், சினைத் தீவக்குறைக்குக்

கிழக்கில், மோவாப் நாட்டையொட்டிய பகுதியில் மிடியர்கள் வாழ்ந்திருந்தனர். அப்பகுதி முற்றிலும் மலையும் காடுகளும் சூழ்ந்த பகுதியாகும்.

எகிப்து நாட்டில், மோசே ஒரு எகிப்தியனைக் கொன்றான். மன்னரின் தண்டனைக்கு அஞ்சி, எகிப்திலிருந்து மிடியர்கள் வாழ்ந்திருந்த மலை நாட்டுக்கு ஓடி வந்தான். அங்கு, எத்ரோ அல்லது உரு – எல் (Jethro or Ruel) என்ற மிடியர் இனத்தலைவனிடம் தஞ்சமடைந்தான். எத்துரோவின் கால்நடைகளை மேய்த்து வந்த போது, கடவுள் அவனுக்கு முன் தோன்றி, எகிப்திலுள்ள எபிரேயர்களை மீட்டு வருமாறு ஆணையிட்டார் எத்துரோவின் மகளையே மோசே திருமணமும் செய்து கொண்டான். மோசே, யாக்கோபுவின் மரபில், இலெவி என்பவனின் மரபினராகக் கருதப்படுகிறான். மோசேயின் மனைவியும், கெத்தூரா வழியில், அபிரகாமின் மரபைச் சார்ந்தவளே.

மிடியர்கள், எகிப்திலிருந்து தன் இனத்தாருடன் மீண்ட மோசேய்க்கு, பல்வேறு உதவிகளையும் செய்தனர். இசறாயெலர், மோசே கால்நடைகளை மேய்த்து வந்த மலைப்பகுதியில் சில ஆண்டுகள் தங்கியிருந்தனர். அம்மலை யில்தான் மீண்டும் கடவுள் மோசே முன் தோன்றி, 10 கட்டளைகளை அளித்து, தம் மக்களுக்கான புதிய சமயத்தைத் தோற்றுவிக்குமாறு கட்டளையிட்டார். மோசேயின் புதிய சமயத்தில், தனது மாமனாரும் அவனுடைய மக்களும் இணையவில்லை. அபிரகாம் காலத்திய கடவுள் நம்பிக்கையோடும், பழைய மரபுப்படியும், வழிபட்டு வந்தனர். எத்ரோ, பழைய எபிரேயர்களின் சமயத்தலைவனாகவும் அப்பகுதியில் அறியப்பட்டிருந்தான்.

மிடியர்கள், மோவாப், எகிப்து மன்னர்களுக்கு அடங்கித் திறை செலுத்தி வந்தனர். அவர்கள் எக்காலத்தும் இசறாயெல் மக்களுடன் இணையவேயில்லை. இருப்பினும் தங்கள் மரபின் இரத்தச் சொந்தங்கள் என்பதை இரு இனத்தாரும் உணர்ந்திருந்தனர். இருப்பினும் அவ்வப்போது இரு மரபினருக்கும் மோதல்களும் நிகழ்ந்துள்ளன. மிடியர் இன மக்கள், இசறாயெல் மக்களைப் போல், நகர வாழ்க்கையை மேற்கொண்டிருந்த வர்கள் அல்லர். அவர்களின் தலைவர்கள், பழங்குடி இனத்தவர்களாகவே இருந்தனர். இசறாயெல் பகுதிகளில் சென்று, அடிக்கடி கொள்ளையடித்தும் வந்தனர். கால்நடைகளை வளர்ப்பதே அவர்களுடைய முதல் தொழிலாக இருந்தது. பிற்காலத்தில் பாரசீக, கிரேக்க, உரோமர்களின் ஆட்சியில் அப்பகுதிகள் வந்தன. நாளடைவில், அரேபிய எகிப்திய மக்களுடன் அவர்கள் கலந்து விட்டனர் என்று சொல்லப்படுகின்றது.

மிடியர் என்ற சொல், மிட் (Mid) என்ற சொல்லின் நீட்சியென ஆய்வாளர்கள் கருதுகின்றனர். தமிழில் அறியப்படும் இடை என்ற சொல் மூலம், இடையர் என்ற மரபு அறியப்படுகிறது. குறிஞ்சிக்கும் மருதத்துக்கும் இடைப்பட்ட நிலத்தில் வாழ்ந்திருந்ததால், அவர்கள் இடையர்கள் என்று சொல்லப்பட்டனர். இடையர் என்பதற்கு, கால்நடைகளை வளர்ப்பவர் என்பது பொருளன்று.

தமிழில் மடி என்ற சொல்லும், இடை என்ற பொருளைத் தரும்.

உடலின் இடைப்பகுதி மடி என்றும் சொல்லப்படும்.

உடல் இரண்டாக மடியும் பகுதியும் அதுவே எனலாம்.

இடையில் உடுத்தப்படும் ஆடைக்கும் மடி என்ற பொருளுண்டு.

மடி என்ற சொல்லே, மெடி (medi) என்று கிரேக்க மொழியில் திரிபுபட்டுள்ளது.

சிலர் மத்தி என்றே சொல்லே, மிட் எனத் திரிந்ததாகவும் கூறுவர்.

மத்தி உண்மையில் தமிழ்ச் சொல்லே. சிலர் அது சமற்கிருதச் சொல்லென மயங்குகின்றனர்.

மள் என்ற வேர்ச் சொல், மடு – மடி என விரிந்தது.

மள் + தி = மத்தி என்று சொல்லப்படும்.

மோர்ப்பானையின் நடுவில் வைக்கப்படும் தண்டு, மத்து எனப்படுவதை ஒப்புநோக்குக.

மத்து – மத்தி என்ற தமிழ்ச் சொல், மத்ய என்று சமற்கிருதத்தில் திரிந்தது என்க.

மடி – மத்தி ஆகிய இரண்டு சொற்களும், மள் என்ற வேரினின்றும் விரிந்தவையே.

மத்திய தரைக் கடல் என்பதை, Medi - terrannean Sea என்பர்.

மெடி (Medi) - மடி அல்லது மத்தி என்ற சொல்லின் திரிபாகும்.

Terra என்பது, தரை என்ற சொல்லின் திரிபு என்பதை ஏற்கனவே விளக்கியுள்ளோம். மடுத்தரைக் கடல், நடுத்தரைக் கடல், மத்திய தரைக்கடல் ஆகியவை தமிழ்ச் சொற்களே.

Medi என்பது, (மிட்) Mid என ஆங்கிலத்தில் திரிந்துள்ளது. Mid - Middle. எனவே, மிடியர் என்ற இனத்தார், இடையில் அல்லது நடுவில் வாழ்ந்திருந்த மக்கள் என்ற பொருளில் சொல்லப்பட்டதே. அரேபியாவுக்கும்

எகிப்துக்கும் இடையில் வாழ்ந்திருந்தவர்கள் என்பதாலும் சொல்லப்பட்டிருக்கலாம். மிடியர் என்ற சொல்லுக்கான பொருள் தெரியவில்லை என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

## அடிக்குறிப்புகள்

1. Midian : (Hebrew word) Elymology not known. Origin uncertain. A nomadic people, Israelite kinship with Midian was recognized in the genology of Abraham which included Midian among the descendants of Abraham through Ketura. (Genesis, 25 : 2 - 4). They were aslo called Ishmaelites because of their intimacy with them. The father-in-law of Moses, Jethro or Ruel was a Midianite chief and also a priest. Israelites maintanied friendly relationship with the Midians because of their blood connection.

   Midians appears as nomadic tribe every time. It is mentioned and hence occupied no territory ; but nomadic tribes exercised a vague claim to certain pasture lands. The Biblical data suggest a place not far from Sinai between Edom and Paran (a desert) on the road to Egypt.

   - D.O.B. P.574.



சிந்துவெளியிலிருந்து புலம் பெயர்ந்து, தைகிரீஸ் ஆற்றைக் கடந்து, மெசபத்தோமியாவில் குடியேறிய தமிழர்களே, சுமேரியர் ஆவர்.

**- அருள்தந்தை ஈராஸ் அடிகளார்**

# 1. சுமேரியத் தமிழர்கள் (Sumerians)

வெள்ளக் காலத்துக்குப் பிறகு, தமிழர்கள் உலகின் அனைத்து நாடுகளிலும் சென்று குடியேறியுள்ளனர். சிலர் வெள்ளக் காலத்திலேயே வெளியேறியுள்ளனர். பலர் வெள்ளக் காலத்துக்குப் பிறகு குடியேறிய பகுதிகளில், மேலும் இயற்கையின் பேரிடர்கள் காரணமாக, பாதுகாப்பான இடங்களுக்குக் குடிபெயர்ந்துள்ளனர். சிந்து வெளியில்தான் தமிழரின் முதல் குடியேற்றம் நிகழ்ந்தது என்று சொல்லப்பட்டாலும், மேற்கே ஆப்பிரிக்காவின் தெற்கு வடக்கு கடற்கரைப் பகுதிகளிலும், மடகாஸ்கர் போன்ற தீவுகளிலும், அரேபியாவின் பாரசீக வளைகுடாப் பகுதிகளிலும், தென் பகுதியிலும் குடியேறியுள்ளனர். அதே போல், கிழக்கே அந்தமான் நிக்கோபார் தீவுகள் அவற்றைத் தாண்டி, சுமத்திரா, மலாயா, இந்தோ னேசியா, கொரியா, சப்பான் வரையிலும், தென் கிழக்கே ஆஸ்திரேலி யாவிலும், பிலிப்பைன்ஸ் - ஆஸ்திரேலிய நாடுகளுக்கு இடையில் அறியப்படும் பசிபிக் கடல் தீவுகளான ஈஸ்டர் தீவு, நியுகினித் தீவுகளிலும் குடியேறியுள்ளனர். மேற்கண்ட நாடுகளில், தமிழர்களின் குடியேற்றங்கள், கி.மு.பத்தாயிரம் ஆண்டுகள் முதல், கி.பி.1000 ஆண்டுகள் வரை நிகழ்ந்துள்ளன.

ஒரு குழுவினர் பஞ்சாபினின்றும் புறப்பட்டு ஆப்கானிஸ்தான் வழியாக, பாமிர் மேட்டு நிலங்களைக் கடந்து, மங்கோலியா வழியாக, இன்றைய ரஷியாவின் விளாடி வாஸ்டாக் வரை சென்றுள்ளனர். வினாடி வாஸ்டாக்கின் கிழக்கு முனையும், அலாஸ்கா என்ற அமெரிக்க மாநிலத்தின் மேற்கு முனையும் தரை வழியில் அக்காலத்தின் இணைக்கப்பட்டிருந்ததாக, ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அத்தரை வழியே வட அமெரிக்காவில் நுழைந்து, தெற்கே மெக்சிகோ வரை சென்று, வாழ்ந்துள்ளனர். கி.மு.2000 ஆண்டுகளில், போணீசியர்கள் அட்லாண்டிக் கடலைக் கடந்து தென் அமெரிக்காவின் கயான கடற்கரையை அடைந்த போது, அங்கு மக்கள் வாழ்ந்திருந்ததைக் கண்டனர். ஐரோப்பியர்கள், கி.பி.15 ஆம் நூற்றாண்டு வரையில், அட்லாண்டிக் கடலுக்கு மேற்கே நாடுகள் எவையும்

இல்லையென்றே கருதி வந்த காலத்தில், கொலம்பஸ், பகாமாஸ் தீவுகளில் மக்கள் வாழ்ந்திருந்ததைக் கண்டு வியப்படைந்தான். இரண்டு அமெரிக்க நாடுகளும் நெருங்கியுள்ள பகுதிகளில், மக்கள் நெருக்கமாக அக்காலத்தில் வாழ்ந்துள்ளனர். ஒரு கூட்டம் விளாடி வாஸ்டாக் வழியே மெக்சிகோவை அடைந்தது என்றும், மேலும் பலர், கிழக்கு நாடுகளிலிருந்து, பசிபிக் கடலைக் கடந்து, அமெரிக்க நாடுகளில் குடியேறியதாகவும், ஆய்வாளர்கள் கருதுகின்றனர். உலகெங்கும் தமிழர் குடியேற்றம் என்பது. தனி ஆய்வுக்குட்படுத்தப்படவேண்டிய தலைப்பாக உள்ளது.

போக்குவரத்து வாய்ப்புகள் இல்லாத அக்காலத்தில் மக்கள் எவ்வாறு தொலைவிலுள்ள நாடுகளுக்கெல்லாம் சென்றனர் என்பது ஆய்வுக்குரியதே என்றாலும், தரை வழியே சென்றவர்களைவிட, கடல் வழியே சென்றவர்கள் தான் மிகுதியானவர்கள் எனத் தெரிய வந்துள்ளது. குமரிக் கண்டத்தில் வாழ்ந்திருந்த தமிழர்கள், தங்களைச் சுற்றி, கடல்கள் சூழ்ந்திருந்த பெரிய தீவில் வாழ்ந்திருந்ததாகக் கருதலாம். எங்கும் கடலே சூழ்ந்திருந்த அந்நிலப்பின் அண்மை நீர்ப்பகுதிகளை, ஏழு கடல் சூழ்ந்த கடற்பகுதியென அறிவித்திருந்தனர். (ஏழு என்பது, பல என்ற பொருளில் அறியப்பட வேண்டும்.) அதனால், கடல் மேலாண்மை இயற்கையிலேயே கைவரப் பெற்றவர்களாக அவர்கள் இருந்தனர். கடலோடும் ஆற்றலும், அதற்குத் தேவையான மரக்கலங்களை உருவாக்கிக் கொள்ளும் திறமையும் தொழில் நுட்பமும் அவர்களிடம் இருந்தன. விவிலியம் கூறும் நாகன் என்ற நோவா, குமரிக் கண்ட அழிவினின்றும் தப்பிப் பிழைத்தவனாகவே கருதப்படுகிறான். இசுலாமிய மரபுகள், அவன் குமரிக் கண்டத்தின் வட பகுதியிலிருந்து (இலங்கையாகவும் இருக்கலாம்) வெளியேறியதாகச் சுட்டுகின்றன. தொலை வுக்கு ஏற்ப, தமிழர்கள் மரக்கலங்களை வடிவமைத்துக் கொண்டனர். பெரியதும் சிறியதுமான மரக்கலங்கள் 300க்கும் மேல், தமிழ் இலக்கி யங்கள் வாயிலாகவும், வழக்குச் சொற்கள் வாயிலாகவும் அறியப்பட்டுள்ளன.

விவிலியம் மற்றும் குர்ஆன் செய்திகளில்படி, நாகன் என்பவனின் மரபினரே, தைகிரீஸ் ஆற்றைக் கடந்து, முதன் முதலில் மெசபத்தோமி யாவில் குடியேறினர் என அறியப்படுகின்றது. அவர்கள் அங்கு குடியேறிய காலங்களில், மக்கள் அங்கே வாழ்ந்திருந்தனர். பாலத்தீனத்திலும் மெசபத் தோமியாவிலும் கண்டெடுக்கப்பட்ட எலும்புகள் பல, அம்மக்கள் 75000 ஆண்டுகளுக்கு முன்பே வாழ்ந்திருந்தனர் என்பதை உறுதிப்படுத்துகின்றன[1]. அம்மக்கள், வேட்டையாடி, உணவு தேடிக் கொண்டனர். நாடோடி

இனங்களாக வாழ்ந்திருந்தனர். நிலையான குடியிருப்புகள் எவற்றையும் அவர்கள் உருவாக்கிக் கொள்ளவில்லை. வேளாண்மைத் தொழில் பற்றி அறியாதிருந்தனர். மெசபத்தோமியாவில், கி.மு.10000 ஆண்டுகளுக்குப் பிறகே வேளாண்மைத் தொழில் அறிமுகமாயிற்று என்பதை ஆய்வாளர்கள் உறுதிபடக் கூறுகின்றனர். எனவே, மெசபத்தோமியாவுக்கு வெளியிலிருந்து வந்து குடியேறிய மக்களே[2], அங்கு வேளாண் தொழிலை அறிமுகம் செய்தனர் எனக் கருத முடமுண்டு. விவிலியம், குர் ஆன் தரும் செய்திகளின் படி, நாகன் என்பவனின் மரபினரே அங்கு வேளாண்மையை அறிமுகம் செய்தார்கள் எனக் கருதலாம். யூப்ரதீஸ் தைகிரீஸ் ஆறுகளுக்கு இடையில் பரந்திருந்த சமவெளிப் பகுதிகளில், முதன்முதல் வேளாண்மைத் தொழில் அறிமுகமாயிற்று.

எகிப்தில் குடியேறிய மக்கள், மெசபத்தோமியாவினின்றும் குடியேறிய மக்களாகவே கருதப்படுகின்றனர். சென்ற நூற்றாண்டின் இறுதியில், யுனெஸ்கோ வெளியிட்ட ஆப்பிரிக்க வரலாறு என்ற நூல் அதனை உறுதி செய்கிறது. இன்றைய சூயெஸ், அன்று குறுகிய நிலப்பகுதியாக (Isthumus) அறியப்பட்டிருந்தது. சினைப் பாலைவனத்தைக் கடந்து, சூயெஸ் தரைப்பகுதி வழியே, எகிப்தை அடைந்தனர். அக்காலத்தில் எகிப்தியர்கள் பேசிய மொழி, தமிழ் வழிவந்த கிளைமொழியே (Dravidian dialect) என்று, யுனெஸ்கோ வெளியிட்டுள்ள நூலில் சொல்லப்பட்டுள்ளது. மெசபத் தோமியாவிற்குப் பிறகே, எகிப்தில் வேளாண்மைத் தொழில் மேற்கொள்ளப்பட்டது. வெள்ளக் காலத்துக்குப் பிறகே, ஆப்பிரிக்காவின் விக்டோரியா ஏரி நிரம்பி வழிந்ததாகவும், அந்நீர் வடக்கு நோக்கிப் பாய்ந்ததாகவும், அதுவே நைல் ஆறு என அழைக்கப்பட்டதாகவும், ஆப்பிரிக்க வரலாறு கூறுகிறது[3].

மெசபத்தோமியாவில் ஒரு பகுதி மக்கள் குடியேறியது, தரைவழியே சென்ற மக்கள் கூட்டமாகக் கருதப்படுகின்றது. நாகனின் மரபினர் தரை வழியே சென்றுதான் தைகிரிஸ் ஆற்றைக் கடந்து சென்றனர். பாரசீக வளைகுடாவின் (இன்றைய கத்தார், மஸ்கட், துபாய்) கடற்கரைப் பகுதி களிலும் குடியேற்றங்கள் நிகழ்ந்துள்ளன. அவர்கள் கடல் வழியே சென்று குடியேறியவர்களாகக் கருதப்படுகின்றனர். தொடர்ந்து அரேபியாவின் தென் கடற்கரைப் பகுதிகளிலும் (ஏமன் வரையிலும்) குடியேற்றங்கள் நிகழ்ந் துள்ளன. அவர்கள் கடல் வழியே சென்று குடியேறியவர்களாகக் கருதப்படு கின்றனர். தொடர்ந்து அரேபியாவின் தென் கடற்கரைப் பகுதிகளிலும் (ஏமன் வரையிலும்) குடியேற்றங்கள் நிகழ்ந்துள்ளன. எகிப்தின் கிழக்குப் பகுதிகளில்

(செங்கடல் பகுதிகள்) புதிய குடியேற்றங்கள் கடல் வழியே சென்றவர்களால் அறியப்படுகின்றன. எனவே, அக்காலக் குடியேற்றங்கள், பெரும்பாலும் கடல் வழியே தான் நடந்துள்ளன. பாரசீக வளைகுடாப் பகுதிகளில் குடியேறி யவர்களுக்கு அண்மையில் இந்தியாவே அறியப்படுவதால், வளைகுடாப் பகதிகளில் குடியேறியவர்கள், தமிழர்களே எனக் கருதப்படுகிறது. முறையான கடல் போக்குவரத்து, கி.மு.4000 ஆண்டுகளுக்கு முன்பே, சிந்து வெளிக்கும் பாரசீக வளைகுடா நாடுகளுக்குமிடையே அறியப்பட் டுள்ளது. இன்றைய குஜராத்தின் தொலவீரா (Tholaveera), காம்பே வளைகுடாவிலிருந்த உலைத்தளம் என்ற லோத்தள் துறைமுகம், தமிழகத்தில் அறியப்பட்டிருந்த முசிறி, கொற்கைத் துறை முகங்கள் இடையே, கடல் வழிப் பயணங்கள் மேற்கொள்ளப்பட்டிருந்ததை, சிந்து வெளி ஆய்வாளர்கள் உறுதி செய்துள்ளனர். எஸ்.ஆர்.இராவ் என்பவர் மேற்கண்ட கடற் பயணங்களை உறுதி செய்கிறார்[4].

பெரும்பாலான சான்றுகள், மக்கள் கிழக்கிலிருந்து மேற்கே சென்று குடியேறினர் என்பதை, மேலை நாட்டுக் குறிப்புகள் உணர்த்துகின்றன. ஆனால் மேலை நாட்டு ஆய்வாளர்கள், கிழக்குப் பகுதி மக்களை விரும்புவது மில்லை, மதிப்பளிப்பதும் இல்லை. எனவே, கிழக்கிலிருந்து மேற்கு என்ற கொள்கையை அவர்கள் ஏற்பதில்லை. குறிப்பா, ஆப்பிரிக்கா - இந்திய நாடுகளை அவர்கள் எக்காலத்திலும் முன்னிலைப்படுத்தியது இல்லை. அதன் அடிப்படையில், மெசபத்தோமிய மக்களே, பஞ்சாபில் வந்து குடியேறி மெசபத்தோமிய நாகரிகத்தைத் தொடர்ந்தனர் என்றும், சிந்துவெளி நாகரிகம், மேலைநாட்டு நாட்டு நாகரிகத்தின் தொடர்ச்சியே என்றும் வரலாற்றை எழுதினர். கிழக்கிலிருந்து ஏன் மக்கள் மேற்கு நோக்கிச் சென்றனர் என்பதற்கான காரணங்கள் பல சொல்லப்பட்டுள்ள நிலையில், மேற்கிலிருந்து கிழக்காக மக்கள் குடிபெயர்ந்ததற்கான வலுவான ஒரு காரணத்தைக் கூட அவர்களால் கூற இயலவில்லை. அவர்கள் குறிப்பிடும் ஒரே காரணம் மொழியே. மெசபத்தோமிய, எகிப்திய, சுமேரிய, எபிரேய மொழிகள், சிந்துவெளி மொழியோடு தொடர்பு கொண்டுள்ளன என்பதை மட்டும் ஏற்றுக் கொள்கின்றனர். எனவே, தமிழர்களின் (திராவிடர்களின்) தாயகம் மெசபத்தோமியாவே என்று கூறுகின்றனர். பஞ்சாபில் குடியேறிய தமிழர்களை, ஆரியர்கள் போரில் வென்று, தமிழ்நாட்டுக்குத் துரத்தி விட்டனர் என்பது ஐரோப்பியர்கள் எழுதியுள்ள வரலாறு. நிக்கோலா லெகோவாரி என்ற பிரெஞ்ச் மொழி ஆய்வாளர், தற்கால பிரான்ஸ் - ஸ்பெயின்

எல்லையில் வாழும் பாஸ்க் (Basque) என்ற இனத்தார், ஐரோப்பியர் அல்லர் என்றும், அவர்கள் பேசி வரும் மொழி, ஐரோப்பிய மொழிகளோடு தொடர்புடையது அல்லவென்றும், அது தமிழ் மொழியோடு (திராவிட மொழியோடு) தொடர்புடையது என்றும் கூறி, 2000 க்கும் மேற்பட்ட சொற்களை மேற்கோளாகக் காட்டி நிறுவுகிறார். இவருடைய ஆய்வு, ஐரோப்பியரின் வரலாற்றைப் பொய்யாக்கியதோடு, சிந்து வெளி மொழிக்கும் பாஸ்க் மொழிக்கும் தொடர்பு உள்ளதையும் சுட்டிக் காட்டுகிறார். இவருடைய ஆய்வை ஐரோப்பியர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாக, நிக்கோலாவை மன நலம் குன்றியவர் என்றும் வசையாடினர். (ஆசிரியரின் தமிழ் இனமும் பாஸ்க் இனமும் என்ற நூலைக் காண்க.) 1963 ஆம் ஆண்டில், அவருடைய நூல் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டது. பாஸ்க் - திராவிட மொழிகள் ஒப்பாய்வு என்ற நூல், உலக அரங்கில் விரைவில் விற்றுத் தீர்ந்தது. ஐரோப்பியர் எழுதியுள்ள வரலாற்றின் பொய்த்தன்மைகள் வெளிச்சத்துக்கு வந்தன.

எவ்வாறாயினும், சுமேரிய நாகரிகம் பற்றிய ஆய்வுகளையும் ஆங்கிலேயர் உள்ளிட்ட ஐரோப்பியர்கள் செய்துள்ளனர். இந்திய மொழி சார்ந்த ஆய்வாளர்கள் எவரும், இதுவரை, நடுத்தரைக் கடல் பகுதி நாடுகளின் மொழிகள், இன வரலாறுகள் பற்றி அக்கரை கொள்ளவில்லை. இந்திய வரலாற்றையே (ஆங்கிலேயர் எழுதியவை) உண்மையென நம்பி, அதனையே மீண்டும் மீண்டும் எழுதி வரும் இந்திய வரலாற்று ஆய்வாளர்கள், மேலைநாட்டு வரலாறுகள் மீது கவனம் செலுத்தவில்லை என்பது வியப்புக்குரியதன்று. குறிப்பாக, தமிழர்கள் எழுதியுள்ள தமிழ்நாட்டு வரலாறும் சரியான கால அளவுகளால் தொகுக்கப்படவில்லை. தொல்காப்பியம், கி.பி.11 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்ற கருத்தை வெளிப்படுத்திய வையாபுரிப்பிள்ளையின் கொள்கையை ஏற்றுக் கொண்டிருப்பவர்களும் தமிழ்நாட்டில் உள்ளனர்.

கி.பி.1850 முதல் ஒரு நூற்றாண்டு வரை, சுமேரியர்களுடைய வரலாற்றை ஆய்வு செய்துள்ளனர். நூற்றுக் கணக்கான களிமண் தட்டுகளில் அவர்களுடைய இலக்கியங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றில் பெரும்பாலானவை இன்னும் படிக்கப்படவில்லை. சுமேரிய வரலாற்றில் ஆர்வம் கொண்டு, அம்மொழியைப் படித்து விளக்கம் கூறிய பலர், இன்று உயிருடன் இல்லை. அவர்கள் கூறிய விளக்கங்களும், படித்துக் காட்டிய மொழியும் சொற்களும் சரியா தவறா என்று கூறுவதற்கும்

தற்காலத்தில் சரியான தகுதியுடைய ஆய்வாளர்கள் இல்லை. அண்மைக் காலங்களில், ஏற்கனவே விளக்கம் தரப்பட்ட செய்திகளையே, ஆய்வு செய்து வருகின்றனர். சாமுயெல் நோவா கிராமர் (S.N.Kramar) என்பவரே, பெரும்பாலான சுமேரிய இலக்கியங்களைப் படித்து விளக்கம் தந்தார். அவர் கூட, முழுமையாக சுமேரிய இலக்கியங்களை ஆய்வு செய்துவிடவில்லை. எனவே, சுமேரியர்கள் பற்றிய வரலாற்றில், இதுவரை வெளியிடப்பட்டவைகளில், உண்மைச் செய்திகளும் இருக்கலாம், தவறான செய்திகளும் இடம் பெற்றிருக்கலாம். குறிப்பாக, சுமேரிய மொழி, அயல் நாட்டு மொழி என்பதை பலரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். அது மெசபத்தோமிய செமிட்டிக் குடும்ப மொழியல்ல என்பதையும் ஏற்றுக் கொண்டுள்ளனர். சுமேரிய மொழி அயல் நாட்டு மொழி என்றால், அந்த அயல்நாடு எதுவென்பதை இதுவரை எங்கும் தெளிவுபடுத்தவில்லை.

ஈராஸ் பாதிரியார் போன்றவர்கள், சுமேரிய மொழிக்கும் தமிழ்மொழிக்கும் நெருங்கிய தொடர்புகள் காணப்படுவதால், சிந்து வெளிமொழியைத் தமிழ் மொழியே என்று கூறுவதில் தவறில்லை என்று கூறினார். மேலும் அவர் பன்மொழிப் புலமை பெற்றிருந்ததால், சுமேரிய மொழி – சிந்துவெளி மொழி – தமிழ் மொழி ஆகிய மூன்றும் ஓர் இனமக்கள் பேசிய மொழியே எனக் கூறினார். அதற்கு எடுத்துக்காட்டாகப் பல சொற்களையும் முன்வைத்தார். இதில் சிக்கல் என்னவென்றால், தமிழ் மொழியையும் அதன் சொற்களையும் அறியாத ஐரோப்பியர்கள், சுமேரிய மொழியைப் படித்து விளக்கம் கூறியுள்ளது பொருத்தமில்லாதது. சுமேரிய மொழிச் சொல் ஒன்றை எடுத்து விளக்கம் கூறும் போது, அது எம்மொழியில் உள்ளது என்பதை விளக்க வேண்டும்.

எடுத்துக்காட்டாக, சுமேரியர் உருவாக்கிய தலைநகரம் ஊர் என்பதாகும். ஊர் என்பது, இப்போதும் தமிழில் பேசவும் எழுதவும் பயன்பட்டு வருகின்ற, படிக்காதவர்களும் தெரிந்து வைத்துள்ள சொல்லாகும். ஊர் என்ற சொல்லின் தொடர்புடைய வேற்று மொழிச் சொல் எதுவெனத் தெரியவில்லை என்றும், ஊர் என்ற சொல்லுக்கான பொருளும் தெரியவில்லையென்றும் கூறுகின்றனர். ஊர் என்பது ஒரு பெருநகரம் என்று சொல்லப்பட்டதால், நகரப் பகுதிகளைக் குறிக்க ஊர்பன் என்ற சொல்லை, கிரேக்கர்கள் பயன்படுத்தினர். ஆங்கிலத்தில் அது, அர்பன் (Urban) என்று ஒலிக்கப்படுகிறது. ஐரோப்பியர்களால் அறிய இயலாத பல தமிழ்ச் சொற்கள் ஐரோப்பிய மொழிகளில் உள்ளன.

நடுத்தரைக் கடல் நாடுகளின் மொழிகளில் ஏராளமான தமிழ்ச் சொற்கள் புதையுண்டு கிடக்கின்றன என்ற உண்மை அண்மைக் காலங்களில் வெளிப்படத் தொடங்கியுள்ளது. தமிழ்நாட்டில் முதன் முறையாக, அம்முயற்சியை முன்னெடுத்து, மேற்சொல்லப்பட்ட நாடுகளின் மொழிகளில் உள்ள தமிழ்ச் சொற்களைக் கண்டறிந்து வெளியிட்டுள்ளோம். இம்முயற்சியும் ஒரு தொடக்கமே தவிர, முழுமையானதன்று. அடுத்து வரும் தலைமுறையினர், இந்த முன்னெடுப்பைப் பின்பற்றி மொழியின் வழியே வரலாற்றை மீட்டெடுக்க முயல வேண்டும். தொன்மையான வரலாறுகளை மீட்டெடுக்க முதற்சான்றாக உள்ளவை, அம்மொழிகளில் காணப்படும் சொற்களே. பெரும்பாலான வரலாற்று ஆய்வாளர்களுக்கு, மொழிகளில் காணப்படும் சொற்கள் பற்றிய ஆழமான சிந்தனையோ புரிதலோ இல்லை. அவ்வாறு மொழிகளைப் பற்றிய தெளிவில்லாத ஆய்வாளர்களால் வரலாற்றை ஆய்வு செய்ய இயலாது. வரலாறும் மொழியும் இரட்டைக் குழந்தைகள் போன்றவை. மொழி என்ற அகச்சான்று ஒரு குழந்தை. கட்டிடங்கள், கட்டுமானங்கள், நிகழ்வுகள், போன்றவை புறச்சான்றுக் குழந்தையாகும். மொழியை ஆய்வு செய்ய, அம்மொழியில் இலக்கியங்கள் பற்றிய தெளிவும் புரிதலும் மட்டும் பயன்படாது. ஒவ்வொரு மொழியிலும் உள்ள சொற்களின் மூலச் சொற்கள், வேர்ச் சொற்களைக் கண்டறியும் அறிவு வேண்டும். மொழிப் புலமையின் முதுநிலையே வேர்ச் சொற்களைக் கண்டறியும் அறிவுத் திறமையாகும். இன்று தமிழறிஞர்கள் நூற்றுக்கு ஒருவர் கூட வேர்ச் சொற்களைக் கண்டறிந்து காட்டும் அறிஞர்களாக இல்லை. வேர்ச் சொல் ஆய்வு என்பது, தமிழ் மொழியின் தொன்மையை மீட்டெடுக்கும் அற்புதமான முறையென்பதை உணர வேண்டும்.

சங்க காலத்திலேயே, வேர்ச் சொற்களைப் பற்றிய சிறப்பு அறியப்படாமல் போயிற்று. தொல்காப்பியம், தனது உரியியல் அதிகாரத்தில் வேர்ச் சொற்களைப் பற்றிய குறிப்புகளைத் தந்துள்ளது என்பதால், தொல்காப்பியர் காலத்துப் புலவர்கள், வேர்ச் சொற்கள் பற்றிய புரிதலைக் கொண்டிருந்தனர். மொழி வளர்ச்சியில் ஏற்பட்ட மாற்றங்களால் வேர்ச் சொற்களைப் பற்றிய துறை, மறக்கப்பட்டு வழக்கிழந்து போயிற்று. தொல்காப்பியம் கூறும் செய்தியின் அடிப்படையில், கடந்த நூற்றாண்டில் வாழ்ந்திருந்த யாழ்ப்பாணம் ஞானப்பிரகாச அடிகள், கார்த்திகேய முதலியார், தேவ நேயப் பாவாணர் போன்றோர், தமிழில் வேர்ச் சொற்கள் என்ற துறையை மீட்டெடுத்துள்ளனர். வேர்ச் சொல் ஆய்வுக்கென, வழிகாட்டி

நூல்கள் தமிழில் உள்ளன. அவற்றை ஆராய்ந்து, வேர்ச்சொல் இலக்கணத் துறையை, அடுத்த நிலைக்குக் கொண்டு செல்ல, தமிழ் நாட்டுத் தமிழறிஞர்கள் முன்வரவில்லை. வேர்ச் சொற்களைக் கண்டறியும் ஆய்வு முறையை, அரசும் பல்கலைக் கழகங்களும் ஏற்றுக் கொண்டு, முதுகலைப் படிப்பிலாவது பாடமாக வைக்க முன் வரவேண்டும். தமிழ்நாட்டில் இப்போதும் விரல்விட்டு எண்ணக் கூடிய அளவிலேயே, வேர்ச் சொல் ஆய்வாளர்கள் உள்ளனர். தமிழார்வமும், தமிழறிவும் கொண்ட இளை ஞர்கள், வேர்ச் சொற்களைப் பற்றி அறிய முன்வர வேண்டும்.

அக்காலத்தில், தமிழ்ச் சொற்கள் ஓரெழுத்து ஒரு சொல்லாகவும், ஈரெழுத்து, மூவெழுத்து அளவிலேயே இருந்தன. நீண்ட சொற்கள், சில சொற்கள் இணைந்த சொற்களாகவே கருதப்பட்டன. ஆ என்பது ஓரெழுத்துச் சொல்லாகும். ஆ +தீ என்ற ஓரெத்து இரண்டு சொற்களும் இணைந்து ஆதீ என்ற கூட்டுச் சொல் உருவாயிற்று. காலப்போக்கில், அது ஆதி என்று தீ குறிலாயிற்று. கடவுள் என்பதும் இரு சொற்களின் கூட்டாகும். கட – கடந்து நிற்கின்றவள், உள் - உள்ளமாகிய எண்ணங்களை அல்லது சிந்தனை களுக்குக் கட்டுப்படாமல் கடந்து நிற்பவன் என்ற பொருளைத்தரும். பகவன் என்பது இரண்டு சொற்களாகும். பகர்ந்து அல்லது பகுத்தளிக்கும் அவன் என விரியும். ஆதி பகவன் என்பது, தன் படைப்புகளின் தேவைகளைப் பகிர்ந்தளிக்கும், தொடக்கத்திலேயே அறியப்படும் ஒளியாகிய இறைவன் என்பது பொருளாகும். வேர்ச் சொற்களைப் பற்றிய புரிதல் இருந்தால், எது தமிழ்ச் சொல், எது சமற்கிருத அல்லது பிறமொழிச் சொல் எனப் புரிந்து கொள்ளலாம். உலக மொழிகளிலேயே, தமிழ்மொழியின் வேர்ச் சொற்கள் தமிழில் மட்டுமே உள்ளன. மற்ற மொழிகளின் சொற்களுக்கான வேர்ச் சொற்கள் வேறு மொழிகளில் உள்ளதை அறியலாம்.

சமற்கிருத மொழியிலும் வேர்ச் சொற்களை அறியும் முறைகளை ஐரோப்பியர்களே கண்டறிந்தனர். இந்தியாவிலிருந்த எந்த சமற்கிருத அறிஞரும் இம்முறையைக் கையாளவில்லை. மொழியிலும் இலக்கியங் களிலும் தேர்ச்சி பெற்றிருந்த சமற்கிருத அறிஞர்கள், தம் மொழியின் சொற்களைப் பற்றி அறியாதிருந்தனர். இப்போதும் கூட, சமற்கிருத அறிஞர் களுக்குச் சரியான புரிதல் இல்லை. சமற்கிருதத்தில் வேர்ச் சொல்லை, தாது (Dhatu) என்று, ஐரோப்பியர்களே அறிமுகம் செய்தனர். மண்ணிற்குள் புதைந்து கிடக்கும் தாது (Metal elements) எவ்வாறு வெளியே தெரியாமல் மறைந்துள்ளதோ, அவ்வாறே சொல்லுக்குள் மறைந்திருக்கும் வேர்ச் சொல்,

வெளிப்படையாகத் தெரியாது என்பது பொருள். சமற்கிருத மொழியின் மூத்த அறிஞர்களாக, மாக்சு முல்லரும் மோனியர் வில்லியம்ஸ் என்பவரும் அறியப்படுகின்றனர். அவர்கள் ஆற்றிய பணி ஈடிணையற்றது. உலக அரங்கில் சமற்கிருத மொழியைத் தூக்கி நிறுத்திய பெருமை இவ்விரு வரையே சாரும். இவர்கள் இருவருமே சமற்கிருதச் சொற்களுக்கான வேர்ச் சொற்களைக் கண்டறிந்து அறிவித்தவர்கள். ஆனாலும் பல சொற்களுக்கு அவர்களால் வேர்ச் சொற்களைக் காட்ட இயலவில்லை. காட்டியுள்ள வேர்ச் சொற்களில் பல, தமிழ் மூலத்தையும் வேரையும் கொண்டுள்ளன என்பதை அவ்விருவரும் அறிந்திருக்கவில்லை. (ஆசிரியரின் சமற்கிருதத்துக்கும் தாய் மொழி தமிழே என்ற நூலைக் காண்க.)

**சுமர் (Sumer) :**

சுமர் – சுமேரியா என்றழைக்கப்பட்ட பகுதி, மெசபத்தோமியாவின் தென் பகுதியில் அமைந்திருந்தது. தற்காலத்து ஈராக், குவைத் நாடுகளை உள்ளடக்கியது. யூப்ரதீஸ் – தைகிரீஸ் ஆறுகள் அப்பகுதிக்கு வளம் சேர்த்தன. சுமேரியா என்பது அக்காடிய மொழிச் சொல்லில் இருந்து பிறந்தது என்று சொல்லப்படுகிறது. அக்காடிய மொழி, வடக்கு மெசபத்தோமியாவில் பேசப்பட்டது. உலகின் முதல் நாகரிக நாடாக சுமேரியா சொல்லப்படுகிறது. சுமர் என்ற சொல்லுக்கு, "நாகரிக மன்னர்கள் ஆண்டிருந்த நாடு", என்பது பொருள் என, ஜோசுவா மார்க் (Joshu J.Mark) என்பவர் குறிப்பிடுகிறார். ஆனால் சுமேரியர்கள் தங்களை, "கறுப்பு மயிர்த் தலையைக் கொண்ட மக்கள்" (the black headed people) என்று கூறிக் கொண்டதாக, மார்க் குறிப்பிடுகிறார். தங்கள் நாட்டையும் அப்பெயராலேயே அழைத்துக் கொண்டனர். சுமர் – சுமேரியா என்பது, மற்றவர்கள் அம்மக்களைக் குறித்த சொல்லாகக் கருதப்படுகின்றது. விவிலியம், தனது முதல் அதிகாரத்தில் (ஆதியாகமம்), அப்பகுதியை, சினார் என்று குறிப்பிடுகிறது. சுமேரிய மன்னர்களின் மரபுப் பட்டியலில், கடவுள் மக்களுக்கு வேளாண்மைத் தொழில் செய்வதற்கான அனைத்தையும் அருட் கொடையாக அளித்தார் என்று சொல்லப்பட்டுள்ளது. அதனாலேயே அவர்கள் உருவாக்கிய ஊருக்கு இரிடு எனற பெயர் வழங்கப்பட்டது. ஈரிடு என்பதே, சுமேரியர்கள் உருவாக்கிக் கொண்ட முதல் ஊராகக் கருதப்படுகிறது. சுமேரிய நாட்டில் அறியப்பட்ட ஊரூக் என்பதே, உலகின் முதல் நாகரிக நகரமாகக் கருதப்படுகின்றது. அந்நகர நாகரிகமே, மெசபத்தோமியாவெங்கும் பரவியதாகவும் சொல்லப்படுகிறது[5].

விவிலியம் கூறும் சினார் (Shinar) என்ற சொல்லில் இருந்தே சுமர் என்றும் சுமேரியா என்றும், சமரியா என்றும் அப்பகுதி சொல்லப்பட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சினார் - சுமர் என்ற சொற்களுக்கிடையே ஒற்றுமை இருப்பதாகத் தெரியவில்லை. சினார் என்பது, தைகிரீஸ் ஆற்றைக் குறித்து, விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ளது. சினார் என்பது, சின்னாறு (Small river) என்ற பொருளில் சொல்லப்பட்டுள்ளது. அச்சொல்லே சுமர் - சமர் எனத் திரிந்ததாகக் கூறுவது பொருத்தற்றதாகவே தென்படுகிறது. மேலும் அப்பகுதியில், யூப்ரதீஸ் ஆறும் அறியப்படுகிறது. அவ்விரு ஆறுகளும் இணைந்து பாரசீக வளைகுடாவில் கலக்கின்றன. அவ்விரு ஆறுகளும் இணையும் இடத்தில் தான், ஊர் நகரம் பிற்காலத்தில் உருவாக் கப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. எனவே, சுமர் - சமர் என்ற சொற்களுக் கான பொருளை ஆய்வாளர்கள் அறிந்திருக்கவில்லை என்றே கருதலாம்.

சுமேரியர்கள், அப்பகுதியைச் சார்ந்தவர்கள் இல்லையென்றும், அவர்கள் பேசிய எழுதிய மொழியும் கூட, அப்பகுதியைச் சார்ந்தது அல்லவென்றும், ஆய்வாளர்கள் திட்ட வட்டமாகக் கூறுகின்றனர். சுமேரியர்கள் வெளிநாட்டவர் என்றால், எந்த வெளி நாட்டிலிருந்து அவர்கள் வந்தவர்கள் என்பதை, ஆய்வாளர்கள் விளக்கவில்லை. சிலர், பாரசீக வளைகுடாவின், மேற்குப் பகுதியில் வாழ்ந்திருந்த மக்கள், வடக்கே நகர்ந்து, புதிய நாட்டை உருவாக்கிக் கொண்டனர் என்று கூறுகின்றனர். பாரசீக வளைகுடாவின் மேற்குப் பகுதியை, வெளி நாடு என்று கூற இயலாது. அது, மெசபத்தோமியாவை ஒட்டிய தென் பகுதியாகவே கருதப்படும். சுமேரியரின் முன்னோர்கள், தில் மண் (Dilmun) என்ற இடத்தில் வாழ்ந்திருந்தனர் என்று சொல்லப்படுகிறது. தில் மண் என்ற இடம், இன்றைய கத்தார் நாடு அல்லது பஹ்ரைன் என்றும் சொல்லப்படுகிறது. இக்காலம் போல் அக்காலத்தில் நாடுகளுக்கு இடையே எல்லைகள் எவையும் வரையறுக்கப்படவில்லை. அவ்வாறு கூறப்பட்ட எல்லைகளும் அவ்வப்போது மாறிக் கொண்டே இருந்தன. சுமேரியர்களின் தாயகம் எதுவென்பதை இதுவரை, எந்த ஆய்வாளரும் உறுதியாகக் கூற முன்வரவில்லை. சுமர் என்ற சொல் கூட, அம்மக்களுக்குப் பொருத்தமான சொல்தானா என்பதிலும் ஐயப்பாடுகள் உள்ளன.

கடவுள், வேளாண்மைத் தொழில் செய்ய நிலங்களையும், குடியிருக்க ஊர்களையும் அளித்ததாக (the gifts necessary for cultivating Society) சுமேரிய மரபுப் பட்டியலில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இடு – இடுதல் என்பதற்கு அளித்தல் அல்லது கொடுத்தல் என்பது பொருள்.

ஈர் – இரண்டு. ஈர் – ஈர்தல், இரண்டாதல்.

ஈரிடு என்பது, இரண்டு கொடைகளை அளித்தல் என்று அறியப்படும்.

இறையிடு என்றவாறும் பொருள் கொள்ளலாம்.

இறைவன் அளித்த கொடை அல்லது கொடைகள்.

இரு இடு என்றும் அறியப்படும்.

ஈரிடு என்ற சொல்லுக்கான பொருளை ஆய்வாளர்கள் தரவில்லை. அச் சொல்லின் பொருளும் தெரியவில்லை என்று கூறுகின்றனர்.

சுமேரியர்கள், தங்களை கறுப்பு மயிர் கொண்ட தலையைப் பெற்றிருப்பவர்கள் என்று கூறிக் கொள்வதின் மூலம், அப்பகுதியில் இருந்த பிற மக்கள், கறுப்பு மயிரைக் கொண்டிராதவர்கள் எனத் தெரிய வருகிறது. அசீரியரும், எபிரேயரும் கூட, கறுப்பு மயிரையே கொண்டிருந்தனர். எகிப்தில் காணப்படும் ஓவியங்கள், கறுமையான அடர்ந்த மயிர்த் தாடிகளுடன் சுமேரியர், அசீரியர், எபிரேயர் காட்சியளிக்கின்றனர். எக்காலத்தும் கறுமையான முடியைக் கொண்டிருந்தவர்கள் தமிழர்களே என்க.

சினார் என்பது, தைகிரீஸ் ஆற்றைக் குறித்த சொல். அதனை வெளிநாட்டு இனத்துடன் ஒப்பிடுவது பொருத்தமாக இல்லை. ஆனாலும் சுமர் என்ற சொல்லை, வரலாற்று ஆய்வாளர்கள் தெரிந்தோ தெரியாமலோ உறுதிப்படுத்திவிட்டனர்.

ஆய்வாளர்கள் கூறும் கருத்துப்படி, சமரியா என்ற பகுதியிலிருந்து குடிபெயர்ந்தவர்கள் என்றவாறு, சமர் – சுமர் எனத் திரிபு பட்டதாகவும் அறியப்படுகின்றது. சமாரியா என்ற பகுதி, இன்றைய லெபனான் நாட்டின் தென் எல்லையில் உள்ளது. சமாரியாவிலிருந்து வந்தவர்களை, வெளி நாட்டவர் எனக் கூற இயலாது. எனவே சமர் – சுமர் என்ற சொற்களில் இன்னும் விடுவிக்க இயலாத குழப்பங்கள் உள்ளன. தவறான ஒரு கொள் கையை அறிவித்து, அதனையே நிலை நிறுத்தி விட்டார்களோ என்ற ஐயப்பாடும் எழுதுகின்றது.

சமர் என்ற சொல், சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. கொற்ற வையைச் சமரி என்றும் கூறுகிறது. சிலப்பதிகாரம் தரும் செய்தியில், சமர் என்பதற்குப் போர் என்றே பொருள் சொல்லப்பட்டுள்ளது.

சுமேரியர்களைப் பற்றிய மற்றொரு செய்தியில், சுமேரியர்கள், பாரசீக வளைகுடா வழியே வந்து, மெசபத்தோமியாவின் தென் பகுதியைப் போரில் வென்று, தங்கள் ஆட்சியை அப்பகுதியில் உருவாக்கினர் என்ற செய்தியும் சொல்லப்பட்டுள்ளது. அவ்வாறான போர் பற்றிய குறிப்புகள் எங்கும் சொல்லப்படவில்லை. எனவே, சமர் – சுமர் என்ற சொற்கள் பற்றிய குறிப்புகள் அறியப்படாதவரை, அம்மக்கள் தங்களை அழைத்துக் கொண்டவாறு, "கறுப்பு மக்கள்", "கறுப்பினம்" என்று அழைப்பதே பொருத்தமானது. சுமேரியர் என்று ஐரோப்பியர்கள் வைத்த பெயர், பல்வேறு கேள்விகளுக்கு விடையளிக்க முடியாத சொல் எனக் கருதலாம்.

சுமேரியர் என்ற பெயரை நம்மால் ஏற்க இயலவில்லையென்றாலும், அவர் தம் வரலாற்று நிகழ்வுகளை, அப்பெயரைக் கொண்டே சுட்டி எழுதுவது, படிப்பவர்களுக்கும் குழப்பத்தைத் தவிர்க்கும் என்பதால், சுமேரியர் என்ற சொல்லே இங்கும் பயன்படுத்தப்படுகிறது. சுமேரியர்கள், எக்காலத்தில் மெசபத்தோமியாவில் குடியேறினர் என்பதை, ஆய்வாளர்கள் சான்றுகளுடன் வெளிப்படுத்தவில்லை. தமிழர் வரலாறு, கி.மு.500 ஆண்டுகள் என, தமிழ்நாடு தொல்லியல் துறை அறிவித்ததைப் போல, சுமேரியர்களின் வரலாறு, கி.மு.4500 ஆண்டுகளில் தொடங்குவதாக அறிவித்துள்ளனர். இது நாட்டுப்புற மக்கள் கூறுவது போல், அள்ளு புள்ளிக் கணக்காகத்தான் உள்ளது. தற்கால ஆய்வாளர்கள், இக்காலக் கணக்கை ஏற்றுக் கொள்ளவில்லை. கி.மு.10000 ஆண்டுகளிலேயே, யூப்ரதீஸ் தைகிரீஸ் ஆற்றுச் சமவெளிகளில், வேளாண்மைத் தொழில் தொடங்கப்பட்டது என்று ஆய்வாளர்கள் உறுதி செய்வதால், சுமேரியரின் காலம், மேலும் சில ஆயிரம் ஆண்டுகள் முன்னுக்குத் தள்ளப்பட வேண்டும் எனக் கருதுகின்றனர். எனவே, கி.மு.8000 – 6000 ஆண்டுகளில், சுமேரியர்களின் குடியேற்றம் நிகழ்ந்திருக்க வாய்ப்புகள் உண்டென்பது ஆய்வாளர்களின் கருத்தாக உள்ளது.

நாகனின் மக்கள் குடியேறிய காலத்திலேயே வேளாண்மை அறிமுகம் செய்யப்பட்டது என்றாலும், மக்கள் தொகை பெருக்கம் காரணமாக, பலரும் கூட்டம் கூட்டமாக நாலா திசைகளிலும் பரவிச் சென்று விட்டனர் என அறியலாம். சுமேரியர்கள் அப்பகுதியில் குடியேறும் முன்பு, முறையான அரசுகள் எவையும் மெசபத்தோமியாவில் இருந்ததற்கானச் சான்றுகள் இல்லை. விவிலியமும், நான்கு திசைகளிலும் அம்மக்கள் பிரிந்து சென்றதைப் பற்றி மட்டுமே கூறுகிறது. மன்னர்கள், அரசுகள் பற்றி

எச்செய்தியும் சொல்லப்படவில்லை. சுமேரியர்களுக்கு முன்பு மெசபத்தோமி யாவில் குடியேறியவர்கள், நாகனின் (நோவா) மரபினரே என்று ஐரோப்பிய ஆய்வாளர்கள் கூறுகின்ற வேளையில், சிலர் அவர்களை அல்லது வேறொரு இனத்தைச் சுட்டுகின்றனர். உவை (Ubai) என்ற இனத்தார், முதன் முதலில் அங்கு குடியேறினர் என்ற கருத்தையும் முன் வைக்கின்றனர். உவை இனத்தார் (Ubaids) பயன்படுத்திய கற்காலக் கருவிகள் பலவற்றைத் தொல்லியல் ஆய்வாளர்கள் கண்டெடுத்துள்ளனர். அவை வழியில், அம்மக்கள் பற்றிய வரலாறு எதுவும் வெளிப்படவில்லை.

உவையர் (Ubaids) என்ற பெயர் கூட, ஐரோப்பியர்ள் இட்ட பெயரே. அம்மக்களின் இனம் எதுவென அறியப்படாத நிலையில், உவை என்ற பெயர்கொண்ட ஓர் ஊருக்கு (மேட்டு நிலம்) அருகில் அப்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டதால், அப்பெயர் சூட்டப்பட்டது.

உவ்வுதல் என்றால் மகிழ்தல், ஒளிர்தல் என்றவாறு தமிழில் அறியப்படும்.

உவை : மகிழ்ச்சி, குளிர்ச்சியான ஒளி.

உவா : முழு நிலவு நாள். வெள்ளுவா என்றும் சொல்லப்படும்.

சுமேரியருக்கு முன்பே, அவ்வூர் உவை - உவா என அழைக்கப்பட்டதா எனத் தெரியவில்லை. எவ்வாறாயினும், உவை என்பது, மகிழ்ச்சியான இடம் என்ற பொருளில், தமிழர்கள் வைத்த பெயராக இருந்திருக்க வேண்டும். உவையர் (ubaids) என்ற சொல்லுக்கான பொருளை ஆய்வாளர் தரவில்லை என்பதோடு, தெரியவில்லை என்றும் கூறியுள்ளனர். எனவே, அம்மக்களை, முன் யூப்ரதீஸ் மக்கள் (Proto - Euphrateans) என்று பதிவு செய்துள்ளனர். தெரியாத மொழியை முன்மொழி (Proto - Language) என்று சொல்லும் வழக்கைப் போலவே, இப்பெயரும் சொல்லப்பட்டது என்க[6].

யூப்ரதீஸ் என்ற பெயரே, தமிழ் மூலத்திலிருந்து திரிந்த தமிழ்ப் பெயரே என்று ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. அவர்கள் யாராக இருந்தாலும், வேட்டையாடி உணவு தேடும் நிலையிலிருந்து, வேளாண்மைத் தொழிலுக்கு உயர்ந்தவர்கள் என்றும், கி.மு.5000 ஆண்டுகளில் வேளாண் தொழிலை மேற்கொண்டிருந்தவர்கள் என்றும் சொல்லப்படுகிறது. இது, பொதுவாக அனைத்து வரலாற்று ஆசிரியர்களும் கூறும் பொதுவான கருத்து. கடந்த பல்லாயிரம் ஆண்டுகளாக வேட்டையாடி உண்ட மக்கள், இப்போதும் உள்ளனர். அவர்கள் ஏன் வேளாண்மைக்குத் திரும்பவில்லை என்ற கேள்விக்கு ஆய்வாளர்களால் விடை கூற இயலாது. மெசபத்தோமியாவில்

வேட்டையாடி உண்ட மக்கள், கி.மு.75000 ஆண்டுகளிலேயே இருந்தனர் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். கி.மு.10000 ஆண்டுகளில், வேளாண் தொழில் செய்யத் தெரிந்த மக்கள், மெசபத்தோமியாவில் குடியேறிய பின்னரே அத்தொழில் அங்கு வளர்ந்தது. ஏற்கனவே இருந்த பழங்குடி யினரும் வேளாண் தொழிலைக் கற்றிருக்க வாய்ப்புகள் உண்டு. உவையர் இனமக்கள் பயன்படுத்திய பொருட்கள், அவர்களைப் பழங்குடியினராகக் கருத இயலவில்லை. கட்டிடங்கள், செங்கற்கள், கத்தி, வாள், கலைப் பொருட்கள், வண்ணம் பூசப்பட்ட பானைகள், ஆண் பெண் உருவங்கள் என அப்பட்டியல் நீள்வதால், சுமேரியருக்கு முன்பே, நாகரிகக் கூறுகளை முன்னெடுத்துச் சென்றவர்களாக, உவையர் கருதப்படுகின்றனர்.

மெசபத்தோமியாவின் முதல் ஆட்சியாளர்களாக, சுமேரியர்கள் கருதப்படுகின்றனர். அவர்கள் எக்காலம் முதல் ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர் என்பது தெரியவில்லை. ஆய்வாளர் சாமுயெல் நோவா கிராமர், "சுமேரிய மன்னர்களின் பட்டியல் மிக நீளமானது ; எட்டணா அல்லது எட்டண்ணா என்பவன், கி.மு.2800 ஆண்டுகளில் ஆட்சி செய்தான் ; எட்டண்ணா, தனது ஆட்சிப் பரப்பைச் சீர்படுத்தி நிலை நிறுத்தினான்", என்று அப்பட்டியலைப் படித்து விளக்கமளித்துள்ளார்[7]. கி.மு. 2100 ஆண்டுகளில், லாகேஷ் நகரத்து அரசாங்கப் பதிவாளர் (Scribe), சுமேரிய மன்னர்களின் பட்டியலைக் குறித்துள்ளார். அப்பட்டியலின் முதல் மன்னனின் ஆட்சிக் காலத்தைக் கணக்கிட்டால், அது கி.மு. 5000 ஆண்டுகளுக்கு முன் செல்கிறது.

மெசபத்தோமியர்கள், குறிப்பாக சுமேரியர்கள், தாங்கள் நடைமுறைப் படுத்திய ஆட்சி முறையும், நாகரிகக் கூறுகளும், தங்கள் கடவுளர்கள் அளித்த கொடைகளாகவே கருதுகின்றனர். அவற்றை அளிக்க கடவுளர் முன் வந்தபோது, கடவுளரிடையே குழப்பம் மிகுந்து, ஒரு பகுதியினர் அக்கொடைகளைத் தடுத்ததாகவும், அவர்களை வென்ற பிறகே, சுமேரியர்களுக்கு அக்கடவுளர்கள் உதவி செய்ததாகவும், சுமேரியர்கள் நம்பியிருந்தனர். மன்னராட்சி முறை மரபு அடிப்படையில், தந்தை - மகன் - பெயரன் என்றவாறு நடைமுறைப்படுத்தப்பட்டது. ஊருக் நகரத்தை கி.மு.2100 ஆண்டுகளில் ஆட்சி செய்த உடு - எகல் (utu Hegal), மரபுப்படியே மன்னன் ஆனான் என்று அப்பட்டியல் குறிப்புக் கூறுகிறது.

உடு (utu) என்பதற்குச் சூரியன் என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது.

உடு என்ற தமிழ்ச் சொல், பொதுவாக விண்மீனைக் குறித்தாலும், வானத்து உறுப்புகளையே குறிக்கும்.

எகல் என்பதற்கான பொருள் விளக்கப்படவில்லை. உடு - எகல் என்பது, சூரியனைப் போன்ற ஒளியும் ஆற்றலும் கொண்டவன் என்ற பொருள் பெறப்படும். ஊருக் (uruk) என்ற சொல்லில், ஊர் என்ற தமிழ்ச் சொல் உள்ளது. ஈற்றெழுத்து எதனைக் குறிக்கிறது என்பது தெரியவில்லை. ஊருக் நகரை ஆண்டவன், உடு எகல் என்று அப்பட்டியல் கூறுகிறது. அவனே அப்பட்டியலில் கண்டுள்ள மன்னர்களில் நீண்ட காலம் ஆட்சி செய்தவன் என்றும் சொல்லப்படுகிறது. எட்டண்ணா என்ற மன்னன், ஒரு கழுகின் மேலமர்ந்து விண்ணகத்துக்குச் சென்று வந்தவன் என்று தொன்மக் கதையொன்று கூறுகிறது. அப்பட்டியலில் தமுழ் (Tammuz), கில்காமேஷ் (Giegamesh) என்பவர்களின் பெயர்களும் காணப்படுகின்றன. சுமேரியத் தொன்மக் கதையான கில் காமேஷ், வெள்ளக் காலத்துக்குப் பிறகு அறியப்பட்ட கதையாகும். (கில் காமேஷ் என்ற பெயர், சிந்து வெளி எழுத்துக் குறிப்புகளிலும் காணப்படுவதாக ஈராஸ் பாதிரியார் கூறுகிறார்.) மன்னர் களின் பட்டியலில் கண்டுள்ள பலர், மனித ஆற்றலுக்கு மேம்பட்டவர்களாகச் (Super human) சொல்லப்பட்டுள்ளனர்.

சுமேரியக் குறிப்புகளின்படி, 330 கடவுளர்கள் இருந்தனர். அவர்கள் அடிக்கடி தங்களுக்குள் முரண்பட்டுக் கொண்டிருந்தனர். அக்கடவுளர் அனைவரும் சேர்ந்தே உலகத்தையும், பேரண்டத்தையும், உயிர்களையும், மனிதர்களையும் படைத்தனர். கடவுளர் என்ன சொல்கின்றனரோ, அதை நிறைவேற்றப் பணியாளர்கள் இவ்வுலகததில் தேவைப்பட்டனர். அவர்களே மக்களாவர். மக்கள் கடவுளரின் பணியாட்கள் என்றும் (Co - labourers with gods), அம்மக்களை வழிநடத்த, கடவுளரே மன்னர்களை நியமித்தனர் என்றும் நம்பப்பட்டது. மக்களை என்றும் பணியாளர்களைக் கொண்டு, இவ்வுலகம் இயங்குவதற்கு கடவுளர் வழி வகை செய்தனர். கடவுளரை எதிர்க்கும் தீய சக்திகளோடு, மக்களும் இணைந்து போரிட்டனர். தங்களால் இயலாத நேரங்களில் மக்கள் உதவியையும் நாடினர். சுமேரியக் குறிப்புகள், கடவுளர்க்கும் மன்னனுக்கும் உள்ள நெருக்கமான உறவை வெளிப்படுத்து கின்றன. தம் இனத்தின் வரலாற்றை எழுதி வைப்பதைப் பற்றிய சிந்தனைகள், அக்காலத்து எழுத்தாளர்களுக்கு (Scribes) இருந்திருக்க வில்லையென்றும், சில குறிப்புகளை மட்டுமே பதிவு செய்துள்ளனர் என்றும், அதனால் சுமேரியரின் முழுமையான வரலாற்றை அறிய இயலாமற்

போயிற்று என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். எழுதப்பட்டுள்ள குறிப்புகளைவிட, அகழ்வாய்வுப் பொருட்களே, பல செய்திகளை அறிய உதவுகின்றன. அகழ்வாய்வுகளில் கிடைத்த பொருட்களைக் கொண்டு ஓரளவுக்கே நிகழ்வுகளை அறிய முடிவதாகவும், முழுமையான செய்திகளை அறிய இயலவில்லையென்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

**நகரங்களின் எழுச்சி :**

சுமேரிய நாகரிகம், கி.மு.3600 ஆண்டுகளில் நடைமுறைப்படுத்த போது, சக்கரத்தின் பயன்பாடு, எழுத்துமுறை, கொடி மரம் தாங்கிய பாய்ப்பட்ட மரக்கப்பல், வேளாண்மைத் தொழில் நுட்பங்கள், நீர்ப் பாசன முறைகள், நகர வடிவமைப்பு போன்றவை கண்டறியப்பட்டன என்றும், உலகின் முதல் கண்டுபிடிப்புகளாக இவை கருதப்பட்டன என்றும் கடந்த நூற்றாண்டுகளில் சொல்லப்பட்டன. சுமேரியர்களுக்கு முன்பே, இந்தியாவில் (சிந்துவெளி மற்றும் தமிழகத்தில்) அவை நடைமுறையில் இருந்தன என்பதைப் பலரும் கூறி வந்த நிலையில், தற்காலத்து ஆய்வாளர்கள், ஊர், ஊருக் நகரங்களுக்கு முன்பே, இந்தியாவில் மொகஞ்சதாரோ, தொலவீரா, லோத்தள், பாடலிபுத்திரம் போன்ற வட இந்திய நகரங்களும், மதுரை, கொற்கை, வஞ்சி, முசிறி, காஞ்சி போன்ற தென்னிந்திய நகரங்களும், சீனாவில் பல நகரங்களும் இருந்தன என்பதை தற்கால ஆய்வாளர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

சக்கரம் என்ற சொல், தமிழ் மூலத்தைக் கொண்டது.

சறுக்கிச் செல்வதாலும், மையப் புள்ளியினின்றும் ஆரங்களைக் கொண்டிருந்ததாலும்,

சறுக்காரம் என்றே சொல்லப்பட்டது. சறுக்காரம் - சர்க்கரம் - சக்கரம் என்றானது.

சக்கரம் - சக்ரா என்று சமற்கிருதத்தில் திரிந்தது.

சக்கரத்தின் சுற்றளவைக் கருத்தில் கொண்டே, Circum என்ற சொல் தோன்றியது.

வீல் (wheel) என்ற சொல், வளைவு (வில்) என்ற பொருளில் சொல்லப்பட்டது.

வில் - வீல் எனத் திரிந்தது.

சறுக்கு என்பது வட்டத்தையும் குறித்து, செக்கு என்றானது.

சக்கரத்தில் அரைக்கப்பட்ட கரும்பின் சாறு, சக்கரை என்ற இனிப்புப் பொருளானது.

குண்டு வெல்லம் – குண்டு – கண்டி (Candy) எனத் திரிந்தது.

உருள் – உருளுதல் – உருட்டு என்பதே, Rotate எனப்பட்டது.

சக்கரம், வட்டம், சுற்றளவு போன்ற உலகின் அனைத்து மொழிச் சொற்களும் தமிழ் மூலத்தில் உள்ளவை என்பதால், சக்கரத்தைக் கண்டுபிடித்தவன் தமிழனே என்க.

சுமேரியரின் எழுத்து முறைக்கு முன்பே, தமிழில் எழுத்து முறை அறியப்பட்டிருந்தது. சிந்து வெளியின் முத்திரை எழுத்துகள், கி.மு.9500 காலத்தைச் சார்ந்தவை என இன்று அறிவிக்கப்பட்டுள்ளது.

பாய் மரக்கப்பல்கள், தமிழகத்திலேயே முதன் முதலில் உருவாக்கப் பட்டன. முரட்டுத் துணியில் புளியங்கொட்டை மாவைக் கலந்து பாய்கள் தயாரிக்கப்பட்டன. பாய் என்பது பிற்காலச் சொல்லாகும். சீலை என்பதே பழந்தமிழ்ச் சொல்லாகும். சீலையின் உதவியால் மரக்கலம் இயக்கப்படுவ தால், சீலை – Sail என்று சொல்லப்பட்டது. கடலோடுவதற்கே, சீலை Sail என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது.

தாமிரவருணி, வையையாற்று நீர்ப்பாசனத் திட்டங்கள், உலகில் முதன் முதலில் அறிமுகப்படுத்தப்பட்ட வேளாண்மைத் தொழில் நுட்பங்களாகும். பாண்டிய நாட்டின் நீர்ப்பாசன முறையே, யூப்ரதீஸ் – தைகீரிஸ் சமவெளி களிலும், எகிப்தின் நைல் ஆற்று நீர்ப்பாசனத் திட்டங்களிலும் பயன்படுத்தப் பட்டன. கல்லணையைப் போன்ற ஓர் அணை, நைல் ஆற்றின் கழிமுகத்தில் (அலெக் சாந்திரியா அருகில்) கட்டப்பட்டிருந்ததாகவும், அதன் கட்டுமானம் அழிந்து போன நிலையில், தரைக் கட்டுமானம் அழியாமல் உள்ளது. அதனை ஆய்வு செய்த நீர்ப்பாசனத்துறை அறிஞர்கள், உலகில் எங்கும் காணாத தொழில்நுட்பத்துடன், அக்கட்டுமானம் அமைந்திருந்ததைக் கண்டு வியந்தனர். அதே கட்டுமானம் உலகில் வேறெங்கும் உள்ளனவா என்பதை அறிய முயன்றவர்கள், சென்ற நூற்றாண்டில் கல்லணையைக் கண்டு வியந்தனர். தரைக் கட்டுமானம் இரண்டு அணைகளிலும் ஒரே தொழில் நுட்பத்தைக் கொண்டிருந்தன. தமிழனின் நீர்ப்பாசன தொழில் நுட்பம் பற்றி ஒரு விரிவான நூலே எழுதும் அளவுக்குச் செய்திகள் உள்ளன.

நகர வடிவமைப்பு, சுமேரியர்களின் பொறியியல் அறிவுக்குச் சான்றாகச் சொல்லப்படுகிறது. கி.பி.1850 களில், ஊர் நகரம் அகழ்வாய்வு செய்யப்பட்டது. ஏறக்குறைய 50 ஆண்டுகள் நடைபெற்ற அகழ்வாய்வில், அந்நகர் முழுவதும் தோண்டி எடுக்கப்பட்டு, அதன் நகரமைப்பு வரைபடம்

உருவாக்கப்பட்டது. 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அவ்வரைபடம், நகரக் கட்டமைப்புப் பொறியாளர்களால் பெரிதும் வியந்து பாராட்டப்பட்டது. 1930 - 60 ஆண்டுகளில் சிந்து வெளியில் அகழ்வாய்வுகள் முடிக்கப்பட்ட நிலையில், மொசஞ்சதாரோ, தொல வீரா, அறப்பன், லோத்தள் நகரங்கள், ஒரே மாதிரியான நகர வடிவமைப்பைக் கொண்டிருந்ததைக் கண்டுபிடித்தனர். இதில் வியப்புக்குரிய செய்தி என்னவென்றால், ஊர் நகரத்தின் வடிவமைப்பும் சிந்து வெளி நகரத்தின் படி (copy) யைப் போலவே அமைந்திருந்தது. இதற்குப் பின்னரே, மேலை நாட்டு ஆய்வாளர்கள், தங்கள் சிந்தனைகளை மாற்றிக் கொள்ள முற்பட்டனர். ஊர் நகரம் - கி.மு. 3600 ஆம் ஆண்டு களிலும், மொகஞ்சதாரோ - கி.மு.9500 ஆண்டுகளிலும், தொலவிரா - கி.மு.6000 ஆண்டுகளிலும் - லோத்தள் - கி.மு.5000 ஆண்டுகளிலும், அறப்பன் - கி.மு.4000 ஆண்டுகளிலும் அறியப்பட்டுள்ளன. தமிழ்நாட்டின் மதுரை நகரம், கி.மு.10000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. மேற்கண்டவை யெல்லாம் கற்பனைக் கணக்குகள் இல்லை. சான்றுகளுடன் நிறுவப் பட்டவை. கி.பி.2000 ஆண்டில், பூம்புகாருக்குக் கிழக்கே வங்கக் கடலில் கண்டறியப்பட்ட நகரம், கி.மு.11500 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாகச் சொல்லப்பட்டது. ஊர் நகரத்து வடிவமைப்பைக் கொண்டே, சுமேரியர்கள் யார், அவர்கள் எந்த இனத்தைச் சார்ந்தவர்கள் என்பதைக் கூறிவிட முடியும். ஊர் என்ற சொல்லே தமிழாய் இருக்க, அந்நகரைக் கட்டியவன் யாராக இருக்க முடியும் ?

சுமேரிய நகரங்களாக ஈரிடு, ஊருக், ஊர், இலார்சா, இசின், அதாப் குல்லா, இலாகேஷ், நிப்பூர், கிஷ் ஆகியவை சிறப்பாக அறியப்பட்டுள்ளன. இவ்வூர்கள் அனைத்தும், சுமேரியர்கள் இட்ட பெயர்கள் இல்லையென்றும், சுமேரியருக்கு முன் வாழ்ந்திருந்த உவையர் என்ற இனத்தார் வைத்த பெயர்களே என்றும், கிராமர் கூறுகிறார். அக்காலத்தில் சிற்றூர்களா யிருந்தவை, பிற்காலத்தில் சுமேரியர் காலத்தில் நகரங்களாக மாற்றம் பெற்றன என்று கூறுகிறார். மேற்கண்ட ஊர்ப்பெயர்கள் அனைத்தும் சுமேரியச் சொற்கள் அன்று என்பதும், உவையர் இன மக்களின் மொழிப் பெயர்களே என்பதும் கிராமரின் ஆய்வுகளில் தெரியவந்துள்ளது. இதன் அடிப்படையில் நோக்கும் போது, ஈரிடு, ஊருக், ஊர், நிப்பூர் போன்றவை தமிழ்ச் சொற்களாகவே உள்ளன என்பதை நோக்கும் போது, உவையரும் தமிழ் மரபைச் சார்ந்தவர்களே எனக் கருத இடமுண்டு. சுமேரியர் காலத்தில் உருவான நகரங்களாக, சிப்பார், சுருப்பாக், பத் - திபிரா, கிர்சு, உம்மா,

ஊருகாக், நினா, கிசுரா போன்றவை அறியப்படுகின்றன. சுருப்பாக் (கம்) என்பதும், உம்மா, ஊருகாக் (க்), நினா அல்லது நைனா போன்றவை தமிழ்ப் பெயர்களாக உள்ளன. சுருப்பாக் (கம்) என்பது, சிறுப்பாக்கம் என்றும் சொல்லப்பட்டிருக்கலாம். இவையனைத்தும், கி.மு.5000 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய ஊர்கள் என்று கிராமர் கருதுகிறார்[8].

கி.மு.4000 ஆண்டுகளுக்குப் பிறகு, சுமேரியாவில் நகர அரசுகள் தோன்றின. அவை ஒவ்வொன்றும், தங்களுக்கான எல்லைகளைப் பெற்றிருந்தன. இயற்கையான காடுகள், மலைகள், ஆறுகள் போன்றவை எல்லைகளாக இருந்தன. சில இடங்களில் எல்லைகளைக் குறிக்க, கற்றூண்கள் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு நகரமும் ஒரு கோயிலைக் கொண்டிருந்தது. அக்கோயிலில் குடியிருந்ததாக நம்பப்பட்ட கடவுளே, அந்நகரத்தின் காவல் தெய்வமாகவும் இருந்தது. சில நகரங்களில், பெண் தெய்வம் காவல் தெய்வமாயிற்று. சமயத் தலைவனோ அல்லது மன்னனோ அந்நகரத்தை ஆட்சி செய்தனர். சமயச் சடங்குகளுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டது. தொடக்கத்தில் ஐந்து நகரங்கள், மரபு வழியில் ஆட்சி செய்தன. 13 சிறப்பான பெரு நகரங்களாகவும், 10 சிறிய நகரங்களாகவும் பதிவுகளில் உள்ளன. மேற்கண்ட 28 நகரங்களும் இன்று கண்டறியப் பட்டுள்ளன. அவை, புதிய பெயர்களால் அழைக்கப்பட்டு வருகின்றன. அந்நகரங்களின் பழைய பெயர்களில் சில மேலே சொல்லப்பட்டுள்ளன. அவை பெரும்பாலும் தமிழ் மூலத்திலேயே உள்ளன. குறிப்பாக ஊர் (தெல் - அல் - முகய்யார்), நகரம் எனப்பட்ட நகர் (தெல் - பரக்) ஆகிய தமிழ்ப் பெயர்களையே கொண்டுள்ளன. பெரும்பாலான நகரங்கள், யூப்ரதீஸ் தைகிரீஸ் ஆறுகளுக்கு இடைப்பட்ட சமவெளியில் அமைந்திருந்தன. அப்பகுதியை படன் அறம் (Padan Aram) என்று எபிரேய மொழி சுட்டுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. Mount Carmel : A mountain on the border of Asher (Joshua, 19 : 26). It rises to a height of 2000 ft., but ascends steeply from the sea the skeleton remains found there which are decided that the inhabitants of the past, lived around 75000 years ago.
   - D.O.B. P.122.
2. The people came from the east, settled at the land of Shinar - Genesis, 11 : 1.
3. Nile : Lake Victoria took its full capacity after the great floods, over flowed and created the River Niles.
   - African History, Part I, UNESCO, 1970.

4. The commercial navigation between Lothal and Mesopotamia, is known through the materials discovered in both sites.
   - S.R. Rao, Lothal, the Indus civilization, 1964.

5. Sumar : Sumar was the southernmost negion of ancient Mesopotamia (modern Iraq and Kuwait) which is generally considered the cradle of civilization. The name comes from Akkadian and means, "Land of the civilized kings". The Sumerians called themselves," the land of black headed people", and their area was simply called "The Land". In the Biblical Book of Genesis, Sumer is known as Shinar. The Gods of Sumerians first gave human beings the gifts necessary for cultivating society, by establishing the city of Eridu in the region of sumer. The city Uruk is held to be the oldest city in the world and it was Eridu, the order was established and civilization began.
   - Joshua J.Mark, An essay published on Sumber 28.4.2011,

6. Proto - Euphrateans : The region of Sumber was long thought to have been first inhabited around 4500 B.C. This date has been contested in recent years, however, and it now thought that human activity in the area began much earlier. The first settlers were not Sumerians but a people of unknown origin whom archcologists have termed the Ubaid people (from the exeavated mound of al - ubaid where the articrafts were uncovered which first attested to their existence,) or the Proto - Euphrateans (which designates them as earlier inhabitants of the region of the Euphrates river).
   - Ibid.

7. "The first ruler of Sumer, whose deeds are recorded, if only in the briefest kind of statement, king by the name of Etana of Kush, who may have come to the throne quite early in the 3rd millennium B.C., in the king list, he is described as "he who stabilized all the lands".
   - Samuel Noah kramer, "History Begins at Sumer" University of Pennsylvania, 1971.

8. Rise of the cities : Whenever the Sumerian civilization was first established in the region by 3600 B.C., they had invented the wheel, writing, the sail boat, agricultural processes such as irrigation, and the concept of the city (though India also lay claim to the first cities in the world, as well as China). It is generally accepted that the first cities in the world rose in Sumer and, among the most important, were Eridu, Uruk, Ur, Larsa, Isin, Adab, Kullah, Lagesh, Nippur, and Kish. The city of Uruk is held to be the first true city in the world. It has been noted by Kramer, that these names are not Sumerian but come from the Ubaid people and so were founded, at least as villages, much earlier than 5000 B.C. Other cities in Sumer were Sippar, Shuruppak, Bad - Tibira, Girsu, Umma, Urukag, Nina and Kissura.
   - Kramer.

## 2. சுமேரியத் தமிழர் வரலாறு

சுமேரியர் வரலாறு, கி.மு.2700 ஆண்டுகளுக்குப் பிறகே, பதிவு செய்யப்பட்ட குறிப்புகளிலிருந்து ஓரளவு பெறப்பட்டுள்ளது. அதற்கு முற்பட்ட காலங்களில், சுமேரியர் வரலாறு தெளிவுபடுத்தப்படவில்லை. அக்காலங் களில், உவையர் (Ubaids) மற்றும் ஊருக் மன்னர் மரபுகள் ஆண்டிருந்தனர் என்று சொல்லப்படுகின்றது. கி.மு.2700 - 2300 ஆண்டுப் பதிவுகள், தற்கால ஆய்வாளர்களால், புதிய கண்ணோட்டத்தில் படிக்கப்பட்டன. அப்பதிவுகளை, அண்டை நாட்டு வரலாற்றுக் குறிப்புகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து, ஒரு முடிவுக்கு ஆய்வாளர்கள் வந்துள்ளனர். ஆய்வாளர்கள் கொடுத்துள்ள அண்மைக் காலப்பட்டியல் வருமாறு :

1. உவையர் காலம் (Ubaid period) - கி.மு.6500 - 4100
2. ஊருக் ஆட்சிக்காலம் (Uruk period) - கி.மு.4100 - 2900

   அ. முதல் ஆட்சிக் காலம் - கி.மு.4100 - 3300

   ஆ. இரண்டாம் ஆட்சிக் காலம் - கி.மு.3300 - 3100

   இ. மூன்றாம் ஆட்சிக் காலம் - கி.மு.3100 - 2900
3. தொடக்க கால மரபுகள் (Early dynastic period) - கி.மு.2900 - 2334

   அ. தொடக்க காலம் - முதல் பகுதி - கி.மு.2900 - 2800

   ஆ. தொடக்க காலம் - இரண்டாம் பகுதி - கி.மு.2800 - 2600

   இ. தொடக்க காலம் - மூன்றாம் பகுதி - கி.மு.2600 - 2500.

   ஈ. தொடக்க காலம் - நான்காம் பகுதி - கி.மு.2500 - 2334.
4. அக்காடியப் பேரரசுக் காலம் (Akkadian Empire Period) - கி.மு.2334 - 2218.
5. குடி இன மக்கள் காலம் (Gutian period) - கி.மு.2218 - 2047.

6. மூன்றாம் ஊர் நகர ஆட்சிக் காலம் (Ur III Period) - கி.மு.2047 - 1940[9].

மேற்கண்ட தகவல்களை, கிராமர் முறைப்படுத்தியுள்ளார்.

## உவையர் காலம் (கி.மு.6500 - 4100) :

சுமேரியருக்கு முன்பு ஆண்டிருந்ததாகக் கருதப்படும் மன்னர் மரபு. இதன் தொடக்கம், கி.மு.6500 என்று சொல்லப்பட்டிருந்ததாலும், மேலும் அதன் காலம் முன்னே செல்லவும் வாய்ப்புள்ளதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஐரோப்பிய ஆய்வாளர்கள் கூறும் செய்திகளின்படி, மெசபத்தோமியாவில் முதல் குடியேற்றம், கி.மு.10000 ஆண்டுகளில் நிகழ்ந்தது என்று சொல்லப்பட்டுள்ளது. அக்காலத்திலேயே, வேளாண்மையும் அறிமுகமாயிற்று. கி.மு.10000 - 6500 ஆண்டுக்கால இடைவெளியை வரலாறு நிரப்பவில்லை. ஏறக்குறைய 3500 ஆண்டுகள், மெசபத்தோமி யாவின் நிகழ்வுகள் எவை என்று தெரியவில்லை. ஒரு நாகரிக இனம், வேளாண்மையை முன்னெடுத்துச் சென்றது என்பதால், அவர்கள் தங்களுக்குள் ஓராட்சி முறையை நடைமுறைப்படுத்தியிருக்க வேண்டும். சுமேரியருக்கு முன் குடியேறியவர்கள், நாகரிக மக்களாகவே கருதப்படுவ தால், மெசபத்தோர்மியாவில் முதல் நாகரிகக் கூறுகள், கி.மு.10000 ஆண்டுகளிலேயே தொடங்கி விட்டன எனக் கருதலாம். சுமேரிய நாகரிகம், அதன் தொடர்ச்சியும் வளர்ச்சியுமாகவே கருதப்படும்.

உவையர் என்ற மரபினர், மரபு ஆட்சி முறையை, அந்த இடைப்பட்ட 3500 ஆண்டுக்கால அளவில் தொடங்கியிருக்க வேண்டும். அவர்களுடைய ஆட்சித் தொடக்கம், கி.மு.6500 என்பது கூட, ஆய்வாளர்களின் கருதுகோளே எனலாம். உவையர் காலத்திலேயே நாகரிகத்துக்கான வித்து ஊன்றப்பட்டது. சுட்ட செங்கற்களும், சூளையிட்ட பானைகளும், பானை களின் மேல் தீட்டப்பட்டுள்ள வண்ணங்களும், உவையர்கால நாகரிகச் சின்னங்களாகக் கருதப்படுகின்றன. அத்தகைய பொருட்களோடு, கலை நுணுக்கம் நிறைந்த கைவினைப்பொருட்களும் அறியப்பட்டுள்ளன. அவை, மெசபத்தோமியா மற்றும் பாரசீக வளைகுடாப் பகுதியெங்கும் கிடைத்துள்ளன. உவையர் காலத்தின் முதல் நகரமாக ஈரிடு சொல்லப்படுகிறது. ஈரிடு என்ற சொல், தமிழ்ச் சொல்லாக உள்ளதை நோக்குகையில், உவையர் இனம், தமிழர் மரபோடு தொடர்புடையதாக இருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு. மீ (Me) என்ற சொல், தங்கள் நாகரிகப் படைப்புகளை, இனன்னா தேவதைக்கு அளிக்கும் சொல்லாகக் கருதப்படுகிறது.

மீ என்ற தமிழ்ச் சொல், உயர்வையும், உயரத்தையும் குறிக்கிறது.

மீ மிசை யென்பது, உயர்ந்த வானத்தைக் குறிக்கும்.

மீ என்பது தொலைவையும் குறிக்கும்.

மீமீ செல் என்ற தமிழ்ச் சொற்கள், வெகு தொலைவு செல்லும், மரக்கலங்கள் நிறைந்த ஊரைக் குறிக்கின்றது. புதுக்கோட்டை மாவட்டத்தின் மீன்பிடித் துறைமுக நகரமாக மீமீசெல் உள்ளது. தற்காலத்தில் மீமிசல் என்று வழக்குச் சொல்லாயிற்று.

மீ என்ற சொல், இனன்னாவுக்குப் படைக்கப்பட்ட உயர்ந்த பொருளைக் குறிக்கின்றது.

ஊருக் நகரத்தின் காவல் தெய்வமான இனன்னா, காதல் – போர் ஆகிய துறைகளுக்கான தேவதையாகக் கருதப்பட்டாள். என் கை (Enki) என்ற கடவுள், அறிவின் கடவுளாக, ஈரிடு நகரில் போற்றப்பட்டான்[10].

**ஊருக் காலம் :[11]**

தொல்லியல் துறையினர் கண்டுபிடித்த பல்வேறு பொருட்கள், உவையர் காலத்துத் தொழில் நுட்பம், மெல்ல வளர்ந்து, ஊருக் காலத்தில் வெளிப் பட்டுள்ளன. வண்ணப் பூச்சுகள் கொண்ட பானைகள், சக்கரங்களின் உதவியுடன், பொருட்கள் ஏராளமாக செய்யப்பட்டன. மக்கள் பயன்பாட்டுக்குத் தேவையான அளவில், வண்ணப் பூச்சுகளின்றி உருவாக்கப்பட்டன. பல்வேறு வடிவங்களில் குவளைகள், சட்டிகள், பானைகள், நீர்க்கலங்கள் என விரிந்தன. தாழிகளைப் போன்ற உருவில் பெரிய கலங்களும் உருவாக்கப்பட்டன. ஊருக் காலம், மட்கலங்களை பெருமளவில் செய்யும் காலமாகக் கருதப்படுகிறது. ஊருக் காலத்தில் (கி.மு.4100-2900), வணிகம் சிறப்புற்றிருந்தது. உள்நாட்டில் உற்பத்தியான பொருட்கள், ஆற்றுநீர் வழியில், பல இடங்களுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. அக்காலத்தில் நீண்ட தொலைவிலான உள்நாட்டு வணிகத்துக்கு, நீர் வழியே பெரிதும் பயன்படுத் தப்பட்டது. ஆற்றங்கரைகளுக்கு அப்பால் இருந்த நகரங்கள், செயற்கை யாகத் தோண்டப்பட்ட கால்வாய்கள் மூலம், ஆற்றுடன் இணைக்கப்பட்டன. கோயில்கள் இல்லாத நகரங்கள் அறியப்படவில்லை. ஒவ்வொரு நகரிலும் குறைந்தது 10000 மக்களாவது வாழ்ந்திருக்க வேண்டும் என ஆய்வா ளர்கள் கருதுகின்றனர். ஊர், ஊருக் போன்ற நகரங்களில் ஓரிலக்கம் மக்கள் வாழ்ந்திருந்தனர். நகராட்சிக்குட்பட்ட பகுதிகளும் சிற்றூர்களும், மைய நிர்வாகத்தின் மூலம் இணைக்கப்பட்டிருந்தன. பொதுப் பணிகளை மேற்கொள்ளும் தொழிலாளர்களுக்கு நிர்வாகம் ஊதியம் அளித்து வந்தது.

கால்வாய்கள் தோண்டுதல் போன்ற பெரிய வேலைகளு
மலைகளிலும் காடுகளிலும் வாழ்ந்திருந்த பழங்குடி மக்களைப் பயன்படு
கொண்டனர். முதன் முதலில் அடிமை முறை அவ்வாறுதான் உருவாயிற்
அவ்வாறான அடிமைகளுக்குத் தனிக்குடியிருப்புகளும் கட்டித் தரப்பட்ட
துருக்கியிலுள்ள தாரஸ் மலைப்பகுதிகள், நடுத்தரைக் கடலையொட்டி
பகுதிகள், தற்கால ஈரானின் மையப் பகுதிகள் போன்றவற்றில் வாழ்ந்திருந்த
மலைவாழ் மக்கள், அடிமைகளாக மாற்றப்பட்டனர். வணிகம் மேம்பட்ட
நிலையில், வெளி நாடுகளுடன் வணிக உறவுகள் மேற்கொள்ளப்பட்டன.
தனி மனிதன் செல்வம் ஈட்டுவது, உரிமையாக்கப்பட்டிருந்தது. அதனால்
வணிகர்களிடையே போட்டிகள் உருவாயின. தங்கள் வணிகப் பணிகளுக்
கென அடிமைகளையும் பயன்படுத்திக் கொண்டனர். வணிகர்களிடம்,
அவர்களின் ஈட்டத் தொகைக்கேற்ப வரிகள் தண்டப்பட்டன. நாட்டின்
வருமானம், வேளாண்மை மற்றும் வணிகம் சார்ந்திருந்தது.

சுமேரிய நகரங்களின் ஆட்சி முறை, மன்னர் முறையிலிருந்தது. மன்னனே, அந்நாட்டின் சமயத் தலைவனாகவும் இருந்தான். படேசி (Patesi) என்ற சொல்[12], படை + செய் என்ற சொற்களின் திரிபாகும்.

படையென்பது, கடவுளுக்குப் படைக்கும் சமயத் தலைமையையும், படைகளுக்குத் தலைமை தாங்கும் ஆட்சித் தலைமையையும் இணைத்தே குறிக்கும். சுமேரிய மொழியில் இவ்விரு ஆளுமைகளும் என்சி (Ensi) என்று சொல்லப்பட்டுள்ளன[13]. மேற்கண்ட இரண்டு சொற்களும் வரும் ஈற்றுச் சொல்லான சி (Si) என்பது, செய் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும்.

நகர நிர்வாகம், மன்னனோடு இணைந்த குழுவையும் உள்ளடக்கிய தாகும். முதியவர்களும், பெண்களும் கூட ஆட்சி மன்றக் குழுவில் உறுப்பினர்களாக இருந்தனர். இத்தகைய ஆட்சி முறையே, பிற்கால சுமேரிய ஆட்சியில் பின்பற்றப்பட்டது. நகர ஆட்சிக் காலங்களில், நகர்ப்பாதுகாப்புக்கென காவலர் இருந்தனர். போரிடுவதற்கான முறையான
யிற்சி பெற்ற படை வீரர்கள் இருந்தனர், என்பதற்கானச் சான்றுகள்
றைவாகவே உள்ளன. நகரங்கள், சுற்றுச் சுவர்கள் இல்லாமலேயே
ருந்தன. (சிந்து வெளியில் ஏறக்குறைய அனைத்து நகரங்களும் சுற்றுச்
ர்களால் பாதுகாப்பாக அமைக்கப்பட்டிருந்தன.) பெருநகரங்களில்
லட்சம் பேரும், இடைப்பட்ட நகரங்களில், 50,000 பேரும் வாழ்ந்
ந்ததாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

சுமேரிய மன்னர்கள் பட்டியலில் இரண்டு பகுதிகள் காணப்படு கின்றன[14]. முதல் பட்டியலில் கண்டுள்ள மன்னர்கள், வெள்ளக் காலத்து முன்பு ஆட்சி செய்தவர்கள் என்றும், அடுத்த பட்டியல், வெள்ளக் காலத்துக்குப்பிறகு ஆட்சி செய்தவர்கள் என்றும் பதிவு செய்யப்பட்டுள்ளன. வெள்ளக் காலத்தில் சுமேரிய மன்னன் ஒருவனை, கடவுளர்கள் வெள்ளத்தினின்றும் காத்ததாக, சுமேரிய வெள்ளக் கதை கூறுகிறது. உலகில் தோன்றிய பெருவெள்ளம் (உண்மையில் அது பனி உருகலால் நிகழ்ந்தது) நில நடுக்கோட்டுக்குத் தெற்கேயுள்ள நாடுகளையே பெருமளவில் அழித்ததாக, புவியியலாளர்கள் கருதுகின்றனர். அரேபிய, வட ஆப்பிரிக்கா, ஐரோப்பா, மெசபத்தோமியா போன்ற நாடுகளில், வெள்ள அழிவுகள் எவையும் ஏற்படவில்லை என, தற்கால அறிவியலாளர்கள் கூறுகின்றனர். அதற்கான நிலத் தடயங்கள் எவையும் மெசபத்தோமியாவில் அறியப்பட வில்லை. ஆனாலும் வெள்ளம் பற்றிய கதைகள், மெசபத்தோமிய இலக்கியங்களிலும், சுமேரிய இலக்கியங்களிலும் காணப்படுவதால், அவர்களின் முன்னோர்கள், வெள்ள அழிவுக்கு உட்பட்டிருக்க வேண்டும் எனக் கருதலாம். அந்த வகையில், வெள்ளக் காலத்துக்கு முன்பு அறியப்படும் பட்டியலில் கண்டுள்ள மன்னர்கள், சுமேரியாவில் ஆட்சி செய்யவில்லை என்பது தெளிவாகிறது. தங்கள் தாய் நாட்டில், தங்கள் முன்னோர்களாக அறியப்படும் மன்னர்களையே, சுமேரிய மன்னர் பட்டியலில் இணைத்துள்ளனர் எனக் கருதலாம். (மேலும் வெள்ளம் பற்றிய விளக்கங்களைத் தனித் தலைப்பில் காண்க.)

### மன்னர் மரபுகளின் தோற்றக் காலம் :

கி.மு. 2900 ஆண்டுகளுக்குப் பிறகே, மரபு வழி ஆட்சியாளர்கள் அறியப்படுவதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். அதற்கு முன்னர், மக்களில் முதியவர் அல்லது மக்களின் நன்மதிப்பைப் பெற்ற ஒருவர் ஆட்சி செய்திருக்க வேண்டும். அவருக்கு ஆட்சியில் உதவ, ஆட்சி மன்றக் குழு இருந்திருக்க வேண்டும். சுமேரியர் காலத்தைப் பொருத்தவரை, கி.மு.2700 ஆண்டுகளுக்கு சற்று முன்னதாக, கில்காமேஷ் (Gilgamesh) என்ற மன்னன் ஆண்டிருந்ததாக, சுமேரியத் தொன்மங்கள் கூறுகின்றன. அவனும் ஒரு கற்பனைப் படைப்பாக இருந்திருக்கலாம் என்பர். எவ்வாறெனில், மனித – தெய்வீக ஆற்றலை, கில் காமேஷ் பெற்றிருந்ததாக, அத்தொன்மங்கள் கூறுகின்றன.

வெள்ளக் காலத்துக்குப் பிறகே, கில் காமேஷ் அறியப்படுகிறான். அவனுடைய காலம் கி.மு.3000 என்று சொல்லப்பட்டாலும், தற்கால அறிவியல் முடிவுகளின் படி, வெள்ளக் காலம், கி.மு.12000 ஆண்டுகளில் முடிவுற்றதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். வெள்ளத்தினின்றும் தப்பிப் பிழைத்த ஒருவனை, கில்காமேஷ் சந்திப்பதாக அக்கதையில் சொல்லப்பட் டுள்ளதால், ஆய்வாளர்கள் குறிப்பிடும் கால அளவுக்கும், வெள்ளம் முடிந்த கால அளவுக்கும் பல்லாயிரம் ஆண்டுகள் இடைவெளி காணப்படுகிறது. எனவே, கி.மு.2700 க்கு முன்னர் அறியப்படும் சுமேரியத் தொடர்பான ஆண்டுக் கணக்குகள், வரலாற்றுப் பார்வையில் உண்மையான காலங் களாகத் தெரியவில்லை. கடந்த 20 ஆம் நூற்றாண்டிலிருந்து, புதுப்புதுத் தரவுகள் உலக வரலாறு பற்றி வெளிவந்தவாறு உள்ளன.

மன்னர்களின் மரபு வழி ஆட்சியில் முதல் மன்னனாக எட்டண்ணா (Etanna), அறியப்படுகிறான். கில்காமேஷ் கூட, முன்னதாக ஊருக் நகர மரபைச் சார்ந்தவனாகவே சொல்லப்பட்டுள்ளான். கில் காமேஷ் காலத்தில் போர்கள் அறியப்பட்டதால், ஊருக் நகரைச் சுற்றிச்சுவர்கள் எழுப்பப்பட்டன. பாதுகாப்பைக் கருதி, நாட்டுப்புறத்து ஊர்கள், நகரத்தோடு இணைந்தன. மெசபத்தோமியாவில் முதன் முதல் நகரத்துக்குச் சுற்றுச் சுவர், கில் காமேஷ் மன்னனால், ஊருக் நகரில் எழுப்பப்பட்டது.

**அக்காடியப் பேரரசு :**

இலாகாஷ் (Lagesh) நகரில், கி.மு.2500 - 2270 கால அளவுகளில் ஓர் அரசு அறியப்பட்டுள்ளது. அவ்வரசு குறுகிய காலமே (230 ஆண்டுகள்) அறியப்பட்டாலும், தனது ஆட்சிப் பரப்பை விரிவுபடுத்தியிருந்தது. உம்மா நகரத்து சக - சி (Lugal - Sage - Si), இலாகாஷ் அரசை அகற்றினான். சுமேரிய மரபைச் சார்ந்த இவனே, அம்மரபின் இறுதி மன்னனாகக் கருதப் படுகிறான்.

அடுத்து ஆட்சிப் பொறுப்பேற்ற சார்கோன் (கி.மு.2270 - 2215) அக்காடிய மரபின் சிறந்த மன்னனாகக் கருதப்படுகிறான். சுமேரிய மொழி, அவன் காலத்திலும் ஆட்சி மொழியாக நீடித்தது. சார்கோன் பற்றிய செய்திகள் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளன. அடுத்து குடி இனத்தார் (கி.மு.2083 - 2050) ஆட்சி சிறிது காலம் இடம் பெற்றிருந்தது.

**மீண்டும் சுமேரிய அரசு**

அக்காடிய, குடி இன அரசுகளுக்குப் பின் நாட்டில் குழப்பங்கள் மிகுந்தது பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. மூன்றாம் தலைமுறையாக, சுமேரிய அரசு, ஊர் நகரில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. ஊர் – நம்மு என்ற மன்னன் (ஊர் நகரத்து நம்பி என்று அறியலாம்). காலத்தில், மூன்றாம் தலைமுறை, தனது ஆட்சி எல்லையை விரிவுபடுத்தியது. இருப்பினும் மருது இனத்தவர் (அமோரியர்கள்) தலையீடுகள் தொடர்ந்து கொண்டிருந்தன. சுமேரிய மொழி மீண்டும் ஆட்சி அலுவல் மொழியாயிற்று. அக்காலத்தில் நிலவிய வறட்சியாலும், பருவகால மாற்றங்களாலும் வேளாண்மை குன்றியது. மக்கள் வெளி நாடுகளில் சென்று குடியேறத் தொடங்கினர். அவ்வறட்சிக் காலங்களில் ஈழத்தவர் (Elam people) ஊர் நகரைக் கைப்பற்றியதோடு, சுமேரியர் ஆட்சியின் வரலாறு முடிவுக்கு வந்தது.

**மக்கள் தொகை :[15]**

சுமர் அரசின் கட்டுப்பாட்டிலிருந்த நகரங்களில், குறிப்பாக, ஊர், ஊரூக் போன்ற நகரங்களில், 80000 முதல் 1,00,000 வரை மக்கள் வாழ்ந்திருந்தனர். பெரும்பாலானவர்கள் வேளாண் மக்களாவர். சுமேரியர் காலத்தில் அந்நாட்டின் மக்கள் தொகை, 8 இலட்சம் முதல் 15 இலட்சம் வரையில் இருந்திருக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது. அக்காலத்து உலக மக்கள் தொகை 270 மில்லியன் (27 கோடி) என்று சொல்லப்பட்டுள்ளது. எந்தெந்த நாடுகள் சேர்ந்தது உலகம் என்பதை விளக்கவில்லை. கிரேக்கம் முதல் பஞ்சாப் வரையிலான நாடுகளே அக்காலத்து உலகமாகக் கருதப்பட்டது. சுமேரியர்கள், உலக மக்களில் தனி இனமாகக் கருதப்பட்டனர். அவர்கள் பேசிய மொழியும் தனி மொழியாகவே சொல்லப்பட்டது. சுமேரிய நகரங்கள் (ஊர் உள்பட) அனைத்தும், சுமேரியர்களுக்கு முன்பிருந்த மெசபத்தோமிய மக்கள் வைத்த பெயர்களே என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். உவையர் என்ற இனம் பேசியது செமிட்டிக் மொழி என்று சொல்லப்பட்டது. செமிட்டிக் மொழிக்கும் சுமேரிய மொழிக்கும் உள்ள உறவுகள் சொல்லப்படவில்லை. அதற்குக் காரணம் யாதெனில், முறையான பதிவுகள் எழுதப்பட்ட காலங்களில், செமிட்டிக் இன மொழிகளில் ஒன்றாகிய அக்காடியம், சுமேரிய மொழியுடன் கலந்து விட்டது. சில ஆய்வாளர்கள், அக்காடியம் என்பது செமிட்டிக் மொழியும், சுமேரிய மொழியும் கலந்து உருவான புதிய மொழி என்று கூறுகின்றனர். (சமற்கிருதமும் தமிழும் கலந்து, தெலுங்கு கன்னடம் மலையாளம் போன்ற மொழிகள் தோன்றியதை ஒப்பு நோக்குக.)

ஆனாலும், உவையர் காலத்து நாகரிகம், சுமேரியர் காலத்திலும், சுமேரியர் நாகரிகம், அக்காடியர் காலத்திலும் நீண்டு அசீரிய, பாபிலோனிய நாகரிகங்கள் எனத் தொடர்ந்தன. சுமேரிய மக்கள் அங்கு குடியேறிய காலத்தில், யூப்ரதீஸ் தைகிரீஸ் ஆறுகளால் அடித்து வந்து நிரப்பப்பட்ட ஏராளமான வண்டல் மண் நிறைந்த நிலங்கள் வேளாண்மை செய்யப்படா மலேயே இருந்தன. அவற்றை சுமேரியர்கள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டனர். புதிய கால்வாய்களை அமைத்து, வேளாண் தொழிலைப் பெருக்கினர். சில ஆய்வாளர்களின் கருத்துப்படி, வடமெசபத்தோமியாவி லிருந்து, வேளாண் தொழில் செய்வதற்காகவே தென் பகுதியில் குடியேறினர் என்று சொல்வதை, பலரும் ஏற்றுக் கொள்ளவில்லை. வட பகுதியில் பேசப்பட்ட மொழியோடு சுமேரிய மொழியை எவரும் தொடர்புபடுத்தவில்லை. பெரும்பான்மையினர் கருத்துப்படி, பாரசீக வளைகுடா வழியே, தெற்கு மெசபத்தோமியாவிற்கு வந்தவர்கள் என்ற கொள்கை ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. சுமேரியர்கள் வளைகுடா நாடுகளைச் சேர்ந்தவர்கள் என்று ஆய்வாளர்கள் கூறுவது தான் ஏற்க இயலாததாக உள்ளது. சுமேரிய ஆட்சியில் (குவைத் உள்ளிட்ட) வளைகுடா நாடுகள் இருந்ததால் அவர்களை வெளிநாட்டவர் என்று கூற வாய்ப்பில்லை. இவை போன்ற முரண்பாடுகளை வரலாற்று ஆய்வாளர்கள் தோற்றுவித்துவிட்டு, பின்னர் அவற்றை ஒருங்கிணைக்க இயலாமல் தடுமாறுகின்றனர். ஏற்கனவே, வேளாண்மைத் தொழிலில் அவர்கள் பட்டறிவைப் பெற்றிருந்தனர் என்பதை, குடியேற்ற நாட்டில் நிறுவியுள்ளனர். பாரசீக வளைகுடா நாடுகளில், வேளாண்மைத் தொழிலுக்கேற்ற நிலங்கள் இருந்தனவா என்பதும் ஒரு கேள்விக்குறி. மேற்கண்ட காரணங்களாலும், இன்னும் சொல்லவிருக்கும் சான்றுகளை யொட்டியும், சுமேரியர்கள், சிந்து வெளியினின்றும் மேற்கு நோக்கிப் புலம் பெயர்ந்த தமிழர்களே என்ற முடிவுக்கு வருவது, பல குழப்பமான கேள்விகளுக்கு விடைகூற முடிவதாக அமையும். சிந்து வெளியை ஆய்வு செய்தவர்கள், கி.மு.10000 ஆண்டு முதல், கி.மு.3000 ஆண்டுகள் வரை, ஏறக்குறைய 6 முறை, சிந்து ஆற்றில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு, நகரங்களை அழித்துள்ளதாக, மண்மேடுகளின் படிமங்களை வைத்துக் கூறுகின்றனர். எனவே, ஒவ்வொரு முறையும், குறிப்பிட்ட எண்ணிக்கையில், சிந்து வெளி மக்கள், மேற்கு நோக்கிப் புலம் பெயர்ந்துள்ளனர் என்பதை அறியலாம். ஒரு முறை குடியேறி செல்வாக்குடன் வாழும் தம் முன்னோர்கள் மேலை நாடுகளில் வாழ்வதை அறிந்த சிந்து வெளி மக்கள், தங்களுக்கு அடைக்கலமும் பாதுகாப்பும் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் தான் மேற்கே

குடியேறியுள்ளனர். மேலும் அக்காலங்களில் மேற்கொள்ளப்பட்ட வணிக உறவுகள், மேலை நாடுகளைப் பற்றிய புரிதலை சிந்து வெளி மக்களுக்கு ஏற்படுத்தியிருந்தது எனலாம்.

மெசபத்தோமியாவில் வேளாண்மைத் தொழிலில் கையாளப்பட்ட தொழில் நுட்பம், ஏற்கனவே தாய் நாட்டில் அறியப்பட்டிருந்ததே. 1980 ஆம் ஆண்டில், (தற்கால ஈராக்கின் தென் பகுதி), செய்யப்பட்ட அகழ்வாய்வில், உவையர் காலத்திலேயே, வேளாண்மைத் தொழிலை, சிறப்புடன் கையாண்டு வந்தனர் என்ற தகவல் வெளிப்பட்டுள்ளது. நாகன் காலத்துக்குப் பிறகு, அடுத்து குடியேறிய சிந்து வெளி மக்களாக, உவையர் இனத்தைக் கருத இடமுண்டு. இந்நூலின் முற்பகுதிகளில் சொல்லப்பட்ட பல்வேறு இனங்களும், பல்வேறு காலங்களில் குடியேறிய தமிழர்களே என்பதை, ஏற்கனவே விளக்கப்பட்டுள்ள செய்திகளின் வாயிலாக அறியலாம். பேராசிரியர் ஜுரிஸ் சரின்ஸ் (Prof. Juris Zarians), சுமேரியர்கள் வளைகுடாப் பகுதியில் வாழ்ந்திருந்த மக்களே என்று கூறுகிறார். மேலும் சிலர், பாலை வனங்களில் கால்நடைகளை மேய்த்து வந்த அராபிய நாடோடிக் குழுக்கள் என்று கூறுகின்றனர்16. ஈராஸ் பாதிரியார் (Fr.Heras) மட்டுமே, 1934 இல், சுமேரியர்கள், சிந்து வெளியிலிருந்து புலம் பெயர்ந்து சென்றவர்கள் என்பதை உறுதிப்படுத்துகிறார். ஈராசின் முடிவுகளைச்சிலர் மறுக்க முன்வரவில்லை. ஆனாலும், இந்தியர்களே, உலகின் முதல் நாகரிகத்தைத் தோற்றுவித்தவர்கள் என்ற கருத்தை, ஐரோப்பிய ஆய்வாளர்கள் ஏற்கத் தயங்குகின்றனர். அவர்களுடைய வெள்ளை இனக் கொள்கை, வரலாற்றையே வளைக்க முற்பட்டதன் விளைவு தான், சுமேரியர்கள் பற்றி முரண்பாடான வரலாற்றைக் கொடுத்ததாகும். ஐரோப்பியர்கள் எழுதி வைத்த வரலாறு, தற்காலத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் மறுக்கப்பட்டு, புதிய செய்திகள், அளிக்கப்பட்டு வருகின்றன.

**சமூக வாழ்க்கை :**

தனி மனிதன், தன் இல்லம் சார்ந்து வாழும் முறையும், தம் இல்லத்தார், பிற குடும்பங்களுடன் கொள்ளும் உணர்வு பூர்வமான நட்பு முறைகளும், சமூகத்தின் ஒருவரையொருவர் மதித்து வாழும் மேன்மையும், பொதுச் சட்டங்களுக்குப் பணிந்து, சமூகத்தில் இணக்கமாக வாழ்வதே பண்பாடு எனப்படும். உழைப்பும், முயற்சியும், அறிவியல் சிந்தனைகளும் கலந்த கட்டுமான எழுச்சி, ஆட்சி முறை, சட்டங்கள் வேளாண்மை தொழில், வணிகம் போன்ற துறைகளில் நாளும் ஏற்பட்டு வரும் வளர்ச்சியே நாகரிகம்

எனப்படும். பண்பாடு அகம் சார்ந்தது, நாகரிகம் புறம் சார்ந்தது, அவ்விரு கூறுகளும் இணைந்து வளர்ச்சியடைந்து உலகுக்கு வெளிப்படும் போது அச்சமூகம், வரலாற்றில் பதிவாகின்றது. பண்பாடும் நாகரிகமும் இணைந்து வளராத சமூகம், வரலாற்றில் மறக்கப்படுகிறது. இதனையே கலாச்சாரம் என்ற சமற்கிருதச் சொல்லால் அறியலாம். இன்றைய உலகில், பண்பாடற்ற நாகரிக வளர்ச்சி பெருகி வருவதாக, நல்லோர் வருத்தமடைகின்றனர்.

சுமேரியரின் வளர்ச்சி, பண்பாடும் நாகரிகமும் இணைந்து வளர்ந்ததாகக் கூறப்படுகிறது. பட்டுக்கோட்டை கலியாண சுந்தரம் பாடியது போல், "ஆளும் வளரணும் அறிவும் வளரணும்", அதுதான் வளர்ச்சி என்றதைப் போல, பண்பாட்டு நாகரிக வளர்ச்சிகள், சுமேரியச் சமூகத்தில் காணப்பட்டன. சமூகம், மொழி இன உணர்வுகளால் ஒற்றுமைப்பட்டிருந்தது. சமயத்தில் பெயரால் ஒழுக்கம் நிலைநாட்டப்பட்டிருந்தது. இலக்கியங்கள், நல்ல சிந்தனைகளை வளர்க்கும் வகையில் படைக்கப்பட்டன. போர் என்ற சுமையற்றச் சூழல் முற்றிலுமாகத் தவிர்க்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு நகர அரசும், தத்தம் நகரத்தின் வளர்ச்சியில் கவனம் செலுத்தின. கலை, கவின் கலைத்துறைகள் வளர்ச்சியடைந்தன. சுமேரியரின் பண்பாட்டு நாகரிகக் கூறுகள், இலக்கியங்கள் வாயிலாகவும், அகழ்வாய்வுகளில் அறியப்பட்டவை வாயிலாகவும் வெளிப்பட்டுள்ளன.

தனி மனிதனுக்கும் குடும்ப வாழ்க்கைக்கும் தேவையான கலங்கள் (Potteries) பெருமளவில் பயன்பாட்டில் இருந்தன. நீர், தேன், நெய், எண்ணெய், மது, போன்றவை தனித்தனி கலங்களில் வைப்பதற்கேற்ற வாறு, வடிவமைத்துச் செய்யப்பட்டிருந்தன. மது வென்பது, தற்காலத்தில் அறியப்படுவது போல் அல்லாமல், பழச்ச சாறு போன்றே கருதப்பட்டது. பேரீச்சம் பழத்திலின்றும் பழச்சாறு பெறப்பட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். உயரமான கலங்கள், கூர்மையான மூன்று பாதங்களைக் கொண்டிருந்தன. சில தட்டையான அடிப்பகுதிகளைக் கொண்டிருந்தன. அவை, சதுர அல்லது செவ்வக மேடைகளில் வைக்கப்பட்டன. நெய் போன்றவை, காற்றுப் புகாத மூடிகளால், மூடப்பட்டிருந்தன. இந்தச் சாடிகள், எகிப்திலும் பரவலாக அறியப்பட்டுள்ளன.

மக்கள், பல வண்ணங்களில், கவர்ச்சியான உடைகளை அணிவதைப் பெரிதும் விரும்பினர். பருத்தியிலிருந்து, துணிகளும் ஆடைகளும் உருவாக் கப்பட்டன. பல, வண்ணங்களாகவும் தோய்க்கப்பட்டன. நெசவுத் தொழில்

அறியப்பட்டிருந்தது. துணிகளை, பல அளவிலான ஊசிகளால், ஆடைகளாக வடிவமைத்திருந்தனர். பெண்களின் உடைகள், உடலை முழுவதும் மறைப்பதாகவே இருந்தன. ஆண்களின் உடைகளும் ஏறக்குறைய அவ்வாறே இருந்தன. பொன், வெள்ளி போன்றவைகளால் அணிகலன்கள் செய்யப்பட்டன. மணிக் கற்களை, பொன் வெள்ளி அணிகலன்களில், இணைத்திருந்தனர். மணிமாலைகளை, ஆண்களும் பெண்களும் விரும்பி அணிந்தனர். பூ வேலைப்பாடுகளும், மணிகளும் கலந்த குல்லாய் போன்ற தலையணிகள், அகழ்வாய்வுகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ஓரங்களில், காசுகளும், அவற்றுக்கு மேல் மணிகளும் (stones) பதிக்கப்பட்டிருந்தன. விழாக்கள், சமயவிழாக்கள் போன்ற நாட்களில், அவை அணியப்பட்டன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். மேசை, நாற்காலிகள், விசிப் பலகைகள், கலை நயத்துடன் செய்யப்பட்டன. நாற்காலிகளின் நான்கு கால்களும், காளையின் கால்கள் போல், குளம்புகளுடன் இருந்தன. கைப் பிடிகள், விலங்குகளின் முகங்களைக் கொண்டிருந்ததன.

உயரமான மேடைகளில் அடுப்புகள் இருந்தன. அவை, நின்றபடியே சமையல் செய்யும் முறையில் அமைக்கப்பட்டிருந்தன. சிலர், அம்மேடை களை, வழிபாட்டுக்குரிய தீ மேடைகள் என்றும் கூறுகின்றனர். அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட பொருட்களையும் , கட்டிடங்களையும் காணும் போது, சுமேரியர்கள் இரும்பு போன்ற கருவிகளைப் பயன்படுத்தியிருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. வளையும் தன்மையுள்ள செம்புக் கருவிகளால் அவை உருவாக்கப்பட்டிருக்க இயலாது. ஏறக்குறைய பல்லாயிரம் ஆண்டுக்கால இடைவெளிகளில், இரும்புக் கருவிகள், துருப்பிடித்து, மண்ணோடு மண்ணாகி, மட்கிப் போயிருக்க வாய்ப்புகள் உண்டு. சுமேரியர்களைப் பற்றிய படங்கள், போர்க்களக் காட்சிகள் பற்றிய புடைச் சிற்பங்களில், வில் அம்புகள், ஈட்டிகள், குறுவாள்கள், பயன்படுத்தப் பட்டுள்ளன என்பதை அறிய முடிகின்றது. நீண்ட வாள் போன்ற கருவிகள் காணப்படவில்லை. போர்களில் மேற்கண்ட கருவிகளே பயன்படுத்தப் பட்டுள்ளன. களிமண் தட்டுகளில், செய்திகளும் இலக்கியங்களும் எழுதப் பட்டுள்ளன. உலோகத்தால் செய்யப்பட்ட பேனா முனைகளில், மரச் சட்டங்கள் (சிறு அளவில்) இணைக்கப்பட்டு, எழுது கோல்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஈரமான களிமண் தட்டுகளில் எழுதப்பட்டவை, சூளையில் வைத்து சுடப்பட்டுள்ளன. இவையன்றி, செப்புப் பட்டயங்களிலும் சில சிறப்பான செய்திகள் பொறிக்கப்பட்டுள்ளன. நிலவை அடிப்படையாகக்

கொண்ட நாள் காட்டி பயன்படுத்தப்பட்டுள்ளது17. இவை பற்றி விரிவாக அடுத்தடுத்த தலைப்புகளில் காணலாம்.

சுமேரியப் புடைச் சிற்பங்களில், யாழ் போன்ற கருவிகளை மீட்டுவது போன்ற சிற்பங்கள் உள்ளன. இசை தொடர்பான சில கருவிகளும் அவர்களால் இசைக்கப்பட்டன எனக் கருதலாம். இதன் மூலம் இசையில் ஆர்வமும், இசையென்ற கலையின் நுணுக்கமும் சுமேரியர்களால் அறியப்பட்டிருந்தது என்பதை உணரலாம். சமயம் மற்றும் பொது விழாக் களில், இசை தொடர்பான நிகழ்ச்சிகள் நடைபெற்றன என அறியலாம். ஊர் நகரில் கண்டெடுக்கப்பட்ட பல தட்டுகளில், இசைக் கருவிகள் பற்றிய செய்திகள் வெளிப்பட்டுள்ளன. இதனால், முறைப்படி இசையைக் கற்பிக்கும் பள்ளிகளும் இருந்திருக்க வேண்டும் என்பதும் ஆய்வாளர்களின் கருத்தாக உள்ளது.

பெண்களைப் பொருத்தவரை, பெண்களைப் பாதுகாக்கும் சமூகச் சட்டங்கள் அறியப்பட்டுள்ளன. ஆட்சி மன்றக் குழுவில், பெண்கள் இடம் பெற்றிருந்தனர். சொத்துரிமை போன்ற உரிமைகள் வழங்கப்பட்டிருந்தன. சுமேரியக் காலத்தில், அண்டை நாடுகளில் பெண்களுக்கான சட்டங்கள், பெண்ணுரிமைகளைப் பற்றிப் பேசவில்லை. ஆனால் சுமேரியச் சட்டங்கள், பெண்களுக்கு முன்னுரிமை கொடுத்துள்ளன என அறியலாம். மூன்றாம் தலை முறையினர், ஊர் நகரை ஆட்சி செய்த காலத்தில், சமூகப் பாதுகாப்புச் சட்டங்கள் பற்றிய சான்றுகள் கிடைத்துள்ளன. அவை பழைய சட்டங்களைக் காட்டிலும் முன்னேற்றமான அணுகுமுறையைக் கொண் டிருந்தன. சமூகத்தில், சுமேரியர்களை, உரிமை பெற்ற குடிமக்கள் என்றும், உரிமையற்ற குடிகளை அடிமைகள் என்றும் இரு வகையாகப் பிரிக்கலாம். பெண்களும் அடிமைகள் பட்டியலில் இருந்தனர். திருமணம் ஆகும் வரை ஓர் ஆண், இளைஞன் என்று அழைக்கப்பட்டான். திருமணமாகும் வரை ஒரு பெண், கன்னிப் பெண்ணாகக் கருதப்பட்டாள். கணவனை விட்டுப் பிரிந்த பெண்களும், கைம்பெண்களும் சட்டப் பாதுகாப்பைப் பெற்றிருந் தனர். லாகேஷ் நகரத்துக்குறிப் பொன்றின் மூலம், பெண்கள் பல கணவர்களைக் கொண்டிருந்த செய்திகள் அறியப்பட்டுள்ளன[18].

**வேளாண்மையும் கால் நடை வளர்ப்பும் :**

மழைக் காலங்களில் பெருகி வரும் நீர், ஆறுகளின் நன்கொடை யாகக் கருதப்பட்டது. நீர்ப் பெருக்கோடு அடித்து வரப்படும் வண்டல் மண்

கலப்பு, வேளாண்மைக்குச் சிறந்த உரமாகக் கருதப்பட்டது. மழைக்காலங் களில் ஆற்றில் வரும் வெள்ளப்பெருக்கு, கால்வாய்கள் மூலம், நாட்டின் உட்பகுதிகளுக்குக் கொண்டு செல்லப்பட்டன. இயற்கை மற்றும் செயற்கை யான ஏரிகளில், நீர் நிரப்பப்பட்டது. மழைக் காலத்திற்குப் பிந்திய தேவை களுக்கு அவ்வாறான ஏரிகள் பயன்பட்டன. நிலத்தின் ஏற்ற இறக்கத்துக்கு ஏற்றவாறு, கால்வாய்கள் வெட்டப்பட்டன. கி.மு.4000 ஆண்டுகளுக்கு முன்பே, அத்தகைய நீர்ப்பாசன முறை அறியப்பட்டிருந்தது. கோதுமை, பார்லி, பேரிச்சை போன்ற பழமரங்கள் வளர்க்கப்பட்டன. காய்கறிகள் பயிரிடப்பட்டன. காளைகளைக் கொண்டு ஏர்க்கலப்பைகள் பயன்படுத்தப் பட்டன.

செம்பும் பித்தளையும் பயன்பாட்டில் இருந்தன. மிகவும் அரிதாக இரும்பைப் பயன்படுத்தினர். தற்கால ஆய்வாளர்கள், நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளபடி, இரும்பைப் பயன்படுத்தினர் என்பதை ஏற்றுக் கொள்கின்றனர்[19]. இரும்பு அரிதாகவே கிடைத்து வந்தது என்றும், இரும்பின் விலை, பொன்னை விடக் கூடுதலாக இருந்ததாகவும் சொல்லப்படுகின்றது. அகழ்வாய்வுகளில், எலும்புகளால் உருவாக்கப்பட்ட, குத்தும் பொருள், சிறிய ஊசிகள் போன்றவை அறியப்பட்டுள்ளன. நெசவுத் தொழில் பரவலாக அறியப்பட்டிருந்தது. நெசவுக் கருவிகளைப் பற்றிய குறிப்புகளில், அக்கருவிகளைச் சுமேரியர்களே உருவாக்கினார்களா என்பது தெரிய வில்லை. ஏறக்குறைய இன்றைய கைத்தறி நெசவுக் கருவி, கி.மு.4000 ஆண்டுகளிலேயே அறியப்பட்டிருந்தது. அந்நெசவுக் கருவிகளைப் பயன்படுத்த, வெளி நாட்டவரை, மன்னன் அழைத்து வர ஏற்பாடு செய்தான் என்று சொல்லப்பட்டுள்ளது. அவ்வெளிநாட்டவர் யார் என்பது விளக்கப்படவில்லை. அவர்களின் மேற்பார்வையிலேயே, நெசவுத் தொழில் நடைபெற்றதாகக் குறிப்புகள் தெரிவிக்கின்றன[20]. அவ்வெளி நாட்டவர், சிந்து வெளி மக்களே எனக் கருதலாம்.

நாட்டுப் புறங்களில், குடிசைகள் இருந்தன. அவை கோரைகளால் உருவாக்கப்பட்டன. கெட்டியான கோரைகளால், சுவர்களும் அமைக்கப் பட்டன. அறைத் தடுப்புகளும், கூரையும் கோரைகளால் வேயப்பட்டன. சுவர்களில், கரியையும் களி மண்ணையும் கலந்து, மெழுகிப் பூசியிருந்தனர். அவை, சூரிய ஒளியில் காய்ந்த பிறகு, கெட்டித் தன்மையைப் பெற்றன. கோரைக் குடிசைகளில், மரத்தால் செய்யப்பட்ட கதவுகள் சாளரங்கள் (சன்னல்கள்) பொருத்தப்பட்டன. நிலைகள், பெரும்பாலும் பாறைக்

கற்களால் செதுக்கப்பட்டிருந்தன. நான்கு புறமும் அவை ஒன்றோடொன்று பொருந்துமாறு வடிவமைக்கப்பட்டிருந்தன. தரைப் பகுதிகள், களிமண்ணால் பூசி மெழுகப்பட்டிருந்தன. நாட்டுப் புறமக்கள் பசுக்கள், காளைகள், ஆடுகள், பன்றிகள், நாய்கள், பூனைகள் போன்ற விலங்குகளை வளர்த்து வந்தனர். அவை, வீட்டைச் சுற்றி மேய்வதும் திரிவதுமாக இருந்தன. நாட்டுப் புற மக்களின் முதல் தொழில் வேளாண்மையே ; அதன் மூலம் உணவுப் பொருட்களைப் பெற்றனர். மேலும் வளர்ப்பு விலங்குகளின் இறைச்சியையும் பயன்படுத்திக் கொண்டனர். ஆறுகள் ஏரிகளில் உள்ள மீன்களைப் பிடிப்பதற்கான, ஊக்குகள் (ஊசிகள்), தூண்டில் முட்கள் போன்றவையும் அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ளன. வலைகளைக் கொண்டு மீன்களைப் பிடித்தனரா என்பதற்கானச் சான்றுகள் இல்லையென்றாலும், அவை பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் எனலாம்.

## வணிகப் பொருளாதாரம் :

பெரு வணிகத்துக்கு நீர்வழிப் போக்குவரத்து பயன்படுத்தப்பட்டது. தரைவழிப் போக்குவரத்தும் சிறு வணிகத்துக்கும் பயன்படுத்தப்பட்டது. பிற்காலங்களில் தரைவழிப் போக்குவரத்து பெருமளவில் வளர்ச்சியடைந்தது. தரைவழியே, இந்தியாவிற்கும் எகிப்துக்கும் சுமேரிய வணிகர்கள் சென்று வந்தனர். கடல் வழியாகப் பெரு வணிகம் நடைபெற்றது. தரைவழி வணிகம், ஒட்டகங்கள் மூலம் நடைபெற்றது. அவ்வணிக முறையை, காரவான் என்று பிற்காலத்தில் அழைத்தனர். கிரேக்கர்களே அச்சொல்லைப் பயன்படுத்தினர். காரவான் என்ற சொல்லுக்கான மூலச் சொல் (Caravan from Carvanneer), கார் வண்ணீர் என்ற சொல்லே என்று, ஆங்கில அகரமுதலிகள் தெரிவிக் கின்றன. ஐரோப்பியர்கள், சுமேரிய - இந்திய - மெசபத்தோமிய - எகிப்திய வணிகர்களையும், அராபியரையும் அச்சொல்லால் குறித்தனர். கார்வண்ணர் என்ற தமிழ்ச் சொல்லே, கார் வண்ணிர் - காரவான் எனத் திரிந்தது என்க. ஐரோப்பியர்கள், மேற்கண்ட நாட்டு மக்களை, கறுமை நிறம் உடையவர் களாகக் கருதியதால், கறுப்பு நிறத்தார் என்ற சொல்லைப் பயன்படுத்தினர்.

சிந்து வெளிக்கும் சுமேரியத்துக்கும் இடையே பெருமளவிலான வணிகப் போக்குவரத்து நடந்தது பற்றிய சான்றுகள், இரு இடங்களிலும் கிடைத்துள்ளன. தொலவீரா, லோத்தள் துறை முகங்களுக்கும், ஊர் நகரத்துக்கும் இடையே, பல நூறு மரக்கலங்கள் பயணித்து வந்தன. கப்பல்களில் போக்குவரத்தால், பாரசீக வளைகுடா, ஆரவாரம் மிகுந்து காணப்பட்டது. கடற்கரையோரங்கள் வழியே பயணங்கள் மேற்கொள்ளப்

பட்டதால், பாதுகாப்பு மிகுந்திருந்தது. ஆழ் கடலில் தோன்றும் அழிவுகள், கடற்கரைப் பயணங்களில் ஏற்படுவதில்லை. பல எண்ணிக்கையிலான முகவர்கள், கப்பல் உரிமையாளர்கள், பணியாற்றும் தொழிலாளர்கள் என, பலரைச் சார்ந்தே வணிகர்கள் இருந்தனர். சில வணிகர்கள், தாமே கப்பல் முதலாளிகளாகவும் இருந்தனர். வாடகைக்கு விடப்பட்ட கப்பல்களும் இருந்தன. தொடக்க காலத்தில் பண்டமாற்று முறையிலேயே வணிகம் நடை பெற்றது. பொன், வெள்ளிக் காசுகள் பிற்காலத்தில் பயன்படுத்தப்பட்டன. கப்பல்களைக் கட்டவும், வணிகர்களுக்கு தொழில் செய்ய பணம் கொடுக்கவும், வட்டிக் காரர்கள் அக்காலத்திலேயே இருந்தனர்[21]. வட்டி செலுத்த இயலாத நிலையில், கப்பல்களை விற்றவர்களும், வணிகத் தொழிலைக் கைவிட்டவர்களும் உண்டு[22].

பொன் வெள்ளிக் காசுகளுக்குப் பிறகு, செக்கல் (Shekkal) என்ற காசு, அறிமுகப்படுத்தப்பட்டது. காசு (Kasu) என்று எபிரேய மொழியிலும் சொல் லப்பட்டுள்ளது. காசு என்பதே, பிற்காலத்தில் Cash என்று ஆங்கிலத்தில் சொல்லப்பட்டது. காய்ச்சு என்பதே, தமிழ் மூலச் சொல்லாகும்.

காய்ச்சப்பட்ட உலோகங்கள், தட்டையாக வடிவமைக்கப்பட்டன.

காய்ச்சு – காச்சு – காசு என வழக்குச் சொல்லாயிற்று.

செக்கல் என்ற காசு, செம்பினால் செய்யப்பட்டு, அரசாங்க முத்திரை பதிக்கப்பட்டது.

கி.மு.2000 ஆண்டுகளில், செக்கல் காசு புழக்கத்தில் இருந்தது என்பதை, விவிலியச் சான்று விளக்குகின்றன.

சிவந்த கல் என்பதே செக்கல் என்று, தமிழ்ச் சொல்லாகவே அறியப்பட்டுள்ளது.

எப்ரான் (Ephron) என்ற ஒருவன் அபிரகாமை நோக்கி, "நான் சொல் வதைக் கேளுங்கள் தலைவரே! அந்த நிலம் 400 செக்கல்கள் மதிப்புள்ளது. உங்கள் குடும்பத்தில் இறந்தவர்களை அவ்விடத்தில் புதையுங்கள்", என்று கூறுவதாக விவிலியத்தில் காணப்படுகின்றது. (ஆதியாகமம், 23 : 14 – 16). காசுகளை எண்ணிக் கொடுப்பதைவிட, தராசில் நிறுத்துக் கொடுப்பது வழக்கமாக இருந்துள்ளது. அதனையே அபிரகாம் செய்ததாக, விவிலியம் கூறுகிறது[23].

சுமேரியர் காலத்தில் தான் பொருளியல் கூறுகளில் இடைநிலையினர் என்ற வகுப்பார் (middle class) தோன்றியதாக ஆய்வாளர்கள் கூறுகின்

றனர். வேளாண்மை, தொழில், வணிகம் சாராது, அரசாங்கப் பணிகளில் இருந்தவர்கள், அத்தகைய வகுப்பினராக அறியப்படுகின்றனர். மாத ஊதியம் என்ற முறை, சுமேரியர் காலத்தில் தான் முதன் முதலில் தொடங்கப்பட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கல்வி, கலை, இலக்கியம் போன்ற துறைகள் வளர்ச்சியடைந்தது போலவே மருத்துவம் என்ற துறையும் வளர்ந்தது. ஒவ்வொரு நோய்க்கும் தனித்தனியான மருந்துகள் தரப்பட்டன. சில மண்டையோடுகளை ஆய்வு செய்த தொல்லியலாளர்கள், தலையில் ஓட்டையிட்டு அறுவை மருத்துவம் செய்திருக்க வேண்டும் என்றும் கருதுகின்றனர். கற்றவர்களுக்குச் சமூகத்தில் மதிப்பும் மரியாதையும் இருந்தது. பதிவு செய்யும் எழுத்தர்கள் (document writers) நல்ல ஊதியம் பெற்றனர். களிமண் தட்டுகளில் எழுத ஒரு சிலரே பயிற்சி பெற்றிருந்தனர். சமூகத்தில் சமயத் தலைவர்களுக்கும் பூசாரிகளுக்கும் செல்வாக்கு மிகுந் திருந்தது. சில பூசாரிகள், சோதிடக் கலையை வளர்த்தனர். தங்கள் எதிர்காலம் பற்றித் தெரிந்து கொள்ள, மக்கள் சோதிடர்களை நாடினர். வானியல் உறுப்புகள் இடம் பெயர்வதைக் கொண்டு, சோதிடம் கணிக்கப்பட்டது. அவையின்றி விலங்குகள், பறவைகள், ஒலிகள் போன்றவைகளும் சகுனக் கருவிகளாக இருந்தன.

கி.மு.2800 ஆண்டுகளில், நகர அரசுகளே அறியப்பட்டிருந்தாலும், நகரங்களுக்கிடையே மக்களின் நல்லுறவுகள் இருந்தன. வணிகர்கள் அனைத்து நகரங்களிலும் வணிகம் செய்யத் தடையிருந்ததில்லை. காலப்போக்கில், நகரங்களை ஆட்சி செய்தவர்களிடையே, பொருளியல் கூறுகளிலும், தனிப்பட்ட ஆளுமைகளிலும் தோன்றிய பொறாமை உணர்வுகள், வலுவுள்ள நகர ஆட்சியாளன், மற்ற நகரங்களையும், தன் வலிமையால் இணைத்துக் கொண்டான். இவ்வாறு, நகர ஆட்சிகள் மறைந்து, பகுதி அல்லது நாடு என்ற அளவில் ஆட்சிமுறை தோன்றியது. சுமேரிய மன்னர்கள், அவ்வாறு உருவானவர்களே, மன்னன் அல்லது ஆட்சியாளனை எதிர்க்க எவருக்கும் துணிவு வரவில்லை. அதற்கான பின் புலமும் மக்களிடையே இருந்திருக்கவில்லை. அவ்வாறு அண்டையிலிருந்த பகுதிகளைத் தன் வயப்படுத்திய மன்னர்கள், பேரரசர்களாகக் கருதப்பட்டனர். மன்னர்கள், அரண்மனைகளில் வாழ்ந்திருந்தனர். பகைவர்கள் மிகுந்திருந்த தால், பாதுகாப்பான மாளிகைகள் மன்னர்களுக்கென உருவாக்கப்பட்டன. அரண்மனைக்குள் நுழைய முன்பின்னாக இரண்டு வழிகளே இருந்தன. அவையும் ஓராள் செல்லக் கூடியதாக இருந்தன. உள்ளே நுழையும்

ஒவ்வொருவரையும், காவலர்கள் சோதனை செய்த பிறகே உள்ளே அனுப்பி வைத்தனர்.

அக்காலத்தில் போர்கள், நாடுகளைப் பிடிக்கும் எண்ணத்துடன் நடத்தப்படவில்லை. உள்நாட்டில் உற்பத்தியாகும் தவசங்கள், கைவினைப் பொருட்கள், இதர வணிகப் பொருட்களை விற்பதற்குத் தடை ஏற்படும் போது, அவ்விடத்தில் போர் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. குறிப்பாக, வணிகப் பாதைகளைத் (Caravan routes) தம் எல்லைகளுக்குள் கொண்டு வருவதற்கே போர்கள் நிகழ்ந்தன. போர்கள் நேரிடையான மோதல்களாகவே இருந்தன. இரவில் சென்று தாக்குவது, மறைந்திருந்து தாக்குவது போர் முறைகள் அறியப்படவில்லை. மக்களாட்சியைப் பற்றிய சரியான சிந்தனைகள் அக்காலத்தில் இருந்ததில்லை. போரில் வெற்றி பெற்ற மன்னன், வெற்றி பெற உதவிய தளபதிகளுக்கு, சில பகுதிகளை வரிவிலக்கு அளித்து, நன்கொடையாகக் கொடுத்தான். அப்பகுதியில், சமூகப் பாதுகாப்புப் பொறுப்பையும் அவர்களிடமே அளித்தனர். பிற்காலத்தில் அறியப்பட்ட பிரபுக்கள் (feudal lords) போன்ற நிலையில் அத்தளபதிகள் இருந்தனர். வரிகள் மூலம் அரசுக்கு வருமானம் கிடைத்தது. தவசங்கள், பொன், வெள்ளி என்றவாறு வரிகள் தண்டப்பட்டன. அரசாங்கக் கருவூலங்களில் அவை பாதுகாப்பாக வைக்கப்பட்டன. அரசு அலுவலர்களுக்கு, அக்கருவூலத்தி லிருந்தே ஊதியம் வழங்கப்பட்டது.

## அடிக்குறிப்புகள்

9. According to the list, given by Kramer.
10. Kramer, "Innana, Queen of Heaven and Earth".
11. Uruk Period : The archacological transition from the ubaid period is marked by a gradual shift from painted pottery domestically produced on a slow wheel to great variety of unprinted pottery mass - produced by specialists on fast wheels. The Uruk period civilization, exported by Sumerian traders and colonists, had an effect on all surrounding peoples, who gradually evolved their own comparable, competing economics and cultures. Sumerian cities during the Uruk period, were probably theocratic and were most likely headed by a priest - King (ensi), assisted by a council of elders, including both men and women.
During this period, Uruk became the most urbanized city in the world, surpassing for the first time 50,000 inhabitants.
- Lamb Hubert, "Climate History and the Modern world", Routlege, London, 1995.

12. Patesi : Priest - King
    - History of Religion, P.213.

13. Ensi : Priest - King
    - Jacobson, "The Sumerian King List", University of Chicago, 1939.

14. Sumerian King's List : The dynastic period begins 2900 B.C includes such legendary figures as Enmerkar and Gilgamesh, who are supposed to have reigned shortly before the historic period opens, 2700 B.C. The earliest Sumerian king list whose name is known any other legendary source is Etana, the 13th king of the first dynasty of kish.
    - Ibid.

15. Population : Uruk, one of the largest cities, has been estimated to have had a population of 50 to 80 thousands at its height, given the other cities in Sumar, and the large agricultural population, a rough estimate for Sumer's population might be 0.8 million to 1.5 million. The world population at this time has been estimated at about 270 million.
    - Colin Mc Evedy and Richard Jones, "Atlas of world population History, Facts on File", New york, 1978.

16. Farming Peoples : According to the Franch excavations, held at Larza in 1980, farming peoples spread down into southern Mesopotamia because they had developed a temple centred social organization for mobilishing labour and technology for water control, enabling them to survive and prosper in a difficult enivironment. Others suggested a continuity of Sumerians, from indigeneous hunter - fisherfolk traditions associated with the Arabian bifacial assemblages found on the Arabian littoral. Professor Juris Zarins believes the Sumarians may have been the people living in the Persian Gulf region before it flooded at the end of the last Ice Age.
    - Ibid.

17. Social life in Sumar : Pottery was in plentyful and the forms of the Vases, bowls and dishes were manifold ; there were special jars for honey, butter, oil, and wine, which was probably made from the dates. Some of the Vases had pointed feet others flat - bottomed.
    A feather head dress was worn. Beds, chairs and stools were used with carved legs resembling those of an ox. knives, drills, wedges, saws were well known, spears, bows, arrows and daggers (but not swords) were employed in war. Tablets were used for writing purposes. Time was reckoned in lunar months.
    - Sayce, A.H.Rev., "The Archaeology of the Cunieform Inscriptions, London, 1908. - A Society for promoting Christian knowledge, PP. 98-100.

18. Women Law : Though women were protected by late Sumerian law, and were able to achieve a higher status in Sumar than in other contemporary civilizations, the culture was male dominated. The Code of Ur - Nammu, reveals a glimpse at social structure in late Sumerian law.

Inscriptions describing the king's reforms of uru - kagina of Lagash (2300 B.C), say that a woman who took mutliple husbands be stoned with rocks upon.

- Cinthia Gannet, Gender and the Journal, 1922. P.62.

19. Iron : The Sumerians made some use of copper and tin and occasionally mixed them to produce bronze. Now and then - very rarely - they made implements of Iron.

    - International History Project, Economic Life of Sumer and Mesopotamia, 2003.

20. Weaving : Weaving was done on a large scale under the supervision of overseers appointed by the King - Ibid.

21. Credit : A system of credit existed by which goods gold or silver might be borrowed, interest to be paid, in the same material as loan, and at rates ranging as high as 33 % per year. High credit card rates were a recent innovation.

    - Ibid.

22. அறப்பன் நாகரிகம், ம.சோ.விக்டர், யாத்திசைப் பதிப்பகம், 2016.

23. Ephron answered Abraham, "Listen to me, my Lord ; the land is worth four hundred Shekkels, but what is that between me and you ? Bury your dead".

    - Genesis, 23 : 14 - 16.

## 3. சுமேரிய மொழி

சுமேரிய மொழியை வெளிநாட்டு மொழியென்றும், அது மெசபத்தோமியாவில் கி.மு.6000 - 5000 ஆண்டுகளில், குடியேறிய சுமேரியர்களால் பேசப்பட்ட மொழியென்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர். சுமேரிய மொழி வளர்ச்சி, நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றது. பழைய சுமேரியம் (archaic), செம்மொழிச் சுமேரியம் (classical), புதிய சுமேரியம் (new), பிற்கால சுமேரியம் (Post) என்பன அவை. பழைய சுமேரியம் என்பது, கி.மு. 6000 - 3000 ஆண்டுகளில் பேசப்பட்டதாகக் கருதப்படுகின்றது. முதல் சுமேரியப் பதிவு, கி.மு.3000 ஆண்டுகளில் அறியப்படுகின்றது. பழைய சுமேரியப் பதிவுகள் முற்றிலும் அரசின் அறிவிப்புகள் சார்ந்ததும், வணிகம் மற்றும் தொழில் சார்ந்ததுமாக உள்ளன. பள்ளிப் பாட நூல்களைப் போல், சிறு சிறு சொற்களும், அச்சொற்களை எழுதியுள்ள வரிவடிவங்களும் உள்ளன. அவ்வாறு தொடக்கத்தில் எழுதப்பட்ட எழுத்துகளைக் கூட்டிப் படிப்பது சிக்கலாக உள்ளது. புரிந்து கொள்ளவும் இயலவில்லை. அக்குறியீடுகள் முற்றிலும் புதியனவாக உள்ளன. மற்ற மொழி வரிவடிவங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தும் படிக்கவும் இயலவில்லை.

செம்மொழிச் சுமேரியம் என்பது, கி.மு.2500 ஆண்டுகளுக்குப் பிறகு அறியப்படுவது. குறிப்பாக, லாகாஷ் நகரக் குறிப்புகளால் அறிய முடிகின்றது. அக்குறிப்புகள், அரசு நிர்வாகம், சட்டம், தொழில், வணிகம், மன்னர்களைப் பற்றிய செய்திகள், தனிப்பட்டவர்களைப் பற்றிய குறிப்புகள் என அவை நீள்கின்றன. குறிப்பாக, உறுதிமொழிகள் பற்றியதாகவும் (Votive), கடிதங்களாகவும், அரசு சார்ந்தவைகளாகவும், தனிப்பட்ட செய்தி களாகவும் உள்ளன. சில, மந்திரச் சொற்கள் போல் (magic spells) அமைந்துள்ளன. இக்குறிப்புகள் எண்ணிக்கையில் பலவாக உள்ளன. மேலும் அவை, பழைய காலத்தோடு தொடர்புடைய செய்திகளையும் தருகின்றன. இக்கால அளவில் அறியப்படும் சொற்களும், எழுத்து முறையும், பழைய காலத்தினின்றும் மாறுபட்டுள்ளன. இம்மொழிநடை, எழுத்து முறைகளைக் கொண்டு, ஆய்வாளர்கள் அதனை செம்மொழிச் சுமேரியம் (Classical Sumerian)

என்று அழைக்கின்றனர். செம்மொழிச் சுமேரியத்தில் சொற்களின் எண்ணிக்கை கூடுதலாகவும், குறிப்பிட்ட இலக்கண நெறிமுறைகளும் அறியப்படுகின்றன.

சார்கோன் ஆட்சிக் காலத்தில், அக்காடிய மொழி, அரசு அலுவல் மொழியாக்கப்பட்டது. அக்காடிய மொழியென்பது, சுமேரியர் வருகைக்கு முன்பு, மெசபத்தோமியாவில் பேசப்பட்ட செமிட்டிக் மொழியும், சுமேரிய மொழியும் கலந்து உருவான புதிய மொழியே என ஆய்வாளர்கள் கூறுகின்றனர். எனவே, அக்காடிய மொழியென்பது, தனித்தன்மை பெற்ற மொழியன்று. பாபிலோன் நாட்டை, சுமேரியருக்கு பின்பு அறியப்பட்ட இனம் ஆளத் தொடங்கிய போது, சுமேரிய மொழிக்கு ஒரு பின்னடைவு ஏற்பட்டது. ஆனாலும் மக்களில் பெரும்பாலானோர், பழைய செமிட்டிக் மக்கள் உள்ளிட்ட பலரும் சுமேரிய மொழியைப் பேசி வந்ததால், சுமேரிய மொழியை முற்றிலுமாக அகற்றிவிட இயலவில்லை. எனவே, சில காலம் வரை, அக்காடியமும் சுமேரியமும் ஆட்சி மொழிகளாக இருந்தன. பிற்காலத்தில் சுமேரியம் அகற்றப்பட்டு, ஆட்சி மொழியாக அக்காடியம் ஏற்கப்பட்டது. அக்காடியப் பேரரசு விரிந்த பரப்பளவைக் கொண்டிருந்ததால், பேரரசின் பகுதிகள் அனைத்திலும் அக்காடிய மொழி பேசப்பட்டு, சுமர் என்ற குறுகிய பகுதியில் மட்டும் சுமேரிய மொழி பேசப்பட்டது. மீண்டும் இடைக்காலத்தில், அக்காடிய அரசு அகற்றப்பட்டு, சுமேரியரின் மூன்றாம் தலைமுறையினர் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பிறகு, சுமேரிய மொழியை முன்னிறுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால் குறுகிய காலமே சுமேரியர் ஆட்சி நடைபெற்றதாலும், மீண்டும் செமிட்டிக் இனத்தார் சுமேரிய ஆட்சியை அகற்றியதாலும், சுமேரிய மொழிக்கு ஒரு பின்னடைவு ஏற்பட்டது. அக்காடிய மொழி மீண்டும் புத்துயிர் பெற்றது.

சார்கோன் காலத்து ஆட்சியிலிருந்த பாபிலோன் தலைநகரம், தற்போது புதுப்பொலிவு பெற்று, புதிய நகரமாகக் காட்சியளித்தது. புதிய பாபிலோன் ஆட்சியில், அக்காடியம் முன் நிறுத்தப்பட்டு, சுமேரியம் அடியோடு மறக்கப்பட்டது. அக்காடிய மொழிக்கு அரசு அளித்து வந்த சிறப்புகளால், மக்களாலும் சுமேரிய மொழி மறக்கப்பட்டது. ஒரு மொழியைத் தூக்கி நிறுத்தி, அதனைப் பரவலாக மக்கள் மொழியாக மாற்ற வலிமை பெற்ற அரசால் முடியும் என்பதற்கு, பாபிலோனிய அரசு சான்றாக உள்ளது. ஆனாலும் சுமேரிய எழுத்து முறைகளைக் கலந்தே, அக்காடிய மொழி எழுதப்பட்டது. ஏறக்குறைய சுமேரிய மொழியின் இறுதிக்காலம் அதுவே என்று கருதப்படுகிறது.

சுமேரிய மொழியின் சொல்வளமும் எழுத்து முறையும் அக்காடிய மொழியைவிட உயர்வாகக் கருதப்பட்டதால், சுமேரிய மொழி அகற்றப்பட்ட பின்பும், அரசாங்கப் பதிவுகள், சுமேரிய எழுத்து முறையில்தான் எழுதப் பட்டன. அரசாங்க ஆணைகள், சட்ட நூல்கள், நிர்வாக அறிவிப்புகள் ஆகியவை, அக்காடியம். சுமேரியம் ஆகிய இரு மொழிகளிலும் வெளியிடப்பட்டன. பழைய சார்கோன் ஆட்சிக் காலத்தில், சுமேரிய மொழியில், வாய்வழியே சொல்லப்பட்டு வந்த பல இலக்கியங்கள், பாடல்கள், தொன்மக் கதைகள் போன்றவை, எழுத்து வடிவில் முதன் முதலாகப் பதிவு செய்யப்பட்டன. அவ்வாறு பதிவு செய்யப்பட்டவைகளில், வணிகம் தொழில்கள தொடர்பான குறிப்புகள் பல கிடைக்கவில்லை ; கிடைத்துள்ள வையும், சில பகுதிகளாகவே உள்ளன. அகழ்வாய்வுகளில் கிடைக்கப் பெற்றவைகளில், தொன்மக் கதைகள் (myths), தத்துவ நூல்கள் (epics), பாடல்கள் (hymns), இரங்கற் செய்திகள் (lamentations), சமயச் சடங்குகள் (rituals), வசியம் செய்யும் மந்திரங்கள் (in cantations) எனப் பலவாறான குறிப்புகள் உள்ளன. பழமொழிகளும் (Proverbs), அறம் சார்ந்த அறிவு நூல்களும் (wisdom compositions) அவற்றில் சிறப்பானவை. பாபிலோனியப் பழைய அரசு முடிவுற்றப் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு ; சுமேரிய இலக்கியங்கள், பாபிலோனியப் பள்ளிகளில் கற்றுத் தரப்பட்டன. கி.மு.7 ஆம் நூற்றாண்டின் அசீரிய மன்னர் அசூர் பணிப்பால், சுமேரிய மொழியில் தேர்ச்சி பெற்றிருந்தான். பல்வேறு சுமேரிய இலக்கியங்களையும், பிறமொழி இலக்கியங்களையும் பெற்று, மிகப் பெரிய நூல் நிலையம் ஒன்றை நிறுவினான். தாலமி மன்னர்களால் எகிப்தில் அலெக் சாந்திரியா நகரில் நிறுவப்பட்ட நூல்நிலையத்துக்கு இணையாக, அசூர் பணிபால் நிறுவிய நூல் நிலையம் கருதப்படுகிறது. கிரேக்கர்களின் ஆட்சிக் காலத்தில், பல சுமேரியச் சொற்கள், கிரேக்க மொழியில் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

இயேசு பிறப்புக் காலத்தில், சுமேரியம் தொடர்பான மொழியும் இலக்கியங்களும் மறக்கப்பட்டிருந்தன. சுமேரியர்கள் அறிமுகம் செய்திருந்த ஆப்பு எழுத்து முறையும் (Cuneiform) முறையும் வழக்கிழந்தது. சுமர் என்ற சொல் கூட, மக்கள் மனங்களிலிருந்து மறைந்து போயிற்று. பாபிலோனிய, அசீரிய, எகிப்திய அரசுகள் வரலாற்றில் இடம்பெற்றன. அவர்களுடைய ஆட்சிக் காலக் குறிப்புகளும் ஆவணப்படுத்தப்பட்டன. உலகம் முழுவதும் இன்றும் படிக்கப்பட்டு வரும் விவிலிய நூல், மேற்கண்ட மூன்று அரசுகளைப் பற்றிய குறிப்புகளையும் பதிவு செய்துள்ளது. உலகின் முதல் நாகரிகத்தை

அறிமுகம் செய்தவர்களாகக் கருதப்படும் சுமேரியர்கள் மறக்கப்பட்டனர். அதற்கு அடிப்படையான காரணம் யாதெனில், சுமேரியருடைய மொழியும் இலக்கியங்களும், அவை எழுதப்பட்டிருந்த எழுத்து முறைகளும், படிப்பதற்கும் புரிந்து கொள்வதற்கும் கடினமாக இருந்தது தான் எனலாம்.

கடந்த 19 ஆம் நூற்றாண்டில், ஆய்வாளர்கள் சுமேரிய இலக்கியங் களைப் படிக்கத் தொடங்கிய காலத்தில், மூன்று மொழிகள், சுமேரியரின் ஆப்பு எழுத்து முறையைப் பயன்படுத்தியிருந்தது கண்டறியப்பட்டது. பாபிலோனிய செமிட்டிக் மொழி, பாரசீக மொழி, ஈழ மொழி (Elamite) ஆகியவை அம்மொழிகளாகும். அவற்றில் முன்னவை இரண்டும் வழக்கில் இருந்தவை. ஈழ மொழி வழக்கிழந்து போனது. அம்மொழி, உலகின் எந்த மொழியோடு தொடர்புடையது என்பதை இதுவரை எவரும் கண்டறிந்து விளக்கவில்லை. சுமேரிய எழுத்துகளில் அம்மொழிச் சொற்கள் எழுதப்பட்டி ருந்தாலும், அச்சொற்களை ஓரளவுக்குப் படிக்க முடிந்ததே தவிர, பொருளை அறிய இயலவில்லை. பாபிலோனிய மொழியில், சுமேரிய எழுத்து முறையில் எழுதப்பட்ட செய்திகளை, மற்ற இரண்டு மொழிகளைக் காட்டிலும், எளிதாக ஆய்வாளர்களால் படிக்க முடிந்தது. சுமேரிய மொழியை, தற்கால ஆய்வாளர்கள், பல்வேறு மொழிகளுடன் ஒப்பிட்டுப் பொருள் காண முனைந்தனர். அக்காடிய மொழித் தொடர்பு ஏற்கனவே அறியப்பட்டதாலும், அக்காடிய மொழிவழியே சுமேரிய மொழியைப் படிப்பது, ஓரளவுக்கு எளிதாயிற்று. ஆய்வாளர்கள் முயன்று பார்த்த சில மொழிகள் வருமாறு :

1. கார்த்து வெளியன் மொழிகள் (Kartvelian languages)[1]
2. முண்டா மொழிகள் (Munda languages)[2]
3. திராவிட மொழிகள் (Dravidian languages)[3]
4. ஊரலிக் மொழிகள் (Uralic languages)[4]
5. பாஸ்க் மொழி (Basque language)[5]
6. நொஸ்திராத்திய மொழிகள் (Nustratic languages)[6]
7. சீன – திபேத்திய மொழிகள் (Sino - Tibetan languages)[7]

மேலே சொல்லப்பட்ட மொழிகளோடு, வேறு சில மொழிகளையும் ஆய்வாளர்கள் கூறியுள்ளனர். அவையெல்லாம் ஊகங்களின் அடிப் படையில் சொல்லப்பட்டன. ஏறக்குறைய மெசபத்தோமியாவைச் சுற்றி யிருந்த நாடுகளின் மொழிகளோடு, சுமேரிய மொழியை ஒப்பிட்டுப்

பார்த்தார்கள். ஆனால் உறுதியான முடிவுகள் எவற்றையும் அறிவிக்க வில்லை. அவற்றில், திராவிட மொழிகளையும் சிலர் ஒப்பீடு செய்து பார்த்தனர். அவர்களுக்கு தமிழ் மொழி பற்றிச் சரியான புரிதல் இல்லாததால், அவர்களால் சரியான முடிவுக்கு வர இயலவில்லை. தமிழ் உள்ளிட்ட தென்னக மொழிகளை அறிந்திருந்த ஈராஸ் பாதிரியார்தான், சுமேரிய மொழி தமிழ் மொழியே என்று கூறினார். அவரது முடிவு சரியானதுதானா என்பதைக் கூட ஒப்பிட்டுப் பார்க்கும் திறமை ஆய்வாளர் களுக்கு இல்லாமற் போய்விட்டது. தமிழறிஞர்கள், ஈராஸ் பாதிரியார் கூறியதை வரவேற்றார்களே தவிர, சுமேரிய மொழி பற்றிய சிந்தனையும் தெளிவும் தமிழறிஞர்களிடம் இல்லை.

மேற்கூறப்பட்ட பட்டியலில், பாஸ்க் மொழி பற்றிய சிந்தனை ஆய்வாளர்களுக்கு வந்தது வியப்பானதே. மேலே சொல்லப்பட்ட மொழிகளில், மிகக் குறைந்த எண்ணிக்கையிலுள்ள மக்கள் (ஏறக்குறைய 50 இலட்சம்) பேசும் மொழியே பாஸ்க் மொழி மொழியாகும். இம்மொழி பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. கடந்த நூற்றாண்டில் நிக்கோலா லெகோவரி என்ற பிரெஞ்சு நாட்டு ஆய்வாளர், பாஸ்க் மொழி, தமிழ் மொழியின் கிளை மொழியே என்று உறுதிபடக் கூறினார். அதற்குச் சான்றாக 2000 பாஸ்க் சொற்களைத் தேர்வு செய்து, அவற்றைத் தமிழ்ச் சொற்களோடு ஒப்பிட்டுக் காட்டினார். தற்போது அவர்கள் வாழும் பகுதியில் (பிரான்ஸ் – ஸ்பெயின் எல்லைப் பகுதி பாஸ்க் இனத்தவர், வரலாற்றுக் காலத்துக்குப் பிறகே குடியேறினார்கள் என்றும், அவர்கள் மெசபத்தோமி யாவினின்றும் வந்தவர்கள் என்றும் இலகோவரி தெரிவித்தார். உண்மையில் பாஸ்க் மொழி தமிழின் கிளை மொழியே. விடுதலைப் புலிகளோடு அவர்கள் நெருங்கிய உறவு கொண்டிருந்தனர் என்பது அண்மைக் காலச் செய்தி யாகும். விடுதலைப் புலிகள் போன்றே, தனி நாடு கேட்டுப் போராடிக் கொண்டிருக்கின்றனர். (பாஸ்க் இனமும் தமிழ் இனமும் என்ற ஆசிரியரின் ஆய்வு நூலில், விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன.) மேற்கண்ட மொழி களில் பல சொற்கள், சுமேரிய மொழியோடு தொடர்பு கொண்டிருந்தாலும் அத்தொடர்புகளுக்கான பின்புல வரலாற்றை எவரும் கூறவில்லை. தமிழ் மொழியைப் பொருத்தவரை, நாம் அறிவித்துள்ள கொள்கை எதுவெனில்,

*"தமிழ் இந்திய மொழிகளுக்குத் தாயாகவும்*
*உலக மொழிகளுக்கு மூலமாகவும் உள்ளது",*

என்பதே. எனவே உலக மொழிகளின் வேர், தமிழ் மொழியில் இருப்பதாலும், உலக மொழிகள் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருப்பதாலும், சுமேரிய மொழியைப் பிற மொழிகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதில் தவறேதும் இல்லை.

உலகில், வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டு எழுதப்பட்ட மொழிகளின் சொற்கள் மற்றும் எழுத்து முறைகள், அண்மைக் காலத்தில் மொழியியல் மற்றும் வரலாற்று ஆய்வாளர்களால், படித்துப் பொருள் புரிந்து கொள்ள முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அவற்றுள் எகிப்திய, அக்காடிய மொழித் தொடர்பான செய்திகளை ஓரளவுக்குப் படித்து விளக்கமளித் துள்ளனர். சிந்து வெளி மொழியையும் சொற்களையும், பலரும் பலவாறாகப் படித்து விளக்கமளித்துள்ளனர். இதனைப் போன்றே சுமேரிய மொழியையும் படிக்க முயன்று வருகின்றனர். இவ்விரு மொழிகளிலும் ஒன்றையொன்று சார்ந்தவையே என்று ஈராஸ் அடிகள் கூறினார். மேற்கண்ட மொழிகளை ஆய்வு செய்தவர்களில், ஈராஸ் அடிகள் மட்டுமே தமிழ் மொழியை அறிந்திருந்தவர். மேற்கண்ட மொழிகளின்றி, துருக்கிய, பிராகூய் (ஆப்கானிய மொழி), பண்டு (ஆப்பிரிக்க மொழி) ஆகியவற்றோடும் சுமேரிய மொழியைத் தொடர்புபடுத்திப் பார்த்தனர். பிராகூய், ஏறக்குறைய சிந்துவெளி மொழியின் திரிபு மொழியே. பண்டு (Bantu) என்ற ஆப்பிரிக்க மொழி, திராவிட மொழிகளிலிருந்து கிளைத்ததே என்று, யுனெஸ்கோ நிறுவனம் வெளியிட்டுள்ள, ஆப்பிரிக்க வரலாறு (பகுதி I) கூறுகிறது. ஆனாலும் சுமேரிய மொழி, உலக மொழிகளில் எந்த மொழியோடு தொடர்புடையது என்ற பலரின் ஆய்வுகளை, பலரும் ஏற்று, ஒரு முடிவுக்கு வரவில்லை.

சுமேரிய மொழி, கருத்துரை மொழியாகக் (agglutinative) கருதப்படுகிறது. அம்மொழியின் சொற்களில் முன்னொட்டுகள் (Prefixes), இணையொட்டுகள் (Infixes), பின்னொட்டுகள் (Sufixes), பொருள் வேறுபாடுகளை உணர்த்தும் இலக்கண முறைகள் உள்ளதாகவும், சொற்கள் வேர்களைக் கொண்டிருப்பதாகவும், ஆய்வாளர்கள் கூறுகின்றனர். குறுங்கருத்தை விளக்கும் சிறிய தொடர்கள் (Phrases), இணைந்த வாக்கியங்களும் உள்ளன. அவை நீண்ட வாக்கியங்களாக, ஒரு பொருளை விளக்கும் வகையில் (Syntax) உள்ளன. பேசுதல் என்ற செயலைக் குறிக்க, பேச்சு (speech), பேசு (to speak), பேசினான் (post), பேசுவான் (future), பேசுகிறான் (present), போன்ற வேறுபாடுகள் காட்டப்பட்டுள்ளன.

சுமேரிய மொழியில் சில ஒலியன்களை (Phonomes) நான்கு உயிரொலிகளாகப் பிரித்துள்ளனர் (Vowels), அ - இ - ஐ - உ (a - e - i - u) என்ற நான்கு உயிரொலிகளும், 16 உயிர்மெய் ஒலிகளும், அவற்றிற்கான வரிவடிவங்களும் உள்ளன. உயிர் மெய் ஒலிகளில் சில ஒன்றுபட்டவைபோல் ஒலிகளைத் தந்தாலும், அவை சிறிய அளவில் மாற்றொலிகளைக் கொண்டவையே. சில ஒலிகள், தொண்டையினின்றும் வெளிப்படும் ஒலிகளாக உள்ளன. (ha). சில ஒலிகள் உதட்டினின்றும் வழுக்கிச் செல்லும் ஒலிகளாக உள்ளன. ஆய்வாளர்களே, இம்மாற்றொலிகளைப் புரிந்து கொள்வதில், குழப்பங்கள் உள்ளன என்று கருதுகின்றனர்.

பெயர்ச் சொற்களில் பால் வேற்றுமை (gender) அறியப்படவில்லை யென்பது ஆய்வாளர்களின் கருத்து. ஒருமை பன்மைச் சொற்கள், சொற்களின் ஈற்றெழுத்தால் வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன. சில சொற்கள் இரண்டு முறை சொல்லப்பட்டு, பன்மைச் சொற்களாக (ஆடு + ஆடு) க் காட்டப்பட்டுள்ளன. சுமேரிய மொழியின் பெயர்ச் சொற்கள் அமைப்பு முறையை, இலத்தீன் மொழி ஏற்றுக் கொண்டுள்ளதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இலத்தீன் மொழியை அறிந்த ஈராஸ் அடிகள், இந்த ஒப்புமையை, சிந்து வெளிச் சொற்களில் காட்டுகிறார். சில வினைச் சொற்கள், வினைச் சொற்களைத் தொடர்ந்து வரும் சொற்கள், நல்ல இலக்கண மரபோடு இணைக்கப்பட்டுள்ளன. செய்வினை (active), செயப் பாட்டு வினைகளை (Passive) விளக்கும் சொற்களும் உள்ளன. முக்காலங் களைத் தெளிவுபடுத்தும் வினைச் சொற்களும் உள்ளன[10].

சுமேரிய மொழியின் சொற்றொடர்கள், தொடக்கத்தில் சிறிய அளவிலேயே இருந்தன. பிற்காலத்தில் அவை, நீண்ட சொற்றொடர்களாக வளர்ச்சி பெற்றன. சுமேரிய மொழியில், தொடக்ககாலத்தில் இருந்த சொற்கள் எளிமையாகவும், சிறியனவாகவும் இருந்தன. பிற்காலத்தில், குழப்பமான புரிந்து கொள்ள இயலாத நிலையைப் பெற்றன என ஆய்வா ளர்கள் கருதுகின்றனர். அதற்கான காரணமாக, வளர்ந்து வந்த தொழில் துறைகளும், நாகரிக வளர்ச்சியுமே என்று சொல்லப்படுகின்றது. தொடக் கத்தில் ஒரு சொல்லாக அறியப்பட்டவை, பின்பு கூட்டுச் சொற்களாக உருவெடுத்தன.

உயிர் - உயிர் மெய் - முதல் கையாகவும்,

உயிர்மெய் - உயிர் - இரண்டாவது வகையாகவும்,

உயிர் - உயிர்மெய் - உயிர் - மூன்றாவது வகையாகவும், மேலும் பிற்காலத்தில், உயிர் மெய் - உயிர் - உயிர் மெய் என்றும் அறியப்பட்டன".

தொடக்ககால சுமேரிய மொழியில் காணப்பட்ட, உயிர்மெய் - மெய் - உயிர்மெய் கட்டமைப்பிலான வாக்கியங்கள், பல்லாண்டுகள் வழக்கில் இருந்தன.

## அடிக்குறிப்புகள்

1. Diakonoff Igor, M., "External Connections of The Sumerian Language", Mother Tongue, III, P.P.54 - 53.
2. Ibid.
3. Alexi Sahala, "Sumero - Indo - European Language Contacts", University of Helsinki, 2009.
4. Simo Parpola, "Sumerian a Uralic Language", Mosow, 2007.
5. Gostony, C.G., "Dictionary - Etymology of Sumerian Grammer and Language", Paris, 1975.
6. Zakar Andris, "Sumerian - Ural - Atlaic Affinities", Chicago Journals, Vol.12, No.2, April, 1971.
7. Babula Ida, "Sumerian Affliations", A Plea for Reconsideration, Washington D.C., 1951.
8. Characteristics : Sumerian is clearly an agglutination language in that it preserves the word root intact while expressing various grammatical changes by adding on prefixes infixes, and suffixes. The difference between nouns and verbs, as it exists in the Indo - Eropean or Semitic languages, is unknown to Sumerian - The word dug alone means both "speech" and "to speak", in Sumerian, the difference between the noun and the verb being indicated by the syntax and by different affixes. - Diakonoff, Sumerian Language.
9. The distintive sounds (phonomes) of Sumerian consisted of four vowels (a, e, i, u) and 16 consonants b, d, g, h, k, l, m, n, p, r, s, s, s (difference in voice), t, z. In classical Sumerian, the contrast between the consonants b, d, g, z and p, t, k, s was not between voiced (with vibrating vocal cords) and voiceless consonants (without vibrating vocal cords) but between consonants that were indifferent as to voice and those that were aspirated (pronounced with an accompanying audiable puff of breath). The semi - vowels y and w funcitioned as vocalic glides. - Ibid.
10. Sumerian Language - Researchers :
    1. Arno Probel, Sumerian Grammar, 1923.
    2. Adam Falkenstain, Two volumes, 1950.

3. Das, Survey of the Sumerian Language, 1959.
4. Cyril G.Gadd, Sumerian Reading Book, 1924.
5. Samuel N.Kramer, Introduction to Sumerian Civilization, 1963.

11. Vowel - Consonant, V.C. eg. ab, window.
Consonant - Vowel, C.V. eg. ba, to give.
Vowel - Consonant - Vowel, V.C.V. eg. aba, to take.
Consonant - Vowel - Consonant, C.V.C. eg. dab, to hold.

## 4. சுமேரியர் எழுத்து முறை

உலகின் முதல் எழுத்து முறையை உருவாக்கியவர்கள் சுமேரியர்களே என்ற கருத்து, சிந்து வெளி அகழ்வாய்வுக்கு முன்பு கருதப்பட்டிருந்தது. சுமேரிய எழுத்துமுறை எக்காலத்தில் அறிமுகமாயிற்று என்பது தெரியவில்லை. கி.மு.3500 ஆண்டுகள் என்ற கருத்து பொதுவாகச் சொல்லப்படுகின்றது. கி.மு. 9500 ஆண்டுகளிலேயே மொகஞ்சதாரோ நாகரிகம் அறியப்பட்டிருந்ததாக அண்மைக் கால ஆய்வுகள் உறுதி செய்துள்ளன. எனவே சுமேரிய எழுத்து முறையே உலகின் முதல் எழுத்துமுறை என்ற செய்தி, மாற்றத்துக்குள்ளாகிவிட்டது எனலாம். கருத்து முறை, சொல் முறை, எழுத்து முறை என படிப்படியாக வளர்ந்த முறை இதுவாகும். மேல் பகுதி தடித்தும், கீழ்ப்பகுதி மெலிந்தும் காணப்படுவதால், இதனை ஆப்பு எழுத்து முறை என்பர். (மரத்தைப் பிளக்க வைக்கப்படும் ஆப்பு, மேலே சொல்லப்பட்ட வடிவத்தில் இருக்கும்.) இதனை ஆங்கிலத்தில் கூனி (Cunei) என்று அழைத்தனர். கூன், கூனி என்பன தமிழ்ச் சொற் களாகும். கூனி நடப்பவனைப் போன்றும், ஆப்பு என்ற மரக்கட்டையைப் போன்றும், சுமேரிய எழுத்து முறை கற்பனை செய்யப்பட்டது. இம் முறைக்கான பெயரை பிற்கால ஆய்வாளர்களே சூட்டினர் என்லாம்.

எழுது பொருட்கள், எழுது கருவிகள் இல்லாத அக்காலத்தில், பச்சைக் களிமண் தட்டில், உலோகம் அல்லது உடையாத நுனியுடன் உருவாக்கப்பட்ட எழுதுகோல் மூலம் எழுதப்பட்டது. சூரிய ஒளி அல்லது சூளையில் சுடப்பட்ட களிமண் தட்டுகள், காய்ந்த நிலையில் கெட்டித் தன்மையைப் பெறும். களிமண் தட்டுகளில் எழுதப்பட்ட செய்திகள் அரசாங்க அலுவலகங்களில் வைக்கப்பட்டிருந்தன. ஓர் இலக்கியப் படைப்புக்குப் பல களிமண் தட்டுகள் தேவைப்பட்டன. அறை முழுவதும் அடுக்கி வைக்கப்பட வேண்டிய நிலையில், களிமண் தட்டுகள் இடச் சிக்கலை உருவாக்கின. முறையாகக் கையாளப் படாத தட்டுகளின் மூலைகள் விளிம்புகள் உடைந்து போவதற்கும் வாய்ப் புகள் உண்டு. தொடக்கத்தில், களிமண் தட்டுகள், வேளாண் பொருட்கள் பற்றிய செய்திகளைப் பதிவு செய்யப்பயன்பட்டன. பின்னர், வணிகத்துக்கும் பயன்படுத்தப்பட்டது.

பிற்காலத்தில் களிமண் தட்டுகள் பாதுகாப்பின்றி உடைந்து போவதைக் கண்டு, பெரிய கலங்களுக்குள் அடுக்கி வைத்து, மேல் பகுதியை மூடி வைத்தனர். உள்ளே, என்ன செய்திகளுக்கான களிமண் தட்டுகள் உள்ளன என்பதை அறிய, கலத்தின் வெளியே குறிப்புகள் அல்லது படங்களைப் பொறித்து வைத்தனர். எத்தனை தட்டுகள் உள்ளே உள்ளன என்ற எண்ணிக்கையும் குறிக்கப்பட்டது. அகழ்வாய்வுகளில், இவை போன்ற களிமண்தட்டுகளைக் கொண்டுள்ள பல பெட்டிகள் கண்டெடுக்கப்பட்டன. எடுத்துக்காட்டாக 5 தட்டுகள் உள்ள பெட்டிகளின் மேல், 5 கோடுகள் இடப்பட்டன. களிமண் தட்டுகளில், குறிப்புகள் மட்டுமின்றி, படங்களும் வரையப்பட்டன. மனிதர்கள், விலங்குகள், இயற்கைக் காட்சிகள், போர்க் களக்காட்சிகள், கடவுளர் உருவங்கள் போன்ற பலவகையான படங்களும் வரையப்பட்டன. ஊர் நகரத்தில் நடைபெற்ற அகழ்வாய்வில் மட்டும் நூற்றுக்கணக்கான களிமண் தட்டுகள் கண்டெடுக்கப்பட்டன. மற்ற நகரங்களில் கண்டெடுக்கப்பட்டவைகளையும் சேர்த்து, 3000 க்கும் மேற்பட்ட தட்டுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. தொன்மக்கதைகளைக் கொண்ட தட்டுகளில் சில காணாமற்போனதால், தொடர்ச்சியாகச் சில கதைகளை அறிய இயலவில்லை.

தொடக்க கால சுமேரிய எழுத்துகள், மேலிருந்து கீழாக எழுதப்பட்டன. ஏதோ சில காரணங்களால், இடமிருந்து வலமாகப் பிற்காலத்தில் எழுதப்பட்டன. கி.மு.3000 ஆண்டுகளுக்குப் பிறகே, இந்த நடைமுறை செயல்பாட்டிற்கு வந்திருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இந்த மாற்றம் சிந்து வெளியில் அறியப்பட்டிருக்கலாம் எனலாம். சிந்து வெளி எழுத்துகளை எவ்வாறு படிப்பது என்பதில், ஆய்வாளர்களிடையே முரண்பாடுகள் உள்ளன. வலமிருந்து இடமாகச் சிலரும், இடமிருந்து வலமாகச் சிலரும் படிக்கின்றனர். தமிழ் நாட்டின் சிந்துவெளி ஆய்வா ளர்களான பூர்ண சந்திர ஜீவா, வலமிருந்து இடமாகப் படிக்கிறார். மதிவாணன் இடமிருந்து வலமாகப் படிக்கிறார். மேலும் சில முத்திரைகளில், மேலிருந்து கீழாக எழுதப்பட்டுள்ளன. எனவே, மூன்று முறைகளிலும் சிந்து வெளிச் சொற்கள் எழுதப்பட்டுள்ளன என கருதலாம்.

தொடக்கத்தில் மேலிருந்து கீழாகவும் (சீன முறையைப் போல), பின் வலமிருந்து இடமாகவும், இடையில் இடமிருந்து வலமாகவும் எழுதப்பட் டிருக்க வேண்டும். ஒவ்வொரு முறையும், சிந்து வெளியில் ஏற்பட்ட மாறுதல்களையொட்டி, சுமேரியர்களும் எழுத்து முறைகளை மாற்றிக்

கொண்டிருக்க வேண்டும். சுமேரியர்கள் மேற்கில் புலம் பெயர்ந்திருந்தாலும், தம் முன்னோர்கள் வாழ்ந்திருந்த சிந்துவெளியுடன் பல்வேறு தொடர்பு களையும் கொண்டிருந்தனர். சுமேரிய எழுத்துகளும், இடமிருந்து வலமாகவே தொடங்கி எழுதப்பட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். தமிழ் எழுத்துகள் கூட, இடமிருந்து தொடங்கி வலமாகவே எழுதப்படுகின்றன. கோடுகளைக் கொண்ட சுமேரிய எழுத்துகள் $90^{\circ}$ அளவிலேயே செங் குத்தாக உள்ளன. தொடக்க காலச் சுமேரிய எழுத்துகள், நேர்க் கோடு களாகவே இருந்தன. பிற்காலத்தில் எழுத்தில் சில இடங்களில் தடிமனும், வளைவுகளும் கூட அறிமுகப்படுத்தப்பட்டன. கி.மு.3000 ஆண்டுகளுக்குப் பிறகே, ஆப்பெழுத்து முறை கடைப்பிடிக்கப்பட்டது.

கி.பி.2800 ஆண்டுகளுக்குப் பிறகு, சுமேரிய மொழிச் சொற்களில் ஒலிகளுக்கான சிறப்புத் தன்மை கொடுக்கப்பட்டது. அதன் அடிப்படையில், பல சொற்கள், ஒரேயொலியைக் கொண்டிருப்பது போன்று உணரப்பட்டது. மற்ற மொழிகளோடு தொடர்பற்ற சொற்களாக இருந்ததால், அக்குழப்பத்தை ஆய்வாளர்களால் புரிந்து கொள்ள இயலவில்லை. எழுத்து வடிவங்களும் குழப்பத்தைத் தோற்றுவிப்பதால், ஒரே சொல்லுக்கு இரண்டு மூன்று பொருள் தரக் கூடிய அளவில் உள்ளன. எடுத்துக் காட்டாக, தீ (ti) என்ற சொல்லுக்கு அம்பு என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. நீட்டப்பட்ட எழுத்தில் சிறு வளைவு காணப்படுவதால், அச்சொல்லை, உயிர் (life) என்றும் பொருள் கூறுகின்றனர். (தீ என்ற சொல், அம்பைக் குறிப்பது உருவகச் சொல்லாகும். தீ என்ற தமிழ்ச் சொல், விரைவு குறித்து, அம்பைக் குறித்தது.) மற்றொரு எடுத்துக்காட்டு, கு (gu) என்ற சொல்லுக்கு குரல் என்று பொருள் சொல்லப் பட்டுள்ளது. மேலும் கழுத்து, எருது என்றும் பொருள் சொல்லப்பட்டுள்ளது. சுமேரிய மொழியைப் படித்தவர்கள் அனைவரும் ஆங்கிலேயர்களே. அவர்கள், ஆங்கில மொழியைச் சிந்தனையில் கொண்டு, மொழி பெயர்ப்பு செய்துள்ளனர். அவர்களின் மொழி பெயர்ப்பும் சரியாகச் செய்யப்பட்டதா என்ற கேள்வியும் எழுகின்றது. சு (Su) என்ற எழுத்துக்கு (சொல்லுக்கு), கு என்ற சொல்லுக்கான பொருளையும் தருகின்றனர்.

**ஓரெழுத்து ஒரு சொல் :**

பண்டைக் காலத் தமிழ் மொழியில், சொற்கள் சுருக்கமாகவே இருந்தன. ஓரெழுத்து, ஈரெழுத்து என்றவாறே சொற்கள் அமைந்திருந்தன. காலப்போக்கில், இணைந்த சொற்கள் தோன்றி, ஒரு சொல்போல் காட்சியளித்தன. எனினும் அவற்றைக் கூட, இரண்டாக மூன்றாகப் பிரிக்க

இயலும். காலப்போக்கில் ஓரெழுத்துச் சொற்களில் பல வழக்கிழந்து போயின. சங்க காலத்துக்குப் பிறகு அவை மேலும் குறைந்தன. சில ஓரெழுத்துச் சொற்களை அடியில் காண்க.

அ : அழகு (குறுந்தொகை, 63 : 3). பெரும்பாலும் இலக்கண மரபில் சொல்லப்படும். வினையெச்ச விகுதி, பெயரெச்ச விகுதி,
பெயரெச்ச விகுதி, பலவின்பால் வினைமுற்று விகுதி, சாரியை, ஆறாம் வேற்றுமை உருபு, அசைச் சொல் என விரியும்.

ஆ : பசு (குறுந்தொகை, 64 : 1), ஆச்சாமரம் (சிலப்பதிகாரம், 12 : 12)
பொதுவாக விலங்கின் பெண்பால். தொடக்கம் (பரிபாடல், 13 : 15)

இ : அண்மைப் பொருளைக் குறிப்பது. (குறுந்தொகை, 12 : 6)
இலக்கண மரபில், வினையெச்ச விகுதி, தொழிற்பெயர் விகுதி, செயப்படு பொருள் விகுதி, வியங்கோள் வினைமுற்று
விகுதியென விரியும்.

ஈ : சிறு விலங்கு அல்லது பறவை. பெயர்ச் சொல்லாக வரும்.
கொடு, தா என்ற வினையைக் குறிப்பது.
இவ்விடம் என்ற அண்மைச் சுட்டு. (புறநானூறு, 264 : 8)

உ : உலகைக் குறித்த சொல். வழக்கிழந்து போயிற்று. உலகைக் காக்கும் சிவனையும் உமையவளையும் குறிப்பது.
(திருமந்திரம் : 1751).
இலக்கண மரபில், வினையெச்ச விகுதி, பண்புப் பெயர் விகுதி, சாரியை, அவ்விடம் என்ற பொருளையும் தரும்.
(கலித்தொகை, 146 : 20 : 2)

ஊ : இறைச்சி (தொல்காப்பியம், 7 : 67). உமையவளைக் குறித்தது.
நீண்ட, நெடிய என்ற பொருளையும் தரும்.

எ : அனைத்தும், எல்லாமும் (நற்றிணை, 153 : 3 – 4)
வினா (குறுந்தொகை, 40 : 2)

ஏ : அம்பு (குறுந்தொகை, 72 :1), இகழ்ச்சி (அகநானூறு, 323 : 1 – 3)
இறுமாப்பு (பரிபாடல், 7 : 55), மிகுதி (பெருங்கதை, 34 : 243)
வில் தொழில் (சீவக சிந்தாமணி, 7 : 89)
வினாப் பொருள், எதிர்மறைப் பொருள், இரங்கற் பொருள், வியப்புப் பொருள், சாரியை என விரியும்.

ஐ : கணவன் (குறுந்தொகை, 27 : 3), அழகு (குறுந்தொகை, 376 : 4) ஐந்து என்பதின் சுருக்கம் (அகநானூறு, 71 : 6 – 7)

இலக்கண மரபில், இரண்டாம் வேற்றுமை உருபு, தொழிற்பெயர் விகுதி சாரியை, என விரியும்.

ஒ : ஒப்பக் குறிப்பு (மணிமேகலை, 29 : 11)

ஓ : ஓழிதல் (அகநானூறு, 11 : 12), ஓவியம் (அகநானூறு, 142 : 21) மதகுப் பலகை (சிலப்பதிகாரம், 10 : 109),

வினா (குறுந்தொகை, 2 : 4 – 5)

ஓஓ : மிகுதிக் குறிப்பு (குறள், 118 : 6), இகழ்ச்சிக் குறிப்பு (கலித்தொகை, 94 : 35)

ஔ : உயிர் நெட்டெழுத்து (தொல்காப்பியம், 2 : 22)

க : கடவுளைக் குறித்தது, முதல் உயிர்மெய்.

கா : சோலை (புறநானூறு, 28 : 9), காவடி (பதிற்றுப்பத்து, 41 : 5)

இலக்கண மரபில், நான்காம் வேற்றுமை உருபு, சாரியை என விரியும்.

கூ : அழைத்தல் (மணிமேகலை, 7 : 115). ஊளையிடல், இகழ்ச்சிக் குறிப்பு. உலகம் என்றும் சொல்லப்படும். (கம்ப - அயோ - 12 : 10)

கை : ஐந்து விரல்கள் கொண்ட உறுப்பு (குறுந்தொகை, 8 : 4), இடம் (குறுந் - 149 : 1) ஒழுக்கம் (அகநானூறு, 124 : 10) என்றவாறு, 30 க்கும் மேற்பட்ட வாறு பொருள் விரியும்.

கோ : மன்னன் (புறம், 9 : 8), குயவன், (புறம், 256 : 1), பசு (சிலம்பு, 17 : 29), என்றவாறு 20 க்கும் மேல் பொருள் விரியும்.

சா : இறப்பு (நற்றிணை, 226 : 1)

சீ : முக்கு நீர் (மணிமேகலை, 20 : 48), புண்நீர் (பெரிய புராணம், 4 : 5 : 2)

சூ : கோழி முதலியவற்றின் உச்சிக் கொண்டை

செ : சிவப்பு (கலிங்கத்துப் பரணி, 2 : 54)

சே : காளை (அகம் – 36 : 7), மரம் ஒன்றின் பெயர் (தொல்காப்பியம், 7 : 76) சிவப்பு (குறுந்தொகை, 13 : 5)

சை : இகழ்ச்சிக் குறிப்பு

சோ : அரண் (சிலம்பு – 17 : 35 : 3)

ஞா : யானை (பெ. பாணா. படை, 18 : 29)

தா : வருத்தம் (நற்றிணை, 261 : 5), கேடு (அகம் – 212 : 1), குறைவு (புறம், 373 : 35), இரப்புரை (கேட்டல்) - தொல்காப்பியம், 18 : 50.

தீ : நெருப்பு (குறுந்தொகை, 95 : 3), தீமை (அகம் - 203 : 2).

தூ : தூய்மை (குறுந்தொகை, 51 : 3), வலி (யூரைக் காஞ்சி, 188), தசை (பதி.பத்து, 51)

தே : இனிமை (குறுந்தொகை, 26 : 6), தேன் (நற்றிணை, 220 : 8)

தை : ஒரு திங்கள் (பரிபாடல், 11 : 91), இணைத்தல்

நா : நாக்கு (குறுந்தொகை, 14 :1), சொல் (சீவக சிந்தாமணி, 1 : 287)

நீ : முன்னிலை ஒருமைப் பெயர் (குறுந்தொகை, 2:1-5), பிரிவு (கலித்தொகை 137 : 18)

நூ : எள் (தானியம்), சூளாமணி, 4 : 42.

நே : அன்பு (சம்பந்தர், 1 : 15 : 3), இரக்கம் (புறம், 3 :4)

நை : கெடுதல், தளர்தல், நைதல் (புறம் - 57 : 7)

நொ : மென்மை (குறுந்தொகை, 172 : 1) நொய்மை (பெருங்கதை, 53 : 3)

நோ : நோய் - துன்பம் (கலித்தொகை, 26 : 8), வருந்துதல் (நற்றிணை, 190 : 1)

நௌ : மான் (மதுரைக் காஞ்சி, 275)

பா : செய்யுள் (தொல்காப்பியம், 26 : 20), பகுத்தல் (கலித்தொகை, 17 : 1)

பீ : அழுக்கு, மலம்.

பூ : மலர், பொலிவு, அழகு, மென்மை என விரியும்.

பே : அச்சம் (குறுந்தொகை, 87 : 1)

பை : பசுமை, பாம்பின் படம், துன்பம், துணிப்பை, பரப்பு, உடல் என விரியும்.

போ : செல் (கலித்தொகை, 94 : 22)

ம : மன்னனைக் குறித்த சொல், உயிர், மலம் என விரியும்.

மா : குதிரை, பெருமை, கறுமை, மரம், விலங்கு என்றவாறு 40க்கும் மேற்பட்ட பொருளைத் தரும்.

மீ : வானம் (ஆண்டாள், 13 : 7), உயரம் (சம்பந்தர், 1 : 97 : 9)

மு : மூன்று (நாலடியார், 3 : 4)

மூ : மூன்று (அகம் - 282 : 8)

மே : மேன்மை (நற்றிணை, 296 : 5), சிறப்பு (மதுரைக் காஞ்சி, 14).

மை : கறுமை (குறுந்தொகை, 121 : 2), மேகம் (குறுந்தொகை, 319 : 4), ஆடு (நற்றிணை, 83 : 5) என்றவாறு 20க்கு மேற்பட்ட பொருளைத் தரும்.

வா : வருகை (புறம் - 138 : 7), தாவுதல் (நற்றிணை, 54 : 1)

வீ : மலர் (குறுந்தொகை, 47 : 1), வறட்சி (நற்றிணை 271 : 7)

நீக்கம் (அகம் - 19 : 16), மறைவு (சிலம்பு - 10 : 156)

வே : மூங்கில் (பாலகாண்டம், 16 : 27)

வை :வைக்கோல் (அகம் - 37 : 5), புல், பகுதியெனவும் விரியும்.

கூர்மை (குறுந்தொகை, 14 :2)

மேலே சொல்லப்பட்டுள்ள ஓரெழுத்து ஒரு சொற்கள், சங்க காலத்துக்குப் பிறகு அறியப்பட்டவைகளாகும். அதற்கு முன்பு வழக்கில் இருந்த நூற்றுக் கணக்கான சொற்கள் அனைத்தும் வழக்கிழந்து போய் விட்டன. பெரும்பாலும் இன்று பயன்பாட்டில் உள்ள சொற்கள் அனைத்தும் இரண்டெழுத்து மற்றும் கூட்டுச் சொற்களாகும். நந்தனார் என்ற பெயரில், நந்து அல்லது நல்ல + அள் + ஆர் என்ற மூன்று சொற்கள் உள்ளன. ஆதி என்பதும் ஆ + தீ என்ற இரண்டு சொற்களைக் கொண்டதே. உப்பு என்ற சொல், உள் + பூ என்ற இரண்டு சொற்களின் இணைப்பே. தாமரை என்பது, தாமம் + அரை என விரியும். எனவே, தமிழைப் போலவே, நூற்றுக் கணக்கான ஓரெழுத்துச் சொற்கள், சுமேரிய மொழியில் உள்ளன. தமிழில் ஏ என்ற சொல், அம்பு, இகழ்ச்சி, இறுமாப்பு, மிகுதி என்றவாறு இடத்திற்கேற்றவாறு பொருள் சொல்லப்பட்டுள்ளது. அதைப் போலவே, சுமேரிய மொழியிலும் ஒரு சொல், ஓரெழுத்து அல்லது ஈரெழுத்துகளால் ஆனவை பல பொருளில் அறியப்படுகின்றன. படித்துப் புரிந்து கொண்ட ஆய்வாளர்களின் விளக்கங்கள் சரியாகவும் இருக்கலாம், தவறாகவும் கூட இருக்கலாம். எவ்வாறாயினும், சுமேரியச் சொற்கள், எவ்வாறு தமிழ் மரபோடு ஒற்றுமைப்படுகின்றன என்பதை அடியிற் காண்க. விளக்கங்களை மேற்கோளில் காண்க.

## 5. தமிழ் – சுமேரியச் சொற்களில் உள்ள ஒற்றுஜம

1. செம் என்பவன் மரபினர் பேசிய செமிட்டிக் மொழி மற்றும் அதன் கிளை மொழிகள். (Semitic family)

1. இ : இல்லம்
2. ஐ : அழகை
3. உ : உணவு
4. வெ : வெல்
5. வ : வளைத்தல்
6. வி : விருப்பம்
7. ஊ : மிகப் பெரிய
8. அப் : அவிழ்
9. ஆப் : பசு
10. இப் : இடுப்பு
11. வ : வசை (திட்டு)
12. உப் : உப்பிய பொருள்
13. எட் : எடு – எடுத்தல்
14. எட் : எடுத்து வைத்தல்
15. உட் : உடு, சூரியன்
16. ஊத் : கோ + ஊது + மை, கோ
17. இக் : இக்கு, வழி
18. உக் : இனம், உக்கம்
19. ஊக் : ஊக்கம்
20. உல் : ஒளி, மகிழ்ச்சி
21. ஆன் : வான், வானம், ஆகாயம்

22. என் : தகுதி, உயர்வு, முன்னோன்
23. எண் : நேரம், நாழிகை
24. இர் : ஈர்த்தல், மணம்.
25. ஊர் : நகரம்
26. ஊர் : ஊர்ந்து நீளும் வேர்
27. ஊர் : விரியும் வழி
28. உசு : பசு, விலங்கில் பெண்
29. ஆசு : தனித்தன்மை
30. ஆசு : ஆசை
31. ஆசு : சே, ஆறு
32. ஊசு : உஸ் என்று சீறும் பாம்பு
33. ஊசு : பசு, பெண் ஆடு
34. ப : பகுதி, பிரிவு
35. பி : பிரிவு
36. பி : பிரிவு, கிழிப்பு
37. தீ : சாம்பல்
38. தெ : தெளிவு, அறிவுரை
39. தூ : தூரம்
40. தூ : தூவிடுதல், சண்டை
41. க : கலம், பால்பானை
42. கி : பெண், கன்னி, கிள்ளை
43. சீ : ஆண்
44. கி : கிடப்பு, கிடப்பி, பாய்
45. கு : குத்து (ஊசி)
46. கூ : பேரொலி
47. கூ : கூன், கோணம்
48. அ : அகம், வீடு, கூடை
49. த : தன், தன்னுடைய

50. இ : இருப்பு, மிகுதி
51. ஐ : ஐந்து
52. க : கவ்வு, உண், வாய்
53. க : கதவு, வாயில்
54. க : கடுவன், நரி
55. கு : குடில், குடிசை
56. ளி : ஒளி
57. ம : மயக்கம், ஈர்ப்பு
58. மீ : படகு, கப்பல் – மீகாமன்
59. மி : சிறுமி
60. மூ : மூட்டு (தீ)
61. மு : முணு முணுப்பு
62. நா : நான் (தன்மை ஒருமை)
63. நீ : அவன், அவள்
64. ப : படர், படர்ந்த இலை
65. பா : பாய்தல், ஓடுதல் (ஆறு)
66. ரி : இரி, ஓடுதல், சருக்குதல்
67. ரு : உருவம்
68. ச : செம்பு, சிவப்பு
69. சு : சுற்றம்
70. தீ : அம்பு
71. சி : நாசி (மூக்கு)

**குறிப்பு** : மேற்கோள் எண் 11 இல் மூல விளக்கத்தைக் காண்க.

மேலே சொல்லப்பட்ட ஓரெழுத்து, ஈரெழுத்துச் சுமேரிய மொழிச் சொற்களில் பெரும்பாலானவை, தமிழ்ப் பொருளோடு ஒன்றி வருகின்றன. ஓரெழுத்து, பல பொருளையும், அப்பொருள் தொடர்பான வேறு சில சொற்களையும் உள்ளடக்கியுள்ளன. எடுத்துக்காட்டாக, க (ka) என்ற ஓரெழுத்துச் சொல், கடித்தல் (bite), கடித்தலோடு தொடர்புடைய பல் (tooth), கடிப்பதற்குக் கடினமான பொருட்களாகிய தந்தம், கல், மரம் போன்ற பிற

பொருளையும் விளக்குகின்றன. சுமேரிய மொழியில் சொல்லப்பட்ட பல சொற்கள், அக்காடிய மொழியிலும் காணப்படுகின்றன. அக்காடிய மொழி, படிப்பதற்கு எளிமையாக இருந்ததால், அச்சொற்களைக் கொண்டு, சுமேரியச் சொற்களின் பொருள் உணரப்பட்டன. சுமேரிய மொழிக்கு முன்பு இருந்த மொழி பற்றிய குறிப்புகள் எவையும் இல்லாததால், சுமேரிய மொழி தனித்தன்மை கொண்ட மொழியாகக் கருதப்படுகின்றது. சுமேரிய மொழியின் பல நூறு சொற்கள், அக்காடிய, எபிரேய, அரபு, எகிப்திய மொழிகளில் காணப்படுவதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கிரேக்க மொழியிலும் பல சுமேரியச் சொற்கள் கலந்துள்ளன. எடுத்துக்காட்டாக, ஊர்பண் (Urban) என்ற கிரேக்கச் சொல், நகர வாழ்க்கையோடு தொடர்புடையதாகச் சொல்லப்பட்டுள்ளது. ஊர் (ur) என்ற சொல்லுக்கான மூலமும் வேரும் பொருளும் தெரியவில்லை என்று கூறும் ஆய்வாளர்கள், ஊர், நகரமாக அறியப்பட்டதால், நகரத்தைக் குறிக்க ஊர் பண் என்ற சொல்லை, கிரேக்க மொழியில் உருவாக்கிக் கொண்டனர் என்று கூறுகின்றனர்.

ஊர்பண் (Urban) என்பது, ஊர் வண் என்ற தமிழ்ச் சொற்களின் திரிபே.

வண் என்பதற்கு வளைந்த, வட்டமான என்ற பொருளுண்டு.

வண் – பண் என்று திரிபுபட்டுள்ளது.

ஊர்பண் என்பது, வட்ட எல்லைகளைக் கொண்ட நகரம் என்று சொல்லப்பட்டுள்ளது.

வண் என்ற சொல் எங்கிருந்து எடுக்கப்பட்டது என்பதற்கு விளக்கம் இல்லை.

உல் என்ற சொல்லுக்கு (ul) பல் பொருள் என சுமேரிய மொழியில் சொல்லப்பட்டுள்ளன[12].

உல் என்பது, தமிழ் வேர் என்பதை அறியலாம்.

உல் – உலர் : வெப்பத்தால் ஈரம் காய்ந்து போதல்.

உல் – வெப்பம், தீ, நெருப்பு எனத் தமிழில் விரியும்.

உல் – உல – உலவு என்றவாறு, சுற்றி வருதலையும் தமிழில் அறியலாம்.

உல் – உல – உலகு – உலகம் : நில்லாமல் சுற்றிக் கொண்டிருப்பது.

உல் என்ற சொல், சுற்றி வரும் அனைத்து உறுப்புகளுக்கும் பொருந்தும். சூரியன், உடுக்கள் என வானத்து உறுப்புகளையும், கோள்கள் போன்ற ஒளியற்றவைகளையும் கூடக் குறிக்கும்.

உல் என்பது, ஒளி என்ற பொருளிலும் அறியப்படுவதால், ஒளி தரும் வானத்து உறுப்புகள், உயிரினங்களைவிடப் பழமையானவை (ancient-ness) என்றும் அறியப்படும்.

ஒளி எப்போதும் அழகைத் தருவது. அழகு வெளிப்படும் வகையில், பொருட்கள் மேல் ஆதிக்கம் செலுத்துவதால், அழகான மலர்களும் ஒளியோடு தொடர்புடையவையே. அவை மனிதக் கட்டுப்பாடுகள் இன்றி தன்னிச்சையாக செயல்படுபவை. உல் என்ற சொல்லுக்குத் தமிழில் அறியப்படும் பல் பொருள், சுமேரிய மொழியிலும் அறியப்படுகின்றது.

எழுத்துமுறை கண்டுபிடிப்பதற்கு முன்பு, பேசப்பட்ட சொற்கள், எவ்வகையான கட்டுப்பாடும் இன்றி வழக்குச் சொற்களாக இருந்திருக்கும். எடுத்துக்காட்டாக வாயைத் திற என்ற சொல்லப்பட்டால், பேசு என்றும், சாப்பிடு என்றும், வாயைத் திறந்து காட்டு என்றும், பற்களைக் காட்டு என்றும் பல்வேறு வகையில் சொல்லப்பட்டிருக்கும். எழுத்து வடிவில் அச்சொல் பயன்படுத்தப்படும்போது, முகத்தின் ஓர் உறுப்பு, பேசு, நாக்கு, பற்கள், பேச்சு, மொழி என்றவாறு பல்பொருளாக விரியும். ஒவ்வொரு இடத்திற்கேற்றவாறு, அச்சொல்லைப் பயன்படுத்த வேண்டும். சொற்களைப் பற்றிய தெளிவே, மொழியறிவு எனப்படும். பேசுபவர்களைவிட, ஒரு மொழியின் சொற்களைச் செய்திகளாகப் பதிவு செய்பவர்களுக்கு, சொற்களைப் பற்றி மொழியறிவு விரிவானதாகவும், ஆழமானதாகவும் இருக்க வேண்டும். மொழிகளின் தோற்றக் காலங்களில், உருவகம், உயர்வு நவிற்சி, உவமைகள், மறைபொருளாகச் சுட்டுதல் அறியப்பட்டிருக்க வாய்ப்பில்லை. இவையெல்லாம் மொழி வளர்ச்சியில், ஒரு மொழியை மெருகூட்டுபவைகளாகக் கருதப்படும். வினாக்கள் என்பதும், பிற்கால மொழியின் வளர்ச்சியே எனலாம்.

தொடக்க காலத்து மொழி, அக்காலத்து மனிதர்களின் தேவைகளின் அடிப்படையில் குறைவான சொற்களையே கொண்டிருக்கும். தேவைகள் வளர, சொற்களின் எண்ணிக்கையும் வளரும். ஒரு மூல மொழியினின்றே, உலக மொழிகள் கிளைத்தன என்று கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. அவ்வாறு பிரிந்த மொழிகள், வட்டார அளவிலும், நாட்டளவிலும், மூல மொழியின் கூறுகளைக் கொண்டு, தனித்தன்மையுடன், பல்வேறு புதிய சொற்களை இணைத்துக் கொண்டு வளரும். ஓர் ஆலமரத்தினின்றும் வெட்டப்பட்ட கிளையை வேறிடத்தில் நடும் போது, தனது தாய் மரத்தின் அமைப்பைப் போன்றே கிளைகளைத் தோற்றுவிக்காது. நடப்பட்ட இடத்தின் தன்மைக் கேற்றவாறு, தனது கிளைகளை விரித்தாலும், அடிப்படையில் அது ஆலமரமே. அது போன்றே, ஒரு மொழியினின்றும் கிளைத்த பல மொழிகள் தன் சூழ்நிலையில் தனித்தன்மையுடன் வளர்ச்சியடையும்.

மாந்தன் பேசிய தொடக்க கால மொழியில், பல்வேறு ஒலிகள் இணைக் கப்பட்டன. மழை, காற்று, இடி, மின்னல் தரும் ஓசைகளும், பறவைகள், விலங்குகள் நீர் வாழ்வன தந்த ஒலிகளும், அச்சம், உவகை, வீரம் ஆகிய குணங்கள் தந்த வெளிப்பாடுகளும் ஒலிகளும், மாந்தனின் முதல் மொழிக்கான அடையாளங்களாய் அமைந்தன. பொருளின் தன்மை, விலங்குகளில் ஒலி ஆகியவற்றாலும் காரணச்சொற்கள் அமைந்தன. குர் – குர் என ஒலித்ததால் குரங்கு என்றும், புர் – புர் என வளர்ந்ததால் புற்று என்றும், வழுவழு என வளர்ந்ததால் வாழையென்றும் சொல்லப்பட்டன. பரவலாக அறியப்பட்ட ஒலிகளைக் கேட்டுப் பழகிய மாந்தன், அவற்றை உள்வாங்கிக் கொண்டு, தன் சிந்தனை ஆற்றலால், சொற்களை உருவாக்கிக் கொண்டான். ஒரு மொழியின் வளர்ச்சிக்குச் சிந்தனைத் திறன்களே அடிப்படையானவை. விலங்குகள் பல்லாயிரம் ஆண்டுகளாக, தாம் எழுப்பிய ஒலிகளையே தற்போதும் எழுப்பி ஒலித்துக் கொண்டிருக்கின்றன. மாந்தனின் பண்பாட்டு, நாகரிக, அறிவியல், இயற்கையை உற்று நோக்கும் திறன் போன்ற புறக்காரணிகளோடு, பகுத்தறிவைப் பயன்படுத்தியதால் தான், மொழி தோன்றி வளர்ந்தது. மொழியை இறைவனே மனிதனுக்குக் கற்றுக் கொடுத்ததாகப் பல சமய நூல்கள் கூறுகின்றன. இறைவனால் படைக்கப்பட்டவைகள் தந்த ஒலிகளால் மொழி தோன்றியது என்றவாறு அதனை ஏற்றுக் கொள்வார் உண்டு. மொழி என்பதற்கு சொல்லுதல், பேசுதல் என்பது நேரிடையான பொருளாக அமைந்தாலும், கற்றலும் கேட்டலும் கூட, மொழியின்பாற்பட்டவையே.

சுமேரிய மொழியின் பல கூறுகள் தமிழோடு தொடர்புடையதாக அறியப்பட்டாலும், தமிழர்களின்றும் மாறுபட்ட சூழலில் சுமேரியர்கள் வாழ்ந்திருந்தனர் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். ஒரு நூற்றாண்டுக் கால அளவுகளிலேயே, ஏராளமான புதிய சொற்கள் ஒரு மொழியில் தோன்றுவது இயல்பு. அதனைப் போன்றே, பல சொற்கள் பயன்படாமல் மறக்கப்படுவதும் உண்டு. "நன்றாக உள்ளது" என்ற கருத்தை, கடந்த 50 ஆண்டுகளில் எவ்வாறெல்லாம் புதிய சொற்களால் மாற்றிப் பேசி வருகின்றனர் என்பதை அறியலாம். 7000 ஆண்டுகளுக்கு முன்பு பேசப்பட்ட ஒரு மொழியில் எவ்வாறான மாற்றங்கள் தோன்றியிருக்கும் என்பதற்கு சுமேரிய மொழி ஓர் எடுத்துக்காட்டாகும். தமிழிலும் மூப்புடைய தமிழ் மொழி இன்னும் பேசப்பட்டு வருவதால், இலக்கியங்களின் வாயிலாகப் பழைய சொற்களை அறிய முடிகின்றது. மொழியின் வளர்ச்சியையும் உணர

முடிகின்றது. சுமேரிய மொழி முற்றிலுமாக, ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வழக்கொழிந்து போனதால் அம்மொழியைப் பேச இன்று எவரும் இல்லை. சுமேரியர் காலத்தில் பேசப்பட்ட எபிரேயம் இன்றும் உயிர்த் துடிப்புடன் உள்ளது. அசீரிய மொழியைப் பேசுபவர்கள் கூட இன்றும் உள்ளனர் என்று கூறுகின்றனர். இறந்து போன சுமேரிய மொழியின் பெருமைகளைக் கூற, அம்மொழியைப் பேசிய ஒருவர் கூட இன்று உயிருடன் இல்லை. எனவே தான், அம்மொழிக்குத் தொடர்பில்லாத பிறரால் அம்மொழியைப் பற்றி அறிந்து கொள்ள எண்ணும் போது இடர்பாடுகள் தோன்றுகின்றன. சுமேரிய மொழிச் சொற்களை ஏற்றுக் கொண்ட பிற மொழிகளில் கிரேக்கம், அரபு, அசீரியம், எபிரேயம் ஆகியவை இன்றும் பேசப்பட்டு வருவதால், இம்மொழிச் சொற்களின் துணை கொண்டே சுமேரிய மொழியை ஆய்வு செய்து வருகின்றனர். சுமேரியத்தின் தாய் மொழியான தமிழ்மொழியின் துணைகொண்டு, சுமேரிய மொழியை இதுவரை விரிவாக எவரும் ஆய்வு செய்ய முன்வரவில்லை.

தமிழ் அறிஞர்களுக்கு, பழங்காலத்து மொழிகளான எபிரேயம், கிரேக்கம், இலத்தீன் மொழிகளைக் கற்பதில் ஆர்வம் இல்லை. தமிழை மட்டும் அறிந்தவர்கள், குறிப்பாகத் தமிழறிஞர்கள், தமிழே உலகின் முதன் மொழி என்று கூறிக் கொள்வதில் பொருள் இருக்கப் போவதில்லை. அவ்வாறு சொன்ன அறிஞர்களின் கருத்தை வேண்டுமானால் கிளிப்பிள்ளை போல், மீண்டும் கூறிவரலாம். தமிழறிஞர்கள், மேற்கண்ட மொழிகளில் ஒன்றை கண்டிப்பாகக் கற்க வேண்டும். அப்போது தான் தமிழின் பெருமையை உணர முடியும். பாரதியார் பல மொழிகளைக் கற்றிருந்ததால், யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிய மொழியைக் கண்டதில்லை என்று கூறினார். தமிழில் வேர்ச் சொற்கள் பற்றிய புதிய ஒளியைத் தந்த ஞானப்பிரகாச அடிகள், இலத்தீன், செர்மன், எபிரேயம், சமற்கிருதம் போன்ற மொழிகளை அறிந்திருந்தார். அதனாலேயே, ஆயிரக்கணக்கான சொற் களுக்கான வேர்ச் சொற்களை அவரால் கண்டுபிடிக்க முடிந்தது. தமிழ் மொழிச் சொற்கள், மேற்கண்ட மொழிகளில் எல்லாம் விரவப்பட்டிருந்த உண்மையை விரிவான விளக்கங்களுடன் முதன் முதலில் ஆய்வு வடிவில் தந்த பெருமைக்குரியவர் ஞானப்பிரகாச அடிகள் என்றால், அது மிகையன்று. அவருடைய வழிகாட்டுதல் இன்றைய தலைமுறையினருக்கும், வருங்காலத் தலைமுறையினருக்கும், குறிப்பாகத் தமிழ் மொழியை ஆய்வு செய்பவர்களுக்குத் தேவைப்படுவதாகும். தமிழை வளர்ப்பதாகக் கூறிக்

கொள்ளும் எவருக்கும் ஞானப்பிரகாச அடிகளைப் பற்றி எதுவுமே தெரியாது என்பது வருந்தக் கூடியதாகும்.

சுமேரிய மொழியை நாம் ஆய்வுக்காக எடுத்துக் கொண்டது கன்னி முயற்சியாகும். வருங்கால தமிழ்த் தலைமுறையினர், சுமேரியர்களைப் பற்றி ஆய்வுகள் மேற்கொள்ள, ஊக்கம் தரும் அளவிலேயே இந்நூல் எழுதப்பட்டது. தமிழர்களுக்கு இந்நூல் முழுமையான ஆய்வைத் தந்துவிட்டதாகக் கூற இயலாது. எகிப்திய, மெசபத்தோமிய, ஆப்பிரிக்க வரலாறுகளையும் மொழிகளையும் பற்றி நூற்றுக் கணக்கான ஆய்வாளர்கள், ஆயிரக்கணக்கில் நூல்களையும் ஆய்வுக் கட்டுரைகளையும் தந்துள்ளனர். ஆனால் சுமேரியர் வரலாறு, மொழி பற்றி முழுமையாக ஆய்வு செய்தவர்கள் எவருமிலர். குறிப்பாக, பத்து அறிஞர்களே (அதற்கும் குறைவாகவே உள்ளனர்). சுமேரியரைப் பற்றிய ஆய்வுகளைத் தந்துள்ளனர். அவர்களில் சாமுயெல் நோவா கிராமர் என்பவர் மட்டுமே மற்றவர்களைவிட தன் ஆய்வுப் பணிகளை முன்னெடுத்துள்ளார். சுமேரியர் வரலாற்றில் 25 விழுக்காடு அளவிற்குக் கூட தன் ஆய்வுப் பணிகள் அமையவில்லை என்று அவரே கூறுகிறார். உலக வரலாற்றில் மிகவும் சிக்கலான, புரிந்து கொள்ள இயலாத வரலாறு ஒன்று உண்டென்றால், அது சுமேரியர் வரலாறே என்று கூறலாம். சிந்து வெளி ஆய்வுகள் கூட தொடக்கத்தில் (1930 களில்) குழப்பமான தெளிவற்ற திசையில் சென்று கொண்டிருந்தன. தற்போது மிகத் தெளிவான வரலாற்றை மீட்டெடுத்துள்ளனர். சொற்களைப் படிப்பதில் தான் முரண்பாடுகள் காணப்படுகின்றன. அகழ்வாய்வும் பொருட்கள் வழியே, வரலாறு மீட்கப்பட்டு விட்டது. சுமேரியர் காலத்தின் தொடக்கத்தைக் கணிக்க இயலாத ஆய்வாளர்கள், சிந்து வெளி நாகரிகத்தின் தொடக்க காலம், கி.மு.10000 ஆண்டுகள் எனத் தெளிவுபடக் கூறிவிட்டனர். ஆனாலும் இப்போதும் சில நாளிதழ்களில் வரும் கட்டுரைகளில், சிந்து வெளி நாகரிகம், கி.மு.2500 - 1500 என்றே எழுதி வருகின்றனர். (12.10.2016, இந்து நாளிதழ் கட்டுரை).

**ஆய்வாளர்கள் படித்துக் கூறிய சில சொற்கள்[13] :**

கப (gaba) : தாய்ப்பால் கொடு (ga : breast milk, ba : to give)

ஊசூப் (Usub) : கூடையைத் தூக்கு (us : Basket, ub : to lift)

ஊர்கு (Urgu) : சினம் கொண்ட குலைக்கும் நாய்

என் தூப் (Endub) : முதலாளியின் சமையல் காரன்.

ஊருது (Urudu) : செந்நிறமான செம்பு

ஊருகல் (Urugal) : பெரிய நகரம்

கங்கல் (Kangal) : கடினமான பாறை
(மேற்கோள் எண் 14 ஐக் காண்க)

### அடிக்குறிப்புகள்

11. Earliest vocabulary of Proto - Sumerian

| | | | |
|---|---|---|---|
| 1. | a | : | House, temple, plot of land |
| 2. | i | : | Cry of pain, tears |
| 3. | v | : | to capture |
| 4. | u | : | Food, Plant, Vegetable |
| 5. | u | : | Bend, like U turn |
| 6. | v | : | wish, to mount |
| 7. | u | : | Big, Huge |
| 8. | Ab | : | Open, Window |
| 9. | Ab | : | Cow (domestic) |
| 10. | Eb | : | Waist, Middle, Loins |
| 11. | V | : | to be angry, insult |
| 12. | Ub | : | stout, drum |
| 13. | Ed | : | to take, to go out |
| 14. | Ed | : | to take out |
| 15. | Ud | : | Sun, Light. (Later word utu) |
| 16. | Ud | : | Wheat |
| 17. | Ig | : | door, entrance |
| 18. | Ug | : | Anger, Lio |
| 19. | Ug | : | Gaze, Glance |
| 20. | Ul | : | Star, Pleasure |
| 21. | An | : | Sky, Heaven |
| 22. | En | : | (my) Ancestor |
| 23. | En | : | Number, Time |
| 24. | Ir | : | Attract the smell |
| 25. | Ur | : | Town |
| 26. | Ur | : | Root, Trunk of a tree |
| 27. | Ur | : | Way, Pass, Entrance |
| 28. | Us | : | Cow, female sheep |
| 29. | As | : | Unique, Alone, One |
| 30. | As | : | Wish, Desire |
| 31. | As | : | No.Six |
| 32. | Us | : | Snake's Venom |
| 33. | Uz | : | She goat |
| 34. | Ba | : | Share |
| 35. | Bi | : | to diminish |
| 36. | Bi | : | to tear |
| 37. | De | : | Ashes |
| 38. | De | : | to turn, advice |

39. Du : to walk, distance
40. Du : quarrel, struggle
41. Ga : Pot, Milk pot
42. Gi : Girl
43. Gii : Boy
44. Gi : mat, reed out
45. Gu : Needle
46. Gu : Noise, Voice, Sound
47. Gu : Angle, Bend
48. Aa : House
49. E : I, myself, my
50. E : Abundance
51. U : Food
52. I : Five
53. Ka : Catch, bite, mouth
54. Ka : Door, Gate
55. Ka : Box
56. Ku : Hut, build
57. Li : Light, Shine
58. Ma : Attract, to bind
59. Mi : Boat
60. Mi : Girl
61. Mu : to burn
62. Mu : Murmering
63. Na : Man, Human
64. Ni : She, He, that one
65. Pa : Bud, Leaf, spread, branch
66. Pa : Canal, Dike
67. Ri : to pour, to throw
68. Ru : size, same size, equal size
69. Sa : Red, Red Ocher
70. Su : Relatives
71. Zi : Nose, breathing

- S.N.Kramer, "The Sumerians : Their History, Culture and Character", University of Chicago, 1963.

12. Ul Sign : Individual signs show manay instances of polysemy, using the same sign or word to mean manythings, such as Star, Sun, Flower, Light, Remote, Ancient and Joy for the ul sign. - Ibid.

13. S.J.Lieberman, "The Phoneme in Sumerian", 1978, PP, 21-28.

Authors and Researchers on Sumerian.

1. J.Krecher, Rolling, W., "Sumerian Language", 1969.
2. T.Jabiobson, "Toward the Image of Tammuz", Cambridge, 1970.
3. A.Johannesson, "The Third Stage in The Creation of Human Language", Oxford, 1970.
4. M.L.Foster, "The Symbolic structure of Primordial Language", 1978.
5. G.Fano, "The Origin and Nature of Language", Indianapolis, 1992.
6. J.A.Black, "The Alleged Extra Phonemes of Sumerian", 1990.

## 6. சுமேரிய எழுத்து முறைக் கண்டுபிடிப்புகள்

சுமேரியக் களிமண் தட்டுகள், தற்செயலாகவே முதன் முதலில் கண்டுபிடிக்கப்பட்டன. சுமேரியர்களைப் பற்றிய வரலாறு, செய்திகள், மெசபத்தோமிய, அசீரிய எபிரேய மொழி இலக்கியங்களில் சொல்லப்பட்டிருந் தாலும், அதற்கு மேல் எந்தச் செய்தியும் எவருக்கும் தெரிந்திருக்கவில்லை. அதனை அறிவதற்கான எந்த முயற்சிகளையும் எவரும் எடுக்கவில்லை. ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு, பெர்சப் போலிஸ் என்ற நகருக்கு வருகை தந்த ஒரு பயணி தற்செயலாக, ஒரு களிமண் தட்டைக் கண்டெடுத்தார். அதில் எழுதப்பட்டிருந்தவை, அவருக்குக் கோடுகளாகவே தெரிந்தன. பெர்ச போலிஸ் (தற்காலத்து ஈரான்) நகரத்து அறிஞர்கள், அக்களிமண் தட்டைக் கண்டு வியப்படைந்தனர். அதனைப் படித்துப் பார்க்க முயன்றனர். பாரசீக எழுத்து முறை மற்றும் அரேபிய எழுத்து முறையைக் கொண்டு, அதனைப் படிக்க முயன்றனர். அக்கால அளவில், இசுலாமிய அறிஞர்கள் பெரு மளவில் அறியப்பட்டிருந்தனர். அவர்களின் முயற்சிகள் பலனளிக்கவில்லை. அக்களிமண் தட்டில் எழுதப்பட்டிருந்தவை எம்மொழியைச் சார்ந்தது என்பதையும் அவர்களால் அறிய இயலவில்லை[1].

கி.பி.15 ஆம் நூற்றாண்டில், வெனிஸ் நகரத்து பார்பெரோ (Barbero of Venice), தற்கால ஈராக் நாட்டின் மையப் பகுதிகளில், பாழடைந்து கிடந்த பகுதிகளைப் பார்வையிட்டார். அப்போது சில ஆப்பு எழுத்து வடிவில் அமைந்திருந்த சில களிமண் தட்டுகளைக் கண்டுபிடித்தார். அக்களிமண் தட்டுகளைப் போன்றே, சிராஸ் நகரத்துக் கோயிலில் சில தட்டுகளைக் கண்டறிந்தார். அவை, மிகப் பழமையானவை என்றும், மெசபத்தோமியப் பகுதிகளில் அறியப்பட்டிருந்த மொழியின் வரிவடிவம் என்பதை மட்டுமே உணர்ந்தார்.

அந்தோணி தெ கவுவியா (Antonie de Gouvea) என்ற தத்துவப் பேராசிரியர், 1602 ஆம் ஆண்டில், சில களிமண் தட்டுகளை, பாரசீகத்தில் சுற்றுப் பயணம் மேற்கண்ட போது கண்ணுற்றார். 1625 ஆம் ஆண்டில் உரோம் நகரத்துப் பயணி பியத்ரோ தெல்லா வல்லி (Pietro Della Vallie),

1616 முதல் 1621 வரை தங்கியிருந்து மெசபத்தோமியாவின் பழைய நகரங்களில் (ஊர் உள்ளிட்ட நகரங்கள்) பல குறிப்புகளைக் கண்டறிந்தார். ஈரானில் கிடைத்தவைகளையும் கருத்தில் கொண்டு, அனைத்துப் பொருட்களையும் ஐரோப்பாவிற்கு எடுத்துச் சென்றார். அங்கு பல்வேறு அறிஞர்களிடம் அக்களிமண் தட்டுகளைக் காட்டி விளக்கம் தெரிந்தால் அளிக்குமாறு கேட்டுக் கொண்டார். அவர்கள், அக்குறிப்புகள் பற்றி அறியா திருந்தனர். பியத்ரோ, பழைய உரோமக் கல்வெட்டுகளை, இக்குறிப்புகளோடு ஒப்பிடடுப் பார்த்தார். அவர் கண்டுபிடித்தது, அக்குறிப்புகள் இடது புறத்திலிருந்து வலது பக்கமாக எழுதப்பட்டுள்ளன என்பதும், ஆப்பு வடிவில் அவ்வெழுத்துகள் உள்ளன என்பது மட்டுமே. அவரால் அக்குறிப்புகளைப் படிக்க இயலவில்லை[2].

சர் தாமஸ் எர்பர்ட் என்ற ஆங்கிலேயர், பயணங்கள் பற்றிய விளக்கங் களை, செய்தித்தாளாக வெளியிட்டு வந்தார். 1634 ஆம் ஆண்டில் தனது செய்திப் பதிப்பில், "பல ஆண்டுக்கால பயணங்களுக்கிடையே காணப்படும் ஒற்றுமை" என்ற செய்தியை வெளியிட்டிருந்தார். அச்செய்தியில், பெர்செ பொலிஸ் நகரத்துச் சுவர் ஒன்றில், 12 வரிகளில் எழுதப்பட்டிருந்தவை பற்றியும், சில உருவங்கள் அதில் பொறிக்கப்பட்டிருந்ததைப் பற்றியும் குறிப்பிட்டிருந்தார். நீண்ட, குறுக்கு, கூம்பு, செவ்வக வடிவிலான எழுத்துகள் பற்றியும், அவை, பழைய கிரேக்க மொழியின் எழுத்துகளாக இருக்கலாம் என்ற தனது கருதுகோளையும் வெளியிட்டிருந்தார். 30 ஆண்டுகளுக்குப் பிறகு, 1664 இல், அச்செய்தி பற்றி மீண்டும் ஒரு விளக்கத்தைக் கொடுத்தார். பெர்செபொலிஸ் நகரத்து சுவர் எழுத்துகள், தெளிவானவை என்றும், அறிவு சார்ந்தவை என்றும், அவற்றை முயற்சி செய்தால் படித்துப் புரிந்து கொள்ளலாம் என்றும் எழுதியிருந்தார். மேலும், அவர் அம்மொழி கருத்துரை மொழியல்லவென்றும், சொற்களும், சொற்களுக்கான எழுத்தொலிகளும் அம்மொழியில் உள்ளனவென்றும், இடமிருந்து வலமாக எழுதப்பட்டுள்ளன என்றும் கூறியிருந்தார். சுமேரிய மொழிபற்றி, முதல் செய்தியைக் கொடுத்தவர் அவரே. அதன்பின்னர், 1815 வரை பலர் அம்முயற்சியில் இறங்கினர்[3]. பல்வேறு முயற்சிகள் பல காலங்களில் முயலப்பட்டு அவை, சுமேரிய எழுத்துகளே என முடிவு செய்யப்பட்டது.

கடந்த ஒரு நூற்றாண்டாக, சுமேரிய மொழியைப் படித்துப் பலர் பொருள் கூறியுள்ளனர். ஒவ்வொரு வரும் தம் ஆய்வுத் திறமைக் கேற்றவாறு பொருள் அறிந்தனர். சில சொற்களுக்கான பொருள் மாறிக்

கொண்டே வந்துள்ளது. ஊர் நகரத்தின் மன்னன் பெயர் ஊர் – பா (Ur - Bau) என்று முதலில் படிக்கப்பட்டது. பின்னர் அதே பெயர், ஊர் எங் கூர் (Ur - Engur) என்று பின்னர் படிக்கப்பட்டது. வேறு சிலரால் உங்கல் – ஊர் (Ungal ur) என்று பின்னர் படிக்கப்பட்டது. வேறு சிலர் உங்கள் – ஊர் (Ungal ur), என்று படித்தனர். உங்கள் என்பது மன்னனைக் குறித்த சொல் இல்லை. (The city is yours) உங்கள் ஊர், நல்ல தமிழ்ச் சொற்களாக உள்ளன. மேலும் பல பழைய பெயர்கள், சுமேரிய மொழியைச் சார்ந்தவையா அல்லது செமிட்டிக் மொழியைச் சார்ந்தவையா என அறிய இயலவில்லை. சில ஆய்வாளர்களின் கருத்துப் படி, செமிட்டிக் இன மக்கள், சுமேரியப் பெயர்களை சூடிக் கொண்டுள்ளனர். கிஷ் நகரத்துச் செமிட்டிக் மன்னரின் பெயர், ஊரு முஷ் (Uru - mush) என்று முதலில் படிக்கப்பட்டது. பின்னர் அதற்காக பொருளாக, "அவன் நகரத்தை உருவாக்கினான்", (He founded a city) என்று சொல்லப்பட்டது. பின்னர் அதே பெயர், அலு – உஷரிஷித் (Alu - Usharshid) என்று மாற்றப்பட்டு, இறுதியில் ஊரு (Uru) என்ற எழுத்துகள், ரி (Ri) என்று படிக்கப்பட்டது. அதன்படி ரிமுஷ் (Rimush) என்று திருத்தம் செய்யப்பட்டது. ரி என்பதற்கு ஓரிடம் என்று பொருள் சொல்லப்பட்டது. ஆய்வாளர்கள், வரலாற்றைப் படிக்கும் ஆர்வலர்களையும் குழப்பத்திலும் மயக்கத்திலும் ஆழ்த்தியுள்ளனர். இதுவரை சொல்லப்பட்ட விளக்கங்களும் எதிர்காலத்தில் மாற்றங்கள் வரவும் வாய்ப்புகள் உண்டு.

தற்காலத்தில் 100 என்ற எண்ணைப் பொது அலகாக வைத்துள்ளனர். அந்த அலகைப் பின்பற்றாத நாடுகள் கூட, அதனைப் பயன்படுத்தத் தொடங்கி விட்டன. 1957 முதல் இந்தியாவில் தசம, சதாம்ச (பத்து, நூறு) அலகு முறை பயன்படுத்தப்பட்டு வருகின்றது. சுமேரிய அலகு முறை, 60 என்ற எண்ணை அடிப்படையாகக் கொண்டது. 70 என்ற எண்ணைக் குறிக்க 60 + 10 என்று குறிப்பிடுவர். சுமேரியரின் 60 என்ற அலகுமுறை, ஒரு மணிக்கு 60 நிமையம், ஒரு நிமையத்துக்கு 60 நொடிகள் என்றவாறு, தற்காலத்திலும் நடைமுறையில் உள்ளது[4]. தமிழர்கள் ஒரு நாளை, 60 நாழிகைகளாகப் பிரித்து வைத்திருந்தனர். பகல் 30 நாழிகை, இரவு 30 நாழிகை எனக் கணக்கிடப்பட்டது. நாள், சூரியன் மறைவுக்குப் பிறகே தொடங்கப்பட்டு மறுநாள் மாலையில் முடிவுற்றது. தமிழரின் ஆண்டுக் கணக்கும் 60 என்றே சொல்லப்பட்டது. அவற்றின் பெயர்கள் சமற் கிருதத்தில் மாற்றம் செய்யப்பட்டு, தமிழுக்குத் தொடர்பில்லாததுபோல் மாற்றப்பட்டது. 60 ஆண்டுகள் என்பது, இரண்டு தலைமுறைக் கணக்கைக்

கொண்டது. முப்பது ஆண்டுகளுக்கொரு முறை, இயற்கையின் சூழல்கள் மாறுபடுவதையும், 60 ஆண்டுகளில் ஒரு சுழற்சி முடிந்து மீண்டும், இயற்கையின் பழைய சூழல்கள் தோன்றுவதையும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டது. ஒவ்வொரு ஆண்டும் 60 ஆண்டுகளில் என்னென்ற நிகழ்வுகளைச் சந்திக்கும், மக்களின் வாழ்க்கைமுறை எவ்வாறு அமையும் என்பதை, 60 ஆண்டுகளின் பெயர்கள் சுட்டுகின்றன. சுமேரியர்கள், தமிழ்க் கிளையினரே என்பதற்கு, 60 என்ற அவர்களுடைய அலகு மற்றுமோர் எடுத்துக்காட்டாகும்.

தற்காலத்தில் சுமேரிய எழுத்து முறைகளையும், மெசபத்தோமி யாவைச் சுற்றியிருந்த நாடுகளின் எழுத்து முறைகளையும் கணினிப்படுத்தி யுள்ளனர். வரலாற்றுக்காலத்துக்கு முற்பட்ட அம்மொழிகளுக்கு ஒழுங்கு குறி (Unicode) ஒன்றையும் உருவாக்க முயன்றுள்ளனர். பல்வேறு இடங்களில் அகழ்வாய்வுகள் மூலம் கண்டெடுக்கப்பட்ட களிமண் தட்டுகளை அண்மைக் காலத்தில் பட்டியலிட்டுள்ளனர். அப்பட்டியலைக் கொண்டு, ஊர் நகரத்து மூன்றாம் தலை முறைகாலத்துக் குறியீடுகளை அடிப்படையாகக் கொண்டு நூலகம் ஒன்று தொடங்கப்பட்டது. (Cuneiform Digital Library Initiative). மிகுயெல், போர்ஜர் (Miguel Civil and Rykle Borger) 2003 ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் அந்த அமைப்பைத் தொடங்கினர். இலத்தீன் மொழியின் அகர வரிசைப்படி அவை தொகுக்கப்பட்டன[5].

வாட்கின்ஸ், லீ, கினிதர், டீன் போன்றோர், ஜான் ஹஸ்கின்ஸ் பல்கலைக் கழகத்தில், அமுராபித் திட்டம் (The Digital Hammurabi Project, (PDF) என்ற செயல் முறையைத் தொடங்கினர் (2003). 150 ஆண்டுகளாக படித்துப் பார்க்கப்பட்ட ஆப்பெழுத்து வடிவத்தில் அமைந்திருந்த களிமண் தட்டுகளையெல்லாம் வகைப்படுத்தினர். அருங்காட்சியகங்கள், அரசாங்கப் பொறுப்பிலிருந்தவையெல்லாம் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டன. இதுவரை மூன்று இலக்கம் (3,00,000) களிமண் தட்டுகள் அறியப்பட்டுள்ளன. அவை, நடுத்தரைக் கடல் நாடுகளில், அக்காலத்தில் பதிவு செய்யப்பட்டவை களாகும். சுமேரியம், அக்காடியம், அசீரியம், ஈத்தியம், பாரசீகம், உரியன், ஈழம், போனீசியம், உகாரியம் எனப் பன்மொழிகளில் உள்ளவைகளாகும். அப்பதிவுகள், தொன்மக் கதைகள் கணிதம், சட்ட வடிவுகள், மன்னர்கள் பற்றியவை, ஆட்சிமுறை, சமூகம், தொழில்கள், வேளாண்மை, வணிகம், கால நிலை என்றவாறு தகவல்களைக் கொண்டுள்ளன. அவை, தற்கால வரலாறு மற்றும் மொழி சார்ந்த ஆய்வாளர்களால், படித்துப் பார்க்கப்பட்டு,

விளக்கங்கள் தரப்பட்டுள்ளவைகளாகும். வரலாறு, சட்டம், சமயம், மொழியியல், கணக்கு, அறிவியல் போன்ற துறைகளில் ஆய்வாளர்களின் கவனத்தை ஈர்த்தவைகளாகும். மனித குலத்தின் பழைய வரலாற்றை அறிய அக்களிமண் தட்டுகள் பெரிதும் உதவுகின்றன. இருப்பினும், அப்பதிவுகளில் 10 இல் ஒரு பங்கைக்கூட இதுவரை ஆய்வு செய்யவில்லை. சுமேரிய - அக்காடியப் பதிவுகளில் காணப்படும் சிக்கலான, குழப்பமான எழுத்து முறைகள், அப்பதிவுகளைப் புரிந்து கொள்வதில் பின்னடைவைத் தோற்றுவிக்கின்றன. அவற்றை ஒழுங்குபடுத்தி, கணினியில் பதிவு செய்யவும் இயலவில்லை. இத்துறையை அறிந்தவர்களும் ஆர்வமுள்ளவர்களும், உலக அளவில் குறைந்த எண்ணிக்கையிலேயே உள்ளனர். முறையான திட்டங்களை மேற்கொள்ள, பெரும் தொகையும் தேவைப்படுகின்றது. நீண்ட நெடிய நேரம் உழைக்க வேண்டியுள்ளது. அரசியல் குறுக்கீடுகளும் அதிகமாக உள்ளன. தங்கள் நாடுகளில் காணப்பட்ட பெருமைகளை ஏற்றுக் கொள்பவர்கள், குறைகளை ஏற்கத் தயங்குகின்றனர். இவை போன்ற காரணங்களால், ஆய்வுகளில் தொய்வுகள் தோன்றுகின்றன. தொடக்க காலங்களில் (1880 களில்) களிமண் தட்டுகள் பற்றி அறியப்பட்டபோது, பலர் அவற்றைக் கண்டெடுத்து, விற்பனை செய்துள்ளனர். பழங்காலப் பொருட்கள் மீது ஆர்வம் கொண்டவர்கள் அவற்றை விலை கொடுத்து வாங்கியுள்ளனர். 1920 ஆண்டுகளில், சந்தையில் 4000 க்கும் மேற்கட்ட களிமண் தட்டுகள் விற்பனை செய்யப்பட்டுள்ளன. அதன் பின்னரே அரசுகளும், தொண்டு நிறுவனங்களும், அவ்விற்பனையைத் தடுத்து நிறுத்தியுள்ளன. இப்போதும் கூட, பல களிமண் தட்டுகள், தனியாரிடம் உள்ளதாகவும் சொல்லப்படுகின்றது. இதுவரை கண்டெடுக்கப்பட்ட களிமண் தட்டுகளின் பட்டியல், அமுராபித் திட்டத்தின் மூலம் வெளியிடப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. El Daly, Egyptiology : The Missing Millennium, Okasha, 2004, PP 39 - 40.
2. Wade Meade, "Road to Babylon", Brill Archive, U.S., 1974, P.5.
3. Carsten Niebuhr brought the first reasonably complete and accurate copies of the inscriptions at Persapolis to Europe. Bishop Fredrick Munter of Copenhagen discovered that the words in Persion inscriptions were divided from one another by an oblique wedge and that the monuments must belong to the age of Cyrus and his successors. One word, which occurs without any variation towards the beginning of each inscription, he correctly inferred to signyfy, "King". By 1802 Georg Fredrich Grotefend had determined that two king's names mentioned were Darius

and Xerxes and had been able to assign correct alphabetic values to the cuneiform characters which composed the two names. Finally after several attempts, it was declared as Sumerian script. - Ibid.

4. Numerals : The Sumerians used a numerical system based on 1,10 and 60. The way of writing a number like 70 would be the sign for 60 and the sign for 10 right after. This way of counting is still used today for measuring time as 60 seconds per minute and 60 minutes per hour. - Ibid.

5. Unicode : The final proposal for unicode encoding of the script was submitted by two cuneiform scholars working with an experienced unicode proposal writer in June, 2004. The base character inventory is derived from the list of Ur III signs complied by the Cuneiform Digital Library Initiative of UCLA based on the inventories of Miguel Civil, Rykle Borger. - Ibid.

# 7. சுமேரியர் நாள் காட்டி

ஓராண்டின் காலங்களைக் கணக்கிடுவதில் நாட்டுக்கு நாடு வேறுபாடுகள் உள்ளன. தமிழர்கள், ஓராண்டை ஆறு பருவங்களால் பிரித்திருந்தனர். கார்காலம் (ஆவணி / புரட்டாசி), கூதிர் காலம் (ஐப்பசி / கார்த்திகை), முன்பனிக்காலம் (மார்கழி / தை), பின்பனிக்காலம் (மாசி / பங்குனி), இளவேனிற்காலம் (சித்திரை / வைகாசி), முது வேனிற் காலம் (ஆனி / ஆடி). தமிழருடைய நாள் காட்டி பற்றிப் பல செய்திகள் சங்க இலக்கியங்களில் சொல்லப்பட்டுள்ளன. தமிழர்கள், நிலவை அடிப்படையாகக் கொண்ட நாள் காட்டியைப் பயன்படுத்தி வந்தனர்.

வானத்து உறுப்புகளின் நகர்வுகளைக் கொண்டு, காலங்கள் கணிக்கப்பட்டன. தீ என்ற தமிழ்ச் சொல், சூரியன், நிலவு, விண்மீன்களைக் குறிக்கும். அதனை முத்தீ எனத் தமிழர்கள் அழைத்தனர். சேய்தீ என்பது, தொலைவிலுள்ள விண்மீன்கள் என்ற பொருளைத் தரும். சேய்தீ, சோதி என்று சமற்கிருதத்தில் திரிந்தது. சேய்தீயிடம் என்பதே சோதிடம் என்று சொல்லப்பட்டது. சமற்கிருதச் சொல்லை அடிப்படையாகக் கொண்டு, கிரேக்க மொழியில் சோடி - சோடியோகோஸ் (Zodikos) என்றும், இலத்தீன் மொழியில் சோடியக்கஸ் (Zodiacus) என்றும், ஆங்கிலத்தில் சோடியக் (Zodiac) என்றும் திரிபுபட்டுள்ளன.

தமிழர்கள், விண்மீன்களை 27 தொகுதிகளாகப் பிரித்தனர். சிலர் 29 என்றும் கூறுவர். காருவா நாளில் (அமாவாசை) நட்ட நடுவெளியில் மல்லாந்து படுத்துக் கொண்டு காரிருளில் வானத்தை நோக்கினால் (360 பாகைகளும்) கவிழ்த்த கிண்ணம் போல் தெரியும் வானத்திலுள்ள 27 விண்மீன் கூட்டங்களையும் காண முடியும். அவை, சங்க இலக்கியங்களில் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன. அவற்றைப் பிற்காலத்தில் சமற்கிருதத்தில் திரித்துக் கொண்டனர். புரவி (அஸ்வினி), பரணி, ஆரல் (கார்த்திகை), சகடு (உரோகிணி), மான்தலை (மிருக சீரிடம்), மூதிரை (ஆதிரை), கழை (புணர்பூசம்), காற்குளம் (பூசம்), கட்செவி (ஆயில்யம்), கொடு நுகம் (மகம்), கணை (பூரம்), கை (அஸ்தம்), சிற்றரை (சித்திரை), விளக்கு (சோதி), முறம் (விசாகம்),

முடப்பனை (அனுஷம்), துளங்கொளி (கேட்டை), குருகு (மூலம்), உடைகுளம் (பூராடம்), கடைக்குளம் (உத்திராடம்), முக்கோல் (திருவோணம்), காக்கை (அவிட்டம்), செக்கு (சதயம்), நாழி (பூரட்டாதி), முரசு (உத்திரட்டாதி), தோணி (ரேவதி என்று 27 மீன் கூட்டங்களும் அழைக்கப்படும்.

மீன் கூட்டங்களுக்கு முதன் முதலில் பெயரிட்டவர், கிரேக்க வானியல் அறிஞரான தாலமியே என்று தவறாகச் சொல்லப்பட்டுள்ளது. தாலமி 13 மீன் கூட்டங்களின் பெயர்களையே பதிவு செய்துள்ளார். மற்றவை ஆல்பா, பீட்டா என்று 13 மீன்களுக்குப் பின்னால் சொல்லி, வேறுபடுத்திக் காட்டப் பட்டுள்ளன. தாலமி பெயரிட்ட 13 விண்மீன் கூட்டங்களின் பெயர்களும், தமிழ்ப் பொருளைக் கொண்டு, தமிழ் மூலத்திலேயே உள்ளன. எடுத்துக் காட்டாக, கழை (புணர்பூசம்) என்ற மீன் கூட்டம், ஆண் குறியைப் போலத் தோன்றும். அதுபற்றியே, விரைத்துள்ள ஆண் குறி (Errectus penis) என்ற பொருளில், புணர் பூசம் என்று சமற்கிருதத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. (The swelled penis before the intercourse). கிரேக்க மொழியில், கழை, பொல்லக்ஸ் (Pollux) என்று தாலமியால் பதிவு செய்யப்பட்டுள்ளது. பொல் என்ற தமிழ்ச் சொல்லுக்குப் புணர்தல் என்பதே பொருளாகும். (பொலிகாளை என்ற சொல்லை ஒப்பு நோக்குக). பொல் – பொல்லக்ஸ் எனத் திரிந்துள்ளது.

ஆண்டுக் கணக்கு மேழத்தை முதல் மாதமாகக் கொண்டு தொடங்குகிறது. மேழம், விடை, ஆடவை, கடகம், மடங்கல், கன்னி, நளி, சிலை, சுறவம், கும்பம், மீனம் என, 12 மாதங்களும் சொல்லப்படும். தமிழர்கள், சித்திரையை (மேழத்தையே) முதல் மாதமாக வைத்துள்ளதால், ஆண்டுத் தொடக்கம் மேழத்தில் தான் தொடங்கும். தை மாதமே ஆண்டின் முதல் மாதம் என்றும், சித்திரை ஆரியர்களின் ஆண்டுக் கணக்கு என்று கூறுவது பிழையானது. ஆரியர்களுக்கும் நாள்காட்டிக்கும் எந்தத் தொடர்பும் இல்லையென்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். தமிழறிஞர்கள் கூடி, தை மாதத்தையே ஆண்டுத் தொடக்கமாதமாகக் கொள்ள வேண்டும் என்று தீர்மானம் போட்டதாகச் சொல்லப்படுகிறது. தமிழறிஞர்கள், வானியல் அறிஞர்கள் இல்லை. தங்கள் விருப்பப்படியெல்லாம், தமிழர் மரபுகளை மாற்றக் கூடாது. பருவகாலங்கள், கார் காலத்தில் தொடங்கி சொல்லப் பட்டுள்ளதால், கார் காலமே (மழைக்காலமே) ஆண்டின் தொடக்கம் எனச் சிலர் கூறுவர். வருடை என்ற சொல், மேழத்தையே குறிக்கும். வரும் அடை (மழை) என்ற பொருளில் வருடை சொல்லப்பட்டு, வருஷ – வருஷி என்று சமற்கிருதத்தில் திரிந்து, மழையைக் குறிக்கின்றது. கார் காலத்தில்,

(ஆவணியில் தொடங்கி ஆடியில் முடியும்) ஆண்டுத் தொடக்கம் இருந்ததாக, தொல்காப்பிய விளக்கத்தை மேற்கோள் காட்டிச் சிலர் கூறுகின்றனர். தென் பகுதியில் (குமரிப் பகுதியில்) அவ்வாறான நடைமுறை இருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

எபிரேயர்கள், சித்திரை மாதத்தையே ஆண்டுத் தொடக்கமாகக் கொண்டிருந்தனர் என்று விவிலியம் கூறுகிறது[1]. மோசே காலத்தில் (கி.மு.1300), கார்காலத்திற்கு ஆண்டுத் தொடக்கம் மாற்றப்பட்டதாகவும் விவிலியம் கூறுகிறது[2]. தமிழருக்கும் எபிரேயருக்கும் உள்ள உறவை நோக்கும் போது, தமிழர்களில் ஒரு பகுதியினர் பின்பற்றிய கார்காலத் தொடக்கத்தை, எபிரேயர்களும் பின்பற்றினர் எனக் கருத இடம் உண்டு. தமிழ் மரபின் பிற கிளையினரான மெசபத்தோமியர், அசீரியர், எகிப்தியர்கள், சித்திரை மாதத்தையே ஆண்டுத் தொடக்கமாக நடைமுறைப்படுத்தி வந்தனர்.

நிலவை அடிப்படையாகக் கொண்ட நாள் காட்டியை அறிமுகம் செய்த தமிழர்கள், பிற்காலத்தில், கணக்கீடுகளில் சில குறைபாடுகள் இருந்ததை உணர்ந்தனர். திங்கள் நாள் காட்டியில், காருவா நாளே மாதத்தின் முதல் நாளாகும். அடுத்து வரும் காருவா நாளுக்கு முதல் நாள் வரை, ஒரு மாதம் கணக்கிடப்பட்டது. எபிரேயர்கள், காருவா நாளில், மாதத்தின் தொடக்கத்தை அறிவிக்க, முரசறைந்தும், மலை முகடுகளில் தீப்பந்தங்களைக் கொளுத்தியும் மக்களுக்குத் தெரிவித்தனர் என்று, விவிலியம் கூறுகிறது. நிலவு நாள் காட்டியில் ஒரு மாதம் என்பது, 29 நாள், 12 மணி, 44 நிமையம், 3 நொடிகள் என்று சொல்லப்படுகிறது. இந்தக் கணக்குப்படி ஓராண்டுக்கு 354 நாட்களே உள்ளன. சூரிய நாள்காட்டிக்கு 11 நாட்கள் குறைவுபடுகின்றது.

திங்கள் நாட்காட்டியில் உள்ள குறைகளை நீக்க, 27 மீன் கூட்டங் களை, 12 பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு மீன் கூட்டத்திலும் சூரியன் 1 மாதம் தங்கியிருப்பதாக வகுக்கப்பட்டு, அவ்வாறு தங்கியுள்ள மீனின் பெயரே, மாதப் பெயராகவும் வைக்கப்பட்டது. சங்க காலத்திலேயே, சூரிய நாள்காட்டி நடைமுறையில் இருந்தது. அரசாங்க அலுவல்கள், சூரிய நாட்காட்டி வழியிலும், திருவிழாக்கள் சமயச் சடங்குகள் நிலவு நாள்காட்டி வழியிலும் நடைபெற்றன. இன்றும் தமிழகத்தில் கொண்டாடப்படும் திருவிழாக்கள் அனைத்தும், நிலவு நாள்காட்டியின் படியே நடைபெறு கின்றன.

இன்றுவரை அரேபியர்கள் (குறிப்பாக இசுலாமியர்) நிலவு நாள் காட்டியையே பயன்படுத்தி வருகின்றனர். எபிரேயர்களின் திருவிழாக்களும் அவ்வாறே நடைபெற்றன, இன்றும் நடைபெறுகின்றன. கிறித்துவமும், கூட, ஈஸ்டர் போன்ற பண்டிகை நாளை நிலவு நாட்காட்டி வழிப்படியே கொண்டாடுகின்றது. உலகின் முதல் நாள் காட்டியை அறிமுகம் செய்தவன் தமிழனே என்பதை, பிறநாடுகளின் நடைமுறைகளே சான்றளிக்கின்றன. (ஆசிரியரின் வானியலும் தமிழரும் என்ற நூலைக் காண்க.) தமிழர்கள் 6-12-60 என்ற எண்களின்படி, நாள் காட்டியை அமைத்துக் கொண்டனர். 6 பருவ காலங்கள், 12 மாதங்கள், 60 நாழிகைகள், 60 ஆண்டுகள் என்றவாறு அறியுப்படும். 60 ஆண்டுக் கணக்கையே, சுமேரியர்களும் கடைப்பிடித்து வந்தனர்.

மெசபத்தோமியர்கள் சூரிய ஆண்டின் இரண்டு பகுதிகளைப் பின்பற்றி வந்தனர். தென்வலம் (தட்சிணாயணம்), வடவலம் (உத்தராயணம்) என்றவாறு சொல்லப்படும் கால அளவுகளில், மெசபத்தோமியரின் ஆண்டுக் கணக்கு இருந்தது. சுமேரியர்கள், வேளாண்மைத் தொழிலை அடிப் படையாகக் கொண்ட காலக் கணக்கைக் கடைப்பிடித்து வந்தனர். விதைப்பு முதல் அறுவடை வரை ஒரு பகுதியாகவும், அறுவடை முதல் மறு விதைப்பு வரை மறுபகுதியாகவும் கொண்டிருந்தனர். அசீரியர்கள் 4 மாதங்களைக் கொண்ட 3 பிரிவுகளாகவும், அனதோலியர் (இந்தியாவுக்கு வந்த ஆரியர்கள்), 3 மாதங்களைக் கொண்ட 4 பிரிவுகளாகவும் ஆண்டைப் பிரித்திருந்தனர். கி.மு.1800 ஆண்டுகளில், மக்கள் கணக்கிட எளிமையாக இருக்கும் வகையில், ஓராண்டு, இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதாக மாரி நகரத்துக் குறிப்பொன்று கூறுகிறது[3].

எபிரேயர்கள் காருவா நாளை, மாதத்தின் முதல் நாளாகக் கொண்ட போது, சுமேரியர்கள் முதல் பிறை தெரிந்த நாளையே, மாதத்தின் முதல் நாளாகக் கருதினர். கி.மு.எட்டாம் நூற்றாண்டுக் குறிப்பில், அசீரிய மன்னர்களுக்கு, பிறை தோன்றும் நாளை, வானியல் அறிஞர்கள் தெரிவித்து வந்ததாக அறியப்படுகின்றது. மெசபத்தோமியாவிலும் அதனைச் சுற்றியிருந்த நாடுகளிலும் (நகரங்களிலும் கூட) மாதத்தின் பெயர்கள் மாறி மாறி வெவ்வேறு பெயர்களில் சொல்லப்பட்டுவந்தன. ஒரே மாதம் பல பெயர்களால் அழைக்கப்பட்டது. திருவிழாக்களின் பெயர்களாலும், ஆடு களுக்கு மயிர் கத்தரிக்கும் நாளின் பெயராலும், வேளாண்மைப் பணிகளின் பெயராலும் மாதங்கள் அழைக்கப்பட்டன. ஆனால் அரசாங்கம், ஒவ்வொரு

மாதத்துக்கும் ஒரு பெயரை வரையறுத்திருந்தது. சுமேரியர்கள், கி.மு.27 ஆம் நூற்றாண்டில், ஒரு நாளின் மணிக் கணக்குகளை, அரசாங்க அதிகாரிகள் பணிக்கு வரும் நேரங்களால் அழைத்தனர். எடுத்துக்காட்டாக, ஒரு பகுதியின் ஆளுநர், நண்பகலில், தன் அலுவலை ஏற்க வருவார். வேலைக்கு வருபவர்களின் பெயரால் அந்த மணி நேரம், அழைக்கப்பட்டது. வேளாண்மை தொடர்பாக, அரசாங்கம் சில மணிக்கால அளவை அறிவித்திருந்தது. பார்லி என்ற தவசத்தை அளிக்கும் நாள், அறுவடைக்குப் பின், புதிய வரவு செலவுகள் தொடங்கும் நாள், என கால அளவுகள் குறிக்கப்பட்டிருந்தன. அரசாங்க நிதியாண்டு (financial year), பார்லி அறுவடைக்குப்பின் இரண்டு மாதங்கள் கழித்துத் தொடங்கப்பட்டது. ஒவ்வொரு நேரம், கால அளவுகளை வானியல் சார்ந்த அறிஞர்களே அறிவிப்பார்கள். இம்முறை மக்களிடையே குழப்பங்களைத் தோற்று வித்ததால், கி.மு.2400 ஆண்டுகளில், மாதத்துக்கு 30 நாள், ஆண்டுக்கு 12 மாதங்கள் என, 360 நாள் கொண்ட ஆண்டுக்கணக்கு நடைமுறைக்கு வந்தது.

பொதுவாக, பார்லி அறுவடைக்குப் பின் ஒரு நாளில், அரசாங்க நடைமுறைப்படி, புதிய ஆண்டுத் தொடங்கப்பட்டது. புதிய வேளாண்மை ஆண்டு என அழைக்கப்பட்டது. அந்நாளில், மன்னன் காய்கறிகள், பழங்கள் ஆகியவற்றைக் கடவுளுக்குப் படைத்து, கடவுளின் அருள் அந்த ஆண்டில் கிடைக்கும்படி வேண்டிக் கொள்வான். அதே நாளில் அவ்வாண்டில் தொடங்கப்படவுள்ள பெரிய கட்டிடங்கள், அரண்மனைகள், நிகழ்த்த இருக்கும் போர்கள் பற்றியெல்லாம் குறிப்பிட்டு கடவுளிடம் மன்றாடுவான். அந்தந்த நிகழ்வுகளின் பெயரால், அவ்வாண்டு குறிக்கப்படும். ஒரு நிகழ்வை அல்லது இலக்கை அடிப்படையாக வைத்து, ஆண்டுக் கணக்கைத் தொடர்ந்ததாக அறியப்படவில்லை. ஒரு மன்னன் எத்தனை ஆண்டுக்காலம் ஆட்சி செய்தான், அவனுக்கு முன்பும் பின்பும் ஆண்டவர்களின் ஆண்டுக் கணக்கு ஆகிய விவரங்களை ஆய்வு செய்து, பிற்கால ஆய்வாளர்கள், தொடர்ச்சியாக ஆண்டுக் கணக்குகளைக் குறித்தனர். குறிப்பிட்ட நிகழ்வின் பெயரால் அழைக்கப்பட்ட ஆண்டை, ஆய்வாளர்கள் கண்டுபிடித்துப் பதிவு செய்துள்ளனர். சுமேரியரின் ஆட்சிக் கால நிகழ்வுகளை, மற்ற நாடுகளின் குறிப்புகளோடு சரிபார்த்தே ஆண்டைக் குறித்தனர்.

நிலவை அடிப்படையாகக் கொண்ட நாள் காட்டியை, கி.மு. 2100 ஆண்டுகளில் நடைமுறைப்படுத்தியதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

பொருளியல் கூறுகளின் அடிப்படையில், தொடக்கத்தில் நடைமுறைப்படுத் தப்பட்டது. பார்லி பயிரிட கடன் அளிப்பது, அடுத்த ஆண்டில் அதே நாளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும் என்ற விதிப்படி வழங்கப்பட்டது. தவசங்களோடு, வெள்ளி வணிகத்தின் அலகாகப் பயன்படுத்தப்பட்டது. ஒரு வேலையாளைப் பணிக்கு அமர்த்திக் கொள்ளும் முதலாளி, நிலவு நாட்காட்டியில், அடுத்த ஆண்டு அதே மாதத்தில் அவனை விடுவித்து விட வேண்டும். மீண்டும் அவனையே சேர்க்க விரும்பினால், அடுத்த மாதத்திலிருந்து கணக்கைத் தொடங்க வேண்டும். கி.மு.1800 ஆண்டுகளில் அறியப்பட்ட மாரி நகரத்துக் குறிப்புகளில், மாத அடிப்படையில் பணிக்குச் சேர்க்கப்படுபவர்கள், முதல் தேதியன்று சேர்க்கப்பட்டு, 29 அல்லது 30 தேதிகளில் விடுவிக்கப்படுவர் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. பாபிலோனியர் ஆட்சிக்காலத்தில், சுமேரியர் கடைப்பிடித்து வந்த நிலவு நாள்காட்டி, அரசாங்கத்தின் அதிகார பூர்வமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. கி.மு.1700 ஆண்டுகளில், புத்தாண்டு வசந்த காலத்தின் முதல் மாதமான நிசானு மாதம் முதல் நாளில் தொடங்கியதாகவும், அடுத்த நிசானு (Nisanu) மாதம் வரை ஓராண்டாகவும் கணக்கிடப்பட்டது. பின்னர், 354 நாட்களாக இருந்த நிலவு நாள்காட்டி, 365 நாள் கொண்ட சூரிய நாள் காட்டியாக மாற்றப் பட்டது[4].

சூரியன் ஒரு புள்ளியிலிருந்து நகர்ந்து மீண்டும் அதே புள்ளியை வந்தடைய 365 நாட்கள் ஆகின்றன என்பதை மிக எளிய முறையில் தமிழர்கள் கண்டறிந்தனர். நிலையாக நிறுத்தப்பட்டிருந்த ஒரு குச்சியின் நிழல் சாய்வதைக் கணக்கில் கொண்டு, ஓராண்டுக்கு 365 நாட்கள் என உறுதி செய்யப்பட்டது. அக்குச்சியை விழுவன் குச்சி, நத்தம் என்றவாறும் அழைத்தனர் என்று, ந.மகாலிங்கம் கூறுகிறார். தமிழர்கள் அறிந்திருந்த சூரியச் சுற்றை, சுமேரியரும் பாபிலோனியரும் அறிந்திருந்தனர் எனலாம். தற்காலக் கணக்கின்படி, 6 மணி நேர வேறுபாடு காணப்படுகிறது. 365 $^1/_4$ நாளில் 6 மணி நேர வேறுபாடு என்பது தவிர்க்கப்படக் கூடியதே. எபிரேயர்களின் நாள் காட்டியில், மிகுதியாக அறிப்பட்ட 11 நாட்களை, 13வது மாதமாகக் கணக்கிட்டுள்ளனர்[5]. அதனை அடர் மாதம் என அழைத்தனர். சுமேரியர்களைத் தொடர்ந்து, பாபிலோனிய, பாரசீக மன்னர்கள், நாள் காட்டியில் மாறுதல்களைச் செய்தனர். அக்காலத்து வானியல் அறிஞர்கள் பாபிலோனிலும் பாரசீகத்திலும் வாழ்ந்திருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. பாபிலோனியர் மாற்றம் செய்த நாள் காட்டி, பாபிலோனியர் ஆட்சியின் கீழ்

இருந்த நாடுகளிலும் நடைமுறைப்படுத்தப்பட்டது. பாபிலோனியரின் ஆட்சி வீழ்ந்த போதும், அவர்களின் நாள்காட்டிக்கு மாற்றாக, புதியவை எவையும் கண்டுபிடிக்கப்படவில்லை யாதலால் பாபிலோனிய நாள் காட்டியே பலராலும் பின்பற்றப்பட்டது. இது, பாபிலோனிய வானியல் அறிஞர்களின் மதிநுட்பமான திறமைக்கு எடுத்துக்காட்டாகும்.

அசீரிய, கித்திய நாள் காட்டிகள் பற்றிய தெளிவான செய்திகள் இல்லை. மற்ற அண்டை நாடுகளிலும் நாள்காட்டிகள் பற்றிய குறிப்புகள் இல்லை. ஆனால் சில குறிப்புகளில் சில மாதங்களின் பெயர்கள் சொல்லப்பட் டுள்ளன. அவை, நிலவின் நாள் காட்டி வழியில் சொல்லப்பட்டவையே. அசீரியர்கள், ஒரு வாரத்துக்கு ஐந்து நாட்கள் என்று கணக்கிட்டிருந்தார்கள். அவையும், சில அதிகாரிகளின் பெயரால் சொல்லப்பட்டிருந்தன. பொதுவான பெயர்கள் சொல்லப்படவில்லை. அசீரியர்கள் ஆட்சிப் பொறுப்பை விரிவாக்கிக் கொண்ட போது, பாபிலோனிய நாள்காட்டியையே பயன் படுத்தினர்.

பாரசீகர்கள் தங்கள் ஆட்சியின் உச்சத்திலிருந்த போது (கி.மு.540), சிந்து ஆற்றிலிருந்து, நைல் ஆறு வரை உள்ள தங்கள் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில், பாபிலோனிய நாள் காட்டியையே பயன்படுத்தினர். பாரசீகர் களின் அறமாயிக் மொழிக் குறிப்புகள், பாபிலோனியரின் புத்தாண்டு நாளையே, தங்கள் ஆட்சியிலும் புத்தாண்டுத் தொடக்க நாளாகக் கொண்டிருந்தனர். செலுசித் மரபினர், பாரசீகர்களின் காலத்துக்குப் பிறகு ஆட்சிப் பொறுப்பேற்றனர். அவர்களும் பாபிலோனிய நாள் காட்டியையே நடைமுறைப்படுத்தி வந்தனர். கி.மு. முதல் நூற்றாண்டில், பாரசீகர்களின் சோரோஸ்டிர வழியில், சில மாதப் பெயர்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இம்முறையில் 12 மாதங்கள், மாதத்துக்கு 30 நாட்கள், ஆண்டுக்கு 365 நாட்கள் என்ற தகவல்கள் கிடைக்கின்றன. 12 x 30 என்ற அளவில், 360 நாட்களுக்கு மீதமுள்ள 5 நாட்களை எவ்வாறு கையாண்டார்கள் என்ற செய்தி இல்லை. கி.பி. 226 வரை, இந்நாள் காட்டியே பயன்பாட்டில் இருந்தது. அரேபியர்கள் பாரசீகத்தை வென்றெடுத்த பின், இசுலாமிய நிலவு முறை நாட்காட்டியைப் பாரசீகத்தில் புகுத்தினர். ஆனாலும் பாரசீகர்கள் தங்கள் பழைய நாள்காட்டியையே பயன்படுத்தி வந்தனர். கி.பி. 1079 இல், ஜூலியன் நாள்காட்டி, பாரசீகத்தில் அறிமுகப்படுத்தப்பட்டது. அந்நாள் காட்டியில்தான் மிகை ஆண்டு (leap year) கணக்கிடப்பட்டது.

எபிரேயர்களின் நாள் காட்டி, பாபிலோனியரைப் பின்பற்றியதாக இருந்தாலும், சில வேறுபாடுகள் இருந்தன. எபிரேய மொழியில் நேரம் (time) என்பதற்கானச் சொல் இல்லை. அதேபோல், கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் (Past, present and future) ஆகியவற்றைக் குறிக்கும் சொற்களும் இல்லை. அயித் (Ayt) என்ற சொல், உடனடியாக (instant) அல்லது குறிப்பிட்ட கால இடைவெளியை (duration) ஆகியவற்றைக் குறிக்கும் சொல்லாகக் கருதப்படுகிறது. (I சாமுயெல், 9 : 16). யோம் (Yom) என்ற சொல், ஒரு நொடி முதல் பல யுகங்கள் வரையிலான கால அளவைக் குறிக்கும் சொல்லாக விளக்கப்படுகிறது[6]. யோம் (Yom) என்ற சொல்லும் விரிந்த கால அளவைக் குறித்து, ஓலம் (Olam))என்ற சொல்லுடன் தொடர் புடையதாகிறது. விவிலியத்தின் படைப்பதிகாரத்தில், ஆறு நாட்கள், கடவுள் படைப்புத் தொழிலைச் செய்தார் என்று சொல்லப்பட்டுள்ளது. எபிரேய மூலத்தில், நாள் (day) என்ற சொல் பயன்படுத்தப்படவில்லை. மாறாக யோம் (Yom) என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது. அதன் கால அளவை இன்னதென்று கூற இயலாது. எபிரேய விவிலியம், கிரேக்கத்தில் மொழி பெயர்க்கப்பட்டபோது, அதனை நாள் என்று குறித்து விட்டனர். உண்மையில் ஒரு படைப்புக்கும் மறுபடைப்புக்கும் இடையில், பலகோடி ஆண்டுகள் கூட இடைவெளி இருந்திருக்கலாம்.

ஆனாலும் நாள் (day), வாரம் (week), மாதம் (month), ஆண்டு (year) என்ற சொற்கள், எபிரேய மொழியில் உள்ளன. ஒரு நாள் என்பது, மாலை முதல் அடுத்தநாள் மாலை வரை என்று அறியப்படும். (தமிழரின் நாள் கணக்கும் அப்படித்தான் இருந்தது). பகல்பொழுது, காலை, மதியம், மாலை என்ற மூன்று பிரிவுகளாகச் சொல்லப்பட்டது. நெகமியா என்ற விவிலிய ஆசிரியர், நான்கு பிரிவுகளாகக் கூறுகிறார். (நெக. 9 : 3). இரவு மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. (தமிழர்கள், இரவு 30 நாழிகை, பகல் 30 நாழிகை எனப் பிரித்தனர்.) எபிரேய நாள் காட்டி, நிலவு வழியில் பின்பற்றப்பட்டது. (நிலவு நாள் காட்டியைப் பயன்படுத்துபவர்களை, பாண்டியர், பாபிலோனியர், எபிரேயர், அராபியர் ஆகியோரை சோம குலத்தார் என்றும் கூறுவர்). எபிரேயர்கள் வாரத்துக்கு ஏழு நாட்களைக் கொண்டிருந்தனர். அக்கால அளவில் வாரத்துக்கு ஏழு நாட்கள் என்ற கணக்கை எபிரேயர் மட்டுமே கொண்டிருந்தனர். நாட்கள் பெயரிட்டு அழைக்கப்படவில்லை. ஞாயிறு முதல் வெள்ளி வரை, முதல் நாள், இரண்டாம்நாள் என்றவாறு சொல்லப்பட்டன. ஏழாம் நாள் என்று சனிக்கிழமை சொல்லப்படவில்லை. ஓய்வு நாள் (resting day), அதாவது

சாபாத் நாள் (Sabbath day), என்று சொல்லப்பட்டது[7]. ஏனெனில் அந்நாள் கடவுளுக்குரியது என்பதால், பெயரோ எண்ணோ சொல்லப்படவில்லை. அந்நாள் ஏழாம் எண்ணில் வந்ததால், ஓய்வு என்ற சொல், எண் ஏழு என்றும் பிற்காலத்தில் அறியப்பட்டது.

எபிரேய மொழியில், மாதத்துக்கும் நிலவுக்கும் ஈரா என்ற ஒரு சொல்லே பயன்படுத்தப்பட்டது[8]. (தமிழில் திங்கள் என்ற சொல் மாதத்தையும், நிலவையும் குறிப்பது போல என அறியவும்.) ஈரா என்ற சொல் கூட, ஈர் என்ற தமிழ் மூலத்தையே கொண்டுள்ளது. நிலவின் சுழற்சி இரண்டு பிரிவுகளாக அறியப்படும். ஈர் என்பது, இரண்டு என்ற சொல்லின் முதல் சொல்லாகும். ஈர் – ஈரண்டு – இரண்டு என விரிந்தது. ஈர் – ஈரா எனத் திரிந்தது என்க. காருவா நாள் (அமாவாசை) மாதத்தின் முதல் நாளாகும். (தமிழர் களுக்கும் அவ்வாறான நடைமுறையே இருந்தது. இன்றும் பலர், அந்நாளில் புதுப்பணிகள் தொடங்குவர். பணப்பரிமாற்றங்கள், ஏலம் விடுதல் போன்றவை அந்நாளில் நடைபெறும். தொழிலாளர்கள் அன்று பணிகள் செய்வதில்லை. அண்மைக் காலம் வரை தமிழ் நாட்டில் அந்நடை முறைகள் இருந்தன. இன்றும் அதன் எச்சங்கள் தொடர்கின்றன.) நிலவு நாள்காட்டியின் நாட்கள் பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. எபிரேயர்களின் மாதப் பெயர்களை மேற்கோள் பகுதியில் காண்க[9]. அப்பெயர்களில், மூன்றாவது மாதமாக சிவன் என்ற பெயரும், நான்காம் மாதமாக தமுழ் (தமிழ்தான்) என்ற பெயரும் உள்ளன. இவ்விரு பெயர்களுக்கான விளக்கங்களில், தமுழ் மட்டுமே சொல்லப்பட்டுள்ளது. சிவன் என்ற சொல்லுக்கான விளக்கம் தரப்படவில்லை. 10 வது மாதமான திபெத் என்பதை, உரோமானிய நாள்காட்டியும் சுட்டுகிறது. அம்மொழியில் "தை பெ" எனக் கூறுகின்றனர். தமிழின் 10 வது மாதம் தை என்பதுடன், அச்சொல் தொடர்புடையதாகிறது. எட்டாவது மாதமான மாரீஸ்வான் என்பது, அக்டோபர் / நவம்பர் என்ற மாரிக்காலத்துக்குச் சரியானது. மாரிவானம் என்பதே, மாரீஸ் வான் எனத் திரிபுபட்டுள்ளது. அபிப் என்ற முதல் மாதம், திறப்பு (opening) என்ற பொருளைத் தருவது. அவிழ் என்ற சொல்லே, அபிப் எனத் திரிந்துள்ளது. அப் என்ற ஐந்தாம் மாதம், அப்பா என்ற சொல்லின் (Appa - Ab) சுருக்கமாகும். தமிழ்ப் புத்தாண்டு தொடங்கும் சித்தரையிலேயே, எபிரேயப் புத்தாண்டும் தொடங்குவதை நோக்குக.

## அடிக்குறிப்புகள்

1. Hebrew Calender : Aviv is the first month of an year, which falls on April, according to the Gregorian Calender. - D.O.B. P.115.

2. New year : The Hebrew Calendar exhibits two points for the beginning of the year. The Babylonian calendar and the Hebrew numeration of the months both begin in the spring with the 1st of Nisan (April). The feast of the New Year, however was celebrated on the 1st of Tishri (September), the 7th month in the autumn. - Ibid.

3. Annual accounts : In Mesopotamia, the solar year was divided into two seasons, the summer which included the barley harvests in the second half of May or in the beginning of June, and the winter which roughly corresponded to today's fall winter. Three seasons (Assyria) and four seasons (Anatolia) were counted. - Crawford, "Sumer and the Sumerians", Cambridge University, 1993.

4. The Intercalation : It was necessary for the lunar year of about 354 days to be brought into line with solar year of 365 days. In the 21st century B.C., a special name for the intercalated month "Iti" appears in the sources. The intercalation was operated haphazardly, according to real or imagined needs, and each Sumerian city inserted months at will. Babylonian calender calculators succeeded in computing an almost perfect equivalence in a lunisolar cycle of 19 years and 235 months with intercalations in the years 3, 6, 8, 11, 14, 17 and 19 of the cycle. The New year's day (Nisanu 1) now oscillated around the spring equinox within a period. - Ibid.

5. Hebrew Calendar : The Hebrew Calendar is based upon a solar year of 365 $^1/_4$ days and a lunar month of 29 $^1/_2$ days. A satisfactory solution of the problem of the fractions was never reached in Israel or in Judaism. 12 lunar months give a year of 354 days, the difference as well as the fraction of a day in a solar year were made up by intercalating a second month of Adar at the end of the year. - D.O.B. P.114.

6. Time : There is no general word for "Time" in Hebrew. There are no specific words for the catagories of, past - Present and Futue. TheHebrew word most commonly translated as time is Ayt, which really refers to the instant or duration of time. Olam is another word for immeasurable time.- Harpercolins, P.1151.

7. Day : The Hebrew Bible does use the terms, day - week - month and year. The day in known from sun set to sun set (Genesis, 1 : 5). Week means literally in Hebrew, "a seven", The days are not named but numbered from one to six except for the seventh day, which is called the "Sabbath". - Ibid.

8. Moon : Yearah is the one word, mentioning both for moon and the month in the Hebrew calender.
   - Ibid.

9. The Hebrew Lunar Calandar :

| | Name of the month | | Appropriate Gregorian Equivalent |
|---|---|---|---|
| 1. | Nisan (Abib) | - | March / April |
| 2. | Iyyar | - | April / May |
| 3. | Sivan | - | May / June |
| 4. | Tammuz | - | June / July |
| 5. | Ab | - | July / August |
| 6. | Elul | - | August / September |
| 7. | Tishri | - | September / October |
| 8. | Mahreeswan | - | October / November |
| 9. | Kislev | - | November / December |
| 10. | Tebeth | - | December / January |
| 11. | Shebat | - | January / February |
| 12. | Adar | - | February / March |

## 8. சுமேரியத் தொன்மக் கதை

ஒவ்வொரு நாட்டுக்குமான, சமயம் சார்ந்த தொன்மக் கதைகள் பலயிருந்தாலும், அவற்றில் குறிப்பிட்டுச் சொல்லும்படி ஒன்றிரெண்டு இருக்கும். தமிழர்களுக்கு தொன்மக் கதைகளில் பெரும்பாலும் நம்பிக் கைகள் இருந்ததில்லை. தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் போன்ற வைகளில், சில நம்பிக்கைக்குரிய நிகழ்வுகள் சொல்லப்பட்டிருந்தாலும், தொடர்ச்சியான தொன்மக்கதை எவையும் சொல்லப்படவில்லை. பிற்கால இலக்கியங்களான சிலப்பதிகாரம், சில நிகழ்வுகளைத் தந்துள்ளவேளையில், மணிமேகலை, தொன்மக்கதை போன்ற தொடரைத் தந்துள்ளது. ஆரிய இலக்கியங்களான மகாபாரதம், இராமாயணம் போன்றவை, பிற்காலத்தில் தமிழில் அறியப்பட்டன. அவற்றின் மூலக் கூறுகளும் தமிழ் மரபை யொட்டியே காணப்பட்டாலும், தமிழில் அவை எழுதப்படவில்லை. அவற்றைப் படைத்த வான்மீகி (வானியலை அறிந்தவன்), வியாசன் (விரித்துக் கூறுபவன்) ஆகிய பெயர்கள், தமிழ்ப் பெயர்களாகவே உள்ளன. இராமன் முற்கால சோழ மரபோடும் (சிபி, மனுநீதிச் சோழன் போன்றோர், இராமனின் முன்னோர்களாவர்), பாண்டவர்கள் பாண்டியர்களோடும் தொடர்பு கொண்டவர்களாகக் கருதப்படுகின்றனர். இவ்விரு இதிகாசங்களும் (இதி + காச : இது இப்படி நடந்தது என்று பொருள்) கி.பி.17 ஆம் நூற்றாண்டு வரை, பல்வேறு துணைக் கதைகளையும் இணைத்துக் கொண்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். அவ்விரு இதிகாசங்களும், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நடந்தவையாகச் சொல்லப்பட்டாலும், கி.பி. 200 ஆண்டுகளுக்குப் பிறகே, எழுத்து வடிவில் பதிவு செய்யப்பட்டன.

சுமேரியத் தொன்மக் கதைகள் பலவும், களிமண் தட்டுப் பதிவுகள் மூலம் அறியப்படுகின்றன. ஈனும் – மா – எல் – இசு (En - um - ma - el - ish) என்ற கதை, உலகப் படைப்பைப் பற்றிக் கூறுகிறது. ஊத் – நா – பிஷ்டிம் (ut - na - pish - tim, ஊற்று – நாவி – பற்றன் என்ற தமிழ்ச் சொற்களின் திரிபு) என்பவன், வெள்ளக் காலத்தில், கடவுளால் காப்பாற்றப்பட்டதாகக் கதையொன்று கூறுகிறது. அவன் வாழ்ந்திருந்த காலத்திலேயே, கில் –

காமேஷ் என்பவன் ஊருக் நகரத்து மன்னனாகச் சொல்லப்பட்டுள்ள மற்றொரு கதை, சுமேரிய இலக்கியங்களில் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. (கில் – காமேஷ் என்ற சொல், சிந்துவெளிச் சொற்களிலும் காணப்படுவதாக, ஈராஸ் அடிகள் கூறுகிறார்.) இக்கதை, கி.மு.3000 ஆண்டுகளில் எழுதப்பட்டிருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அந்த வகையில், கில் காமேஷ் தொன்மக் கதையே உலகின் முதல் இலக்கியமாகக் கருதப்படுகின்றது.

கில் காமேஷ் என்ற பெயருக்கான உண்மையான பொருள் விளங்கவில்லை. அச்சொல்லும் சரியான ஒலிப்புடன் படிக்கப்பட்டதா என்பதிலும் ஐயப்பாடுகள் உள்ளன. சில் காமேஷ் (Gil - Gamesh) என்றும் சிலர் அச்சொல்லைப் படிக்கின்றனர். ராமன் + ஈசன் என்ற பெயர், ரமேஷ் என்று சொல்லப்பட்டதைப் போல, காமன் + ஈசன் என்ற சொற்களே, காமேஷ் எனத் திரிபுபட்டுள்ளனவா என்றும் எண்ணத் தோன்றுகிறது. அதன்படி, செல் + காமன் + ஈசன் என்றவாறு, தமிழ்க் கண்ணோட்டத்தில் அச்சொல்லைப் பிரிக்கலாம்.

**கில் காமேஷ்**
**களிமண் தட்டு 1 :**

*அனைத்தையும் பார்த்தவன் உலகுக்கு அறிவிக்கப்போகிறேன்.*
*அனைத்தையும் அறிந்தவன் அவைபற்றிச் சொல்லப்போகிறேன்.*
*(ஒரு வரி சிதைந்துள்ளது)*
*அம்மாபெறும் கமுக்கத்தையும் மறைந்துள்ளதையும் அறிந்திருந்தான்.*
*வெள்ளக் காலத்துக்கு முன்பிருந்த மக்களின் பேரறிவை*
*முற்றிலுமாகப் பெற்றுக் கொண்டான்*
*தொலைவிலுள்ள எல்லைகளைக் கடந்தான்*
*களைப் பேதுமின்றிப் பயணத்தைத் தொடர்ந்தான்*
*பின்னர் தன் கதையைக் கல்லில் பொறித்து வைத்தான்'.*

மேற்கண்ட வரிகள், கில்காமேஷ் கதைக்கு முன்னுரை போல் சொல்லப்பட்டுள்ளன.

அனைத்துத் துறைகள் சார்ந்த பேரறிவாளனாக, மிகப்பெரிய வீரனாக கில் காமேஷ் கருதப்படுகிறான். ஊருக் (Uruk) என்ற பெரு நகரத்தை அவனே உருவாக்கினான். அக்கதையின் முதல் தட்டு, அப்பெரு நகரத்தின் சிறப்புகளைப் பார்வையிட நம்மை அழைத்துச் செல்கிறது. உயர்ந்து நிற்கும்

சுவர்கள், நுணுக்கமான கட்டுமான முறைகள், நகரவாயில் கோபுரத்தின் பெருமைகள், மிகவும் ஆழமான சுவர்களின் அடிக் கட்டுமானம், மணிக் கற்கள் பதிக்கப்பட்ட தூணின் சிறப்பு, பகைகளை வென்ற கில் காமேஷின் வீரம் ஆகியவை, பாறைக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன என்ற செய்தியைக் கூறுகிறது.

அவ்வரிகள் இவ்வாறாகத் தொடங்குகின்றன : கில் காமேஷ் மூன்றில் இரண்டு பங்கு தெய்வீக ஆற்றலையும், ஒரு பங்கு மனிதப் பண்புகளையும் பெற்றிருந்த மாபெரும் மன்னன் ஆவான். அவனைப் போன்று ஆற்றல் பெற்ற மனிதர்கள், மன்னர்கள் எவரும் உலகில் அறியப்படவில்லை. இளமையின் பொலிவோடு காட்சியளித்த கில்காமேஷ், தனது இளமைச் செறுக்கால், குடி மக்களைக் கசக்கிப் பிழிந்தான். மக்கள் சொல்ல முடியாத துன்பங்களுக்கு ஆளானார்கள். பொறுத்துப் பார்த்த மக்கள், கில்காமேஷின் கொடுங்கோல் ஆட்சியைப் பற்றி வானத்துக் கடவுள் அனு (Anu) என்பவனிடம் முறையிட்டனர். அவனே ஊரூக் நகருக்குக் காவல் தெய்வமாகவும் இருந்தான். தங்களைக் காப்பாற்ற வேண்டி மக்கள் முறையிட்டதற்கு, அனு செவி சாய்த்தான். காட்டு மனிதன் ஒருவனைப் படைத்தான். என்கிடு (Enkidu) என்று அழைக்கப்பட்ட அம்முரட்டு மனிதன், கொடிய காட்டு விலங்குகளில் 12 விலங்குகளின் பலத்தைப் பெற்றிருந்தான். என்கிடு, கில் காமேஷ் ஆட்சிக்குட்பட்ட காட்டில் வாழ்ந்து வந்தான். கில் காமேஷ் என்ற மாபெரும் ஆற்றல் கொண்ட தெய்வ மனிதனை, காட்டு மனிதன் என்கிடு எதிர்க்கப் படைக்கப்பட்டான்.

தோல்களுக்காக, விலங்குகளை வேட்டையாடும் வேடனின் மகன் ஒருவன், விலங்குகளைத் தேடி ஒரு நாள் காட்டிற்கு வந்தான். அப்போது என்கிடு ஆடைகள் எவையுமின்றி, விலங்குகளோடு சுற்றித் திரிவதைக் கண்டான். உடனே தன் தந்தையிடம் சென்று, தான் பார்த்ததைக் கூறினான். அவன் தந்தை, அவனை ஊரூக் நகருக்குச் செல்லுமாறும், அங்கு கோயிலில் உள்ள பரத்தைகளில் ஒருத்தியை அழைத்துச் சென்று என்கிடுவைக் காட்டுமாறும் கூறினான். பரத்தை ஒருத்தியைக் கண்டு, தந்தை கூறிய செய்தியைத் தெரிவித்தான். பரத்தை, அக்காட்டு மனிதனோடு உடலுறவு கொள்ள இசைந்து, காட்டிற்குச் சென்றாள். அவ்வேடன், பரத்தையிடம், அக்காட்டு மனிதன் உன்னோடு உடலுறவு கொண்டால், தன் பலத்தையும், முரட்டுத் தன்மையையும் இழந்து விடுவான் எனக் கூறினான்.

காட்டிற்குச் சென்ற பரத்தை, என்கிடு, விலங்குகளோடு சேர்ந்து நீர் அருந்திக் கொண்டிருப்பதைக் கண்டாள். அவனை அணுகி, அவனோடு உறவு கொள்ளும் விருப்பத்தை, செய்கை மூலம் தெரிவித்தாள். என்கிடு அதற்கு இசைந்து, அவளோடு உடலுறவு கொண்டான். அக்கணமே, தனது பலத்தையும் முரட்டுத் தன்மையையும் இழந்தான். ஆனால் அதே வேளையில், அனைத்தையும் புரிந்து கொள்ளும் அறிவைப் பெற்றான். தன் ஆற்றலை இழந்ததற்காக என்கிடு வருத்தப்பட்டான். பரத்தை அவனைத் தேற்றி, தன்னுடன் ஊருக் நகருக்கு வருமாறும், நகரிய நாகரிகத்தின் அனைத்து இன்பங்களையும் அங்குப் பெறலாம் என்று கூறினாள். ஊருக் நகரத்து மன்னன் கில்காமேஷிடம் அவனை அறிமுகம் செய்வதாகவும், என்கிடுவின் நட்புக்கு உரியவனாக மன்னன் இருப்பான் என்றும் கூறினாள்.

அப்போது, கில் காமேஷ் இரண்டு கனவுகளைக் கண்டான். முதல் கனவில் மிகப் பெரிய விண்கல் ஒன்று, தரையில் வந்து விழுந்ததைக் கண்டான். அக்கல்லை அவனால் தூக்கவோ அசைக்கவோ இயலவில்லை. ஆனாலும் அக்கல்லை அவன் விரும்பித் தழுவிக் கொண்டான். மக்கள் அக்கல்லைச் சுற்றி நின்று மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். கில் காமேஷின் தாய், ரிமத் - நின்சன் (Rimat - Ninsun) என்ற தெய்வத்தாய், அக்கல்லைப் பெயர்த்தெடுக்குமாறு அறிவுறுத்தினாள். இரண்டாவது கனவில், ஒரு மிகப் பெரிய கோடரி (axe) அவனுடைய அரண்மனையின் கதவருகே இருப்பதைக் கண்டான். அக்கோடரி உருவத்தில் மிகவும் பெரியதாக இருந்ததால், கில்காமேஷினால் அதனை அசைக்கவோ தூக்கவோ இயலவில்லை. மக்கள் அந்தக் கோடரி முன் கூடி, மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். விண் கல்லைப் போலவே, கோடரியையும் தன் மனைவியைத் தழுவுவதுபோல் தழுவிக் கொண்டான். கில் காமேஷின் தாய், அக்கோடரியைப் பெயர்த் தெடுக்குமாறு கூறினாள். இரண்டு கனவுகளும் கலைந்த நிலையில், தன் தாயிடம் சென்று, அக்கனவுகள் பற்றிக் கூறி, அதற்கான விளக்கங்களைக் கேட்டான். மிகப் பெரும் ஆற்றலுள்ள மனிதன் ஒருவன் ஊருக் நகருக்கு வர இருப்பதாக விளக்கமளித்தாள். பின்னர் பரத்தை மூலம் அழைத்து வரப்பட்ட என்கிடுவைக் கண்டு மகிழ்ந்து, கல்லையும் கோடரியையும் தழுவிக் கொண்டது போல், என்கிடுவைத் தழுவிக் கொண்டான். தன் வருங்கால வெற்றிகளுக்கு என் கிடு உறுதுணையாக இருப்பான் என்று நம்பினான்.

**களிமண் தட்டு 2 :**

என்கிடுவிற்கு, நாகரிக வாழ்க்கை முறை சிறிது சிறிதாக அறிமுகம் செய்யப்பட்டது. இடையர்கள் குழுவுடன் என்கிடு சேர்ந்து வாழ்ந்தான்.

கால்நடைகளை எவ்வாறு மேய்ப்பது, பாதுகாப்பது, உணவளிப்பது என்று கற்றுத் தரப்பட்டது. மற்றவர்களுடன் எவ்வாறு உரையாடுவது, நாகரிகமான ஆடைகளை உடுத்துவது போன்றவைகளும் கற்றுத் தரப்பட்டன. என்கிடு, ஊரூக் நகரில் நடந்த ஒரு பெருவிழாவில் கலந்து கொண்டான். அவ்விழாவில் மன்னன் கில் காமேஷும் வருகை தந்தான். அப்போது நடைபெறும் திருமணத்தில், மணப்பெண்ணுடன், கில் காமேஷ் உடலுறவு கொள்வான். அதன் பிறகே, அப்பெண்ணுக்கு மணமகனுடன் திருமணம் நடக்கும். அவ்வாறு அவ்விழாவில் நடைபெறும் ஒவ்வொரு திருமணப் பெண்ணுடனும் உறவு கொள்வான். இதனை அறிந்த என்கிடு, திருமண விழாக்கள் நடக்கும் மண்டபத்தின் வாயிலில் வந்து நின்று, கில் காமேஷைத் தடுத்தான். அதனால் சினமுற்ற சில்காமேஷ் என்கிடுவை நோக்கிப் பாய்ந்து சண்டையிட்டான். கில் காமேஷ் என்கிடுவை எளிதில் தோற்கடித்தான். என்கிடு, கில்காமேஷின் ஆற்றலை உணர்ந்தான். என்கிடுவின் போர்த்திறமையைக் கண்ட கில்காமேஷ், அவன் தோற்ற நிலையிலும் அவனை நண்பனாக்கிக் கொண்டான்.

என்கிடுவும் கில்காமேஷும், சோம்பிப் பொழுதைக் கழித்து வந்தனர். கில்காமேஷ், ஏதேனும் துணிச்சலான செயல் ஒன்றைச் செய்ய எண்ணி னான். தொலைவில் இருந்த கருங்காலி மரக்காட்டுக்குச் சென்று (Cedar forest), அம்மரங்களை வெட்டி வந்து தன் நகரை அழகு படுத்த நினைத் தான். அந்தக் காடு பாரசீகத்தின் தென் பகுதியில் இருந்தது. அக்காட்டை உம்பாபா (Humbaba) என்ற பூதம் காவல் காத்து வந்தது. அப்பூதத்தை, என்கிடு காட்டில் வாழ்ந்திருந்த காலத்திலேயே அறிவான். அது, எவரும் வெற்றி கொள்ள இயலாத ஆற்றலைக் கொண்டிருந்தது. அதன் ஆற்றலை அறிந்திருந்த என்கிடு, காட்டுக்குள் செல்வதும், பூதத்தை எதிர்ப்பதும் தோல்வியில் முடியும் என்று கில் காமேஷிடம் தெரிவித்தான்.

**களிமண் தட்டு 3 : (சில பகுதிகள் கிடைக்கவில்லை)**

ஊரூக் நகரத்து முதியவர்கள் அப்பூதத்தைப் பற்றி அறிந்திருந்ததால், கில் காமேஷ் மேற்கொள்ள விருந்த முயற்சியைத் தடுத்தார்கள். கில் காமேஷ் அவர்களை அமைதிப்படுத்தி, முயற்சியில் வெற்றி பெறுவேன் என்று உறுதி கூறினான். கில் காமேஷின் உயிருக்குப் பாதுகாப்பாக, என்கிடுவையும் அழைத்துச் செல்லுமாறு முதியவர்கள் அறிவுறுத்தினர். பூதத்தைப் தனி ஒருவன் எதிர்க்க இயலாத நிலையில், இருவரும் காட்டிற்குச் செல்வதென முடிவு செய்தனர். கில் காமேஷின் தெய்வத்தாய், தன் மகன் பூதத்தால்

கொல்லப்படுவான் என்பதை அறிந்து, சூரியக் கடவுளிடம் சென்று, தன் மகனின் உள்ளத்தில் இப்படியான எண்ணத்தை ஏன் உருவாக்கினாய் என்று கேட்டாள். சூரியக் கடவுள் (செமாஷ் – Shemash), கில் காமேஷின் நடவடிக்கைகளை கண்காணித்து வருவதாகவும், அவன் உயிரைப் பாதுகாப்பதாகவும் உறுதியளித்தான். கில் காமேஷின் தாய், என்கிடுவை நோக்கி, பூதத்துடன் ஏற்படும் சண்டையில் நீயே முதலில் நிற்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, தன் மகனின் உயிரைக் காக்க உறுதியும் பெற்றாள். இவற்றையெல்லாம் கேட்டறிந்த என்கிடு, கில் காமேஷ் தன் முயற்சியைக் கைவிட வேண்டும் என மீண்டும் வற்புறுத்தினான். கில் காமேஷ் தன் முயற்சியில் உறுதியாக வெற்றி பெறுவேன் என்று பதிலுரைத்தான்.

**களிமண் தட்டு 4 :**

இக்களிமண் தட்டு, என்கிடுவும் கில்காமேஷும் கருங்காலி மரக்கட்டுக்குச் சென்ற பயணத்தை விளக்குகிறது. ஆறு நாட்கள் தங்கள் பயணத்தை மேற்கொண்டனர். ஒவ்வொரு நாளும் கில் காமேஷ் சூரியக் கடவுளிடம் தன் உயிரைக் காக்குமாறு வேண்டிக் கொண்டு வந்தான். அதற்குப் பதில் கூறும் வகையில், சூரியக் கடவுள், கில் காமேஷ் உறங்கும் போது, கனவில் சில செய்திகளைக் கொடுத்து வந்தான். அச்செய்திகள், கில் காமேஷை எச்சரிக்கும் வகையில் இருந்தன. (முதல் கனவு கிடைக்கவில்லை) இரண்டாம் கனவில், மிகப்பெரிய காளை புயல் வேகத்தில் விட்ட மூச்சு, தரையைத் தாக்கியது. என்கிடு, இக்கனவுக்குப் பொருள் கூறினான். அந்தக் காளை சூரியக் கடவுள்தான் என்றும், அது விடும் மூச்சில் பூதம் அழிந்து விடும் என்றும் கூறினான். மூன்றாம் கனவு அடியிற்கண்டவாறு அமைந்திருந்தது.

*"வானம் இடிமுழக்கத்தால் பேரொலியை எழுப்பியது,*
*தரைப்பகுதிகள் அனைத்தும் நடுங்கித் தடுமாறின,*
*உடன் இருள் சூழ்ந்தது ; உலகில் அனைத்தும் அசையாமல் நின்றன,*
*மின்னல் தரையைத் தாக்கியதால், தரை பற்றி எரிந்தது,*
*இறப்பிற்குரிய அனைத்தும் வானத்திலிருந்து கொட்டப்பட்டன,*
*வெப்பம் மறைந்தபின் தீ எரிவது நின்றது,*
*சமவெளிகள் அனைத்தும் சாம்பற் காடாயின"*[2]

(என்கிடு என்ன பதில் சொன்னான் என்பது கிடைக்கவில்லை. எழுத்துகள் சிதைந்துள்ளன.) ஆனாலும், கில்காமேஷ் கூறிய விளக்கங் களுக்குப் பின், இருவரும் காட்டிற்குச் செல்ல, என்கிடு இசைவளித்தான் என்று கருதப்படுகிறது. (நான்காவது கனவும் கிடைக்கவில்லை) என்றாலும்,

என்கிடு கில்காமேஷின் கனவு வர இருக்கும் மோதலில் வெற்றியைத் தரும் என்று கூறியதாகக் கருதலாம். (ஐந்தாவது கனவும் கிடைக்கவில்லை.)

காட்டின் பகுதிக்குள் நுழைந்தவுடனேயே, கில் காமேஷ் அச்சத்தால் நடுங்கினான். சூரியக் கடவுளை நோக்கி, தன் தாயிடம் சூரியக்கடவுள் கொடுத்த உறுதிமொழியை நினைவுகூர்ந்து, தனது முயற்சிக்குத் துணையாக இருக்குமாறு கேட்டுக் கொண்டான். சூரியக் கடவுள், 'வானத்தி லிருந்து இறங்கி வந்து, இருவரையும் உடனே காட்டிற்குள் நுழையுமாறு கூறினான். அந்நேரத்தில், பூதம் வழக்கமாக அணிந்திருக்கும் பாதுகாப்பு உடைகளை அணியாமல் இருந்தது. அப்போது ஓராடையை மட்டுமே அணிந்திருந்ததால், அதற்குப் பாதுகாப்பு இல்லாத நிலையில் இருந்தது. அவ்வேளையில், என்கிடு மேலும் அச்சமுற்று, காட்டினின்றும் வெளியே ஓடத் தொடங்கினான். அவனைத் தடுத்து நிறுத்திய கில் காமேஷ், அவனை மல்லுக்கட்டி இழுக்க முயன்றான். இந்த கச்சரவால் எழுந்த ஒலி, பூதத்தை விழிப்படையச் செய்தது. தனது காட்டிற்குள் யாரோ நலைந்து விட்டார்கள் என்பதை உணர்ந்தது. நுழைந்தவர்களைத் தாக்க, வெளியே வந்தது. இருவரையும் நோக்கி அறைகூவல் விடுத்தது. (பெரும்பகுதி கிடைக்காததால், நீண்ட செய்திகளை அறிய இயலவில்லை.) இதற்கிடையில், கில் காமேஷ் என்கிடுவை அமைதிப்படுத்தி, தன்னுடன் இணைந்து நிற்க இசைவு பெற்றான். பூதத்தை இருவரும் எதிர்த்துப் போரிடுவது என முடிவு செய்தனர்.

**களிமண் தட்டு 5 :**

கில் காமேஷும் என்கிடுவும், மிகவும் அழகாகவும் உயரமாகவும் இருந்த கருங்காலி மரங்களை வெட்டத் தொடங்கினர். மரம் வெட்டும் ஓசையைக் கேட்ட பூதம், அவர்கள் இருவரையும் நோக்கி வந்து, எச்சரிக்கை விடுத்து, காட்டை விட்டு வெளியேறுமாறு இடி முழக்க ஒலியோடு கூறியது. என்கிடு, பூதத்தைவிட, தாங்கள் இருவரும் வீரம் மிக்கவர்கள் என்றும் ஆற்றல் உள்ளவர்கள் என்றும் உரக்கக் கூவினான். என்கிடு, கில்காமேஷின் உதவி யாள் என்றும், கில்காமேஷ் தான் மன்னன் என்றும் கருதி, கில்காமேஷை வெளியேறுமாறு ஆணையிட்டது. பூதம் அவ்விருவரையும் அச்சுறுத்தி மிரட்டியதைக் கண்ட கில் காமேஷ், ஓடிச் சென்று ஒரு புதருக்குள் ஒளிந்து கொண்டான். என்கிடு, கில் காமேஷை நோக்கி அச்சப்பட வேண்டாம் என்றும், மறைவிடத்தை விட்டு வெளியே வருமாறும் கூறினான். கில் காமேஷுக்கு தெம்பூட்டும் வகையில், பேசிக் கொண்டிருந்தான். அதனைக் கேட்ட கில் காமேஷ் மறைவிடத்தை விட்டு வெளியே வந்து, என்கிடுவுடன் சேர்ந்து

போரைத் தொடங்கினான். கடுமையாக நடந்த அச்சண்டையில், சூரியக் கடவுள் அவ்விருவருக்கும் பலவாறு உதவி செய்தான். இறுதியில் ஊம்பாபா என்ற பூதம் தோல்வியைத் தழுவியது. கில் காமேஷ் தனது வாளை, பூதத்தின் தொண்டையில் வைத்து பாய்ச்சப் போனான். பூதம் தனது தோல்வியை ஏற்றுக் கொண்டு, தன்னைக் கொல்ல வேண்டாம் என்று கெஞ்சியது. அதற்குக் கைம்மாறாக, காட்டிலுள்ள மரங்களையெல்லாம் வெட்டி எடுத்துச் செல்லுமாறு கூறியது. தனது வாழ்நாள் முழுவதும், கில் காமேஷின் பணியாளாக இருப்பதாக வாக்குறுதியும் அளித்தது. பூதத்தின் கெஞ்சலைக் கேட்ட கில் காமேஷ், சற்றுத் தயங்கி, வாளை எடுக்க நினைத்தான். என்கிடு உடனே குறுக்கிட்டு, பூதத்துக்கு உதவி செய்ய, மற்ற பூதங்கள் அல்லது தெய்வங்கள் வருவதற்கு முன்பு பூதத்தைக் கொன்று விடு எனக் கூறினான். பூதத்தைக் கொன்றால், கில் காமேஷ் உலகம் முழுவதும் வெற்றி வீரனாகப் பேசப்படுவான், அவனுடைய புகழ் பன்மடங்கு உயரும் என்று என்கிடு கூறினான். என்கிடுவின் அறிவுரையைக் கேட்ட பின், பூதத்தின் தலையை கில் காமேஷ் வெட்டி வீழ்த்தினான். தன்னுடைய இறப்பிற்குக் காரணம், என்கிடுவே என்று உணர்ந்த பூதம், உங்கள் இருவரில், என்கிடு நெடுநாள் உயிர்வாழமாட்டான், என்கிடு இனி இந்த உலகில் அமைதியாகவும் வாழமாட்டான் என்று சாபமிட்டது.

இருவரும் அக்காட்டின் மிக உயர்ந்த தரமான மரங்களை வெட்டிச் சென்றனர். அம்மரங்களைக் கொண்டு, ஊரூக் நகரில், அழகான நுழைவாயிலை கில் காமேஷ் உருவாக்கினான். மேலும் அழகான, பெரிய மரக்கலம் ஒன்றையும் அம்மரங்களால் உருவாக்கி, யூப்ரதீஸ் ஆற்றிலிருந்து ஊரூக் நகருக்குச் செல்ல, நீர்வழிப் போக்குவரத்து வசதிகளை ஏற்படுத்திக் கொண்டனர்.

### களிமண் தட்டு 6 :

பூதத்தைக் கொன்ற நிகழ்வுக்குப் பிறகு, கில் காமேஷின் புகழ் உலகெங்கும் பரவியது. அதன் பின்னர் விலையுயர்ந்த ஆடைகளை அணிந்து கொண்டான். ஆடம்பரமான வாழ்க்கையைத் தொடங்கினான். பல பெண்களோடு தொடர்பு கொண்டான். பெண்களும் அவனது அழகிலும் ஆற்றலிலும் மயங்கினர். இது பற்றிக் கேள்விப்பட்ட இஸ்தார் (Isthar) என்ற பெண் தெய்வம், கில் காமேஷை அணுகி, தன் காதலை வெளியிட்டாள். கில்காமேஷ் கடும் சொற்களைக் கூறி, அவள் காதலை ஏற்க மறுத்துவிட்டான். ஏற்கனவே, பலரைக் காதலித்து, அவர்களிடம் இன்பம் பெற்ற பின்பு,

அவர்களைக் கொன்று விடுவது அவளுக்கு வழக்கமாக இருந்ததை, கில் காமேஷ் சுட்டிக்காட்டி, தான் இறந்து விடத் தயாராக இல்லை என்று கூறினான். மிகவும் கடுமையாக அவமானப்படுத்தப்பட்ட இஸ்தார், வானுலகிற்குச் சென்று, தன் தந்தையான வான் கடவுள் அனு என்பவனிடம் முறையிட்டாள். வானுலகத்துக் காளையை அனுப்பி, கில் காமேஷைக் கொன்று, ஊருக் நகரத்தை அழித்துவிடும் படிக் கோரினாள்.

*"தந்தையே ! எனக்காக வானத்துக் காளை அனுப்பிவையுங்கள்,*
*கில்காமேஷைக் கொன்று, ஊருக் நகரை அழிப்பதற்காக,*
*நீங்கள் காளையை அனுப்ப உத்தரவிடாவிட்டால்,*
*நரகத்தின் வாயில்களை நான் தகர்க்கப் போகிறேன்,*
*வாயில் தூண்களையும், கதவுகளையும் தூளாக்கப் போகிறேன்,*
*அங்கே வாழும் இறந்தோரை வெளியேற்றப் போகிறேன்,*
*இறந்தோர் உலகைச் சூழ்ந்து கொள்ளட்டும்,*
*அங்கு வாழும் அனைத்து உயிர்களை உண்பார்கள்,*
*இறந்தோர் உலகில் இருப்போரை வெற்றி கொள்ளட்டும்"*[3]

என்று தன் தந்தையிடம் கூறினாள். அதன்படி, வானத்துக் காளை ஊருக் நகருக்கு அனுப்பப்பட்டது. காளை ஒவ்வொரு முறையும் மூச்சை வெளிவிடும் போது, ஏராளமான தீய சக்திகள் புறப்பட்டு நூற்றுக் கணக்கான மக்களைக் கொன்று போட்டன. என் கிடுவும் கில் காமேஷும் கூட்டாக நின்று, வானத்துக் காளையைக் கொன்றனர். அதனால் மேலும் சினமுற்ற இஸ்தாரை, என்கிடு அவமானப்படுத்தி வெறுப்பேற்றினான். அடுத்து பலியாகப் போவது நீதான், நானும் கில்காமேஷும் இணைந்து அடுத்து உன்னைக் கொன்று விடுவோம் என்று கூறி, இறந்து கிடந்த காளையின் தொடையைப் பிய்த்து இஸ்தாரின் முகத்துக்கு நேரே வீசி, அவளைக் காயப்படுத்தினான்.

**களிமண் தட்டு 7 :**

பின்னர் என்கிடு பல கெட்ட கனவுகளைக் கண்டான் ; அதனால் நோய் வாய்ப்பட்டான். கோயில் பூசாரிகளை அணுகினான். அவர்கள், என்கிடு கடவுள்களைப் பகைத்துக் கொண்டதால், தனிமைப்படுத்தப்பட இருப்பதாகக் கூறினர். கடவுளர்கள் கூட்டம் போட்டு, ஊம்பாபா என்ற பூதத்தைக் கொன்றதற்காகவும், வானத்துக் காளையைக் கொன்றதற்காகவும், இருவரில் ஒருவன் தண்டிக்கப்பட வேண்டும் என்று தீர்மானித்தனர். அதன்படி, என்கிடுவைக் கொன்று போடுவதென முடிவு செய்யப்பட்டது. அநியாயமான அந்த முடிவை அறிந்த என்கிடு, காட்டு மரங்களால் உருவாக்கப்பட்ட ஊருக்

நகர வாயிலைச் சபித்தான் ; தன்னை மயக்கி தன்னோடு உடலுறவு கொண்ட பரத்தையைத் திட்டினான் ; அவளை அழைத்து வந்த தோல் வணிகனைச் சபித்தான் ; தனக்கு நாகரிகத்தின் கூறுகளைச் சொல்லிக் கொடுத்த அனைவரையும் கடிந்து கொண்டான். தனக்கு ஏற்பட இருக்கும் துன்பங்களுக்கு மேற்கண்டவர்களே காரணம் என்று வருந்தினான். சூரியக் கடவுள், என்கிடுவின் வாழ்வு குறுகிய காலமே இருப்பதாகவும், அக்குறுகிய காலத்தில் நாகரிகத்தின் கூறுகளையும், உலக இன்பங்களையும் துய்க்க என்கிடுவினால் சபிக்கப்பட்டவர்களே உதவினார்கள், என்பதை எடுத்துரைத்தான். பின்னர் அமைதியடைந்த என்கிடு, தோல் வணிகனையும் பரத்தையையும் வாழ்த்தினான். அடுத்து என்கிடு ஒரு கனவு கண்டான். ஒரு பெரிய பூதம், என்கிடுவை நரகத்துக்கு இழுத்துச் சென்றது. குப்பைகளும் தூசியும் நிறைந்திருந்த நரகத்தில் இறந்தோர் வாழ்வதைக் கண்டான். கனவில் இறப்பதையும் உணர்ந்தான். நரகத்தைப் பற்றிப் பின்வருமாறு விளக்கினான்.

*"இறந்தோர் வாழும் அவ்விடம் காரிருள் சூழ்ந்ததாக இருந்தது,*
*அங்கே இறந்தவர்கள் தூசியைக் குடித்து, கற்களை உண்டார்கள்.*
*பறவைகளைப் போல இறகுகளை உடுத்தியிருந்தார்கள்.*
*அங்கே வெளிச்சம் இல்லை ; எப்போதும் இருள் மண்டிக் கிடந்தது.*
*நரகத்தின் கதவும் பூட்டும் தூசி மண்டிக் கிடந்தன.*
*நான் அந்த தூசியின் இல்லத்துக்குள் நுழைந்த போது,*
*திரும்பிய பக்கமெல்லாம் மன்னர்களின் மணி முடிகள்,*
*மண்மேடுகள் போல் குவிந்து கிடந்தன.*
*திரும்பிய திசையெங்கும் அம்மணி முடியணிந்திருந்த மன்னர்கள்*
*கூக்குரல் இட்டுக் கொண்டிருந்தார்கள்.*
*அவர்கள் எல்லோரும் தம் வாழ்நாளில் அனு என்லில் கடவுளருக்கு*
*இனிப்பும் இறைச்சியும், நீரும் படைத்தவர்கள்.*
*தூசி இல்லத்தில் ஒரு பூசாரியுடனும் வேலைக்காரனுடனும்*
*சிலர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தேன்.*
*வந்தவர்களின் குற்றங்களைக் களைந்த பூசாரியும்,*
*மக்களிடையே பாலுணர்வைத் தூண்டி வந்த மற்றொரு பூசாரியையும்*
*அங்கு அமர்ந்திருக்கக் கண்டேன்.*
*மாபெரும் கடவுளருக்குப் படையல் செய்த பூசாரிகளையும் கண்டேன்*
*அங்கே எடண்ணா, சுமுகன் போன்ற மன்னர்கள்*
*நரகத்தின் அரசி முன் அமர்ந்திருக்கக் கண்டேன்.*
*நரகத்தின் சித்திரகுப்தன் அரசி முன் அமர்ந்திருந்தான்.*

ஒரு குறிப்பை அரசிக்குப் படித்துக் காட்டினான்.
என்னைக் கண்டவுடன் அரசி மெதுவாகத் தலைமை நிமிர்த்தி
என்னைப் பார்த்து, "இவனை இங்கே அனுப்பியன் யார்",
என்று கேட்டாள்"[4].

மேற்கண்ட கனவை கில்காமேஷிடம் என்கிடு தெரிவித்தான். பிறகு 12 நாட்கள் நோயினால் துன்பப்பட்டு, என்கிடு இறந்து போனான்.

**களிமண் தட்டு 8 :**

என்கிடு இறந்ததால், கில்காமேஷ் மனமுடைந்து போனான். தன் நண்பனின் மறைவுக்காக, நீண்ட நாள் இரங்கல் சடங்குகளை நிறைவேற்றி னான். தன் மக்களையும் அவ்வாறான சடங்குகளைச் செய்யும்படி ஆணையிட்டான். (இந்தக் களிமண் தட்டின் பெரும் பகுதிகள் அழிந்து விட்டன. அத்தட்டின் இறுதியில், தனது நண்பன் என்கிடுவிற்காக நினைவுச் சின்னம் ஒன்றை எழுப்பியதாக அறிய முடிகிறது.)

**களிமண் தட்டு 9 :**

தன் நண்பன் என்கிடு இறந்த பின்பு, கில்காமேஷன் வாழ்க்கையில் வெறுமை தோன்றியது. குளிக்கவும், சவரம் செய்து கொள்வதும், தன்னைப் பற்றி அக்கரை எடுத்துக் கொள்வதும் என வழக்கமான நடைமுறைகள் பின்பற்றப்படவில்லை. தன் நண்பன் இறந்தபின்பு, அச்சம் அவனைத் தொற்றிக் கொண்டது. தானும் ஒரு நாளில் இறக்கப் போவது உறுதி என்று எண்ணி, அங்கலாய்த்தான். இறப்பில்லாத வாழ்வுக்கு வழிதேடும் வரை ஓய்வதில்லை என்று முடிவு செய்தான். அதற்காக, எந்த இக்கட்டான பயணத்தையும் மேற்கொள்ளத் துணிந்தான். பெரு வெள்ளத்தினின்றும் கடவுளால் காப்பாற்றப்பட்ட ஊட் நா பிஷ்டிம் என்பவனும் அவன் மனைவியும், சாகா வரம் பெற்று வாழ்ந்து வருவதை அறிந்தான். ஊட் நா, மிகத் தொலைவில், உலகின் கடைசி மூலையில், அனைத்து ஆறுகளும் கடலில் சங்கமிக்கும் இடத்தில் வாழ்ந்து வருவதாகக் கேள்விப்பட்டான்.

ஊட்நா, வெள்ளக் காலத்துக்கு முன்பு, உலகின் பேரரசனாகத் திகழ்ந்தவன். வெள்ளக் காலத்தில் அவனும் அவன் மனைவியும் கடவுளரால் காப்பாற்றப்பட்டதோடு, இருவரும் இறப்பில்லா பெருவாழ்வைப் பெற்றனர். கில் காமேஷ் ஒரு கனவு கண்டான். அக்கனவு, அவனைப் பயணம் மேற்கொள்ளத்தூண்டியது. மசு (Mashu) என்ற மலையடிவாரத்துக்கு வந்து சேர்ந்தான். அம்மலை, சூரியன் உதிப்பதற்கும் மறைவதற்கும் காவலனாக

இருந்தது. அம்மலையில் ஏறுவதற்கான வழியை, இரண்டு பெரிய தேள்கள் காவல் காத்திருந்தன. அவற்றிடம் தன் பயண நோக்கத்தைத் தெரிவித்து, வழிவிடுமாறு கேட்டுக் கொண்டான். அத்தேள்கள், கில்காமேஷின் பயணத்தால் எந்தப் பயனும் ஏற்படப் போவதில்லையென்றும், வழியில் அவன் பல வகையான இன்னல்களையும் எதிர்ப்புகளையும் சந்திக்க வேண்டி வரும் என்றும் எடுத்துரைத்தன. கில்காமேஷ், அவ்வாறான இடையூறுகளை வெற்றிக் கொள்வேன் என்று பதிலுரைத்தான். பின்னர் அத்தேள்கள் இரண்டும் அவனுக்கு வழிவிட்டன. அம்மலை, இருள் சூழ்ந்தது. எப்போதும் ஒளி அங்கே நுழைவதில்லை. இருளிலேயே 11 லீக் தொலைவு பயணம் செய்து, ஒளிதோன்றும் இடத்தை நோக்கி நடந்தான். அதன் பின்னர் 12 லீக் (leagues) தொலைவு நடந்து சென்று பகல் உள்ள இடத்தை அடைந்தான். அங்கு ஓர் அழகான தோட்டம் இருந்தது. அத்தோட்டத்தில் மணிக்கற்கள் (gems) தரையெங்கும் விரவிக் கிடந்தன. மரங்களில், மலர்களைப்போல், மணிக்கற்கள் காட்சியளித்தன.

**களிமண் தட்டு 10 :**

கில்காமேஷ், கடற்கரைக்கு வந்து சேர்ந்தான். அக்கடற்கரையின் பக்கத்தில் ஒரு சத்திரம் (உணவு விடுதி இருந்தது. சிதூரி (Siduri) என்ற பெண், அவ்விடுதியில் இருந்தாள். கில் காமேஷைக் கண்டதும் அச்சமுற்று, உணவு விடுதியின் கதவுகளைப் பூட்டிக் கொண்டு, அவனை உள்ளே விட மறுத்தாள். கில் காமேஷ், தான் ஊரூக் நகரத்து மன்னன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். ஊட் நாவைச் சந்திக்க விரும்புவதாகவும், அவன் இருக்குமிடம் பற்றிய தகவலைத் தெரிவிக்குமாறும் கேட்டுக் கொண்டான். மலையடிவாரத்துத் தேள்கள் சொன்னது போலவே, சிதூரியும் கூறினாள். பயணத்தில் பல இடையூறுகள் தோன்றும் என எச்சரித்தாள். எனினும், ஊர்சா நபி (Ursa nabi) என்ற படகோட்டியைச் சந்தித்தால், அவன் ஊட்நாவிடம் அழைத்துச் செல்வான் எனக் கூறினாள். ஊர் சா நபி, ஊட்னாவின் படகோட்டி என்றும் தெரிவித்தாள்.

கில் காமேஷ் ஊர்சா நபீயிடம் செல்லப் பயணமானான். வழியில் ஏற்பட்ட தடைகளையெல்லாம் கடந்து சென்றான். ஊர்சா நபியைக் கண்டுபிடித்து, தன் விருப்பத்தைத் தெரியப்படுத்தினான். ஊர்சா நபி, ஊட்நாவிருக்கும் இருக்கும் இடத்தைக் கடப்பதில் உள்ள இடர்ப்பாடுகளைத் தெரிவித்தான். வழியில் கிடக்கும் ஏராள கற்களை அப்புறப்படுத்த வேண்டும் ; அடர்ந்த மரங்களை வெட்டி வீழ்த்த வேண்டும் ; ஆறு ஒன்றைக் கடந்து

செல்ல வேண்டும். அந்த ஆற்று நீர் உடலில்பட்டால், அக்கணமே இறக்க நேரிடும், ஏராளமான குழிகளைக் கடந்து செல்ல வேண்டும், என்றவாறு ஊர்சாநபி கூறினான். நீண்ட நெடிய பயணத்தில், மேற்கண்ட இடையூறுகளையெல்லாம் கடந்து, ஓர் ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தான். அங்கு முதியவன் ஒருவன் இருப்பதைக் கண்டான். அம்முதியவனிடம், ஊட்நாவியைச் சந்திக்க வேண்டும், உலகில் இறவாத் தன்மையின் கமுக்கங்களை, ஊட்நாவிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் கூறினான். அம்முதியவனோ, இறப்பு என்பது உயிரினங்களால் தவிர்க்க இயலாத ஒன்று எனவும், தற்காலிகமாக சில ஆண்டுகள் வாழ்நாளை நீட்டித்துக் கொள்ளலாமேயன்றி, எக்காலத்தும் இறவாத்தன்மையை அடைய இயலாது என்றும் கூறினான். மேலும், கடவுளர்கள் தங்களைப் போல், இறவாத் தன்மையை மனிதர்கள் பெறுவதை அனுமதிக்க மாட்டார்கள் என்றும் கூறினான்.

**களிமண் தட்டு 11 :**

அப்பொழுது, தான் உரையாடிக் கொண்டிருக்கும் முதியவர், ஊட் நாவே என்பதை, கில்காமேஷ் உணர்ந்தான். இறவாத் தன்மை கொண்ட ஒரு முதியவரை சந்திப்போம் என்று கில் காமேஷ் எதிர்பார்க்கவேயில்லை. ஊட்நாவிடம், எவ்வாறு இறவாத் தன்மையைப் பெற்றீர்கள், அந்த மறைக்கப்பட்ட உண்மையை எனக்குக் கூறுங்கள் என்று, கில் காமேஷ் கேட்டான். ஊட் நா பின்வருமாறு கூறினான் :

"வெள்ளம் தோன்றுவதற்கு முன்னர், சுருப்பாக்கம் (Shrupak) என்ற ஊர், யூப்ரதீஸ் ஆற்றங்கரையில் இருந்தது. அங்கு அனைத்துக் கடவுளரும் ஒரு கூட்டம் நடத்தினர். அக்கூட்டத்தில், வெள்ளத்தின் மூலம் உலகை அழிப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அனைத்துக் கடவுளரும், இந்த முடிவை, எந்த மனிதனுக்கும் தெரியப்படுத்தக் கூடாது என்று உறுதிமொழி எடுத்துக் கொண்டனர். ஆனால் யா (Yaa) என்ற கடவுள் (அவனே உலகில் மனிதர்களைப் படைத்தவன்), தான் படைத்த மனித இனம் முற்றிலுமாக அழிந்து போவதை விரும்பவில்லை. வெள்ளத்துக்குப் பிறகு மனித இனம் மீண்டும் பல்கிப் பெருக வேண்டும் என்று விரும்பினான். யா, என்னுடைய வீட்டுக்கு வந்து, என் வீட்டுச் சுவர்களிடம், வெள்ளத்தின் கமுக்கம் பற்றி செய்தியைக் கூறிவிட்டுச் சென்றான். இதன் மூலம், எந்த மனிதனுக்கும் வெள்ளச் செய்தியைத் தெரிவிக்கவில்லை என்ற ஏற்கனவே எடுக்கப்பட்ட உறுதிமொழியையும் காப்பாற்றிக் கொண்டான். என் வீட்டுச் சுவர்களிடம்,

ஒரு மிகப் பெரிய மரக்கலத்தை உருவாக்கிக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டான். அம்மரக்கலத்தின் நீளம், அகலம், உயரம் ஆகியவை எவ்வாறு இருக்க வேண்டும் என்ற அளவுகளையும் தெரிவித்தான். மரக்கலத்தினுள் நீர்புகாதவாறு, எவ்வாறு பூசி மெழுக வேண்டும் என்றும் விளக்கியிருந்தான். உலகின் உள்ள ஊர்வன, பறப்பன, காட்டு, வீட்டு விலங்குகள் ஆகியவற்றில் ஒவ்வொரு இணையை (சோடியை) மரக்கலத்தில் ஏற்றிக் கொள்ளுமாறும் உத்தரவிட்டான்".

ஊட்நாவின் வீட்டுச் சுவர்கள், ஊட்நாவிடம் மேற்கண்ட செய்திகளைத் தெரிவித்தன. யா கடவுள் கூறியபடி, ஊட்நா, பெரிய மரக்கலம் ஒன்றை உருவாக்கிக் கொண்டான். புதிய ஆண்டு பிறப்பதற்கு முன், தன் பணிகளை முடித்துக் கொண்டான். யா கடவுள் கூறியபடி, அனைத்து உயிரினங் களையும் மரக்கலத்தில் ஏற்றிக் கொண்டான். மேலும் பொன், வெள்ளி, மணிக்கற்கள் என விலையுயர்ந்த பொருட்களையும் எடுத்துக் கொண்டான். மரக்கலம் புறப்படத் தயாரான நிலையில், யா கடவுள் வந்து, மரக்கலத்தின் கதவை, உட்பக்கமாக மூடிக் கொள்ளும்படி கட்டளையிட்டான். உடனே, கருமேகங்கள் சூழ்ந்தன, இடியொலிகள் கேட்டன. உலகம், மண்பானை யைப் போல் உடைந்தது. உலகம் முற்றிலுமாக இருளானது. மழை கொட்டத் தொடங்கியது. மிகவும் கடுமையாகக் கொட்டித் தீர்த்த மழையைக் கண்டு கடவுளர்களே அச்சமுற்றனர்.

*"அடிப்பட்ட நாய்கள் அங்குமிங்கும் அலைவதைப் போல*
*கடவுளர்கள் வானத்தின் மூலை முடுக்குகளில் ஓடி ஒளிந்து கொண்டனர்.*

*"இஸ்தார், நாள்பட்ட நோயினால் அழுபவரைப் போல்,*
*வாய்விட்டு, கூவி, கதறி அழுதாள்.*
*பழைய நாட்கள் எல்லாம் பாறாங் கற்களாயின.*
*தீய சக்திகள் எவையென்று கூட்டத்தில் முடிவு செய்தோம்.*
*ஏன் அவ்வாறு முடிவு செய்தோம் ?*
*உலகையும் மக்களையும் ஏன் அழிக்க நினைத்தோம் ?*
*எங்கள் விருப்பப்படி நடக்கும் மனிதர்களை உருவாக்கினோம்.*
*ஆனால் அவர்களை கடல் வெள்ளத்தின் மூலமாக அழிக்கிறோம்.*
*அனைத்துக் கடவுளரும் இஸ்தாரைப் போலவே புலம்பி அழுதனர்.*
*உடல் நடுங்கியபடி, கண்ணீர் விட்டனர்"[5].*

வெள்ளம் ஏழு பகலும் ஏழு இரவும் நீடித்தது. இறுதியில் ஒளி உலகிற்குத் திரும்பிற்று. ஊட் நா, சாளரத்தைத் திறந்து பார்க்கையில்,

உலகம் முழுவதும் தட்டையான பெருங்கடல் போல் காட்சியளித்தது. அனைத்து மனிதர்களும் கற்களாகிப் போனார்கள். ஊட்நா, மண்டியிட்டு, அழுதான். ஊட் நாவின் மரக்கலம் நீமூசு (Nimusu) என்ற மலை முகட்டில் தரை தட்டி நின்றது. மலைமுகட்டுக்கு வெளியே பெருங்கடல் போல் நீர் சூழ்ந்திருந்தது. ஊட்நா, ஏழு நாட்கள் வரை மரக்கலத்திலேயே இருந்தான். ஏழாம் நாளில்,

"நான் (ஊட்நா பிஷ்டும்), மரக்கலத்தினின்று ஒரு புறாவை வெளியே அனுப்பினேன்,
வெளியே பறந்து வட்டமடித்த அப்புறா,
உட்கார இடமில்லாததால் மீண்டும் திரும்பிவிட்டது.
நான் பிறகு வால்நீண்ட பறவையை அனுப்பினேன்,
அது வெளியேபறந்து சென்ற வட்டமடித்து மீண்டும் திரும்பியது.
நான், பின்னர் ஒரு காக்கையை அனுப்பினேன்,
பறந்து சென்ற காக்கை நீர் வடிந்திருந்ததால்
நிலத்தில் உட்கார்ந்து இறையைத் தேடியது,
மீண்டும் அது வரவில்லை.
நான், பின்பு மரக்கலத்திலிருந்த அனைத்து உயிரினங்களையும்
நான்கு திசைகளுக்கும் செல்லுமாறு வெளியே அனுப்பினேன்.
ஓராட்டை அறுத்து கடவுளருக்கு நன்றிப் பலி செலுத்தினேன்"[6].

பலியடப்பட்ட ஆட்டிறைச்சியின் மணத்தை நுகர்ந்த கடவுளர்கள் அனைவரும், ஊட்நாவிடம் வரத் தொடங்கினார்கள். உலகை அழிக்க வேண்டும் என முதலில் விரும்பிய என்லில் கடவுள் பிறகு வந்து சேர்ந்தான். அனைத்து மனிதர்களையும் அழிக்க வேண்டும் என எண்ணியிருந்த என்லில், ஊட்நாவைக் கண்டதும் எரிச்சலடைந்தான். யா கடவுள் மீது குற்றம் சுமத்தினான். யா கடவுள், என்லிலை அமைதிப்படுத்தி, ஊட்நாவிடம் கருணை காட்டுமாறு கேட்டுக் கொண்டான். அதனால் அமைதியுற்ற என்லில், ஊட்நாவையும் அவன் மனைவியையும் வாழ்த்தினான்.

"ஒரு சமயத்தில் ஊட்நா இறக்கும் மனிதனாக இருந்தான்,
தற்போது, கடவுளரில் ஒருவனாக்கப்பட்டு
இறவாத் தன்மையைப் பெற்றான்,
ஆறுகள் சங்கமிக்கும் இடத்தில், தொலைவில்,
அவன் இறப்பின்றி வாழட்டும்"[7].

தன் கதையை ஊட்நா கூறி முடித்தவுடன், கில் காமேஷுக்கு ஒரு வாய்ப்பைத் தர முன் வந்தான். அதன் படி, ஆறு பகலும், ஏழு இரவும், கில் காமேஷ் தூங்காமல் விழித்திருந்தால், அவனும் இறவா நிலையைப் பெறுவான் என்று கூறினான். கில் காமேஷ், அந்த விதிகளுக்கு ஒப்புக் கொண்டு கடற்கரையின் அருகே சென்று அமர்ந்தான். உட்கார்ந்தவுடனே தூங்கிவிட்டான். ஊட்நா, தன் மனைவியிடம், அனைத்து மனிதர்களும், பொய்யர்களே, என்றும் கில் காமேஷ்கூட, தான் உறங்கவில்லை என்று தான் கூறுவான் என்றும் சொன்னான். ஒவ்வொரு நாளும் ஒரு உரொட்டித் துண்டை, கில்காமேஷின் காலடியில் வைத்து விடுமாறு கூறினான். கில் காமேஷ், அந்த ஆறு பகலிலும் ஏழு இரவுகளிலும் எந்த வேலையையும் செய்யாமலும், நடக்காமலும் தூங்கிக் கொண்டே இருந்தான். ஏழாம் நாளில், ஊட்நா கில்காமேஷை எழுப்பினான். கில்காமேஷ் தூக்கம் கலைந்து, இந்த நொடியில்தான் கண்ணை மூடியதாகக் கூறினான். ஊட்நா, ஏழு நாட்களும் வைக்கப்பட்டிருந்த உரொட்டித் துண்டுகளைக் காட்டி, ஒவ்வொரு நாளும் வைக்கப்பட்டவை கெட்டுப் போயிருந்ததையும், அன்று வைக்கப்பட்டது நன்றாக இருந்ததையும் சுட்டிக் காட்டினான். கில்காமேஷ் தன்னையே நொந்து கொண்டான்.

> *"ஓ என் துன்பமே, நான் இப்போது என்ன செய்வேன்,*
> *நான் இப்போது எங்கே செல்வேன் ?*
> *இறப்பு என் உடலை நெருங்குகிறது.*
> *இறப்பு என் உடலில் குடி கொண்டுள்ளது.*
> *நான் எங்கே செல்வேன், எவற்றைப் பார்ப்பேன்*
> *எங்கும் இறப்பே நின்று கொண்டிருக்கிறது"*[8].

ஊட்நாவின் மனைவி, கில் காமேஷ் மீது இரக்கப்பட்டாள். தன் கணவனிடம், இரக்கம் காட்டும்படிக் கூறினாள். மீண்டும் ஒரு வாய்ப்பைத் தருமாற கேட்டுக் கொண்டாள். ஊட்நா, கில் காமேஷிடம், ஒரு மறைவான இடத்தில் ஒரு செடி உள்ளதென்றும், அது கில் காமேஷுக்கு இறவாத் தன்மையைக் கொடுக்கும் என்றும் கூறினான். அச்செடி, பெருங்கடலின், அடியில், மிகத் தொலைவில் உள்ளதென்று கூறி, அதனைக் கொண்டு வருமாறு சொன்னான். கில் காமேஷ் தன் உடலில் கனமான கல்லைக் கட்டிக் கொண்டு, கடலில் குதித்தான். அடிப்பகுதிக்குச் சென்று அச்செடியை எடுத்து வந்தான். அச்செடியை உண்டால், முதுமை மறைந்து இளமையாக என்றும் வாழலாம் என்று ஊட்நா கூறியதில், கில் காமேஷுக்கு நம்பிக்கை

ஏற்படவில்லை. அச்செடியை ஊருக் நகருக்கு எடுத்துச் சென்று, ஒரு முதியவனை உண்ணச் செய்து, அவன் இளமையாக மாறினால், மீதம் உள்ளதைத் தான் உண்ணலாம் என நினைத்தான். ஊர்சா நபீ என்ற படகோட்டி, கில் காமேஷைத் தன் படகில் சாக்கடலிலிருந்து காப்பாற்றி அழைத்து வந்தான். கடற்கரையினின்றும் தொலைவிலிருந்த உள்நாட்டுக்கு இருவரும் வந்து சேர்ந்தனர். இருவரும் உணவு உண்டபின் சிறிது நேரம் உறங்கினர். அவ்வேளையில் ஒரு பாம்பு, அம்மாயச் செடியை விழுங்கி விட்டது. விழுங்கிய சிறிது நேரத்தில் அங்கிருந்து மறைந்து விட்டது. (அந்த மாயச் செடியை விழுங்கியதால் தான் பாம்புகள் தோலுரிக்கின்றனவாம்.) கில்காமேஷ் விழித்தெழுந்து பார்த்த போது, செடி காணாமல் போயிருந்தது. தான் செய்த தவறையுணர்ந்து, மண்டியிட்டு அழுதான்.

*"நான் யாருக்காக இவ்வளவு இடர்ப்பாடுகளையும் ஏற்றேன் ?*
*நான் யாருக்காக நெடிய பயணத்தை மேற் கொண்டேன் ?*
*மிகுந்த வலியை அடைந்தாலும் பயன் ஏதும் எனக்குக் கிடைக்கவில்லை,*
*பாம்புக்கே நான் உதவி செய்தேன்"*[9]

கில் காமேஷ் தன்னுடைய நீண்ட நெடிய பயணத்தை முடித்துக் கொண்டு, ஊருக் நகர வாயிலில் வந்து நின்று கொண்டிருப்பதோடு கதை முடிகிறது. ஊர்சா நபியிடம், ஊருக் நகரத்தின் சிறப்புகளையும், உயர்ந்த சுவர்களையும், மதி நுட்பமான கட்டிட வேலைப்பாடுகளையும், மதிற்சுவர்களின் அடிக்கட்டுமானத்தையும், மணிக் கற்களால் ஆன தூணையும் காட்டி மகிழ்ந்தான் என்பதோடு, மனிதர்களைப் போலவே, கில் காமேஷும் இறந்து போனான் என்று கதை முற்றுப் பெறுகிறது.

**கதை பற்றிய திறனாய்வு :**

மேலே சொல்லப்பட்ட கதை, இக்காலத்தவருக்குப் பாட்டிக் கதை போன்று தோன்றலாம். சிறுவர்களுக்கு இக்கதை ஓரளவுக்கு ஈர்ப்புடையதாக இருக்கலாம். ஏறக்குறைய 6000 ஆண்டுகளுக்கு முன்பு சொல்லப்பட்ட கதை என்பது தான் இக்கதையின் சிறப்பு. இக்கதை, சுமேரிய - பாபிலோனிய நம்பிக்கைகளின் அடிப்படையில் சொல்லப்பட்ட கதையாகும். இக்கதைக்கு மூலக்கதை, சுமேரிய மொழியில் உள்ளது. அக்கதையின் முழுமையான செய்திகளை அறிய இயலவில்லை (அடுத்த தலைப்பில் காண்க). அக்காடிய மொழியில் இக்கதை எழுதப்பட்டுள்ளது. ஏற்கனவே பாபிலோனில் அறியப்பட்டிருந்த இக்கதை, மீண்டும் ஒருவரால்

தொடர்ச்சியாக எழுதப்பட்டுள்ளது என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இருப்பினும் சில களிமண் தட்டுகள் கிடைக்காததால், கதையில் சில தொடர்புகள் அறுந்து போயுள்ளன. சில கணிமண் தட்டுகளில் உள்ள சிலவரிகள் சிதைந்து போயுள்ளன. எவ்வாறாயினும் கதையின் ஓட்டம் புரிந்து கொள்ளக் கூடிய அளவில் உள்ளதெனக் கருதலாம்.

இக்கதையில் தமிழ் மரபுகளும் வழக்காறுகளும் விரவிக் காணப்படுகின்றன. கதையில் வரும் பெயர்ச் சொற்கள், ஊர்ப் பெயர்கள், இடப் பெயர்கள், கடவுளர் பெயர்கள் மக்களின் வாழ்க்கை முறை, போன்ற பல கூறுகள் தமிழ் மரபைச் சார்ந்துள்ளன. வெள்ளம் தோன்றி உலகை அழித்த நிகழ்வும் இக்கதையில் உட்கதையாக வருகின்றது. இதனை வரலாற்றுக் கதையென்றும், தொன்மக் கதையென்றும், புதினம் என்கிற நாவல் என்றும், தொடர்கதையென்றும் எவ்வாறு வேண்டுமானாலும் கூறலாம். கதையின் கதா நாயகன் கில் காமேசு என்பவன், உண்மையின் வாழ்ந்திருந்த மன்னன் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இராமன் என்ற மன்னன் எவ்வாறு தொன்மக்கதைகளால் சொல்லப்பட்டானோ அவ்வாறே கில் காமேஷும் சொல்லப்பட்டான் எனலாம். என்கிடு என்ற பெயர், என் பிள்ளை (குட்டி – கிடு எனத் திரிந்துள்ளது) என்ற பொருளில் கடவுளால் சொல்லப்பட்டிருக்கலாம். அப்பெயருக்கான விளக்கத்தை அறிய இயலவில்லை. ஊற்று - நாவி – பற்றன் என்ற பெயரே, ஊட்நா – பிஷ்பும் எனத் திரிந்துள்ளது. ஊற்று என்பது வெள்ளத்தையும், நாவி என்பது மரக்கலத்தையும், பற்றன் என்பது துணை கொண்டு வந்தவன் என்ற பொருளையும் குறிப்பன.

வெள்ளம், பாபிலோனில் உள்ள மக்களை அழித்ததாகவும், ஊட்நா, மெசபத்தோமியப் பகுதியைச் சார்ந்தவன் என்றும், வெள்ளத்தால் சுமேரிய நகரங்கள் அழிந்தன என்றும் கதையில் சொல்லப்பட்டுள்ளன. உண்மையில், உலகைப் புரட்டிப் போட்ட வெள்ளம், மெசபத்தோமியாவில் அறியப்படவில்லை என்றும் அதற்கானச் சான்றுகள், அப்பகுதிகள் எங்கும் நிகழ்வுற்ற அகழ்வாய்வுகளில் கிடைக்கவில்லையென்றும் ஆய்வாளர் கூறுகின்றனர். வெள்ளத்தால் தோன்றும் மண் அடுக்குகள் (layers) அப் பகுதிகளில் காணப்படவில்லை. வெள்ளப் பெருக்கும், கடல் நீர் உயர்வும் நில நடுக்கோட்டுப் பகுதிகளிலும், அக்கோட்டுக்குத் தெற்கிலுமே பேரழிவைத் தோற்றுவித்ததாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அந்த வகையில், இக்கதை, எங்கோ நடந்த நிகழ்வை, தங்கள் பகுதியில் நடந்ததாக எழுதி

வைத்துள்ளனர். இக்கதையைப் போன்றே, வெள்ளம் அறியப்படாத கிரேக்க நாட்டுத் தொன்மக் கதையில் தெக்காளியன் (Decaulian) என்பவன், வெள்ளத்தினின்று மீட்கப்பட்டதாகச் சொல்லப்பட்டுள்ளது.

தெக்காளியன் என்ற சொல், தெற்கு அல்லது தெக்கு ஆழியன் என்ற தமிழ்ச் சொல்லாகவே உள்ளது. இதற்குத் தென் கடலைச் சார்ந்தவன் என்பது பொருள். தெக்காளியன் என்ற பெயரே, கிரேக்க நாட்டோடு தொடர்பற்ற நிலையில் சொல்லப்பட்டுள்ளது. எபிரேய மொழியான விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ள வெள்ளக் கதையும் மெசபத்தோமியாவில் நடந்ததாகவே சொல்லப்படுகிறது. நாகன் என்பவனையே கடவுள் வெள்ளத்தினின்று காப்பாற்றியதாக, எபிரேய மொழி விவிலியம் கூறுகிறது. கிரேக்க மொழி பெயர்ப்பில், அப்பெயர் நோவா (Noah) என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. கிரேக்க மொழியில் நோவா என்பது, நாவாய் என்ற மரக்கலத்தைக் குறிக்கும். இந்தியத் தொன்மக்கதையான மனு நூலில், மனு என்பவனை வெள்ளத் தினின்றும் மீன் கடவுள் காத்ததாகச் சொல்லப்பட்டுள்ளது.

வெள்ள மாந்தர்களான,
ஊட்நா பிஷ்பும் (ஊற்று + நாவி + பற்றன்) - அக்காடிய மொழியிலும்,
தெக்காளியன் (தெற்கு + ஆழியன்) - கிரேக்கத் தொன்மத்திலும்,
நாகன் என்ற நோவா (நாவாய்) - எபிரேய மொழியிலும்,
மனு என்பன், ஆரியத் தொன்மத்திலும் சொல்லப்பட்டுள்ளனர்.
அக்காடிய மொழியில், கெபல் (கப்பல்) என்றும்,
எபிரேய மொழியில், தெப்ப (தெப்பம்) என்றும்,
கிரேக்க மொழியில், நோவா, (நாவாய்) என்றும் சொல்லப்பட்டுள்ளன.

மேற்கண்ட வெள்ள மாந்தர்கள் பெயர்களும், அவர்களுடைய மரக்கலங்களின் பெயர்களும் தமிழ்ச் சொற்களாக உள்ளன.

பனி உருகல் காலமே வெள்ளக் காலம் என்று ஆய்வாளர்கள் தெளிவுபடுத்தியுள்ளனர். கி.மு.18000 - 12000 ஆண்டுகளில் பனி உருகலின் காரணமாக, கடல் நீர் 400 அடிகள் வரை உயர்ந்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

மேலை நாட்டுத் தொன்மக்கதைகள் வெள்ளக் கதைகள் பற்றி செய்திகளைச் சொல்வது ஒரு புறமிருக்க, தமிழ் இலக்கியமான இறையனார் அகப்பொருள், வெள்ளம் பற்றிய செய்தியைக் கூறி, பாண்டியர் ஆண்டிருந்த

தென்குமரி நாடு, வெள்ளத்தில் அழிந்து போனதாகத் தெளிவுபடுத்துகிறது. சிலப்பதிகாரம் போன்ற தமிழ் இலக்கியங்களும் குமரி நாடு அழிந்ததைக் குறிப்பிடுகின்றது. வெள்ளம் உலகின் ஒரு பகுதியை அழித்தது என, புவியியல், நிலவியல், தொல்லியல் ஆய்வாளர்கள் ஒரு புறம் கூற, இலக்கியங்கள் அதனை மேற்கோளாகச் சொல்ல, வெள்ள நிகழ்வு என்பது கற்பனையானது என்று இங்குள்ள தமிழறிஞர்களில் பலர் கூறியும் எழுதியும் தங்கள் ஆய்வுத் தன்மையை வெளிக்காட்டி வருகின்றனர். இலக்கியச் சான்றுகளை கற்பனையானவை என்று கூறும் அவர்களே, வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் கூறுவதெல்லாம் வரலாறுகளே என வாதிடுகின்றனர். வெள்ளக் கதைகளில், நம்பவியலாத நிகழ்வுகள் சொல்லப்பட்டிருப்பது உண்மையே. ஆனாலும் அக்கதைகளின் கரு, வரலாற்று நிகழ்வே என்பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது.

மேலும் ஆப்பிரிக்கப் பழங்குடியினரின் செவிவழிக் கதைகளிலும், அவாய், பிலிப்பைன்ஸ் போன்ற நாட்டுக் கதைகளிலும் வெள்ளம் சூழ்ந்த கதைகள் உள்ளன. அவாய் (Hawai) வெள்ளக் கதை, மன்னர்களை கடல் காவு கொண்டு விட்டது என்று கூறுகிறது. எகிப்தியக் கடவுளான ஓரஸ், கடலில் மூழ்கியதாக குறிப்புகள் உள்ளன.

வெள்ள மாந்தர்களைக் காத்த கடவுளர் பெயர்களும் அக்கதைகளில் சொல்லப்பட்டுள்ளன. சுமேரியக் கதையிலும் விவிலியத்திலும் எல் என்ற கடவுள் பெயரும், அக்காடியக் கதையில் யா என்ற கடவுளும், ஆரியக் கதையில் மகரக் கடவுளும் சொல்லப்பட்டுள்ளனர். இப்பெயர்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்களே. (ஆசிரியரின் எல் – யா என்ற நூலைக் காண்க).

கடவுள் வெள்ளத்தினின்றும் காப்பாற்ற, மரக்கலம் ஒன்றைக் கட்டிக் கொள்ளுமாறு தம் விருப்ப மாந்தனுக்கு அறிவுரை வழங்கியதாகவும், அக்கட்டுமானம் எவ்வாறு அமைய வேண்டும் என அளவுகளைக் கூட கூறியதாகவும் கதைகளில் சொல்லப்பட்டுள்ளன. மெசபத்தோமிய, சுமேரிய, பாலத்தீன, எகிப்திய, கிரேக்கக் கதைகள் கூறும் வெள்ள மரக்கலங்கள், பிற்காலங்களில் அந்நாடுகளில் அறியப்படவேயில்லை. ஆனால், தமிழர்கள் பல்வேறு மரக்கலங்களை உருவாக்கியவர்கள் என்பதற்கானச் சான்றுகள் தமிழ் இலக்கியங்களில் உள்ளன. உலக மொழிகளில், மரக்கலங்களில் 300 வகைகளும், அதற்கான பெயர்களும் தமிழில் மட்டுமே உள்ளன.

கடலோடும் தமிழ் மீகாமர்கள், கரை அருகில் உள்ளதா என அறிந்து கொள்ள காகம் உள்ளிட்ட சில கடல் சார்ந்த பறவைகளை அனுப்புவர். கரை அருகிலிருந்தால் அப்பறவை திரும்பி வராது. தொலைவிலிருந்தால் திரும்பவும் வந்துவிடும். மெசபத்தோமியக் கதையில் அப்பறவை காகா (Kaka) என்றே சொல்லப்பட்டுள்ளது. வெள்ளக்கதையில் வரும் அனைவரும், பறவைகளை அனுப்பியதாகச் செய்திகள் உள்ளன. கி.மு. 2000 ஆண்டுகளில் கூட, போனீசியர்களைத் தவிர்த்த மற்ற நாட்டினர், நீண்ட கடற் பயணங்களை மேற்கொண்டவர்கள் இல்லை. அதனால் கடற்பயணத்தில் பறவைகளைப் பயன்படுத்தத் தேவையில்லாமற் போனது. மேலை நாட்டுக் கதைகள் கூறும் கடற்பயணக் காலத்துப் பறவைகள், தமிழ் மீகாமர்கள் கையாண்ட நடைமுறைகளே.

மோட்சம் (விண்ணுலகம்) நரகம் என்ற சிந்தனை அக்காலத்து மக்களிடம் இருந்துள்ளது. என்கிடு சொல்வதாக, நரகத்தைப் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. எபிரேய விவிலியம், நரகத்தைப் பற்றிய செய்தி எதனையும் கூறவில்லை. நரகம் என்ற கருத்து, தொடக்க கால எபிரேய சமயத்தில் அறியப்படவில்லை. விவிலியத்தைத் தவிர்த்த மற்ற கதைகளில், பல கடவுளர் கூற முடிவெடுத்து வெள்ளத்தைத் தோற்றுவித்த தாகச் சொல்லப்பட்டுள்ளன. எபிரேய சமயம் ஒரு கடவுள் கொள்கையைக் கொண்டிருப்பதால், அந்த ஒரு கடவுளே முடிவு செய்ததாக விவிலியம் கூறுகிறது.

வெள்ளக் கதையின் மூலமும் முதல் கருவும் சுமேரிய மொழியில் உள்ளன. (அடுத்த தலைப்பில் காண்க). சுமேரியக் கதையை மெருகேற்றிய கதையே கில் காமேஷ் தொன்மக் கதையாகும். சுமேரிய - பாபிலோனியக் கதைகளைத் தழுவி, எபிரேயச் சமயப் பார்வையில் சொல்லப்பட்டதே விவிலியக் கதையாகும். சிலர் விவிலியக் கதையையே பெரும்பாலோர் அறிந்திருப்பதால், அதுவே மூலக்கதை என தவறாகக் கருதுகின்றனர். மேலே சொல்லப்பட்ட எந்த நாட்டுடனும் தொடர்பில்லாத வெள்ளக் கதை, தமிழரோடு தொடர்புடையது. குமரி நாடு அழிந்த பின்பு, அது பற்றிய செய்திகளாக, தமிழர்கள் பதிவு செய்திருக்க வேண்டும். அப்பதிவுகள் கிடைக்காமற் போன நிலையில், குடியேற்றத் தமிழர்களான சுமேரியர் கதையை, தமிழரின் கதையாகக் கொள்வதில் தவறில்லை எனலாம். வெள்ளக் காலத்துக்கு முன்பு நடந்த நிகழ்வுகள் பற்றிய செய்திகள், சுமேரிய இலக்கியங்களிலும் சொல்லப்பட்டுள்ளன. பாபிலோனிய இலக்கியங்கள்

சுமேரிய இலக்கியங்களைத் தழுவியவையே என்பதால், அதனை மூலமாகக் கருத இயலாது. விவிலியம் கூறும், வெள்ளத்துக்கு முந்திய நிகழ்வுகள், சுமேரிய பாபிலோனிய கதைகளின் தழுவலே. (ஆதாம் ஏவாள் முதல் நோவா வரை) வெள்ளத்துக்கு முன்பு சொல்லப்பட்ட நிகழ்வுகளின் கதைகளும் தமிழ் மரபைச் சார்ந்தே உள்ளன. (ஆசிரியரின் தமிழர் வரலாறும் ஆதியாகமும் என்ற நூலைக் காண்க).

பாபிலோனிய சுமேரியக் கதைகளைத் தவிர்த்த பிற கதைகள், வெள்ள மாந்தர்களை இறவாத் தன்மை கொண்டவர்களாகக் காட்டவில்லை. நோவா, இறந்து போனதாகவே விவிலியம் கூறுகிறது. கில் காமேஷ் கதையில், மனிதர்களில் சிலரும் தெய்வநிலைக்கு உயரலாம் என்றும், பிறந்தவர்கள் அனைவரும் இறப்பது உறுதியென்றும் வலியுறுத்தப்பட்டுள்ளன.

கில் காமேஷுக்கு உதவிய ஊர்சா நபி என்பவன், இக்கதையின் இறுதிவரை அறியப்படுகிறான். நபி என்ற சொல், பிற்காலத்தில் பலராலும் அறியப்பட்டது. நபி என்பது, உண்மையில், நாவி என்ற சொல்லின் திரிபு. அரபு மொழியிலும், எபிரேய மொழியிலும், "ஒருவனுக்காகப் பேசுவது" (Speaking on behalf of another man) என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. ஊர்தி என்ற பொருளில் (படகு), ஊர்சா நபி என்று சொல்லப்பட்டுள்ளான்.

### அடிக்குறிப்புகள்

1. Gilgamesh :

   The one who saw all, I will declare to the world,  
   The one who knew all I will tell about,  
   (line missing)  
   He saw the great Mystery, he knew the Hidden,  
   He recovered the knowledge of all the times before the flood,  
   He journeyed beyond the distant,  
   He journeyed beyond exhaustion,  
   And then carved his story on stone.  
   - Gilgamesh Story, Introduction.

2. Tablet 4, Dream No.3 :

   The skies roared with thunder  
   and the earth heaved,  
   Lightening smashed the ground  
   and fires blazed out,  
   Then came darkness and stillness on earth,  
   Death flooded from the skies,  
   when the heat died  
   and the fires went out,  
   The plains had turned to ash.

3. Isthar's prayer :

Father, let me have the Bull of Heaven,
To kill Gilgamesh and his city,
For, if you do not grant me the Bull of Heaven,
I will pull down the Gates of Hell itself,
Crush the door posts and flatten the door,
And I will let the dead leave,
And let the dead roam the earth,
And they shall eat the living,
The dead will overwhelm all the living.

4. Enkidu's Dream :

"The House where the dead dwell in total darkness,
where they drink dirt and eat stone,
where they wear feathers like birds,
where no light ever invades their everlasting darkness,
Where the door and the lock of Hell is coated with thick dust,
When I entered the House of Dust,
On everyside the crowns of Kings were heaped
On every side the voices of the Kings who wore those crowns.
who now only served food to the gods Anu and Enlil,
Candy, meat and water poured from skins.
I saw sitting in this house of Dust a priest and a servant,
I also saw a prist of purification and a priest of ecstasy,
I saw all the prist of the gods.
There sat Etana, and Samukan,
There sat Ereshkigal, the queen of hell.
Beletseri, the scribe of Hall, sitting before her.
Beletseri held a tablet and read it to Ereshkigal,
She slowly raised her head when she noticed me
She pointed at me :
"Who has sent this man ?"

5. God's reactions :

The gods shook like beaten dogs,
Hiding in the far corners of the heaven,
Ishtar screamed and wailed :
"The days of old have turned to stone :
We have decided evil things in our Assembly,
Why did we decide those evil things in our Assembly ?
Why did we decide to destroy our people ?
We have only just now created our beloved humans ;
We now destroy them in the sea".
All the gods wept and wailed along with her,
All the gods sat trembling and wept.

6. Flood receded :

"I, (utna - pishtim) released a dove from the boat,
It flw off, but circled around and returned,

For it could find no perch.
I, then released a swallow from the boat,
It flow off, but circled around and returned,
For it could find no perch.
I, then released a raven from the boat,
It flew off, and the waters had receded ;
It tasts, it scratches the ground,
But it does not circle around and return.
I send out all the living things in every direction,
And sacrificed a sheep on that very spot".

7. Let him Live :

"At one time Utna - pistim was mortal,
At this time let him be a god and immortal,
Live him in the far away,
At the source of all the rivers".

8. Death :

"O ! woe ! what do I do
Where do I go now ?
Death has devoured my body,
Death dwells in my body,
Wherever I go ? Wherever I look ?
There stands death".

9. Magic Plant :

"For whom have I laboured ?
For whom have I journeyed ?
For whom have I suffered ?
I have gained absolutely nothing for myself,
I have only profited the snake, the ground lion".

## 9. சுமேரிய வெள்ளக் கதை

கில் காமேஷ் கதையில் வரும் துணைக் கதையான வெள்ளக் கதையானது. சுமேரிய மூலத்தினின்றும் திருத்தி எழுதப்பட்டதாகும். முதன் முதலில் அறியப்படும் வெள்ளம் பற்றிய செய்திகள், சுமேரிய இலக்கியத்தில் தான் சொல்லப்பட்டுள்ளன. கில் காமேஷ் கதை போல், சுமேரியக் கதை தொடர்ச்சியாகக் கிடைக்கவில்லை என்பது ஒரு பெருங்குறையாக உள்ளது. வெள்ளக் கதைகள் தமிழர் வரலாற்றுடன் தொடர்புடையவை என்றவாறு, வெள்ளம் பற்றித் தமிழர்கள் கொண்டிருந்த எண்ணங்களின் வெளிப் பாடாகவே சுமேரிய வெள்ளக் கதை உள்ளது. அறியப்பட்ட பழங்காலக் கதைகளுள் சுமேரிய படைப்புக் கதையும் (அடுத்த தலைப்பில் காண்க), வெள்ளக் கதையுமே உலகில் முதல் இலக்கியங்களாகக் கருதப்படுகின்றன.

சுமேரியர்கள், மெசபத்தோமியாவின் தொன்மக்குடிகள் அல்லர் என்றும், அவர்கள் வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறியவர்களே என்றும், ஏறக்குறைய பெரும்பாலான ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். அப்பகுதியின் தொன்மக் குடிகள் பற்றிய செய்திகள் எவையும் கிடைக்க வில்லையாயினும், சுமேரியருக்கு 4000 ஆண்டுகளுக்கு முன்பு குடியேறிய செமிட்டிக் மக்கள், அப்பகுதி மக்களாகச் சொல்லப்பட்டுள்ளனர். அவ்விரு இனத்தார் பற்றிய குறிப்புகளில், இருவருக்கும் பெரிய அளவில் வேறு பாடுகள் இருந்ததாகத் தெரியவில்லை. சுமேரிய வருகைக்குப்பின் அவ்விரு இனத்தாரும் கலந்து போனதால் வேறுபாடுகள் குறைந்து போயின.

சுமேரியர்கள் சுமாரான உருவரும் கொண்டவர்கள். நல்ல உடற் கட்டுடன் இருந்தவர்கள். நீண்ட, உயர்ந்த மூக்கைக் கொண்டிருந்தவர்கள். (ஐரோப்பியரின் மூக்கு நீளமானது, ஆப்பிரிக்கர்களின் மூக்கு தட்டையானது.) கரிய விழிகளைக் கொண்டிருந்தவர்கள். மாநிறமாக (கறுமையும் வெண்மையும் கலந்த நிறம்) இருந்தவர்கள். பலர் தாடி வைத்திருந்தனர். சிலர் முகத்தை வழித்து தாடி மீசையின்றி இருந்தனர். உதட்டுக்கு மேலே மீசையின்றி, தாடியை மட்டும் வைத்திருந்தவர்களும் இருந்தனர். தாடி அடர்த்தியான கருமையான, சுருள் முடியுடன் காணப்பட்டது. தலைமயிர்

முற்றிலும் கருமை நிறமுடையது. அதனால் தங்களைக் "கறுப்பு நிறத்தலை முடியினர்" என்று கூட அழைத்துக் கொண்டதாக, சில குறிப்புகள் தெரிவிக் கின்றன. பல வகையான விளக்கங்கள், படங்களை ஆய்வு செய்த பின், பிரான்சிஸ் ஷேபர் (Francis Shaeffer) என்ற ஆய்வாளர், மேற்கண்ட செய்திகளை உறுதி செய்கிறார்.

தொடக்கத்தில் பருத்தி ஆடைகளை அணிந்திருந்த சுமேரியர்கள், கம்பளி ஆடைகளையும் பயன்படுத்தியுள்ளனர். ஆட்டின் மயிரைக் கொண்டு, கம்பளி ஆடைகள் நெய்யப்பட்டன. பெண்கள், இடப்புறத் தோளில் மூடியிருந்த ஆடை, மார்பகத்தையும் மறைந்தது. (தற்காலத் தமிழ்ப் பெண்டிர் அணியும் சேலையின் முந்தானை போன்றது) ஆண்கள், இடையில் மட்டும் உடையளிந்திருந்தனர். இடுப்புக்கு மேல் ஆடையணிவதில்லை. உடைகள் பற்றிய மேற்சொல்லப்பட்ட கருத்து, தொடக்க காலச் சுமேரியர்களைப் பற்றியவை. காலமாற்றத்தில் புதுப்புது ஆடைகளும் வடிவங்களும் (Style) மாறி வந்துள்ளன. பிற்காலத்தில் ஆண்கள் கழுத்துவரை மறைக்கும் ஆடைகளை அணிந்துள்ளனர். குறிப்பாக மேட்டுக்குடியினர் அவ்வாறான ஆடைகளில் காட்சியளித்தனர். அடிமைகள், இடுப்பில் மட்டும் ஆடைகளை அணிந்தனர். பெண் அடிமைகளும் அவ்வாறே. பெண் அடிமைகள், தங்கள் மார்பகங்களை மறைக்க மேலாடை அணியவில்லை. சுமேரியரில் பலர், தலையில், மேலே கூர்மையாகச் செல்லும் (கூம்பு வடிவிலான) தொப்பியை அணிந்திருந்தனர். காலுக்குச் செருப்பு அணிந்தனர். அவை தோலினால் வெட்டி தைக்கப்பட்டிருந்தது. செருப்பின் வார், முழங்கால் வரை வளைத்துச் சுற்றப்பட்டிருந்தது. பெண்களும் அவ்வாறான செருப்புகளையே அணிந்தனர். குதிகாலில் உயரமாக அணியும் (heels) செருப்புகள் அறியப்படவில்லை. மேட்டுக் குடியினர் கால்களை மூடிய செருப்புகளை (shoes) அணிந்திருந்தனர். அவற்றை இறுக்கிக் கட்ட சிறு கயிறுகள் (laces) பயன்படுத்தப்பட்டிருந்தன. கைக்கு வளையல்கள், கழுத்தணிகள், கணுக்கலல் அணிகள் (anklets), விரல்களில் கணையாழிகள், காதுகளில் கம்மல் (கடுக்கன்) கள் போன்றவை, பெண்கள் விரும்பிய அணிகலன்களாக இருந்தன. மூக்குத்தி அணிந்திருந்ததாகத் தகவல்கள் இல்லை (மூக்குத்தி அணிவது, அராபிய முறையாகக் கருதப்படுகிறது.)

**வெள்ளக்கதை :**

அணு, (Anu) என்லில் (Enlil), என்கி (Enki) நின்குறுசாக் (Ninhurusag) ஆகிய கடவுளர் தாம் சுமேரியரை வழி நடத்தியர்களாவர்.

அம்மக்களைச் செம்மைப்படுத்தி, நாகரிக மக்களாக்கியதும் அவர்களே. கறுப்பு மயிர்த் தலையர்களான அவர்களை வேளாண்மைத் தொழில் செய்யக் கற்றுத் கொடுத்தவர்களும் அக்கடவுளரே. வேளாண்மை சிறக்கவும், அறுவடை பெருகவும் உதவி செய்தவர்களும் அவர்களே. விலங்குகளையும், நான்கு கால் உயிரினங்களையும், சம வெளிகளில் காணப்படும் உயிரினங்களையும், சுமேரியருக்காகப் படைத்தளித்தவர்களும் அக் கடவுளரே. (அடுத்து 37 வரிகள் கிடைக்கவில்லை, அல்லது படிக்க இயலாத அளவுக்கு சிதைந்து போயுள்ளன).

பிறகு, ............... அரசுரிமை, விண்ணகத்திலிருந்து உலகிற்குக் கொண்டு வரப்பட்டது. உலகில் அரசுரிமை உயர்த்தப்பட்டு, மன்னர்களை உருவாக்கிய கடவுளர்கள், விண்ணரசை விட, குறைந்த அதிகாரங்களையே மன்னர்களுக்கு அளித்தனர். மன்னர்களுக்கான விதி முறைகள், நடைமுறைகள் வகுக்கப்பட்டு, மன்னர்கள் கடவுளரின் பகராள்கள் போலவே செயல்பட வைக்கப்பட்டனர். தூய்மையான ஐந்து இடங்களைத் தேர்வு செய்து அவ்விடங்களில் நகரங்களை உருவாக்கினர் ............... (வரிகள் இல்லை), நிண்டு என்பவன் அனு, (Nintu) ............. ப்போல, விம்மி அழுதான். தூய்மையானவளான இன்னினா (Innina) தம் மக்களுக்காக அழுதாள். என்கி கடவுளர் கூட்டத்தை நடத்தும் பொறுப்பை ஏற்றுக் கொண்டான். அனு, என்கி, என்லில் நின்குறு சாக் ஆகிய நால்வரும் ..... ....... (வரிகள் இல்லை). வானத்துக் கடவுளர் (உலகத்து மன்னனைத் தேர்வு செய்ய) அனுவையும் என்லியையும் கேட்டுக் கொண்டனர்.

பின்னர், சேய் சூத்திரன் (Sei Sudra) மன்னனாகவும் மதத் தலைவனாகவும் ................ மிகப் பெரிய ......... கட்டி முடித்தான். சேய் சூத்திரன் உண்மையில் பணிவானவனாகவும், நல்ல மதகுருவாகவும் . ........, எப்போதும், எந்நாளும் அரசு, சமயச் சடங்குகளில் கலந்து ..... ........... அனைத்துக் கனவுகளுக்கும் பொருள் கூறி விளக்குபவனாக . ........... வானத்திலும் உலகத்திலும் உள்ளவர்களின் பெயர்களைச் சுட்டி அழைப்பவனாக ................. கடவுளுக்கு ஒரு சுவற்றை .......... .... சேய் சூத்திரன் அதற்கு (சுவருக்கு என அறியப்படுகிறது) அருகில் நின்று கேட்டான். (சுவர் மூலம் கடவுளர் சேய் சூத்திரனிடம் பேசுவதாகக் கருதப்படுகிறது. இந்த நடைமுறைபோலவே, ஊட் நாவின் சுவர்களுடன் கடவுள் யா பேசினான்). சுவற்றின் மூலமாக நான் (கடவுள்) உனக் கொன்றைக் கூறுவேன் ; என்னுடைய சொற்களைச் செவிமடுத்துக் கேள்.

உன்னுடைய காதுகளை என்பக்கம் திருப்பு. எங்களுடைய (கடவுளருடைய) ............... ஒரு பெருவெள்ளம், நாகரிக நகரங்களை அழிக்கப் போகின்றது. மனித குலத்தின் கடைசி வித்துக்களையும் அழித்துவிடப் போகின்றது ............ இந்த முடிவு, கடவுளரின் கூட்டத்தில் எடுக்கப்பட்டது. அதற்கான தீர்மானத்தை அனுவும் என்லிலும் முன் மொழிந்தார்கள். அரசுரிமை, ஆட்சி ஆகியவை முடிவுக்கும் கொண்டு வரப்படும். (பிறகு 40 வரிகள் தொலைந்து போயின அல்லது கிடைக்கவில்லை.) அனைத்துத் திசைகளினின்றும் வீசும் காற்று கடும் புயலாக இருக்கும். கடும் புயலாக இருக்கும். மக்கள் ஒவ்வொருவரையும் தாக்கி அழிக்கும். அதே நேரத்தில், வெள்ளம் நகரங்களைச் சூழ்ந்து அழித்து விடும். ஏழு நாட்கள் தொடரும் அவ்வெள்ளப் பெருக்கில், நகரங்கள் அனைத்தும் அழிக்கப்படும். ஏழு பகலும், ஏழு இரவுகளும் தொடர்ந்து பெருகும் வெள்ளம், உலகையே அழித்து விடும். புயலையும், வெள்ளத்தையும் எதிர் கொள்ளும் வகையில் மரக்கலம் ஒன்றை உருவாக்கிக்கொள். பின்னர் உடு என்ற சூரியக் கடவுள் வானத்திலம் பூமியிலும் ஒளியைப் பாய்ச்சுவான் ............... (வரிகள் காணப்படவில்லை.)

சேய் சூத்திரன் மரக்கலத்தின் சாளரத்தைத் திறந்தான் உடு என்ற சூரியக் கடவுள், மரக்கலத்தின் உள்ளே ஒளியைச் செலுத்தினான். பின்னர் சேய்சூத்திரன் உடு கடவுள் முன் வணங்கி நின்றான்[1].

வெள்ளக் கதை பற்றி, சுமேரியக் களிமண் தட்டுகளில் மேற்கண்ட செய்திகள் தாம் அறியப்பட்டுள்ளன. நூற்றுக்கும் மேற்பட்ட வரிகள் கிடைக்காததால், கதையின் தொடர்புகளைத் துண்டிக்கின்றன. அவ்வாறு அறியப்படாத செய்திகள் தாம், கில் காமேஷ் கதையில் சொல்லப்பட்டி ருக்கலாம் என்று கருதப்படுகிறது. மரக்கலம் பற்றிய அளவுகள், பறவைகள் அனுப்பியது, வெள்ளம் வடிந்த பின் கடவுளுக்குப் பலி கொடுத்தது போன்ற பல செய்திகள், சுமேரியக் கதையிலும் இருந்தது என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். எவ்வாறாயினும் உலகின் முதல் இலக்கியமாக, சுமேரிய வெள்ளக் கதை சிறப்பைப் பெறுகின்றது.

உடு என்பது, சூரியக் கடவுளைக் குறிக்கும் சுமேரியச் சொல்லாகும். உடு என்பது தமிழ்ச் சொல்லே என்பதை விளக்க வேண்டியதில்லை. உடு என்ற கடவுள், அக்காடிய மொழியில் செமஸ் (Shemesh) என்று சொல்லப் படுகிறான். செம்மை சிவப்பு என்ற பொருளில், செமஸ் என்பது தமிழ்த்

திரிபுச் சொல்லே. மேற்கண்ட வெள்ளக் கதை பற்றிய களிமண் தட்டுகள் நைப்பூர் அல்லது நைப்பூர் அல்லது நிப்பூர் என்ற ஊரில் கண்டெடுக்கப் பட்டன.

சுமேரியக் கதையில், வெள்ளத்தினின்று காக்கப்பட்டவன், சேய் சூத்திரன் என்ற மன்னனாவான். இப்பெயருக்கு, சூத்திரனின் மகன் (Son of Sudra) என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. சூத்திரன் - சேய் ஆகிய இரண்டும் தமிழ்ச் சொற்களே சூத்திரன் (சூத்ர என்பது சமற்கிருதச் சொல்) என்ற சொல்லை, ஆரியர்களே அறிமுகம் செய்ததாகச் சொல்லப்படுவது உண்மையல்ல என்பது சுமேரியச் சொல் மூலம் தெளிவாகின்றது. சூத்திரன் என்ற சொல், கிரேக்க மொழியிலும் காணப்படுவதால், கிரேக்கர்கள் மூலம் சமற்கிருதத்துக்கு அச்சொல் வந்திருக்க வேண்டும். தமிழில் சூத்திரன் என்ற சொல், சங்க காலத்திலேயே வழக்கில் இல்லை. அது பழந்தமிழ்ச் சொல்லாக இருந்துள்ளது.

சூழ் + திறன் : சூழ்த்திறன் - சூத்திரன்

சூல் + திறன் : சூற்திறன் - சூத்திரன்

என்றவாறு சொல்லப்பட்டது என்க. சூத்திரன் என்பதை வல்லினம் பயன்படுத்தி சூத்திறன் என்று எழுதுவதே சரியானதாகும்.

சேய் என்று மகனைக் குறிக்கும் சொல் சுமேரிய மொழியில் காணப்படுகிறது.

சே என்று எபிரேய மொழியிலும்,

செஸ் என்று எகிப்திய மொழியிலும்,

சேஸ் என்று அனதோலிய மொழியிலும்,

சேயுஸ் என்று கிரேக்க மொழியிலும்

சேய் என்ற தமிழ்ச்சொல், திரிபுபட்டுள்ளதை அறியலாம்.

சுமேரியர்கள், தங்கள் மன்னர்களின் பட்டியலைப் பதிவு செய் துள்ளனர். அம்மன்னர்கள் நீண்ட நெடிய ஆண்டுகள் ஆட்சி செய்ததாக அக்குறிப்புகள் தெரிவிக்கின்றன. வெள்ளக் காலத்துக்கு (கி.மு. 18000 - 12000) முன்பு, 4,32,000 ஆண்டுகளில் சுமேரிய மன்னர்களின் ஆட்சி தொடங்கியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது பழமையை உணர்த்தும் அளவாகவே எடுத்துக் கொள்ளப்படவேண்டும். (இராமன், 1, 74,000 ஆண்டுகளுக்கு முன்பு ஆட்சி செய்ததாக ஆரியக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.) வெள்ளக் காலத்துக்குப்பிறகு, கில் காமேஷ், தமுழ் ஆகிய

இரண்டு மன்னர்கள் ஆண்டதாகப் பதிவுகள் தெரிவிக்கின்றன. தமிழ் என்ற பெயரிலேயே ஒரு சுமேரிய மன்னன் ஆண்டு வந்தான் என்று கருதப்படுகிறது. தமிழ், தமுழ் (Tamuz) என்று ஆங்கிலேயர்களால் படிக்கப்பட்டது. கில் காமேஷ், மூன்றில் இரண்டு பங்கு கடவுள் தன்மையைப் பெற்றிருந்தது போல், தமுழ் மன்னனும் தெய்வத்தன்மையைப் பெற்றி ருந்தான் என்று சொல்லப்பட்டது. பிற்காலத்தில், தமுழைத் தெய்வமாகவே மாற்றி, அவனை இளமைக் கடவுள் என்றும், வேளாண்மைக் கடவுள் என்றும் கூறி, அவனுக்காகப் பல கதைகள் பின்னப்பட்டன. சுமேரிய, அக்காடிய, எபிரேய நாள் காட்டியில், நான்காவது மாதத்தின் பெயராக, தமுழ் சொல்லப்பட்டுள்ளது[2].

சுமேரியர்களின் மன்னர் பட்டியல், நம்பவியலாத செய்திகளைத் தந்துள்ளதாகவே கருதப்பட்டது. வெள்ளக் கதைகளில் வரும் நிகழ்வுகளும் கற்பனைச் செய்திகளாகவே கருதப்பட்டன. கி.பி.1930 ஆம் ஆண்டில், சர் லியோனார்ட் ஊலி (Sir Leonard Woolley) ஊர் நகரை அகழ்வாய்வு செய்த போது சில உண்மைகளை வெளிப்படுத்தினார். ஊர் நகரம், எந்த மன்னனால் உருவாக்கப்பட்டது என்ற செய்தி அதுவரை அறியப்படவில்லை. முதலாம் தலைமுறை மன்னன் காலத்தில் (எடண்ணா - Etanna) என்ற மன்னனின் மகன் (பெயர் சொல்லப்படவில்லை) ஊர் நகரத்தை உருவாக்கியதாக, அகழ்வாய்வுக் குறிப்புகளில் அறியப்பட்டன. கில் காமேஷும் வரலாற்று மாந்தனாகவே சொல்லப்பட்டுள்ளான். அவன் கட்டியதாக சில கட்டிடங்களில் உள்ள குறிப்புகள் தெரிவிக்கின்றன. தொடக்க கால சுமேரியப் பதிவுகள், கி.மு. 3100 ஆண்டுகளில் எழுதப்பட்டன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். (சிலர் மேலும் சில நூற்றாண்டுகள் முன் கூட்டிச் சொல்லப்படுவதும் உண்டு.) தொடக்ககாலக் குறிப்புகள், படித்து விளக்கம் தர இயலாதவைகளாக உள்ளன. உண்மையில் அவற்றைப் படிக்க இயலவில்லை என்பதை ஆய்வாளர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். 50 முதல் 70 விழுக்காடுகள் வரையிலான குறிப்புகளைப் படிக்க இயலவில்லை. படிக்க முடிந்த சில பகுதிகளும், சொற்களாக அமைந்திராமல், கருத்தை (Idea) வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

### அடிக்குறிப்புகள்

2. Tammuz : Legends told about Gilgamesh and Tammuz, the two kings were so impressive that

Tammuz entered the pantheon of Babylon and later became known as Adonis to the Greeks.

ஆதன் என்ற தமிழ்ச் சொல், அடானியா (Adania) என்று எபிரேய மொழியில் திரிந்துள்ளது. அடானியா, அடோனிஸ் (Adonis) என்று கிரேக்க மொழியிலும், அண்டானியுஸ் (Antanius) என்று இலத்தீன் மொழியிலும், ஆண்டனி (Antony) என்று ஆங்கிலத்திலும் திரிபுபட்டுள்ளன. அந்தோணி என்று தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

- ஆசிரியர்.

# 10. சுமேரியரின் சட்டங்கள்

சுமேரியரின் அடிப்படையான தொழில் வேளாண்மையே. வேளாண்மை சார்ந்த துணைத் தொழில்கள் மட்டுமே தொடக்கத்தில் அறியப்பட்டிருந்தன. இரட்டை ஆறுகள் ஆண்டு தோறும் கொண்டு வந்து சேர்க்கும் வளமான வண்டல் மண், வேளாண்மைக்கும் பெரியதும் உதவியது. ஆறுகளில் பெருக்கடுத்து வரும் வெள்ள நீரை மடைமாற்றி, கால்வாய்கள் மூலம் ஏரிகளில் நிரப்பிக் கொண்டனர். கோடையிலும் வேளாண்மைக்கான நீர் இருந்தது. ஒரு கால்வாயின் குறுக்கே, மற்றொரு கால்வாயைக் கொண்டு செல்லும் நுட்பத்தையும் அறிந்திருந்தனர். சுமேரியர்கள், கி.மு.6000 ஆண்டுகளிலேயே வேளாண் தொழிலை மேற்கொண்டிருந்தனர் எனக் கருதலாம். வேளாண்மைத் தொழிலே, சுமேரிய நாகரிகத்துக்கான அடிப்படைக் காரணமாகச் சொல்லப்படுகின்றது. கோதுமை, பார்லி, பேரீச்சை, காய்கறிகள் பயிரிடப்பட்டன. காளைகள் ஏர்களை இழுக்கப் பயன்படுத்தப்பட்டன.

செம்பு, பித்தளை, தகரம் போன்ற மாழங்களைப் பயன்படுத்தி வந்தனர். மிக அரிதாக இரும்பும் பயன்பாட்டில் இருந்தது. மாழங்கள் விலையுயர்ந்த பொருட்களாகவே கருதப்பட்டன. நெசவுத் தொழில் பரவலாக அறியப் பட்டிருந்தது. அரசு நிர்வாகம் சட்டத்தின் அடிப்படையில் அமைந்திருந்தது. அவற்றில் சில வருமாறு.

1. தந்தை மகனுக்கிடையே உறவுகள் முறிந்து போனால், மகன் தந்தையைத்தன் தந்தையில்லையென்று கூறினால், தந்தை தன் மகன் உறவை முறித்துக் கொள்வதோடு, அவனை அடிமையாகப் பணத்துக்கு விற்றுவிடலாம். அதைப் போலவே, தாயை மறுத்தவனை, தாய், வீட்டை விட்டுத் துரத்தி விடலாம். அவனுடைய குடியுரிமையையும் நீக்கலாம். ஆனால் தனிப்பட்ட அம்மகனின் உரிமைகள் பறிக்கப் படமாட்டாது. ஒரு மனைவி தன் கணவனுக்குத் துரோகம் செய்து, அவனைத் தன் கணவன் இல்லையென்று கூறினால், அவளை, ஆற்றில் எறிந்து விடலாம். கணவன் மனைவியை நீக்கினால்,

அவளுக்குக் குறிப்பிட்ட அளவு, வெள்ளியைத் தர வேண்டும். ஓர் அடிமையை ஒரு முதலாளியிடமிருந்து வாடகையாகப் பெற்று, அந்த அடிமை இறந்து போனால் ஒன்றும் தரவேண்டியதில்லை. மாறாக அவன் ஓடிப்போனால் அல்லது நோய்வாய்ப்பட்டால், உரிமையாள னுக்கு ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட அளவு தவசம் கொடுக்க வேண்டும்.

2. அரசாங்கத்தால் பணிக்கப்பட்ட ஒரு கங்காணி அல்லது மீனவன், தனக்குப் பதிலாக வேறொருவனை அனுப்பி வைத்தால், அவர்கள் இருவரும் மரண தண்டனையைப் பெறுவார்கள். அவர்களுடைய சொத்துகள் அனைத்தும் பதில் ஆளாகச் சென்றவனுக்குச் சேர்ந்து விடும்.

3. ஒருவன் தன் நிலத்தை வேறொருவனுக்குக் குத்தகைக்கு விட்டால், அதற்கான தொகையைப் பெற்றுக் கொள்வான். வெள்ளம் மற்றும் கால்நடைகளால், பயிர் அழிந்து போனால், குத்தகைப் பணத்தைத் தர வேண்டியதில்லை. குத்தகைக்கு முன்பணம் கொடுத்திருந்தால் அழிவுகள் நேர்ந்த போது, முன் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.

4. ஒரு வணிகன், சில்லறை வணிகம் செய்யும் ஒருவனுக்கு தவசம், துணி, கம்பளி, எண்ணெய் போன்ற பொருட்களைக் கொடுத்து, தனக்காக விற்கச் சொல்லலாம். விற்ற கணக்கை, சரியாக விற்றவன் வணிகனிடம் கொடுக்க வேண்டும். கணக்கு தீர்க்கப்பட்டவுடன், விற்றவனுக்குரிய தொகையைக் கொடுத்து பற்றுச் சீட்டைப் பெற்றுக் கொள்ள வேண்டும் அல்லது கொடுக்க வேண்டும்.

5. ஒருவனுக்கு உரிமையான ஆண் அல்லது பெண் அடிமையை, மற்றொருவன் உரிமை கொண்டாடி விற்றுவிடும் போது, உரிமை யாளன் அத்தொகையை விற்றவனிடம் பெற்றுக் கொள்ள உரிமை யுள்ளது. அதற்கான இழப்பீட்டுத் தொகையையும் விற்றவன் உரிமை யாளனிடம் கொடுக்க வேண்டும்.

6. வேலியடைக்கப்பட்ட ஒரு பகுதியில் குத்தகை அடிப்படையில் பெற்றுக் கொண்ட ஒருவன், அப்பகுதியில் ஏற்படுத்தும் முறைகேடுகளுக்கு உரிமையாளனுக்கு நட்டத்தொகை வழங்க வேண்டும். காட்டு விலங்குகளை அப்பகுதியில் கொல்ல நேரிட்டால், இறந்த விலங்கை உரிமையாளனிடம் ஒப்படைத்து விட வேண்டும்.

7. ஒரு பேரிச்சம் பழத் தோட்டத்தை அறுவடை செய்து கொள்ள, பேரீச்சம்பழ வணிகனுக்கு உரிமை வழங்கி பணம் பெற்றுக் கொள்ளலாம். குறிப்பிட்ட காலத்துக்குள் அறுவன் அறுவடை செய்து கொள்ள வேண்டும். பழங்கள் கனிந்து உதிர்ந்த நிலையிலும், குறிப்பிட்ட கால அளவில் அறுவடை செய்து கொள்ளாமலும் இருந்தால், பழங்கள் தோட்ட உரிமையாளனைச் சேரும். கொடுத்த தொகையை திருப்பிக் கேட்க அறுவடைக் காரனுக்கு உரிமையில்லை.

8. ஓர் இடையன், தன் ஆடுகளை மேய்க்க புல்வெளி கிடைக்காத காலத்தில், நகரச் சுவர்களுக்குட்பட்ட நிலம் ஒன்றில், தனது ஆடுகளை மேய்த்துக் கொள்ளலாம். இடையன், அந்நிலத்தின் உரிமையாளனுக்கு, நாளொன்றுக்கு, குறிப்பிட்ட தொகையை அளிக்க வேண்டும். அந் நிலத்தை பாதுகாப்பாகவும் வைத்துக் கொள்ள வேண்டும்.

9. முறைகேடாக ஒரு பெண் அடிமையை, அப்பெண்ணின் உரிமை யாளனுக்குத் தெரியாமல் விற்பது குற்றமாகும். வாடகைத் தொகைக்குப் பெற்ற பெண் அடிமையை, விற்பதற்கு வாடகைக்கு வாங்கியவனுக்கு உரிமையில்லை. அவ்வாறு அவளை மற்றொருவனிடம் விற்று விட்டால், வாங்கிய பணத்தை அப்பெண் அடிமையின் உரிமையாள னிடம் கொடுத்து விட வேண்டும். வாடகைக் காலத்தில் அப்பெண் குழந்தையைப் பெற்றால், ஒவ்வொரு குழந்தைக்கும் அரை செக்கல் பணத்தை உரிமையாளனுக்கு வழங்க வேண்டும்.

10. திருமண ஒப்பந்தம் செய்து கொள்ளும் ஒரு தந்தை, தன் மகளுக்கு அளிக்கவேண்டிய திருமணச் சீரை, பேசியபடி அல்லது எழுதியபடி, கொடுத்துவிட வேண்டும். திருமண காலத்தில், வறுமை நிலையை அடைந்து விட்டால், அப்போது இருக்கும் சொத்தின் அடிப்படையில் சீர் வழங்கப்படவேண்டும். பழைய, பேசிய தொகையைக் கேட்க, மணமகனுக்கு உரிமையில்லை.

11. தன் மகளுக்குத் திருமணச் சீர் அளிக்கப்பட்டு, அப்பெண் குழந்தையின்றி இறந்துவிட்டால், அத்திருமணச் சீரை, பெண்ணின் தந்தையிடம் திரும்பவும் ஒப்படைத்து விட வேண்டும். அந்த வீட்டில் வேறு பெண் இருந்தால் அவளை மணந்து கொண்டு, சீரைச் சரி செய்து கொள்ளலாம்.

12. திருமணச் சீர் கொடுத்து மணம் செய்து கொண்டபின், குழந்தை இல்லாத நிலையில், கணவன் இறந்து விட்டால், கொடுக்கப்பட்ட திருமணச் சீர் முழுவதையும் அப்பெண்ணிடம், அவன் கணவனின் வீட்டார் ஒப்படைத்து விட வேண்டும். கணவன் உயிரோடு இருக்கும் போது, மனைவிக்கு அளித்த சொத்தை, அவள் முழுவதும் பெற்றுக் கொள்ள உரிமையுடையவள். திருமணச் சீர் கொடுக்காமல் திருமணம் செய்து கொண்ட ஒரு பெண், தன் கணவன் அளித்த சொத்தில், நடுவர்களின் அறிவுரையின் படி, ஒரு பகுதியை மட்டுமே பெற முடியும்.

மெசபத் தோமியச் சட்டங்கள் பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளது.

# 11. சுமேரியப் படைப்புக் கதை

சுமேரியத் தொன்மக் கதைகள் தாம், உலகில் அறியப்படும் முதல் இலக்கியங்களாகும். சிந்து வெளி மக்கள், சுமேரியருக்கு முன்பு, நகரிய நாகரிகத்தை மேற்கொண்டிருந்தாலும், இதுவரை, சிந்து வெளியில் இலக்கிய அளவில் எந்தச் சான்றுகளும் கிடைக்கவில்லை. சுமேரியர்கள், தம் மக்களின் சமூக வாழ்க்கை, சமயம், வழிபாட்டு முறைகள், சட்டங்கள், வேளாண்மை, நீர்ப்பாசன முறைகள், தொன்மக்கதைகள், வழக்குகள், வழக்காறுகள் என வரலாற்றுப் படைப்புகளை முதன் முதல் அளித்த வரலாற்று உணர்வாளர் களாவர். அவர்கள் கொடுத்துள்ள மன்னர்களின் பட்டியலில், நம்பகத் தன்மை குறைந்து காணப்பட்டாலும், அவ்வாறான முதல் பட்டியலைத் தந்தவர்களும் அவர்களே. சுமேரியருடைய பதிவுகள் முழுமையாக அறியப்படாமல் போனாலும், அவற்றின் விளக்கங்களை, மெசபத்தோமியப் பதிவுகளில் காண முடிகின்றது. மெசபத்தோமியப் பதிவுகள், சுமேரியருக்குப் பின் அறியப்பட்டனவை என்றாலும், அதனையும் சுமேரிய இலக்கியங் களாகக் கருதுவதில் தவறில்லை.

பழைய பாபிலோனியத் தொன்மக்கதையான "அத்ராசிஸ்" (Atrahasis), மாந்தன் தோற்றுவிக்கப்பட்ட செய்தியை விளக்குகிறது. உலகப் படைப்பில் கடவுளரின் பணிகளை "என்கி இன்மா" (Enki inmah) கூறுகிறது. வெள்ளக் கதைகளை சுமேரியர்களின் "ஈரிடு ஆகமம்" (Eridu Genesis) விளக்குகிறது. மேற்கண்ட தொன்மக்கதைகளில், கடவுளர், தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டது. ஒரு வரையொருவர் தாக்க கூட்டணிகளை அமைத்துக் கொண்டது, என்கி என்ற கடவுள், தலைமைப் பதவியைப் பிடித்துக் கொண்டது, எதிர்ப்பாளர்களைக் கொன்று குவித்தது, பகைவர் களின் இரத்தத்தைக் களிமண்ணில் கலந்து, மனித இனத்தைப் படைத்தது, கடவுளர்கள் தங்கள் குண நலன்களை மனிதர்களுக்கும் கொடுத்து, தொடக்கத்தில் மனிதர்களை வழி நடத்தியது, பின்னர் தமது பகராள்களாக, மன்னர்களை உருவாக்கி விட்டு, மனிதர்களோடு கொண்டிருந்த

தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டது, என்றவாறு, அவர்களுடைய தொன்மக்கதைகள் விரிகின்றன.

என்லில், நம்தார் (Namtar) என்ற இறப்புக்கான கடவுளைப் படைத்தான். அவன் மூலமாக, பிளேக் (Plague) என்ற நோயை அனுப்பி மனித குலத்தை அழிக்க முற்பட்டான். என்கி என்ற கடவுளின் அறிவுரைப்படி, அத்ராசிஸ், மனிதர்களை, நம்தாருக்குப் பலிகள் கொடுத்து அவனை அமைதிப்படுத்துமாறு கூறினான். அதனைக் கண்டு மகிழ்ந்த நம்தார், பிளேக் நோயைத் திரும்பப் பெற்றுக் கொண்டதோடு, மக்களை இனி அழிக்கப் போவதில்லை என்ற உறுதியையும் அளித்தான். அடுத்து என்லில், அதாத் (Adad) என்ற மழைக் கடவுளை உருவாக்கினான். அவனிடம் மழைப் பொழிவை நிறுத்திவிடுமாறு கூறி, உலகில் வறட்சியை உருவாக்கினான். நம்தாருக்குச் செய்ததைப் போலவே, அதாத்துக்கும் மக்கள் பலி கொடுக்க, மீண்டும் மழையைப் பெய்வித்தான். என்லில், தொடர்ந்து மனித குலத்துக்கு அழிவையும், நாட்டில் வறட்சியையும் தோற்றுவிக்க முயன்றான். ஆனால் அது வெற்றி பெறவில்லை. அனுவும் அதாத்தும் வான் பகுதிகளைக் கவனித்துக் கொண்டனர். என்கி, கடற்பகுதிகளைக் கண்காணித்துக் கொண்டான். அதனால் உலகிற்கு வரவேண்டிய எவையும் வந்து சேர வில்லை. உலகைப் பஞ்சமும் வறட்சியும் பற்றிக் கொண்டன. மக்கள் தாம் பெற்ற பிள்ளைகளையே உணவாகக் கொண்டனர். அவ்வேளையில், என்கி, தன் ஆட்சிக்குட்பட்ட கடலிலிருந்து, உலகில் செழுமையை உருவாக்கும் மீன்களை வெளியே விட்டான். அதனால், வறட்சி நீங்கி, உலகில் இயல்பு வாழ்க்கை திரும்பியது.

என்லில் மட்டும், மனித இனத்தை அழிப்பது என்ற எண்ணத்திலேயே இருந்தான். பிளேக், வறட்சி மழைத்தடுப்பு போன்ற பழைய திட்டங்கள் வெற்றி பெறாமல் போனதால், என்லில், ஒட்டு மொத்தமான மனித குல அழிவை, வெள்ளத்தால் நிறைவேற்றுவது என உறுதி பூண்டான். என்கி, அத்ராசிசை எச்சரித்து, வெள்ளம் தோற்றுவிக்கப்பட இருப்பதைத் தெரிவித்து, பெரிய மரக்கலம் ஒன்றைக் கட்டிக் கொள்ளுமாறு கூறினான். தன்னையும் தன் மனைவி மக்களையும், ஏராளமான விலங்குகளையும், மரக்கலத்தில் ஏற்றிக் காத்துக் கொள்ள முயன்றான். மனித குலத்தை முற்றிலுமாக அழித்து விடக் கூடாது என அறிவுறுத்தினான். மக்கள் தொகையைக் குறைப்பதற்கான வழிகளையும் எடுத்துரைத்தான். நின்தூர் (Nintur) என்ற பிறப்புக் கடவுளோடு பேசி, மலட்டுப் பெண்களைப் படைக்க அறிவுரை

கூறினான். பிறக்கும் போதே சில குழந்தைகளை, பசித்து என்ற பூதம் விழுங்கிவட அனுமதி தரப்பட்டது. ஏராளமான பெண்களை, திருமணம் செய்து கொள்ளாமல், கோயில் பூசாரினிகளாக்கும் திட்டமும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

உலகைப் படைத்து, அதில் உயிரினங்களைப் படைத்து, அவற்றைக் காப்பதும் உணவளிப்பதும் கடவுளருக்குப் பெரும் பணிகளாக இருந்தன. இதற்கு மாற்று வழி என்னவென்பதைச் சிந்தித்த கடவுளர்கள், மனிதனைப் படைத்து, உலகத்தை அவனிடம் ஒப்படைத்து விடலாம் என்றும், மேற்பார்வை செய்வதை மட்டுமே தாம் ஏற்றுக் கொள்ளலாம் என்றும் முடிவு செய்தனர். அதன்படியே மனிதன் படைக்கப்பட்டான் என்று சுமேரியக் கதை கூறுகிறது. மனிதனைப் படைப்பதிலும் கூட, கடவுளரிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. சுமேரியத் தொன்மக்கதைகள் மூலம், மனிதனும் உலகும் படைக்கப்படுமுன்னரே, 330 கடவுளர் வாழ்ந்து வந்ததாக சுமேரியத் தொன்மம் கூறுகிறது. இந்த எண்ணிக்கை, 3300 என்று பாபிலோனியத் தொன்மங்களும், 33,00,00,000 என்று ஆரியத் தொன்மங்களும் கூறுகின்றன. தமிழில் அறியப்படும் அடிப்படை 33 ஒலிகளே, மேற்கண்டவாறு உருவகப்படுத்தப்பட்டுள்ளன.

அப்சு (அப்பா) என்ற கடவுள், நன்னீர்க் கடவுளாகவும், தீயமத் (தீயமதி என்பவள் கடல் நீர் (உப்புநீர்) பெண் கடவுளாகவும் சொல்லப்பட்டுள்ளனர். இரண்டு நீரும் ஒரு காலத்தில் கலந்து போயின. (இருவரும் கணவன் மனைவியானார்கள்). அவ்விருவருக்கும் பிறந்தவர்களே கடவுளர் ஆனார்கள். அக்குடும்பம், பல தலை முறைகளாகப் பல்கிப் பெருகியது. கடவுளருக்கு இறப்பு இல்லையாதலால், அப்சு - தீயமத் இருவரையும் ஓய்வெடுத்துக் கொள்ளுமாறு, பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், கொள்ளுப் பேரப்பிள்ளைகள் என அனைவரும் கேட்டுக் கொண்டனர். எத்தனை வயதானாலும் என்பதவியை விட்டுத் தரமாட்டேன் என்றும் யாருக்கும் அதிகாரத்தைப் பகிர்ந்தளிக்க மாட்டேன் என்று அப்சு கூறினான். அப்சு தொடங்கி வைத்த பதவிப் பற்று, இன்று வரையிலும் கூடத் தொடர்வதைக் காண்கிறோம். அப்சு தீயமத் ஆகியோரை எதிர்த்து, பிள்ளைகள் போர்க் கொடி தூக்கினர். தமக்கெதிராகக் கலகம் செய்த தன் பிள்ளைகளையே, தீயமத் கொன்று குவித்தாள். கெட்டிக்காரப் பிள்ளையான என்கி, மும்மூ (Mummu) என்ற நன்னீர் அதிகாரத்தை தன் தந்தையான அப்சுவிடமிருந்து

பறித்துக் கொண்டு, அவனையும் கொன்று விட்டான். அவனைக் கொன்று புதைத்த இடத்தில், அப்சுக்காக ஒரு கோயிலையும் கட்டி வைத்தான்.

அப்சு என்ற சொல், அப்பச்சி, அப்பச்சன் போன்ற பழந்தமிழ்ச் சொற்களின் சுருக்கமாகும். அவன் மனைவி இயல்பாகவே கெட்டவள் என்பதால், தீயமதி என்றே சொல்லப்பட்டாள். என்கி என்ற சொல், யாங்கை (யெங்கி என்றும் சொல்லப்படும்) என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். கை என்பது நீண்ட, நெடிய என்ற பொருளைத் தரும். யா என்பது கடலைக் குறிக்கும், யாங்கை நீண்ட கடல்.

யாங்கை – யெங்கி எனத் திரிந்தது என்க.

யாங்கை என்ற சொல்லே சுமேரிய மொழியில் சொல்லப்பட்டிருக்க வேண்டும். பாபிலோனியக் கதைகள், யாங்கை என்ற சொல்லில், யா என்பதை மட்டும் சுட்டுகின்றன. யா என்பதற்குக் கடற் கடவுள், நீர்க்கடவுள் என்று பொருள். யெங்கி, பாபிலோனியக் கதையில் யா என்றே சொல்லப்பட்டிருக்கிறாள்.

யெங்கி அல்லது யா என்பவனுக்கு, மருது – க (Mardu - k) என்பவன் மகனாகப் பிறந்தான். தன் பாட்டன்களில் ஒருவனான அனு என்ற வானக்கடவுளிடம் பாசமாக இருந்தான். அனு, தன் கட்டுப்பாட்டில் இருந்த நான்கு திசைக் காற்றுகளையும் மருதுவிடம் விளையாட அனுப்பி வைத்தான். நான்கு திசைக் காற்றுகளும் கடல் அலைகளை எழுப்பின. தீயமத்தும் அவளைச் சார்ந்தவர்களும் அதனால் எரிச்சல் அடைந்தனர். அதனால் தீயமத், தன் ஆதரவு கடவுளரைத் திரட்டினாள். புதிதாக, ஈட்டித் தலையுடன் பூதங்களைப் படைத்தாள். அப்பூதங்கள், யெங்கி அனு போன்ற கடவுளரையும் அவர்தம் ஆதரவாளரையும் எதிர்க்கப் புறப்பட்டன. கிங்கு என்பவன் அப்படைக்குத் தலைமையேற்றான்.

அச்செய்தியை அறிந்த யா, அனு போன்றோர், தம் ஆதரவாளர் களைத் திரட்டி, தீயமத்தின் படைகளை எதிர்க்கத் துணிந்தனர். ஆனாலும் படைக்குத் தலைமையேற்க எவரும் முன் வரவில்லை. இளம் மருது, தலைமையேற்க முன் வந்தான். படையை நடத்தும் அனைத்து அதிகாரங் களையும் தனக்குத் தர வேண்டும் என்றும், போர் நடைபெறும் போது, எவரும் குறுக்கிடக் கூடாது என்றும் நிபந்தனை விதித்தான். மருதுவின் கோரிக்கை ஏற்கப்பட்டது. தீயமத்தை எதிர்க்கும் கடவுளர் அனைவரும் ஒரு கூட்டணி அமைத்துக் கொண்டனர்.

மருதுவின் தலைமையில் படைகள் திரண்டு வருவதைக் கண்ட தீயமத்தின் படைகளும், அதன் தலைவன் கிங்குவும் அச்சமடைந்தனர். படைக்கு முன் செல்ல அனைவரும் தயங்கினர். தீயமத், தானே முன்வந்து படைகளை நடத்திச் செல்ல முடிவு செய்தாள். இறுதியாக, தீயமத்துக்கும் அவள் படைக்கும் மருது எச்சரிக்கை விடுத்தான். தன் பெயரன் எச்சரிக்கை விடுத்ததைக் கண்டு, தீயமத் சினம் கொண்டாள். தன் படைகளை மருதுவின் படைகள் மீது ஏவினாள். உடனே மருது, தனது கட்டுப்பாட்டிலிருந்த நான்கு திசைக் காற்றுகளையும், தீயமத் படைகள் மீது திருப்பினான். காற்றின் வேகத்தால் தீயமத்தின் படைகள் நிலை குலைந்தன. மருது தனது வலிமை மிக்க அம்பால், தீயமத்தின் நெஞ்சைப் பிளந்தான். கிங்குவும், அவன் படைகளும் பிடிபட்டு, காவலில் கைதிகளாக வைக்கப்பட்டனர்.

மருதுவின் மகத்தான வெற்றிக்குப்பின், தீயமத்தின் உடல் உறுப்பு களில் சரிபாதியைக் கொண்டு விண்ணகமும், விண்மீன் கூட்டங்களும் படைக்கப்பட்டன. அதன் வழியில் நாள்காட்டி தோற்றுவிக்கப்பட்டது. சூரியனும் நிலவும் படைக்கப்பட்டன. வான்வெளியின் கட்டுப்பாடு அனுவிற்கு வந்தது. தீயமத்தின் மீதம் இருந்த உடல் உறுப்புகளைக் கொண்டு, உலகம் படைக்கப்பட்டது. உலகில் மலைகளும் ஆறுகளும் காடுகளும் நிலங்களும் படைக்கப்பட்டன. இவையனைத்தும் யா கடவுளின் அதிகாரத்தின் கீழ் வந்தன. சிறைப்பட்ட தீயமத்தின் படையினரை, வெற்றி பெற்ற கடவுளர் முன் நிறுத்திக் காட்டினான். கிங்கும் அவனது படையினரும் அழிக்கப் பட்டனர். மருது, அழிக்கப்பட்ட படையினரின் உருவப் பொம்மைகளை, தன் தந்தையின் வீட்டு முன் நிறுவினான். மருதுவின் வெற்றி, கடவுளரை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது. குளித்து, புத்தாடைகளை அணிந்து, மன்னனுக்குரிய அரியாசனத்தில் மருது அமர்ந்து கொண்டான். உலகின் பாதுகாப்பு அவன் பொறுப்பில் வந்தது.

மருது, தனக்கென ஒரு மாளிகை அமைத்துக் கொள்ள விரும்பினான். பாபிலோனில் சிகுரத் (Ziggurat) என்ற அரண்மனை (கோயில்) யை அமைத்துக் கொண்டான். கடவுளர் கூட்டம் நடைபெறும் போது, அவர்கள் வந்தால் தங்குவதற்கு, ஆடம்பரமான வசதியான அறைகளை அமைத்தான். அவனுடைய உறவினர்கள், தாங்களும் பாபிலோனுக்கு வந்து, தங்கியிருந்து, உலக நிர்வாகத்தைக் கவனிக்க, மருதுவுக்கு உதவி செய்வதாகவும் கூறினர். அடுத்து போரின் போது, தீயமத்தின் அணியில் இருந்த சில கடவுளரை மன்னித்து தன் அணியில் சேர்த்துக் கொண்டான். அவர்களுக்குப் பல

அறிவுரைகளைக் கூறி, தன் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடந்து கொள்ள வேண்டும் என்று ஆணையிட்டான். பாபிலோன் நகரை உருவாக்கும் பணிகளை அவர்களிடம் ஒப்படைத்தான். சிலர் சாலைகளை அமைக்கவும், சிலர் வீடுகளைக் கட்டவும், சிலர் நகரத்தை அழகுபடுத்தவும் பணிக்கப்பட்டனர்.

கடவுளர் செய்த பணிகள் முழுமையாக நடைபெறவில்லை. எனவே கடவுளருக்கு உதவி செய்ய, மனிதர்களைப் படைக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. எனவே யா கடவுள் மனிதர்களைப் படைக்கும் பணியை மேற்கொண்டான். தீயமத் படையின் தலைவனான கிங்குவின் குருதியில், களி மண்ணைப் பிசைந்து, முதல் மனிதனை, யா படைத்தான். அவனை, ஆதப்பா (Adappa) என்று அழைத்தான். தொடர்ந்து மனித குலம் பல்கிப் பெருகியது. வேலை செய்ய ஆட்கள் கிடைத்தனர். மருது, கடவுளரை இரண்டு அணிகளாகப் பிரித்தான். ஓர் அணி, விண்ணகத்தில் குடியேற்றப்பட்டது (Celestials). மற்றொரு அணி, உலகத் தேவைகளைக் கண்காணிக்க அமைக்கப்பட்டது. (terrestrials). கடவுளர் அனைவரும் ஒன்று கூடி, தங்களின் மன்னனாகவும், உலகத்தின் வேந்தனாகவும், மருதுவைத் தேர்வு செய்தனர். விண்ணுலகம் மண்ணுலகம் இரண்டுக்கும் மருது கடவுளானான். பின்னர், பாபிலோன் நகரத்தை ஆளும் பொறுப்பு மனிதர்களுக்கு வழங்கப்பட்டது. தந்தை மகன் என்ற முறையில் மரபு ஆட்சி தோற்றுவிக்கப்பட்டது. ஒவ்வொரு புத்தாண்டு நாளன்றும் மருது, மன்னர்களுக்கு அதிகாரத்தைப் புதுப்பித்துக் தருவான். மருதுவின் அறிவுரைப்படியே ஆட்சி நடைபெற்றது.

மேற்கண்ட படைப்புப் பணிகள், கடவுளருக்கு ஒதுக்கப்பட்ட துறைகள் ஆகியவை, ஈனும் - மா - எல் - இசு (En-um-ma-el-ish) என்ற பதிவில் குறிப்பிடப்பட்டுள்ளன கி.மு.700 ஆண்டுகளில், அசீரியர்கள், எர்ரா (Erra) என்ற இலக்கியத்தைப் படைத்துக் கொண்டனர். இது, ஏறக்குறைய முன் சொல்லப்பட்டதைப் போன்றே அமைந்திருந்தாலும், சிலவற்றில் மாறுதல் களும் இருந்தன. கி.மு.2000 ஆண்டுகளில், சுமேரிய இலக்கியத்தைத் தழுவி, பாபிலோனிலும் சில இலக்கியங்கள் எழுதப்பட்டன.

## 12. சுமேரிய இலக்கியம் (ஈனும் – மா – எல் – இசு)

மேலேயுள்ள வானங்கள் பெயரிடப்படு முன்பு,
கீழேயுள்ள நிலமும் பெயர் என்று அறியப்படு முன்பு,
அப்சு என்று அறியப்பட்ட முதல் கடவுள்,
அவனது மனைவி தீயமத் இருவரும் அனைவரையும் ஈன்றெடுத்தனர்,
வானத்து நீரையும், நன்னீரையும், கடல் நீரையும்
ஒன்றாக கலந்து ஒரே நீராக்கினர்,
புல் தரைகளையும், ஆற்றோரக் கோரைக் காடுகளையும்
அவர்கள் அப்போது படைத்திருக்க வில்லை.
அது போல் அவ்விருவரைத் தவிர மற்ற கடவுளர் எவரும் படைக்கப் படவில்லை.
அவர்களது பெயர்களும் அறியப்படவில்லை.
அவர்களுடைய குணநலன்களும் முடிவு செய்யப்படவில்லை.
பின்னரே, இருவரும் தங்கள் குழந்தைகளாக,
பல கடவுளரைப் பெற்றெடுத்தனர்.
அக்கடவுளர் வளர்ந்து முழுமை பெற்ற போது,
இலகமு, இலகாமு தோன்றி முன்னவர்களுக்குப் பெயரிட்டனர்.
பின்னர் அன்சார், கிசார் பிறந்து,
முன்னவர்களைக் காட்டிலும் திறமைகளைக் கொண்டிருந்தனர்.
நாளை நீட்டித்தனர், ஆண்டுகளை உருவாக்கினர்.
அவர்களின் தலைப்பிள்ளையான அனு பிறந்தான்.
தன் முன்னோர்களான பாட்டன்களைப் புறந்தள்ளினான்.
அன்சார், தன்னைப் போன்றே, தன் மகன் அனுவை உருவாக்கினான்.
அனு, தன் விரும்பியவாறே, நூதி மூத் என்பவனைப் பெற்றான்.
நூதி மூத், தன் முன்னோர்களைக் காட்டிலும்,
ஆற்றலும் அறிவும் பெற்றிருந்தான்,

அறிவில் தெளிவும், அனைத்தையும் புரிந்து கொள்ளும் ஆற்றலும்,
இருகரங்களில் வலிமையும் கொண்டிருந்தான்.
அன்சார் என்ற தன் பாட்டனைவிட வலிமை பெற்றான்.
அவனுக்கு நிகரான வலிமையுள்ள கடவுளர் இல்லை.
அவனுக்கு எதிரான பகைவரும் ஒருவருமில்லை.
அந்தத் தலைமுறையின் கடவுளர்கள் ஒன்று கூடினர்,
தீயத்தின் செயல்களுக்கு இடையூறுகள் செய்தனர்.
தீயமத்தின் சினத்தைக் கிளறினர்.
அவளை மேலும் மேலும் எரிச்சலடையச் செய்தனர்.
கடவுளரின் இரைச்சலை அப்சுவால் அடைக்க முடியவில்லை.
தீயமத் அச்சூழலில் அமைதியுடன் பேசாமல் இருந்தாள்.
என்றாலும் தீயமத் வருத்தம் கொண்டாள்.
தொடர்ந்த செயல்களால், தீயமத் எதிர்வினை ஆற்ற முயன்றாள்.
இறுதியில், கடவுளரின் தந்தை அப்சு, மும்முவை அழைத்தான்.
"ஓ மும்மு ! என் விருப்பத்துக் குரியவனே!
வா ! இருவரும் தீயமத்திடம் செல்வோம்", என்றான்.
இருவரும் சென்று, தீயமத் முன் அமர்ந்தனர்.
கடவுளரின் சிக்கல்கள் பற்றி உரையாடினர்.
தம் பிள்ளைகளே, தமக்கெதிராக நின்றனரே என வருந்தினர்.
அப்சு உரத்த குரலில் தீயமத்திடம் பேசினான்.
"நம்மக்களின் நடவடிக்கைகள் எனக்கு வருத்தத்தை அளிக்கின்றன.
பகலில் என்னால் ஓய்வு கொள்ள இயலவில்லை.
இரவில் நான் தூங்கி வெகு நாட்களாயிற்று.
அவர்களின் நடவடிக்கைகளை நிறுத்துவேன்.
இறுதியில் அவர்களை அழிக்கவும் செய்வேன்.
அமைதி நிலவ வேண்டும், அப்போது தான் உறங்க முடியும்", என்றான்.
அப்சுவின் சொற்களைக் கேட்ட தீயமத்,
வெகுண்டெழுந்தாள், தன் காதலனை நோக்கி,
பேரிரிரைச்சலைக் கக்கினாள்.
சினத்தின் உச்ச நிலையை அடைந்தாள்.

தன் வயிற்றிலிருந்த கருக்களைக் கலைத்தாள்.
“நாம் பெற்றெடுத்த பிள்ளைகளை அழிக்கவா பெற்றோம் ?
பிள்ளைகளின் நடவடிக்கைகள் வருத்தத்தை அளித்தாலும்
எதிர்வினை யாற்றாமல் அமைதி காத்தோம்”.
மும்மு அப்சுவிடம் அப்சுவை அமைதிப் படுத்தினான்.
தன் நிலத்தாயின் அறிவுரையை மும்மு கேட்கவில்லை.
“ஓ ! என் தந்தையே ! சிக்கலுக்கு உடனடியாக முடிவு செய்யுங்கள்.
என் தாய் பகலில் ஓய்வெடுத்து, இரவில் உறங்க வேண்டும்”.
அப்சுவின் முகம் ஒளிவிட்டது, மும்மு சொன்னது ஆறுதலாக இருந்தது.
கடவுளரை அழித்துவிட அறிவுரை கூறினான்.
அப்சுவின் மடியில் அமர்ந்து, தந்தையை முத்தமிட்டான்.
அவர்களின் முடிவு பற்றி கடவுளரிடம் தெரிவிக்கப்பட்டது.
அதைத் கேட்ட கடவுளர் அமைதியின்றி அலைந்தார்கள்.
கடவுளர் அனைவரும் பேசாது அமைதி காத்தனர்.
ஒன்றைப் புரிந்து கொள்வதில் திறமை யானவனும்,
அறிவுள்ளவனும், தகுதிகள் பெற்றவனுமான யா,
மூவரின் திட்டத்தை அறிந்தான்.
அப்சு, தீயமத், மும்மு ஆகியோரின் திட்டத்துக்கு
எதிர்வினையாற்ற முடிவெடுத்தான்.
தன் முடிவைச் சரியான வழியில் செயல்படுத்த எண்ணினான்.
அறிவார்ந்த தன் முடிவை வெளிப்படுத்தினான்.
உரத்த குரலில் பேசினான், அவை நீர்களில் அலை மோதியன.
அப்சுவின் மேல் தூக்கத்தை ஏவினான்.
ஆழ்ந்த உறக்கத்துக்கு அப்சு தள்ளப்பட்டான்.
அப்சுக்கு அறிவுரை கூறிய மும்முவும் தூங்கினான்.
அப்சுவின் இடைக்கச்சையை அவிழ்த்தான்.
தலையில் அணிந்திருந்த முடியை அகற்றினான்.
அவற்றை, யா தான் அணிந்து கொண்டான்.
அப்சுவைக் கொன்றான், உடலை தூக்கி யெறிந்தான்.
மும்முவைக் கட்டிப் போட்டான், அப்சுவின் உடல்மேல் வைத்தான்.

அவர்கள் இருவர் மீதும் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டான்.
தன் பகைவர்களை அழித்து வெற்றி கண்ட யா,
எச்சமிருந்த பகைவர்களுக்கும் அறைகூவல் விடுத்தான்.
பகைவர்கள் அனைவரையும் வென்ற பின்,
தன் இல்லத்தினுள்ளே அமைதியாக ஓய்வெடுத்தான்.
அப்சுவுக்குச் சிறு கோயில் ஒன்றை எடுத்தான்.
அதன் மேல் தன் வீட்டைக் கட்டிக் கொண்டான்.
யாவும் அவன் காதலி தாம் கைனாவும் அவ்வில்லத்தில்,
மகிழ்வுடனும், புகழுடனும் வாழ்ந்து வந்தனர்.
அரண்மனை போன்ற அவ்வில்லத்தில், கூடம் ஒன்று இருந்தது.
அக்கூடத்தில், தன் நண்பர்களுடன் அமர்ந்து உரையாடினான்.
அறிவார்ந்தவர்களிலும் அறிவாளியாக, கடவுளரில் முனிவனாக,
பெல் என்ற மகனைப் பெற்றான்.
அப்சுவினின்றும் மருது - க என்ற மகனைப் படைத்தான்.
அப்சுவின் பண்புகளைக் கொண்டவனாக மருது பிறந்தான்.
யா - தாம் கைனாவின் அன்பு மகனாக மருது வளர்ந்தான்.
பெண் கடவுளரிடம் பால் அருந்தினான்.
அவனை வளர்த்த பணிப்பெண், மருதுவை நற்பண்புகளுடன் வளர்த்தாள்.
நல்ல உடற்கட்டுடனும், ஆண் கடவுளரில் அழகனாகவும்,
ஆற்றலும் வலிமை உடையவனாகவும், மருது விளங்கினான்.
தன் தந்தையின் தந்தையான அனுவைப் போல ஆற்றல் கொண்டிருந்தான்.
அனு, தன் பெயரனின் பெருமைகளால் மகிழ்ந்திருந்தான்
அவனுடைய உள்ளம் மருதுவால் பூரித்திருந்தது.
அனு, மருதுவை செம்மைப்படுத்தினான்.
அவனுக்கு அளப்பறிய தலைமைப் பண்புகளை அளித்தான்.
மற்ற கடவுளரைக் காட்டிலும் மருதுவை உயர்த்தினான்.
அனைவருக்கும் தலைவனாக மருதுவை உருவாக்கினான்.
மருது என்ன சொல்வான் என்பதை எவராலும் புரிந்து கொள்ள இயலாது.
அவன் உள்ளக் கிடக்கையை எவராலும் அறிய இயலாது.

அவனுடைய செயல்பாடுகளை எவரும் ஊகிக்க முடியாது.
நான்கு கண்களும், நான்கு காதுகளும் அவனுக்கிருந்தன.
அவன் உதட்டைத் திறந்தாலே தீப்பொறிகள் போன்ற
அதிகாரச் சொற்களை உதிர்ப்பான்.
அவனது நான்கு காதுகளும் பெரியவை, கூர்மையானவை.
நான்கு கண்களின் பார்வையினின்று எவரும் தப்ப இயலாது.
கடவுளரில் உயர்ந்தவனாக, தோற்றப் பொலிவைக் கொண்டிருந்தான்.
அவனது உடலும் உதடுகளும் உயரமானவை, நீளமானவை,
அனு உரத்த குரலில் கூறினான்,
"ஓ ! மருது ! மருது ! எனது மாட்சிமை மிக்க பெயரனே !
கடவுளரின் தலைவனே !" என்று உள்ளம் மகிழ்ந்து வாழ்த்தினான்.
பத்துக் கடவுளர் அணிந்திருந்த ஆடைகளின் அழகு,
மருதுவின் ஆடைகளில் விளங்கி, மின்னியது.
பெருமைமிக்க தலை முடியை அணிந்திருந்தான்.
அனு, நான்கு (திசை) காற்றுகளைப் படைத்தான்.
அவற்றை மருதுவின் கரங்களில் ஒப்படைத்து,
"பெயரனே ! அவை உன்னோடு விளையாடும்", என்றான்.
காற்றின் தூசிகளை வெளியேற்றிக் கொடுத்தான்.
புயல் காற்றை உருவாக்கி, தீயமத்தை அச்சுறுத்தினான்.
அனுவின் செய்கையால், தீயமத் எரிச்சல் அடைந்தாள்.
பகலும் இரவும் தூக்கமின்றிக் கிடந்தாள்.
கடவுளரால், அமைதியாக இருக்க இயலவில்லை.
தீயமத்துடன் சேர்ந்து, சதித் திட்டங்களைத் தீட்டினர்.
தம் தாயான தீயமத்திடம்,
"தாயே ! உன் தலைவனான அப்சுவைக் கொன்றார்கள்,
அப்போதும் நீ பேசாமல் அமைதி காத்தாய்,
உன் இதயத்திலிருந்து அப்சுவின் நினைவுகளை அகற்றிவிட்டாயா ?
மும்முவை அழித்த போது, வியப்பாக அமர்ந்து,
அச்செயலைப் பார்த்துக் கொண்டிருந்தாய்.
நீ எங்களுடைய தாயல்லவா ?

உன் அமைதியைப் பகைவர்கள் கெடுக்க வில்லையா ?
எங்களுடைய நிலையையும் எண்ணிப்பார்,
எங்களால் அமைதியாக இருக்கவும், உறங்கவும் இயலவில்லை.
நீ எங்களை உண்மையில் நேசிக்க வில்லையா ?
நம்முடைய பிடி தளர்ந்து கொண்டே வருகிறது,
எங்களுடைய விழிகள், பார்க்கும் திறனைக்கூட இழந்துள்ளன.
உன்னுடைய போக்கை உடனடியாக மாற்றிக் கொள்,
நாங்கள் அமைதியாக உறங்க வேண்டும்.
போருக்கான அறைகூவலை உரத்த குரலில் தெரியப்படுத்து,
பகைவர்களை உடனடியாகப் பழிவாங்க வேண்டும்.
பகைவரை வீழ்த்து, அவர்களின் ஆற்றலைக் குறை,
அவர்களுடைய முன்னேற்றங்களுக்குத் தடைபோடு,"
கடவுளர் கூறிய மொழிகளைக் கவனமுடன் கேட்ட தீயமத்
அவர்களுடைய கோரிக்கைகளுக்கு இசைவளித்தாள்.
"நீங்கள் கூறியபடி உடனடியாக நாம் நடவடிக்கைகளில் இறங்குவோம்
அப்சுவின் ஆதரவாளர்கள் அனைவரும் துன்புறுத்தப் படுகிறார்கள்.
பகைவர்களுக்கு எதிரான நடவடிக்கைகளில் இறங்கினார்கள்".
அப்சுவின் ஆதரவாளர்கள், தீயாமத் தலைமையில் சேர்ந்தனர்.
கடுஞ்சினத்துடன் இருந்த அவர்கள்,
போருக்கான நடவடிக்கைகளில் இரவு பகலாக இறங்கினர்.
தங்கள் ஆதரவாளர்களை ஒன்று திரட்டினர்.
பகைவர்களிடையே குழப்பத்தைத் தோற்றுவிக்க முயன்றனர்.
போருக்கானப் பணிகளைத் தொடங்கினர்.
எதிர்தரப்பில் ஊபூர் என்ற தாய் பெரும் பாம்புகளைப் பெற்றெடுத்தாள்.
கூர்மையான பற்களை அப்பாம்புகள் கொண்டிருந்தன.
பாம்புகளின் உடலில் இரத்தத்திற்குப் பதிலாக, நஞ்சை நிரப்பினாள்.
அச்சத் தகுந்த பூதங்களைப் படைத்து,
அவற்றின் கண்களில் தீக்கதிர்களை உமிழச் செய்தாள்.
அவர்களையும் கடவுளர் உருங்களிலேயே படைத்தாள்.
அவளின் படைப்புகளைக் கண்டவர்கள்

